உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ பஞ்சாக்கரதேசிக பரமாசாரியசுவாமிகள்

# நிறைபணிவிழாமலர்

## திருவாவடுதுறை

*விஜய — புரட்டாசி — அசுபதிநாள்.*



இருபத்தொன்றாவது குருமகா சந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகள்

திருவாவடுதுறையாதீன வெளியீடு – 72.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீகாசிகாண்டம் என வழங்கும்

# ஸ்ரீகாசிகண்டம்

## மூ ல ம்

**அதிவீரராமபாண்டியர் அருளியது.**

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்து
இருபத்தொன்றாவது குருமஹாசந்நிதானம்
**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிகசுவாமிகள்**
கட்டளையிட்டருளியபடி

அவ்வாதீன வித்துவான்
**த. ச. மீனாட்சிசுந்தரம்பிள்ளையால்**
பல பிரதிகளைக்கொண்டு
பரிசோதித்துப் பதிப்பிக்கப்பெற்றது.

விஜய — புரட்டாசி
1953.

உ

சிவமயம்.

# முகவுரை.

## தேவாரம்.

திருச்சிற்றம்பலம்.

“ குற்றம்நீ குணங்கள்நீ கூடலால வாயிலாய்
சுற்றம்நீ பிரானும்நீ தொடர்ந்திலங்கு சோதிநீ
கற்றநூற் கருத்தும்நீ அருத்தமின்பம் என்றிவை
முற்றும்நீ புகழ்ந்துமுன் னுரைப்பதென் முகம்மனே.”

திருச்சிற்றம்பலம்.

— திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்.

‘**காசிகாண்டம்**’ என வழங்கும் ‘**காசிகண்டம்**’ என்னும் நூலை இயற்றியவர் அதிவீரராமபாண்டியர் ஆவார். ‘**காசிகண்டம்**’ என்னும் நூல் கங்காநதிக்கரையில் உள்ள ஸ்ரீ காசியம்பதியின் பெருமைகளைக்கூறுவது. இது மொழி பெயர்ப்பு நூல். பதினெண்புராணங்களில் சிறந்ததாகக் கருதப்படுவன சிவபுராணங்கள் பத்துமாம். அப்பத்தினுள்ளும் சிறந்தது காந்தபுராணம். அது, வேதாந்த சித்தாந்த சாரங்களை உள்ளடக்கியது; அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப்பொருள்கள் நான்கினையும் எளிதில் தர வல்லது; மங்கலகரமானது; துன்பங்களையெல்லாம் நீக்குவது; இலக்கம் கிரந்தங்களையுடைய ஐம்பது கண்டங்களாக வுள்ளது என்பர்.

இனி, காந்தபுராணம் :— சனற்குமாரசங்கிதை, சூதசங்கிதை, பிரமசங்கிதை, விஷ்ணுசங்கிதை, சங்கரசங்கிதை,

சூரசங்கிதை என ஆறுசங்கிதைகளையுடையது. (சங்கிதை—பெரும்பகுதி அவற்றுள், 1. சனற்குமாரசங்கிதை-ஐம்பத்தையாயிரம் கிரந்தங்களையுடையது. 2. சூதசங்கிதை-ஆறாயிரம் கிரந்தங்களையுடையது. 3. பிரமசங்கிதை-மூவாயிரம் கிரந்தங்களையுடையது. 4. விஷ்ணுசங்கிதை-ஐயாயிரம் கிரந்தங்களையுடையது. 5. சங்கரசங்கிதை-முப்பதினாயிரம் கிரந்தங்களையுடையது 6. சூரசங்கிதை-ஆயிரம் கிரந்தங்களையுடையது. அவற்றுள், சங்கரசங்கிதை—குமரோற்பவ கண்டம், **காசிகண்டம்**, காளிகாகண்டம் முதலிய பன்னிரு கண்டங்களையுடையது என்பர். (கண்டம்—சிறுபகுதி) அப்பன்னிருகண்டங்களுள் ஒன்றாகிய **'காசிகண்டமே'** அதிவீரராமபாண்டியரால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. இது பூர்வகாண்டம், உத்தரகாண்டம் என்னும் இரண்டு பெரும்பிரிவுகளையும்—நூறு அத்தியாயங்களையும்—2526—திருவிருத்தங்களையும் உடையது. செய்யுட்கள் மிக எளிய நடையையுடையன; ஆயினும், சுவைபயக்கும் சொல்லழகு மிக்குள்ளனவாம்.

இக்காசிகண்டப்பதிப்பின் பரிசோதனைக்கு உதவியாயிருந்த பிரதிகள் வருமாறு:—

இத்திருவாவடுதுறை ஆதீனத்துக் **கல்விக்களஞ்சிய**மாகிய சரஸ்வதிமஹால் புத்தகசாலையில் உள்ள ஏட்டுச்சுவடி (மிகப்பழையது)—1.

இவ்வாதீனத்து 16-வது மேலகரம் — ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் (கி-பி 1868–1888) காலத்திலே சின்னப்பட்டத்திலேயுள்ள பேட்டை — ஸ்ரீ நமசிவாய தேசிகர் ( கி-பி 1871–1883 ) தாம் திருக்கூட்டத்துத் தம்பிரான்

சுவாமிகளாகக் காசியில் 12-ஆண்டுகள் தங்கியிருந்த காலத்தில் (கி-பி 1859:- கலியுகாதி 4961-சித்தார்த்திரி-தை-29உ) எழுதிமுற்றுவித்த காகிதப்பிரதி—1.

[காசிகண்டம் எழுதியுள்ள காகிதங்களின் உள்நீரோட்டத்திலேயேயும் 1859 எனக்குறித்துள்ளது இப்பிரதியின் ஒரு தனிச்சிறப்பு]

15-வது ஸ்ரீ அம்பலவாண தேசிகர் காலத்திலே (கி-பி 1854-1868) சின்னப்பட்டம், பேட்டை—ஸ்ரீ நமசிவாய தேசிகர் தம்பிரானாக இருந்தவர் எனத்தெரிகிறது.

பெங்களூர் ஆ. நமச்சிவாயமுதலியார் கேட்டுக்கொண்டபடி பாரிப்பாக்கம் முனியப்ப முதலியாரால் ஆராய்ச்சி செய்வித்துப் புரசபாக்கம் ஏழுமலைப்பிள்ளையினது விவேகவிளக்க அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்ட (சாலிவாகனம் 1788+78=கி—பி 1865 ஆவணி-மீ) பிரதி 1.

(இப்பிரதியொன்று உபகரித்தவர் திரு. R. கங்காதர முதலியார், கும்பகோணம்.)

சூளை — சுப்பராய நாயக்கரால் பதிப்பிக்கப்பெற்ற பிரதி — 1.

களத்தூர் வேதகிரி முதலியாரால் (நள—ஆடி) அச்சிடப்பட்ட பிரதி — 1.

(தெய்வலோகங்கண்ட அத்தியாயம் வரை 357 பாடல்கள் உள்ள இதனையுதவியவர் குடந்தை திரு. க. சுப்பிரமணிய முதலியார்)

தமிழ்ப்பண்டிதர், ஈக்காடு— இரத்தினவேல் முதலியார் அவர்கள் பொழிப்புரையுடன் 1895-ம் ஆண்டில் அச்சிட்ட காசிகண்டம் புத்தகம் —1

காசிகண்டம் உரைப்புத்தகமொன்று தவிர ஏனைய மூன்று அச்சுப்பிரதிகளும் பிழை மலிந்தன. சுத்த பாடமும் இல்லாதன.

உ
சிவமயம்.

ஸ்ரீ கைலாசபரம்பரையாகிய திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த — ஸ்ரீகாசி கண்ணப்பசுவாமிகள் மடாலயத்திலிருக்கும் நமசிவாய சுவாமியவர்களுக்கு சின்னத்தம்பிரான் சுப்பிரமணிய தம்பிரான்:

பொருள்வைத்தசேரியிலிருந்து யாத்திரைக்கு வந்திருக்கும் சட்டையப்ப முதலி, ஷெயூர் ஆறுமுகம் பிள்ளை இவர்களால் இந்தக் காசிகண்டம் ஸ்ரீ காசியிலிருந்து யெழுதி முற்றுப்பெற்றது.

கலியுகாதி-௵ 4961: சித்தாத்திரி-௵ தை-மீ 29௳ (கி—பி 1859—60) ஸ்ரீ விசுவநாத சுவாமி துணை.

அடியேன்,
**(ஓ) சுப்பிரமணியதம்பிரான்.**

மேலேகண்ட இப்பகுதி காசிகண்டத்துக் காகிதப் பிரதியின் முகப்பு ஏட்டில் கண்டது.

இனி, மதுரைத்தமிழ்ச்சங்கத்து அக்கிராசனாதிபதியாகவும் பாலவனத்தம் ஜமீந்தாராகவும் இருந்த ஸ்ரீமான் - பொ. பாண்டித்துரைத் தேவரவர்கள் தாம் ( கி — பி 1898ல் )

தொகுத்த பன்னூற்றிரட்டிலே காசிகண்டத்திலிருந்து 56 செய்யுட்கள் எடுத்தாண்டமை காண்க.

இனி, **இவ்வாதீனத்து மஹாவித்துவான் திரிசிர புரம் — ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களால் இயற்றப்பட்ட காசிரகசியம்** என்னும் நூல் 26 அத்தி யாயங்களையும், 1012 செய்யுட்களையும் உடையது. பாயிரம் கூறிய பின்னர் குருபத்திசொரூபம், காசிமான்மியம், திரு மால் திருமகளுக்கு உபதேசித்தது, சோமசன்மா முத்தி யடைந்தது, மகாசேனன் முத்தியடைந்தது, நரநாராயணர் நாரதருக்கு உபதேசித்தது, பரமசிவன் பார்வதிதேவியா ருக்கு உபதேசித்தது, பஞ்சக்குரோசப் பிரதக்ஷிண மகிமை, மண்டபன் முத்தியடைந்தது, பஞ்சக்குரோசப் பிரதக்ஷிண இயல்பு, காசிவாசநியமம், மாதேசன் முத்தியடைந்தது, சத்தபுரி மகிமை, பிரமன்முதல் மூவரும் பூசித்தது, துச் சேதா முத்தியடைந்தது, நித்திய யாத்திரைவிதி, காசிதேவி வரம்பெற்றது, காமகலை வரலாறு, வீரசேனன் முத்தி பெற்றது, புராணிகர் இயல்பு, புண்ணியகீர்த்தி முத்தி பெற்றது, பாதகக்கழுவாய், தேவர்கள் உபதேசம் பெற்றது, சனாதனன் முத்திபெற்றது, இரணிய கருப்பன் முதலோர் முத்திபெற்றது, விஷ்ணுசருமன் உபதேசம் பெற்றது முதலியன அவ்வத்தியாயங்கள்.

"காசியாத்திரை பலமுறை செய்தவரும் அக்காலத்தில் திருவிடைமருதூர்க் கட்டளை அதிகாரம்பெற்றுப் பார்த்து வந்தவருமான ஸ்ரீ சுப்பிரமணியத் தம்பிரானவர்களுடைய விருப்பத்தின்படி ஸ்ரீ காசியின் தலவரலாறுகளைக் கூறும் நூல்களுள் ஒன்றாகிய ஸ்ரீ காசிரகசியம் என்னும் நூல்

இவரால் தமிழிற் செய்யுள்வடிவாக இயற்றப்பட்டது. அந் நூலை அவர் காசியிலிருக்கும்பொழுதே ஒரு வடமொழி வித்துவானைக்கொண்டு மொழிபெயர்க்கச் செய்து தமிழ் வசன நடையில் தாமே எழுதிவைத்திருந்தனர்..." "அந் நூல் திருவிடைமருதூர் மகாலிங்கஸ்வாமி திருக்கோயிலி லுள்ள நூற்றுக்கால் மண்டபத்தில் அரங்கேற்றப்பெற்றது" என்பர் மகா மகோபாத்தியாய ஸ்ரீமத் ஐயரவர்கள். (பிள்ளை யவர்கள் சரித்திரம் 1-பக்கம் 305-6).

இக்காசிரகசியம் உரையுடன் (1881) விஷு—வை காசியில் அச்சிடப்பட்டது. 1870-ஆண்டில் காசிரகசியம் இயற்றப்பெற்றதுபோலும். பிள்ளையவர்கள் காலம் கி-பி. 1815-1876.

இனி, விகிருதி-புரட்டாசியில் 'திருவாவடுதுறை யாதீன வரலாறு' வெளிவந்தது போலவே, கர-புரட்டாசி-விசய தசமியில் **திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார்** ஆகிய இரண்டு சாத்திரங்களும், நந்தன-புரட்டாசி – அசுபதி நாளில் நிறைபணிவிழாமலராக **சிவஞானபோதம்** பழைய வுரையும் வெளியிடப்பெற்றன. விசய-புரட்டாசி-அசுபதி நாளாகிய இன்று **நிறைபணிவிழாமலராக** குருமஹாசந்நி தானம் **ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள்** ஸ்ரீ காசியாத்திரைக்கு எழுந்தருளிச் சிவஞானராசதானி யாகிய திருவாவடுதுறைக்கு வந்தருளிக் காட்சிதந்த நினைவு குறித்து இக் காசிகண்டம் வழங்கப்படுகிறது.

இனி, "**தேடினரியாவரேகொல் எழுவகையா னுஞ்சேர்த்தி — நீடினாவரே** யென்பர் நீணிலத்துயர்ந்த மாந்தர்" என மகாபாரதத்துச் சிறப்புப்பாயிரத்திலே

வில்லிபுத்தூராழ்வார் குமாரர் வரந்தருவார் கூறினர். கீர்த்திக்கு ஏதுவாகச் சிறந்த எழுவகைச் செயல்களாவன — தடாகப் பிரதிஷ்டை, தனநிக்ஷேபம், அக்கிரகாரப்ரதிஷ்டை, தேவாலயப்பிரதிஷ்டை, நந்தவனப்பிரதிஷ்டை, **பிரபந்த நிர்மாணம்**, சத்திரப்பிரதிஷ்டை என்பன. இவற்றை வடநூலார் சப்தசந்தானம் என்பர். **பிரபந்தநிர்மாணம் என்பது நூல்செய்தல்.** செய்வித்தலும் உடனடங்கும். அச்சிடுவித்தலும், அச்சிடுதலும் அதனுள்ளேயே அடங்கும் எனினும் பொருந்துவதாம். பழையநூல்கள் 'இறந்துபடாமல் பாதுகாத்தல் புதிதாகச் செய்தலினும் புண்ணியம் மிக்கதாம்' என்பர் பெரியோர். **ஆகலின், இவ்வாதீனத்திலே இப்பொழுது இருபத்தொன்றுவது குருமஹா சந்நிதானமாக எழுந்தருளியிருந்து சிவக்ஷேத்திர— குருக்ஷேத்திர பரிபாலனங்களும், சித்தாந்த சைவ சமய பரிபாலனமும், செந்தமிழ்ப்பரிபாலனமும் சிறப்பாகச்செய்தருளுகின்ற ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள் கட்டளையிட்டருளியபடி** இக் காசிகண்டமும் பல பிரதிகளைக்கொண்டு பரிசோதித்து நூலாசிரியர் வரலாறு, அத்தியாய அகராதி அட்டவணை, காசிகண்டப் பொருட்சுருக்கம் முதலியவற்றுடன் அச்சிட்டு வெளியிடப்பெறுகின்றது. இதன்கண்ணும் குற்றம்பல இருத்தல் இயல்பே. கல்வியறிவிலே சிறந்த பெரியோர்கள் செய்யவேண்டிய பெருங்காரியங்கள் இவை என்பதை நன்கு அறிந்துவைத்தும், 'பழைய நூல்களை ஒருவாறு பாதுகாத்துவைக்கவேண்டும்' என்னும் பேரவா மிக உந்த, மஹாசந்நிதானத்தின் கட்டளை மறுத்தற்கு அஞ்சிப், 'பணிசெய்துகிடப்பதொன்றே' எளியேன் கடமை

எனத்துணிந்து, திருவருளாலும் குருவருளாலும் இதனை அச்சிட்டு முற்றுவித்தேன். இதனினும் நல்ல பிரதிகளும், பெரியோர் அருளும் திருத்தங்களும் கிடைக்கப்பெறின் அகமிக மகிழ்வுடன் ஏற்று அடுத்த பதிப்பிலே நன்கு திருத்திச் சுத்தப்பிரதியாகச் செய்துகொள்வேன்.

குற்றம் நீக்கிக் குணமுளதாயின் பாராட்டுவது பெரியோர் கடமை யாதலின் பொறுத்தருளப் பன்முறை வணங்கிக் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

இங்ஙனம்,

சித்தாந்தசைவமணி—

திருவாவடுதுறை 22—9—53. } த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை
ஆதீனவித்துவான்.



# நூலாசிரியர் வரலாறு.

'காசிகண்டம்' என்னும் இந்நூலைத்தமிழகத்துக்குத் தந்தவர் **அதிவீரராமபாண்டியர்** ஆவார். பாண்டிய அரசருடைய குடியிற்பிறந்தவர் என்பது இவர் பெயரா லேயே எளிதில் அறியக்கிடப்பது. இவர் தந்தையார் திருநெல்வேலிப்பெருமாள் என்பார். குலசேகரர் என்று அவரைக்கூறுதலும் உண்டு. அவர் தன் முன்னோனாகிய பராக்கிரமனுக்குப்பின் தென்பாண்டிநாட்டை ஆண்டு வந்தார். அது கி—பி 1552 முதல் 1564 வரை என்பர். பராக்கிரமன் ஆட்சிக்காலம் 1543 முதல் 1550 வரை.

திருநெல்வேலிப் பெருமாளுடைய மூத்த மைந்தன் அதிவீரராமன். இவருடைய இயற்பெயர் அழகன் பெருமாள் என்பது. மற்றொருபெயரே அதிவீரராமன். இவர் பிறந்தநாள் புனர்பூசமாம். அதிவீரராமன் அரசுகட்டிலில் ஏறிய காலம் சகம் 1486- கி-பி 1564 எனத் தென்காசிக் கோபுர சாசனம் ( T A. S 106 ) கூறும் என்பர் அவ் வாராய்ச்சியாளர். இவர் இளவல் வல்லபர் எனப்படுவர். பிற் காலத்துப் பாண்டியர் ஆதிக்கம் குன்றியிருந்தபோது விசயநகரத்து அரசர் கிருஷ்ணதேவராயர், நாகமநாயக்கருடைய புதல்வராகிய விசுவநாதநாயக்கரைத் தென்னாட்டுக்கு அனுப்பி அரசகாரியங்களை நடத்திவரக்கட்டளையிட்டார். அவர் அப்போதுள்ள நாட்டின் நிலைமைகருதிப் பாண்டியரைச்சிற்றரசராகச்செய்தார். அதனால் பாண்டியர் தெற்கே திருநெல்வேலிச்சீமையைப்பெற்று அரசாண்டனர். விசயநகர

அரசர்களுக்கு உள்ளடங்கியும், அவர்களுக்குக் கீழ்ப்பட்ட மதுரை நாயக்க அரசர்கட்குக்கீழடங்கியும் அவர் சிற்றரசராக இருந்து ஆட்சிபுரிந்தனர். அக்காலத்து இவர்கட்குத் தலைநகர் கொற்கை. 'கொற்கையாளி குலசேகரன்' என வெற்றிவேற்கை நூலில் வருவது கொண்டு இது தெரியலாம். ஆயினும், பெரும்பாலும் இவர்கள் இருந்து அரசுபுரிந்தது தென்காசியே என்பர். அதிவீரராமர் சீ வ ல வே ள் என்னும் பெயருடன் கி—பி 1564 மே-மீ 2உ யில் மகுடம் சூடினார். இது தென்காசி விசுவநாதசுவாமி கோயில் சாசனம் **T. A. S. I**, 106-ஆல் தெளிவாம். ஸ்ரீவல்லபவேள் என்பதன் மரூஉமொழியே சீவலவேள் என்பது. மைந்தராகிய அதிவீரராமருக்கு மகுடம் சூட்டியபின் அவர் தந்தை எட்டு ஆண்டுகள் உயிருடனிருந்தார் என அறிகிறோம்.

விசயநகரத்தை அரசுபுரிந்த கிருஷ்ணதேவராயர் காலம் கி—பி 1509 — 1530வரை. அச்சுத தேவராயர் காலம் கி—பி 1530 — 1542. மதுரைநாயக்க அரசர்களாகிய 1. விசுவநாத நாயக்கர் 1559—1563: 2. குமாரகிருஷ்ணப்ப நாயக்கர் காலம் கி—பி. 1563—1573 வரை என்பர்.

இனி, "பாண்டியில் இரண்டு ஆண்டியில் இரண்டு" என்பதோர் பழமொழியும், "பாண்டியில் இரண்டு பட்டரில் இரண்டு" என்னும் மற்றோர் பழமொழியும் தமிழகத்து வழங்கி வருகின்றன. இவற்றுள், 'பாண்டியில் இரண்டு' என்றது இவ் அதிவீரராமபாண்டியனரையும், அவருடன் பிறந்தாராகிய வரதுங்கராம பாண்டியரையும் குறிப்பது. 'ஆண்டியிலிரண்டு' என்றது நடையறுப்பெருந்துறவுடன் பெருமை தரு துறவரசர்களாக இத்திருவாவடுதுறையிலே வாழ்ந்

திருந்த திராவிடமாபாடிய கர்த்தராகிய ஸ்ரீமாதவச்சிவஞான யோகிகளேயும், கவிராக்ஷஸ — ஸ்ரீ கச்சியப்ப முனிவரையும் குறிப்பதாம் என்பர் பெரியோர். 'பட்டரில் இரண்டு' என்றதும் அவ்விரு முனிபுங்கவர்களேயே குறிக்கும். திருவாவடுதுறையிலே ஸ்ரீ நமச்சிவாய பரமாசாரியருடைய அடியவர் கூட்டத்திலே உள்ள முனிவர்கள் இவர்களாயினும் சித்தாந்த சைவப் பிரதிஷ்டாசாரியர்களாகவே பெரிதும் விளங்கினமையால் 'பட்டர்' —ஆசாரியர் எனவே யாவரானும் இவர்கள் மதிக்கப்பட்டமை தெளிவாம்.

இனி, அதிவீரராமபாண்டியர் புவியரசராக இருந்தமை போலவே கவியரசராகவும் விளங்கினர். இவர் இயற்றிய நூல்கள் இக்காசிகண்டத்தையன்றிக் கூர்மபுராணம், இலிங்க புராணம், வாயுசங்கிதை, திருக்கருவை வெண்பா வந்தாதி – கலித்துறையந்தாதி – பதிற்றுப்பத்தந்தாதி, நறுந்தொகை, நைடதம் முதலியனவாம். கொக்கோகம், மதனக்கோவை என்னும் நூல்களைச் செய்து வரதுங்கராமர் பெயரிட்டு வெளிப்படுத்தினர் இவர் எனவும் கூறுவர். 'வாயுசங்கிதை' இவர் இயற்றியதன்று, குணசேகரபாண்டியர் இயற்றிய தெனச்சிலர் சொல்வதுமுண்டு. எங்ஙனமாயினும், தமிழ்ப் பெரும் புலமையுடன் வடமொழிப்புலமையும் கவித்துவ சக்தியும் மிக்கிருந்தமையால் வடமொழியிலுள்ள நூல்களேக் காப்பிய அமைதியுடன் மொழிபெயர்த்தியற்றினுர் இவர் என்பதை எவரும் மறுத்துரைக்க இயலாது. இப்பொழுது வழங்கும் இலிங்கபுராணம் அதிவீரராமபாண்டியர் இயற்றிய தன்று என்பது ஸ்ரீ நா. கதிரைவேற்பிள்ளேயவர்கள் கருத்து.

இனி, அதிவீரராமபாண்டியருடைய ஆசிரியர்கள் வேம் பற்றூர் ஸ்ரீ ஈசான முனிவர், ஸ்ரீ சுவாமிதேவர், ஸ்ரீ அகோர

சிவாசாரியர் முதலியோர். “ சூழ்சுடர் ஞானத் திருவுருவமைந்த சுவாமிதேவன்பதம் பணிவாம் ” எனக் கூர்மபுராணத்திலும், “அருட்கடைக்கணளித்தாண்ட சுவாமிதேவன்னிருதா ளகத்துள் வைப்பாம்” என இக்காசிகண்டத்தும்அவர் வணக்கங்கள் கூறியஅதனால் அவை புலனாகின்றன. ‘மகனறிவு தந்தையறிவு’ என்பதற்கிணங்க இவர்தந்தையாகிய திருநெல்வேலிப்பெருமாள் கல்விநலம் பெரிதும் வாய்ந்திருந்தமையாலே புலவர்கள் பலரிடையே பொழுது கழிப்பிப்பதுடன் மைந்தரையும் அவையத்து முந்தியிருக்கச் செய்தார். அதிவீரராமபாண்டியர் மனைவியாரும், வரதுங்கராமருடைய மனைவியாரும் தங்கள் கணவரிடையே ஒக்க இருந்து கல்விநலந்துய்க்கும் புலமைசான்றிருந்தனரெனவும் வரலாற்றால் அறியக்கிடக்கின்றது பிரமோத்தரகாண்டம் வரதுங்கராமனால் இயற்றப்பெற்றதென்பர். இவருடைய ஆசிரியரும் ஸ்ரீஈசானமுனிவர் என்பது அதன்கண் உள்ள குருவணக்கச்செய்யுளால் விளங்குகின்றது.

இனி, **கூர்மபுராணம்** எனபது பதினெண்புராணங்களில் ஒன்று. இது பூர்வகாண்டம், உத்தரகாண்டம் ஆகிய இருபெரும்பிரிவினது. இராமாவதாரம் கிருஷ்ணாவதாரங்களையும், அவர்களுடைய செயல்களையும், தக்கன் வேள்வி நிகழ்ச்சிகளையும் பூர்வகாண்டம் பேசும். உலகத்தோற்றம், இல்லறம், சிவபெருமானுடைய அருட்செயல்கள் முதலியன உத்தரகாண்டத்தில் பேசப்படும். பூர்வகாண்டம் 51 அத்தியாயங்களும், உத்தரகாண்டம் 64 அத்தியாயங்களுமாக உள்ளன. இவ்விருகாண்டங்களின் செய்யுட்டொகை—3717. திருவிருத்தங்கள் படிக்கப்படிக்கப்பெரிதும் இன்பந்தருவன. இதனை இயற்றினர் அதிவீரராமபாண்டியரே என்பது அந்

னூல் சிறப்புப்பாயிரத்தில்—"கடலகமுழுதும் பொதிந்தபேர் வயிற்றுக் கடவுள்மோட் டாமைபெம் பெருமான், வட மொழி தொகுத்த தெய்வமாக் கதையை வடித்தசெந்தமிழி னுற் செய்தான், படுமதஞ் செருக்கிப் பாகுடல் பிளந்து படர்கின்ற மழலைவண் டோச்சும், அடுசினக்களிற்று மான வேல் வழுதி **அடலதி வீரபூ பதியே"** எனக் கூறி யுள்ளமையால் விளங்கும்.

**இலிங்கபுராணம்** என்பது அதிவீரராமர் மொழி பெயர்த்தியற்றிய மற்றொருநூல். இதுவும் பூர்வகாண்டம், உத்தரகாண்டம் என்னும் இருபிரிவுகளையுடையது. கடவுள் வாழ்த்து-அனுக்கிரமணி-நாரதன்நைமிசாரணியம் அடைந்த அத்தியாயம் முதல் கண்ணன் பாசுபதவிரதம் உரைத்த அத்தியாயம் முடிய 108-அத்தியாயங்களும் 1955—திரு விருத்தங்களும் பூர்வகாண்டமாகவும், கவுசிகன் கானம்பண் ணிப் பேறுபெற்ற அத்தியாயம் முதல் யோகமுரைத்த அத்தியாயம் வரை 46-அத்தியாயங்களும் 551—திருவிருத் தங்களும் உத்தரகாண்டமாகவும் இயற்றப்பெற்றுள்ளது. இலிங்கபுராணச் செய்யுட்டொகை—2506. இந்நூற்சிறப்புப் பாயிரம் "பூண்டபேரன்பாற் புவிபுக ழிலிங்க புராண நான் மறைவகுத் திசைத்த, காண்டமு முனிவன் உரைத்தவா றமுது கனிந்தசெந் தமிழினல் விரித்தான், நீண்டநீ ராழி நெடுநில வளாகம் நிழற்றுதண் ணிழல்மதிக் கவிகைப், **பாண்டியகுலசேகர**னிகல் கடந்த பருதிவேற் றடக்கைமீ னவனே" என அதிவீரராமரைக் கூறும்.

இனி, இலிங்கபுராணத்துள் படைப்புவகை, போகவர லாறு, அட்டாங்கயோகம், பத்திமகிமை, பஞ்சப்பிரமத்

தோற்றம், பஞ்சப்பிரமமந்திரத்தின் சிறப்பு, நீராடல்-சந்தியா வந்தனம்-சிவபூசை—மானதபூசை, நீவுகளின் இயல்பு, துருவன் துருவபதமடைந்தமை, தத்துவத்தோற்றம், மூர்த்திபேதம், சிவாலயமியற்றினோர்பேறு, ஆசாரவிதி, சிவபூசைப்பேறு பெற்றோர், பாசுபதவிரதம் மாதவிரதம் உமாமகேசுர விரதம் முதலிய விரதங்கள், பஞ்சாக்கரவிதி, தியானவிதி, அட்டமாசித்தி, மரணநிமித்தம், சிவபராக்கிரமங்கள, காசியிற்சோலை இயல்பு—காசித்தலமகிமை-இலிங்கமகிமை, தக்கன் வேள்வியழித்தமை முதலிய பல செய்திகள் பூர்வகாண்டத்தில் கூறப்படும் பதி பசுபாச இயல்பு, சிவதீக்கை இயல்பு, சூரியபூசை, சிவபூசை, அகோரபூசை, துலாபுருடதானம்-இரணியகருப்பதானம் — திலபத்மதானம் — கணபதிதானம் — சொன்னதேனுதானம்-இலட்சுமிதானம் முதலிய தானஇயல்புகள், சிவன் முதலான தேவப்பிரதிட்டை, மிருத்துஞ்சயமந்திரம், யோகம் முதலிய பலவேறு செய்திகள் உத்தரகாண்டத்தில் சுருக்கிக்கூறப்படும். சிறிது தமிழ்ப்பயிற்சியுடைவர்களும் படிக்கத்தக்க எளியநடையில் இந்நூல் இயன்றுள்ளது. அதிவீரராமபாண்டியர் கூர்மபுராணம், இலிங்கபுராணம் ஆகிய இவ்விருநூல்களையும் அரங்கேற்றும்போது தான இயல்புகூறுமிடத்துத் தாமே அவ்வத்தானங்களைச் செய்து அனுபவத்திற் காட்டினர் என்ப.

இனி, அதிவீரராமபாண்டியர் வடமொழியிலிருந்து நூல்களைத்தமிழில் மொழிபெயர்த்தியற்றும்போது வரதுங்கராமபாண்டியர்பால் அவ்வப்பகுதிகளையும் உடனுக்குடன் காட்டி மகிழ்வர்; இவரும் அவரை ஊக்கப்படுத்தி வந்தனர் என்ப. அக்காலத்து இலிங்கபுராணத்தை மொழிபெயர்த்துக் காட்ட வரதுங்கர், ‘முத்துப்போன்றுளது இது’ என்றார்.

அதிவீரராமர் 'வெள்ளையாயுள்ள'தென உளங்கொண்டு கூர்ம புராணத்தை மொழிபெயர்த்துப்பாடி அவர்பாற்காட்டினர். அவர் 'இதுபால் போன்றுளது' என்று கூறினர். பின்பு, காசி கண்டத்தை மொழிபெயர்த்தியற்றி வரதுங்கரிடங் காட்ட அவர் 'இது கரும்புபோன்ற' தென்றார். அதிவீரராமர் கடின நடையுடையது இது போலும் எனக் கருதினர். அதன் பின்பு வாயுசங்கிதை என்னும் சைவபுராணபாகத்தை மொழி பெயர்த்துள்ளார் என்ப. வாயுசங்கிதையின் செய்யுட் டொகை-777.

இனி இக்காசிகண்ட நூலாசிரியராகிய அதிவீரராம ருக்கு இப்பெயரேயன்றி ஸ்ரீவல்லபதேவன், பிள்ளைப்பாண்டி யன், குலசேகரன், குணசேகரவழுதி, தமிழ்வளர்த்ததென் னவன் என்ற பெயர்களும் உள. "குட்டுதற்கோ பிள்ளைப் பாண் டியனு மில்லை – குறும்பியள வாக்காதைக் குழித்துத் தோண்டி, எட்டினா வறுப்பதற்கோ வில்லி யில்லை – இரண் டொன்று மயிரைமுடிந் திறங்கப் போட்டு, வெட்டுதற்குக் கவிபொட்டக் கூத்த னில்லை – விளையாட்டுக் கவிப்பாட்டு விரைந்து பாடித், தெட்டுதற்குத் தமிழறியாத் துறைக ளுண்டு – தெல்லடித்துப் புலவரெனத் திரிய லாமே" என் னும் இப்பழம்பாடல் இயற்றினர் ' திருத்தோணியப்பர் ' என்பவர் எனப் பெருந்தொகையால் அறிகிறோம். இப் பாடலில் 'பிள்ளைப்பாண்டியனார்' எனக்குறிக்கப்பட்டவர் அதிவீரராம பாண்டியர். இவர், புலவர் பாடிவரும் பாட்டுக் களில் பிழை காண்பாராயின் அவரை இடித்துக் கூறித் திருத்துவர். திருத்தமுற்றுவரும் புலவர்பால் பெரிதும் மதிப்புவைத்து வரிசை பல செய்வார். காளிதாச மகாகவியினி டத்துப் போசராசன் எவ்வாறு மதிப்புவைத்துப் பரிசில்

வழங்கி மகிழ்ந்தனரோ? அவ்வாறே, தண்டமிழ்ப் புலவர் பெருமக்கள்பால் பெருமதிப்பு வைத்துக் கொண்டாடி மகிழ்ந்து வரிசையறிந்து பரிசிலளிப்பவர் இவ்வதிவீரராம பாண்டியர். இக்கவியரசர் தாம் புவியரசராயினும் அரசியல் அலுவல்களைச் செவ்வனே முடித்து எஞ்சிய காலமெல்லாம் தத்துவ ஆராய்ச்சி, சிவபூசை, சிவாலயப்பணி, புலவர்களுடன் அளவளாவுதல், வடமொழியில் உள்ள அரிய நூல்களைத் தமிழிலேமொழிபெயர்த்தியற்றல் முதலிய நற்செயல்களையும் உம்மைப் புண்ணிய விசேடத்தால் இயல்பாகக் கொண்டு வாழ்ந்தார் என்பது அவரியற்றிய நூல்களே சான்று பகர்வனவாம். நைடதம் தவிர அவர் மொழிபெயர்த்த நூல்கள்யாவும் சிவநலம் கொழிக்கும் பெருமையுடையனவாம். கருவையந்தாதிகள் பத்திச்சுவை மிக மலிந்தன.

இனி, ஸ்ரீஹர்ஷகவி என்பவர் வடமொழியில் நைஷதம் இயற்றியவர். அந்நூலை அவர் இயற்றியது சிந்தாமணி மந்திர உபாசனையால் என்பர். வடமொழி நைஷதம் கற்றோர்க்கே அதன் அருமை பெருமைகள் புலனும். சிந்தாமணி மந்திரத்துக்குரிய தெய்வம் சிவபிரானே. ஆதலின், அதிவீரராமபாண்டியரும் சிந்தாமணிமந்திரஉபாசனையாலேயே கடல் மடைதிறந்தாற்போலக் கவிவளமிக்க செய்யுட்களை ஆக்கும் திறம்மிகப்படைத்தார். அரசபோகங்களை யெல்லாம் நுண்ணியதாகத் துய்த்தநுபவித்த கவியரசராகலின் இவர் நிடதநாட்டரசன் கதையாகிய நைஷதத்தை அப்பெயராலேயே தண்தமிழ்ச்சுவைததும்பக்கவிநலமெல்லாம் ஒருங்கே கொழிக்க மொழிபெயர்த்தியற்றினார். இதனை, 'புலவர்களியமிழ்தொழுகு புதுமொழிகூட்டுணத்தமிழாற் புனைதல்செய்தான்' என்னும் சிறப்புப்பாயிரப்பகுதி நன்கு தெரிவிக்கும்.

இனி, **நைடதம்** என்னும் நூல்:— கடவுள்வாழ்த்து நாட்டுப்படலம், நகரப்படலம் தொடங்கி அரசாட்சிப்படலம் வரை இருபத்தெட்டுப்படலங்களும், 1172 செய்யுட்களும் அமையப்பெற்றுள்ளது. அவற்றுள், மணம்புரிபடலம் வரையில் உள்ள செய்யுட்கள்யாவும் பாவளம் பல மிகக்கொழிப்பன. பின்பு சூதாடுபடலமுதல் கலிநீங்குபடலம் வரையில் கதைப்போக்கில் செல்வனவேயன்றி, கவி வருணனைசெய்யும் மகிழ்ச்சிக்கு இடமின்மையின் செய்யுட்கள் முற்பகுதி போன்று சுவையை ஊட்டுவன அல்ல. இந்த நூலைப் பாடங் கேட்கும் முறை முதலிலிருந்து தொடங்காமல் கலிநீங்கு படலத்திலிருந்தே தொடங்க வேண்டும் என்பர் பெரியோர். இந்த நூலைப்பயிலுதலால் 'கலிவலிதொலையும்' என்றும் கூறுவர். நைடதம்–கலிநீங்குபடலம்–17ஆம் செய்யுள் இதனை வலியுறுத்தும். இந்நூலாசிரியர் வரலாறு முழுவதும் ஸ்ரீ ந. கதிரைவேற்பிள்ளை இயற்றிய நைடத விருத்தியுரையின் முகவுரையாலும், ஸ்ரீ S. சோமசுந்தர தேசிகர் இயற்றியுள்ள பதினாறும்நூற்றாண்டுத் தமிழ்ப்புலவர் வரலாற்றாலும் விரிவாக அறிந்து கொள்ளலாம். நைடத நூற்சிறப்புப்பாயிரச் செய்யுள் வருமாறு:— " நிலவுபொழி தனிக்கவிகை நிடதர் கோன் புகழ்ச்சரிதம் நெடுநீர் வைப்பிற், புலவர்களி யமிழ் தொழுகு புதுமொழிகூட் டுணத்தமிழாற் புனைதல் செய்தான், வலனுயர்த்த அண்ணலஞ்சேல் வான்றொடுபொற் கோட்டிமய வரையிற் றீட்டி, அலர்தலைமா நிலம்புரக்கும் **அதிவீர ராமனிக லாசரேறே** " என்பது.

நாற்பது ஆண்டுகட்கு முன்பு வரையில் திண்ணைப் பள்ளிக்கூடத்திலே முடிவுபெறும் மூலபாடம் நைடதமேயாம். இக்காலக் கல்விநிலை எவரும் அறிந்ததே.

2

## நூலாசிரியர் வமிசாவளி.




*பாராக்கிரம பாண்டியன் என்பவர் தென்காசிக்கோயில் கோபுர (அஸ்திவாரம்) உபானம் தொடங்கிய காலம் கலி—4558: கி—பி 1457. ஆறு ஆண்டுகளில் கோபுரம் முற்றுப் பெற்றது. சாலிவாகன சகம் 1385: கி—பி 1463ல் சிவ பதம் அடைந்தார். இவர் அரிகேரி — பராக்கிரம பாண்டியன் எனவும் படுவர். இவர் சகம் 1344க்குச் சரியான கி-பி 1442ல் அரசாளத் தொடங்கினார். இவருக்குப்பின் ஏறக் குறைய ஒரு நூற்றாண்டு கழித்து அபிராம பராக்கிரம பாண்டியன் அரசாட்சிக்கு வந்தார். அவர் குமாரர்களே பராக்கிரமன், திருநெல்வேலிப் பெருமாள் என்பவர்.*

வரதுங்கராமன் முடி சூடிய காலம் கலி-5989-கி-பி 1587 ஆம். இவர் வீரபாண்டியன், வீரமாறன் எனவும் படுவர்: (T. A S. I. 115.) அபிராமசுந்தரன், அபிராமன் எனவும் பெயர் உண்டு. காசிக் கலியன் கவிராயர் என்பவர் நாண்மங்கலம், குடைமங்கலம், வாண்மங்கலம் வீரமாறன்மீதுபாடியுள்ளார். (T. A. S. I. 115-6) பெருந்தொகையிற்காண்க. அதிவீரராமர் 1564—1596 வரை. வீரவேள்-குலசேகர பாண்டியன் முடிசூடிய காலம்—கி-பி 1556. இவன் வீர வெண்பாமாலை பெற்றவன் என்பர். அதிவீரராமபாண்டியர் 'தஞ்சைஜில்லாவிலுள்ள மடம் ஒன்றிற் காணப்படும் செப்பேட்டின்படி 1610-ல் சிவபதம் அடைந்திருக்கவேண்டும் என டாக்டர்-பர்னல் கூறுவர்' என்பர் பதினாறும் நூற்றாண்டுப் புலவர் வரலாற்று ஆசிரியர். 'எவ்வாறாயினும் **இவர் நாற்பது ஆண்டுகட்குமேல் அரசாண்டார்** என்பது ஒருதலை' எனவும் அவர் கூறுவர். இவைகளெல்லாம் இன்னும் நன்கு ஆராய்தற்குரியன.

'சேதுபுராணம் பாடிய நிரம்பவழகியரும், திருவிளையாடற் புராணம் பாடிய பரஞ்சோதியாரும் அதிவீரராமன் காலத்தவர்' என்பர். 'ஆசுகவிராசசிங்கம் என்ற சேறைக் கவிராச பிள்ளையை வரவேற்றுக் காளத்திநாதர் கட்டளைக் கலித்துறை பாடச்செய்தார். சிவந்த கவிராசர் என்றொரு புலவர் இவரது அவையை அலங்கரித்திருந்தார்' எனவும் புலவர் வரலாற்று ஆசிரியரே கூறுகின்றார். 'பாண்டிநாட்டிலிருந்த சீவிலிமாறருடைய பரம்பரையைச் சார்ந்தவரும், இராமபாண்டியர் என்று பெயர் பெற்றவருமாகிய சிற்றரசர் ஒருவரிடம் சென்று விரைவாகப்பாடும் தம்முடைய ஆற்றலைப் புலப்படுத்தி அவரை வியப்புறச் செய்து பல பரிசில்

கள் பெற்று மீண்டவர்' சேறைக்கவிராச பிள்ளை என ஸ்ரீமத் ஐயரவர்கள் திருக்காளத்திநாதருலா ஆசிரியர் வரலாற்றிலே கூறுவர். அதிவீரராமபாண்டியர் தெய்வத் தமிழ்மறை யாகிய தேவார திருவாசகங்களிலும் சிறந்த பயிற்சியுடைய வர் என்பது அவர் பாடல்களின் போக்கால் விளங்கும்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் துதி.

---

கருணைபொழி திருமுகத்திற் றிருநீற்று நுதலுங்
கண்டாரை வசப்படுத்தக் கனிந்தவா யழகும்
பெருமைதரு துறவோடு பொறையுளத்திற் பொறுத்தே
பிஞ்ஞகனார் மலர்த்தாள்கள் பிரியாத மனமும்
மருவினர்க ளகலாத ஞானமே வடிவாம்
வளர்துறைசைச் சிவஞான மாமுனிவன் மலர்த்தாள்
ஒருபொழுது நீங்காம லெமதுளத்திற் சிரத்தி
லோதிடுகா விணிலென்று முன்னிவைத்தே யுரைப்பாம்.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# காசிகண்டம் அத்தியாயப் பொருட்சுருக்கம்.

**முதலாவது :—**

*மகதி என்னும் வீணையையுடைய நாரதமுனிவர் நருமதை நதியில் முழுகி ஓங்காரப்பொருளாகிய சிவபிரானை வணங்கிப்போற்றினார். வரும்போது விந்தமலையைக் கண்டார். அப்போது விந்தமலையின் அதிதெய்வம் மானுடவுருக்கொண்டு நாரத முனிவரை எதிர் கொண்டது. தவத்தின் மிக்க அம்முனிவரை வணங்கியது. ஆசியைப்பெற்றது. முனிவர் மகிழ்ச்சி பொங்க உபசாரங்களையெல்லாம் குறைவறச் செய்து முடித்தது. முகமன் பல மொழிந்தது. உலக முழுவதையும் தாங்குபவன்யானே, மற்றைக்குன்றுகள் தாங்குவதென்பது சொல்லளவே, பொன்மலை என்பதனாலேயே மேரு உயர்வாகக் கருதப்படுகிறது, பொதியில் முதலிய எந்த மலையும் எனக்கு இணையாகா என்று நாரதர் முன் அகங்காரத்துடன் பலப்பல கூறியது. நாரதர் கேட்டுச்சிரித்தார். இதன் இறுமாப்பு எத்தகையது என உளங்கொண்டார். பொன்னகரம் சென்றார். மேருமலைக்குரிய புகழெல்லாம் சூரியன் அதனை வலம் வருவதாலேயேயாம். சூரியன் செல்வதைத் தடுத்தலே நாம் இனிச் செய்ய வேண்டிய காரியமாம் என மனத்தில் எண்ணியது. ஆகாயத்தை அளாவி ஓங்கியுயர்ந்தது.* 17 — 20 *செய்யுட்கள் நீதி கூறுவன.*

**இரண்டாவது :—**

*சூரியன் உதயகிரியில் தோன்றி வலம்வரத் தொடங்கித் தென்றிசையில் வந்தான். விந்தமலை தடுத்து நிற்பதை அறிந்தான். ஓர்புறம் வெயில் மிக, ஓர்புறம் இருள் மிக உலகம் கலங்கியது.*

தேவரும் முனிவரும் யாவரும் பிரமனை அடைந்தனர். 10–முதல் 16 செய்யுட்கள் வரை உள்ள தோத்திரப்பகுதிகள் படித்து இன்புறத்தக்கன. 25 முதல் பசுவின் மகிமை கூறப்பட்டது. வணங்கித் துதித்தனர். பிரமதேவரும், காசியிற் சென்று சிவபெருமான் அருட்கடலில் மூழ்கித்திளைத்திருக்கும் அகத்தியமுனிவர்பால் விண்ணப்பம் செய்க. உங்கள் இடுக்கணை அவரே களையவல்லவர் எனக்கூறி மறைந்தார். தேவர்கள் மனமகிழ்ந்து காசியை அடைந்தனர். [35-ஆம் பாடல் மனத்திருத்தத்தக்கது.]

**மூன்றாவது :—**

தேவர்கள் காசியையடைந்து மணிகன்னிகையில் நீராடிக் கடன்களை ஆற்றினர். சிலநாள் தங்கினர். காசியின் மகிமைகளை உணர்ந்தனர். உருகினர். [4 முதல் 9 வரை படிக்கத்தக்கன] இந்திரன் முதலிய யாவரும் அதனை எண்ணியெண்ணி வியந்தனர். பகையின்றி எவ்வுயிரும் அன்புருவாய் அங்கே வாழ்வதைக் கண்குளிரக் கண்டு மகிழ்ந்தனர். புலால் உண்ணல், கள்ளுண்ணல், காமம் துய்த்தல் முதலிய செயல்களைக்கடிந்துகூறும் பகுதி ( 11 முதல் 20 வரை ) படித்துச் சுவைக்கவுள்ளன. அகத்தியமுனிவா ஆசிரமத்தை அடைந்து தேவர்கள் அவரை வணங்கினர். முனிவர் வணங்கிய தேவர்கட்கு முகமன் கூறி அவரவருக்குத்தக்க இருக்கையில் இருக்கச்செய்தார். வந்தசெய்தியைக் கேட்டார்.

**நான்காவது :—**

கற்பு இலக்கணங் கூறுவன 8—48 முடிய உள்ள பாடல்கள். மேல் தேவர்கள் அகத்தியரிடம் விந்தவரை சூரியன் செல்லும் வழியைத்தடுத்து வளர்ந்தது எனக்கூறினர். விந்தமலையின் வலியை அடக்கி யாவரையும் வாழ்வித்தல் வேண்டும் என வியாழ பகவான் வேண்டிக்குறையிரந்தனர். அதனைக்கேட்டு ஏழ்கடலையும் உழுந்தமிழ்ந்து நீராக்கி ஆசமனம் பண்ணிய மகத்துவமிக்க அகத்திய முனிவர் அபயந்தந்தார். விண்ணவர்கட்கு விடைகொடுத்தனுப்பினார்.

ஐந்தாவது :—

அகத்தியர் தேவர்களுக் கெல்லாம் விடைகொடுத்தனுப்பியபின் இந்திரன் ஒரு மலையை அடக்கும் வலியிலன் போல் என்பால் வந்து குறையிரந்தான். பன்னிருசூரியர் அட்டவசுக்கள் மருத்துவர் ஏனைவானோர்கள் என்னுழை எய்தி இரந்தனர். என் செய்வது? காசியை விட்டு அகன்றோருக்குப்பின்பு நினைப்பினும் அது கிட்டுமா? முத்தியை விரும்பியவர் காசியை விட்டகலாரே! அறத்தின் இருப்பிடம் இக்காசியன்றோ? காசியில் வசிப்போர்க்கு அரிதாயபொருள் யாது? மெய்யுணர் வெய்தியோர் உறையும் காசியை அகன்று வேறிடம் விரும்புதல் பேதைமையே. அறியாமை மறைப்ப மறைந்து ஆசையென்னும் சுறாமீன் அலைப்பப் பிறவிக்கடலில் ஆழ்கின்றோர் காசியாகிய தெப்பத்தையன்றி முத்திக்கரையை எவ்வாறு காண்பர்? நெருப்பிடைநின்று தவம் செய்தாலும் பலகாலம் யோகங்களைச் செய்தாலும் சிவபிரான் அருளையின்றிக் காசியை அடைதல் எவர்க்கும் கூடாதே; செய்யும் தவத்தால் அறம் பொருள் இன்பத்தை அடைதல் கூடும். ஆயினும், இறந்து பிறந்து உழல்வோர் காசியை அடைந்தாலன்றி முத்திகைகூடார். வேதசிவாகமங்கள் எல்லாம் ஒருமுகமாகக் காசியையே வழுத்துவனவாம். காசியை அடைந்து இறக்கும் ஆன்மாவுக்கு உமாதேவியார் மேலாடையால் வீச, சிவபெருமான் தாரகமந்திரத்தை உபதேசித்து முத்தியை அளித்தருளுவர். ஆதலின், இப்பதியை எப்படி விட்டகல்வது? சிவபெருமானுக்கு ஒப்பாகத் தேவர் கணத்துள் யாவருளர்? அது போல, காசிக்கு ஒப்பாக மூவுலகத்திலும் ஒருபதியுண்டோ? எனப் பலப்பல கூறி வருந்திப் பின் ஒருவாறுதேறினர். துண்டிவிநாயகர் முதலிய விநாயகமூர்த்திகளையும், கொற்றவையையும் வணங்கினர். தேவர்கட்குறும் துன்பத்தை முன்பு நீக்கும் பொருட்டுத் ததீசி முனி முதுகெலும்பு அளித்தான், திருமால்வேண்டக் கருடன் ஊர்தியாயினன், மாவலி மூவுலகளித்தான், மதுகைடவர் சிரம் வழங்கினர். ஆதலின், காசியையகன்று தேவர் குறை முடித்தல் சிறந்

ததே என மனங்கொண்டார். சிவபிரானையும், காசியையும், காசியில் உள்ள சராசரம் முதலியவற்றையும் வணங்கினூர். விந்தமலையின் வலிதணிக்கக் குறு முனிவர் வழிக்கொண்டார். உலோபாமுத்திரை யாரும் உடன் செல்வாராயினர். மகத்துவமிக்க அகத்தியர்வரவை விந்தியமலை கண்டது. பதைபதைத்தது, நடுங்கிப்பெருமூச்செறிந்தது, அந்தணவடிவங் கொண்டு வந்தது, அகத்தியரை வணங்கியது. விந்தவரைக்கு ஆசிகூறி, யாம்பொதியிலுக்குச் சென்று மீண்டு வரும் வரை 'இப்போதுள்ள பணிந்து அடங்கிய இந்த வடிவுடனிருக்க' எனக்கட்டளையிட்டார். தென்றிசை நோக்கிச் சென்றூர். பின்பு, சூரியன் வழக்கம் போல இடையூறின்றி மேருவை வலம் வரத்தொடங்கினூன். அகத்தியர் காசியை மனத்தில் நினைந்து வணங்கிக் கொல்லாபுரத்தை அடைந்தார். திருமகள் கோயிலை நண்ணினூர். இலக்குமியை வணங்கித் தோத்திரம் செய்வாராயினர். (27 முதல் 32 வரையுள்ள இலக்குமிதோத்திரம் யாவரும் பாராயணம் பண்ணுதற்குரியது) பின்னர் அகத்தியருக்கு வேண்டும் வரங்களை இலக்குமிதேவி தந்தருளிக் காசியைப்பிரிந்து செல்லுவதால் உண்டாகிய வருத்தத்தையுமாற்றினூர். முருகவேளை விரைவிலடைவாய், அக்குருபரனூல் காசி மகிமை முற்றும் உபதேசிக்கப் பெறுவாய் என விடை கொடுத்தார். அகத்தியரும் முருகவேள் இனிதுறையும் பதிதேடிச் செல்வாராயினர். 10, 11, 14 ஆம் பாடல்கள் சிந்திக்கத்தக்கன.

**ஆறுவது :—**

யோசனை அகன்ற இப்பருப்பதம் இலிங்கவடிவம், இதனை வலங்கொண்டு வணங்குக என உலோபாமுத்திரைக்குக் கூறினர். பின் தீர்த்த மகிமைகளைக்கூறுவாராயினர். சத்தியம், தானம், இன்சொற்கூறல், காணம் ஒரு வழிப்படல், புலனடக்கம், பொறுமை, திட்ஞானம், உயிர்களுக்கு இரங்கல் இவையனைத்தும் **மானத தீர்த்தம்** என மேலோர் கூறுவர். இம்மானததீர்த்தம் படியாமல்

நீராடுவதால் புறத்தழுக்கொழியுமேயன்றி மனத்தழுக்கு நீங்கித் தூயராகார். மனத்தில் அழுக்கற்றவர்க்கே கல்வி, கடவுட்பூசை, நற்றவம், தானம் முதலியன பயனளிப்பனவாம். ஐம்புலவொழுக்க முடையவராய்ச் சிவபரம்பொருளைச் சிந்தையில் இருத்தும் நின் மலர் உறையும் இடமே தீர்த்தம் என்று கூறப்படும். ஞானவாரி யில் மூழ்குவதையே சுருக்கமாகத் தீர்த்தம் எனச் சொல்லுவர். அதுவே கருவிலே புகுத்துகின்ற மலத்தைக்கழுவும் என்பர். புண் ணிய தீர்த்தங்களில் பொருந்தி விதிப்படி மூழ்கினோர் இழிந்தபிறப் புக்களில் புகார், தெய்வத்தன்மை எய்துவர் அறவழியில் நீங்கினோர், அருளில்லாதார், சுவர்க்க நரகமில்லை எனச் சொல்லும் புல்லியோர், பயனில்லாத சொற்கள் கூறித்திரியும் பதடிகள் ஆகிய இவர்கள் தீர்த்தத்தில் முழுகினும் நல்லபயனை அடையார். தீர்த்தத்தில் ஆட வேண்டினோர் ஒருநாள் உணவுநீத்து விநாயகரைச்சிந்தித் திருந்து மறுநாட் பாரணம் பண்ணிச் செல்வார். தீர்த்தங்களில் தோய்ந்து நிலம் பொன் பசு இவைகளைத் தானம்பண்ணி, அந் தணர்களுக்கு அன்னம் வழங்கிப், பின் பிதிரர்கடன் செய்யவேண் டும். தீர்த்தத்தை அடைந்து அற்றைநாள் உணவு வெற்றிலை பாக்கு உண்டலின்றிப் பின்பு தலைமயிரை எடுத்துவிட்டுத் தீர்த்தத் தில் மூழ்கிடில் பாவங்களனைத்தும் நீங்கும் என்பர். **காசி, மாயா புரி, அவந்தி, அயோத்தி, துவாரகை, மதுரை, காஞ்சி ஆகிய ஏழும் முத்திநகரங்கள்** என்று பேசப்படும். அன்றியும், பிரயாகை கேதாரம் ஸ்ரீசைலம் என்ற தலங்களும் சிறந்த முத்தியை அளிப்பனவே. உலகத்திலே மேற்கூறிய தலங்கள் முத்தியைத்தரும் என்றது கங்கை சூழ்ந்த காசிக்ஷேத்திரத்தை அடைவதற்கு ஏதுவாய் இருத்தலாலேயேயாம். குற்றமில்லாத எத்தலங்களும் காசியைப்போல முத்தியைத்தரா என விஷ்ணு மூர்த்தியின் கணத்தோர் சிவசன்மாவுக்கு ஓதிய கதையை முனி வரர் ஓதினர் என்க.

ஏழாவது :—

முன்னொருகாலத்திலே வடமதுரையில் ஒரு பிராமணன் சிறந்த தவம் செய்து சிவசன்மா என்னும் புதல்வனைப் பெற்றான். அப்புதல்வனாகிய சிவசன்மா வேதவேதாந்தங்களெல்லாம் முற்றக் கற்றான். பல கலைகளிலும் வல்லவனானான். பொருளை மிக ஈட்டிக் களிப்புற்றான். பல புதல்வர்களைப் பெற்றான். மனைவி யுடன் குபேரவாழ்க்கையுடையனாய் விளங்கினான். இளமைப்பரு வத்தை அப்பருவத்துக்குரிய சிற்றின்பச்செயல்களில் செலவிட் டான். அழகு அகன்றது, இளமை போயது, நரை திரை மூப்பு கள் குறுகின. கோலூன்றும் தளர்நடைவந்தெய்தியது. அறமியற் றாது இத்துணைக்காலமும் வறிதே கழிந்ததே என ஏங்கினான். கண்ணீர் வார்ந்தான். மிக முயன்று நிதியம்பலதேடினேன். கற்ற கல்வியினால் தர்க்கம் பல செய்தேன். காலமெல்லாம் வாளா கழிந் தன. சிவபிரானை வணங்கிலேன், அவனடியார் திறத்தும் அன்பி லேன், திருமாலையும் வழிபட்டேனில்லை, விநாயகரை, சுப்பிர மணியக்கடவுளை, சூரியனை, அன்றி உமாதேவியாரை ஒருபோதும் ஏத்திலேன் அல்லது இவர்கட்குக் கோயிலும் எடுத்திலேன். தடாகம், கிணறு முதலிய தோண்டித் தருமமும் இயற்றிலேன், நிழல்தருமரமும் வைத்திலேன், துளசியையேனும் வளர்த்திலேன், வெயிலில் வருந்திறேருக்குத் தாகந்தணியத் தண்ணீர்ப்பந்தரும் வைத்தேனல்லேன், யாகங்கள்செய்தேனுமில்லை,தேவர்கடன்கழித் தேனில்லை, அந்தணருக்கு ஒரு பிடியன்னமும் உதவிலேன், அவருக் குக் குடையும் செருப்பும் வழங்கிலேன், பசுவுக்குப் புல் பறித்து அருத்திலேன், விளை நிலம், பைம்பொன், கன்னியர்களைப் பிராமண ருக்குத் தானஞ்செய்திலேன். அம்மட்டோ! உருத்திரசமகம் மொழிந்தேனில்லை, எரியில் எள்ளிட்டு ஓமம் பண்ணிலேன், சனி வாரம் திரயோதசியில் இறைவனை வலஞ்செய்து தரிசியேன், எனைத்தானமொன்றும் பிராமணோத்தமர்கட்குக் கொடுத்திலேனே! வலிமையுடன் காலபடர் கொடும்பாசத்தால் இறுக்கி நசுக்கும்போது

என்செய்வேன் !! அந்தணர்பூசை, அதிதியர் பூசையும் ஆற்றகில்லேன், இருவினைப்புண்ணிய பாவங்கள் இறுதிக்காலத்திலே தொடர்வனவேயன்றி வீடும் மாடமாளிகையும் மனைவியும் புதல்வரும் பணச்சாளிகையும் இவ்வுடம்பும் கூடவாராவே !!! செத்த பின் கொடுநரகத்தில் அழுந்தித் துன்புற்றுப் பின்பு வறுமை மிக்கு மறு பிறவியிலும் மெலிவேனே! எனப் பலப்பல எண்ணியெண்ணி நொந்தான். அலறினான். இனியாவது இவ்வுடல் உள்ளபோதே தீர்த்தயாத்திரை தலயாத்திரை செய்து வாழ்வேன் எனத் துணிந்தான்.

பின்பு, சிவசன்மா நல்ல முகூர்த்தத்திலே விநாயகரைப் போற்றி அயோத்தியை அடைந்தான். சரயுநதியில் ஆடினான். அந்தணர்க்கு அமுதருத்தினான். ஐந்து நாட்கள் அங்கே தங்கிப் பிரயாகைக்குச்சென்றான். அங்குள்ள வடதருவையும், சிவபிரானையும், இலக்குமியுடன் வீற்றிருக்கும் திருமாலையும் வணங்கிப் போற்றினான். திருவேணிசங்கமத்தை அடைந்தான். காசியைச் சேர்ந்தான். விநாயகரை வணங்கி, மணிகன்னிகையில் நீராடி, கங்கையில் முழுகி, முனிவர்கடன் பிதிரர்கடன்களையும் கழித்தான். விசுவநாதப்பெருமானை வணங்கிப் போற்றிக் காசியையும் துதித்தான். காசிநகருக்கிணை உண்டோ எனக்கருதினான். எனினும், அறிவிலாதான்போல சங்கற்பம் தவறுமே என்றெண்ணிச் சத்தபுரியையும் தரிசித்துவருவதற்கு உறுதிபூண்டான், தீவினைபிடர் பிடித்து உந்தக் காசியைஅகன்றான். அவந்தி, மாகாளம், உச்சயினி முதலிய நகரங்களை அடைந்து ஆடகேச்சுரர், தாரகேச்சுரர், மாகாளர் முதலிய சிவமூர்த்தங்களை வணங்கினான். காஞ்சியை அடைந்து ஏழுநாட்கள் தங்கினான். துவாரகை, மாயாபுரி முதலிய தலங்களையும் தரிசித்தான். அரித்துவாரம், கங்காத்துவாரம், மாயாத்துவாரமென்னும் பெயருடைய அம்மாயாபுரியில் சிவசன்மா தங்கியிருந்தான். ஏகாதசி நோன்பிருந்து திருமாலை வணங்கினான். மறுநாள் பாரணம் பண்ணுவதன்முன் குளிர்சுரம் வந்து வருத்தியது.

திருமாலையுளங்கொண்டான். போரில் எதிர்த்து நின்று மார்பில் புண்பட்டு இறப்போரும், தீர்த்தயாத்திரைபோய்ச் சாகின்றோரும் காலபடரைக் கண்ணில்காணார் என்பதை உறுதியாகக்கொண்டான். ஏழுநாட்கள் சுரத்தால் வருந்தி வாடினான். சிவசன்மன் இறந்தான். விஷ்ணுகணங்களாகிய சுசீலனும் தருமசீலனும் தெய்வ விமானத்துடன் அங்கே தோன்றினர். மாயாபுரியில் சிவசன்மன் இறந்த புண்ணியத்தால் விஷ்ணுசாரூபம் பெற்றான். அரமகளிர் சாமரம் இரட்ட, விமானத்திலே விண்ணவர் பூமழைபொழிய, விசும்பிற்சென்றான்.

எட்டாவது :—

சுசீலனும் தருமசீலனும் சிவசன்மாவை விமானத்தில் அழைத்துச் செல்வாராயினர். வழியில் சில உலகங்கள் தென்படுகின்றன. அவையாவன :— இஃது அலகையுலகம்: இதில் தூய்மையின்றிச் சிவனை அருச்சனைசெய்தோரும், இல்லையெனப்பின்கொடுத்து மனம் நொந்தவரும் வசிப்பர். இது குய்யகவுலகம்: தேடிய அரும்பெறற் செல்வத்தை நல்லோருக்குப் பகுத்துத்தாம் பகையின்றிப் பாழ் வயிற்றை வளர்த்துப் பிற உயிர்களுக்குத் துன்பம் செய்யாதவர் இங்கே வாழ்வர். இதுகந்தருவ உலகம்: நல்ல அரிய விரதம் அநுட்டித்தவரும், விண்ணவர்கட்கு யாழ்வாசிப்போரும், பெற்ற பொருளைக் கொண்டு தானஞ்செய்தவரும் இங்கே உறைவர். இது வித்தியாதரர் உலகம்: இவ்வுலகில் பயனைவிரும்பிச்சிவபூசைசெய்தோர், அத்தியயனம் செய்பவருக்கு உண்டி உடை உறையுள் பொருள் உதவினோர், இயலிசைகளைக் கற்பிப்போர் வாழ்வார் எனச் சிவசன்மாவுக்குக் கணங்கள் கூறினர். இயமன் எதிர்தோன்றினான். சிவசன்மனைக் கண்டான். முத்திநகரம் ஏழையும் தரிசித்துப்பாவத்தைப் போக்கிய உன்னைக்காணும் மகிழ்ச்சியால் எதிர் கொண்டு வந்தேன் என முகமன் இயம்பினான். பின்பு விடை கொண்டு காலபடர் சூழத்தன்பதிக்குத் தருமன் சென்றான். சிவசன்மன் கணங்களைப்

பார்த்து மனத்தை உருக்கவல்ல வடிவும் வாய்மையும் உள்ள இவனை யோ மறலி யென்றது! இவனோ அஞ்சத்தக்க கொடிய வடிவினன்? என்றான். கணங்கள் அந்தணனை நோக்கி தருமம், நீதி, பொறை, அன்பு, தயவு இவைகளில் இவனை ஒப்பார் எவருமிலர். இவன் மிக்க தவத்தையுடையவர் முன்னே தோன்றி உபசாரம்செய்வான் என்றார் பாவம் செய்த ஆன்மாக்களை இயமலோகத்தில் தண்டனை செய்யுமாறு இயமன் தன் தூதருக்குக்கட்டளையிடுவான்: பாவிகளுக்கே மிகக்கொடியான் நல்லோருக்கெல்லாம் நல்லன். (23 முதல் 47 வரை நரகவிசேடங்கள் கூறப்படுவன. பாவங்களின் வகைகளும் விளக்கப்படுவன.) நல்லொழுக்கம் தவறாது நீதியில் நடக்கும் ஆன்மாக்களைத் தருமன் மிகப்பாராட்டி மகிழ்வான்: நீதிமன்னர்கள் விண்ணுலகில் சுதர்மை மண்டபத்தில் உறைவார்; இயமலோகம் செல்லமாட்டார். 53–56 வரை 108 நாமங்கள் அடைமொழியின்றிக் கூறப்பட்டுள. இந்நாமங்களை உச்சரிப்போர் இயமலோகம் செல்லமாட்டார் எனக் கணநாதர் கூறினர்.

**ஒன்பதாவது :—**

பின்பு, அரமகளிர் உலகம் தோன்றியது. இவர்கள் தெய்வ மாதர்கள், பாற்கடலில் அமுதத்தோடு தோன்றியவர்கள். இசையிலும் நாடகத்திலும் தேவபாஷையிலும் கலைகளிலும், மதனநூலிலும் வல்லவர்கள். இவர்கள் அறுபதினாயிரம் மகளிர் என்றார் கணநாதர். சூரிய உலகத்தைச் சிவசன்மா கண்டான். ஐம்புலனையும் அடக்கிக்காயத்திரியை விதிப்படி மௌனமாயிருந்து ஜெபிப்பவர் சூரிய உலகத்தையடைவர். வலிய மந்தேகர் என்னும் அசுரரை அழிக்கும் பொருட்டுக் காலை, நடுப்பகல், மாலை ஆகிய மூன்று காலங்களிலும் பிராமணர் கொடுக்கும் அருக்கியத்தை உவப்புடன் சூரியன் ஏற்றுக்கொள்வான். மூன்று முறை அருக்கியங்கொடுத்தால் மூன்று உலகத்தையும் தானமாகக் கொடுத்தலை ஒக்கும். காயத்திரிக்கு ஒப்பான மந்திரமும், காசியை ஒப்பான தலமும், விசுவநாதனை

ஒக்கும் தெய்வமும் இல்லை. கௌசிகர் காயத்திரியை ஜெபித்த பலத்தால்தான் பிரம இருடியாயினர். நால்வேதமும், ஆறங்கமும் பயின்றனனாயினும் காயத்திரியை விதிப்படி கணியானாயின் அவன் அந்தணன் ஆகான். காயத்திரியை ஓதிச் சூரியனை அருச்சிப்போர் இப்பதத்தில் வாழ்வர் என்றார். 22 முதல் காயத்திரி மந்திரத்தைச் செபிப்போர் பெறும் பேறு பேசப்படும்.

## பத்தாவது :—

சிவசன்மா தெய்வலோகங் காணுதல் இதில் கூறப்படும். சில விரதநியமங்கள் உள்ளன.

19 செ. 'துறந்தார்க்கும்' – குறட் கருத்து. இந்திரபதம் – அக்கினியுலகு – நால்வகை ஆசிரம நிலைகள் – இல்லறம் துறவறத்தினும் சிறத்தல் – வீரேசனை வழிபடுதலால் மகப்பேறுபெறல் – 45 முதல் 52 வரையுள்ள தோத்திரப் பாடல்கள் சிவாஷ்டகம். இதனைப்பாராயணம் பண்ணுபவர் மகப்பெறுவர் என்பது.

## பதினொன்றாவது :—

விச்சுவாநரன் ஆண்மகப்பெற்றமை- தாய், தந்தையிற்சிறந்தவன் எனல் – புத்திரப்பேறு சிறந்தது – புத்திரர் ஆவார் இவர் எனல் — நாரதர் சாமுத்திரிகாலட்சணம் கூறல் – (17—25 பாடல்கள்) திருத்தாண்டகக்கருத்து—35. விச்சுவாநரன் மகன் இன்பபதி அக்கினியின் பதவி பெற்றமை.

## பன்னிரண்டாவது :—

விந்தமலையின் பக்கத்தில் வேட அரசன் பிங்கலாக்கன் வழிச் செல்வோர் துன்பம் தவிர்ப்பவன். போரில் இறந்து நிருதிபதம் பெற்றான். ஒருமறையவன் புதல்வன் இறைவனை வணங்கி வருணன் பதம் பெற்றனன் எனல்.

**பதின்மூன்றாவது :—**

*துதிச்செய்யுள் 4—11. காசிபன் மகன் காசியையடைந்தது — சிவபிரானை வழிபட்டு வாயு உலகத்தை அடைந்தமை — காம்பலி — வேள்விதத்தன் புதல்வன் விளக்கைத்தூண்டுதல்—சிவநிசியிற் களவு செய்து உயிர் நீத்தல். 21, 28 படிக்க. குணநிதி கலிங்கநாட்டரசன் பால் உதித்தல் — அவன் குபேரனாயினமை — 49. 'உடம்பெனுமனை யகத்துள்' திருநேரிசைக்கருத்துக் காண்க.*

**பதினைந்தாவது :—**

*புருடாயுதம் என்னும் தவம். 12—16, 32— சிந்திக்கத்தக்கன.*

**பதினாறாவது :—**

*மிருதசஞ்சீவனி என்னும் விஞ்சை 9.*

**பதினெட்டாவது :—**

*ஏழ்முனிவர் அவர் பத்தினிகள் பெயர் 2, 3.*

**பத்தொன்பதாவது இருபதாவது :—**

*துருவன் வரலாறு.*

**இருபத்தொன்றாவது :—**

1 — 4 *திருமால்துதிகள்—துருவன் பேறுபெற்றமை.*

**இருபத்து நான்காவது :—**

*சிவசன்மா முத்திபெறுதல்.*

**இருபத்தைந்தாவது :—**

*அகத்தியமுனிவர் வரலாற்றை வியாதமுனிவர் முன்னுரைத்த படியே இன்னும் மொழிவேன் எனச் சூதமுனிவர் சொல்லத்*

தொடங்கினர். தமது பத்தினியாராகிய உலோபாமுத்திரை யோடும் அகத்தியமுனிவர் திருப்பருப்பதத்தை வலங்கொண்டார். வேலாயுதத்தை ஏந்திய முருகவேள் வீற்றிருக்கும் உலோகித மலையின் பக்கத்தைஅடைந்தார். முருகவேளை வணங்கித்துதித்தார். காசியில் வதிபவர் மேனி கீண்டப்பெறினும் பிறப்பறும். காசியை நீங்குவதே மிக்க மடமையாம். **காசிகாசி** என்பவர் பெறும்பேறு யோகிகளும் அடைதற்கரிதாம் என்று முருகவேள் அகத்தியருக்கு அருளினர். காசியில் தவஞ்செய்து பேறுபெற்ற நின்னை நிகர்ப்பார் யாவர்? என ஆறுதல் கூறினர். தத்துவங்கடந்த பரம்பொருள் வீற்றிருக்கும் காசியின் மகிமை கூறுதலரிதாம். காசி தோன்றிய விதம் – காசி மயானம் – வாராணசி – உருத்திரவாசம் – ஆனந்த கானம் எனப்பெயர்வந்த வரலாறு,–மணிகன்னிகை–முதலிய யாவும் உரைப்பேம் கேட்பாயாக என அகத்தியருக்கு முருகக்கடவுள் அருளுவாராயினர். 8-ம் செய்யுள் சிந்திக்க.

## இருபத்தாருவது :—

அவிமுத்தம், ஆனந்தகானம், மணிகன்னிகை என்னும் பெயர் வந்தமை. மக்களுட்பதடி இவரெனல்—18.

சர்வசங்காரம் ஆகியபின் மீட்டும் படைக்கத்தொடங்கிச் சத்தியாகிய உன்னைத் தோற்றுவித்தோம். நாம் உன்னோடு வைகுதற்கு மஞ்சமாகப், பூதங்களையெல்லாம் தோற்றுவிக்கு முன்பே ஸ்ரீ காசியைத் தோற்றுவித்தோம் என அம்மையாரோடு இறைவர் கூறினர். எல்லாம் அழிந்தபொழுதும் அமலனும் உமையுமாக அங்கு வீற்றிருத்தலினுல் அவிமுக்தம் என்ற பெயர் வந்தது. சிவானந்தத்தை அளிப்பதனுல் ஆனந்தகானம் எனப் பெயர்பெற்றது. மற்றும் ஒரு புருடனைத் தோற்றுவிக்க இறைவர் கருதினர், வாமபாகத்தைத் தமதிச்சையில் நோக்கினர், விஷ்ணு மூர்த்தி தோன்றினர். அவரை நோக்கி 'உன் பெயர் நாரணன் என வழங்குக. உன்மூச்சுவேதமாம். அதனுல்எவற்றையும்.ஆராய்ந்தறிக'

எனக் கட்டளையிட்டு அம்மையாருடன் இறைவர் மறைந்தருளினர். திருமால் பெருந்தவம் ஆற்றினர். அவருக்குஅம்மையப்பராகக்காட்சி யளித்தார் இறைவர். நீ கேட்ட வரங்களையெல்லாம் தந்தோம். நீ முன்பு சக்கரப்படையால் உண்டாக்கிய வாவியில் நமது திருமுடி அசைத்தகாலத்துக் குழையிலுள்ள மணி விழுந்தமையால் **மணி கன்னிகை** என்னும் பெயர் உண்டாவதாருக. இதில் முழுகினோர் பெறலரும் வீட்டின்பம் பெறுவாராக. நால்வகைத்தோற்றத்து எல்லாவுயிரும் இந்தத் தீர்த்தக்கரையில் உயிர்நீங்கின் மீளாத முத்தி யைப்பெறுவதாருக. அந்தோ! காலபாசத்துயர் கழுத்திலே பொருந் தியும் பலர் காசியைச் சேர்கின்றாரில்லை. நூறுயோசனை தூரத்துக் கப்பாலிருப்பினும் காசியை நினைந்து உயிர்விடுவாராயின் அவர் கற்பக நீழலில் வைகிப், பின்பு புவியரசராய் வாழ்ந்து, காசியைச்சார்ந்து, முத்திபெறுவர். இளமை, யாக்கை, செல்வ நிலையாமைகளை உணர்ந்தும், சிற்றின்பத்தில் மூழ்கி மகிழ்ந்தும், கூற்றம் தப்பாது வருவதுதெரிந்தும், காசியைச்சென்று சேராதார் மக்களுட்பதடியே யாவர் என அருளிச்செய்தார்.

**இருபத்தேழாவது :—**

நான்கு யுகங்களிலும் முத்தியடைதற்குக் காரணம் கூறல்—கங்கைதியானம்—4. கங்கையைப்பூசித்தல் முதலியன கூறப்படும்.

**இருபத்தெட்டாவது :—**

கங்கையில் எலும்பு வீழ்தலின் சிறப்பு.

**இருபத்தொன்பதாவது :—**

கங்கையின் ஆயிரநாமங்களுட்சில: 2—5 பாடல்கள்.

**முப்பதாவது :—**

கங்கைச்சிறப்பு — வரணை — அசி: பெயர்க்காரணம்—தெற்கு வடக்காய்ச்செல்லுதல்-தேகளிவிநாயகர் மேற்குதிக்கில் காவல்-இவ னருளின்றிக் காசியடைதல் கூடாது எனல்—வாராணசிப் பெயர்

4

காசிக்கெய்தல்—காசியிலிறந்தோர் முத்திபெறுதல்—உருத்திரவாசப் பெயரெய்தியது—உடம்பினிழிவு—25. தேவாரம்: "கால்கொடுத் தெலும்புமூட்டி" திருநேரிசை. "கால்கொடுத் திருகையேற்றி" திருமறைக்காடு.

முப்பத்தொன்றாவது :—

நான்கு வேதங்களும் தத்துவப்பொருள் சிவனே எனல்—அயன் மால் மயங்குதல் — வயிரவர் தோன்றிப் பிரமன்சிரங்கிள்ளல்—இறை வர் அருளால் பிரமகத்தி தொடர்தல் — காசியடைந்ததும் அது நீங் கல்—கபாலம் விழுந்த இடம் தீர்த்தம்—காசிவயிரவரை வணங்கல்.

முப்பத்திரண்டாவது :—

பூரண பத்திரன் மகன் அரிகேசன் காசி அமலனைப் பூசித்துத் தண்டபாணியாம் பேறு பெற்றது. 11-ஆம் செய்யுள் படிக்க.

முப்பத்துமூன்றாவது :—

ஞானவாவிச் சிறப்பு — வருணனைப்பகுதிகள் சிறந்தன.

முப்பத்துநான்காவது :—

கலாவதி முத்திபெற்றமை.

முப்பத்தைந்தாவது :—

இயமம், நியமம், நித்தியகருமம், ஆசமனம் செய்தற்குரிய காலங்கள், தந்தசுத்தி செய்யத்தகாத காலம், பற்குச்சி ஒடிக்கும் போது வேண்டுகோள் — அளவு—நீர்க்கடன்—காயத்திரிசெபம்—காயத் திரிதியானம்—சூரிய அர்க்கியம்—தேவர் முனிவர்தென்புலத்தோர் தர்ப்பணம் — வைச்சுவதேவம் — பகற்சந்தி — விதிப்படிபோசனம் — அதிதிபூசை — உத்தராபோசனம் — கைகழுவல் — ஆசமித்தல் — அடைக்காய் — பிற்பகல் கழித்தல்—மாலைச்சந்தி—காயத்திரி செபம் — —வேள்வி — நித்திரை—தலைவைத்து நித்திரை செய்யுந்திக்கு முதலி யன.

முப்பத்தாருவது :—

*கர்ப்பம் தரித்த நான்காம் மாதமுதல் கிரியை — சீமந்தம்—சாத கன்மம் — நாமகரணம் — அன்னப்பிராசனம் — உபநயனம் — பிரமசரியம் காத்தல் — குருகுலம் — தண்டுதரித்தல் — அளவு — சமாவர்த்தனம் — மன்றல் — விதிப்படி இல்லறம்—ஆசிரமிகளின் அடையாளம்—மகளிர் தனித்துறைதல் கூடாமை — தாயர்வகை.*

முப்பத்தேழாவது :—

*மகளிர் இலக்கணம் கூறுதல்—சாமுத்திரிகாநிலை—இன்பதுன்பங்களின் காரணம் அறிதல் — வறுமை செல்வம்வந்து அடைதல் முதலியன.*

முப்பத்தெட்டாவது :—

*எண்வகை மணம்—மகளிரைப் புணர்தற்குரிய காலம்-அல்லாத காலம் — பஞ்சமகாயக்ஞம் செய்தலின் அவசியம் — ஐவகை வேள்வியாவன—சிரார்த்தம் — அதிதிபூசை — வைச்சுவதேவம் — எண்ணெய்—மயிர்வினை செய்யலாகாக்காலம் — மனத்திடை நினைப்பினும் தீமை பயப்பன — வலஞ்செல்லுதற்குரியன — செய்தல் ஆகாதன என்பன.*

முப்பத்தொன்பதாவது :—

*இல்லற தருமங்களும் — தவறினோர் நிலையும்.*

நாற்பது :—

*வானப்பிரத்தநிலை — நியமங்கள் — துறவறநிலை — அதற்குரிய நியமங்கள். கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டைகூடல் — யோகமென்பது — சடங்கயோகம் — ஆசனம் — யோகுக்குரிய இடங்கள் — பிராணயாமமுறை — தாரணைவகை — தியானம் — சமாதி — முத்திரைகள் — யோகியர்க்கு இடையூறு இவை எனல் — உடல் வருந்தாமல் முத்தியடையக் கருதினோர் காசியை அடைதல் வேண்டும் என்பது முதலியன.*

நாற்பத்தொன்றாவது :—

*மரணக்குறியறிதல் விரிவாகக் கூறப்படும்.*

## இரண்டாவது—உத்தரகாண்டம்.

நாற்பத்திரண்டாவது :—

*அளவற்ற காலம் யோகம் செய்யினும் ஞானம் கிடைத்தல் அரிது எனல்—காசியில் எளிதில் முத்திபெறலாம்—காசியை நீங்காது வசித்தலே யோகம்—மலரால் அர்ச்சித்தலே தானம்—முத்திமண்டபத்து இருத்தலே தியானம்—மந்தரமலே முத்திமலேயாயினமை—இறைவர் நீங்காமல் உறைதலின் அவிமுத்தம் எனல்.*

நாற்பத்துமூன்றாவது :—

*திவோதாசன் ஆட்சிச்சிறப்பு—தவத்தின் பயனால் குடிகட்குத் துன்பமின்றிப் பாதுகாத்தல்.*

நாற்பத்துநான்காவது :—

*காசிநகர வருணனை—சிவபிரான் காசியைப்பிரிந்ததுயர்.*

நாற்பத்தைந்தாவது :—

*யோகினிகள் காசியை அடைதல்—பற்பல வடிவங்கொண்டு சஞ்சரித்தல்—காசியில் தவஞ்செய்திருத்தல்.*

நாற்பத்தாறாவது :—

*உலோலாதித்தன் என்னும் சூரியன் காசியை அடைதல். பல உருக்கொண்டு மூன்று ஆண்டுகள் வதிதல்—எவ்வில் திரியவருக்கும் புகழ்கிடையாது என்பது—பன்னிருபெயர் பெறல்.*

நாற்பத்தேழாவது :—

*சுலக்கணை என்பவள் உத்தராதித்தன் கட்டளையால் தவஞ் செய்து பேறுபெற்றமை. அவளை வலஞ்செய்து வந்த பெண்ணாட்டுக் குட்டியும் இறைவர்அருளால் காசி யரசன் புதல்வியாய்ப் பிறந்தமை.*

நாற்பத்தெட்டாவது :—

*அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம். பெண்கள் தனித்துறையும் இடங்களில் ஆடவர் வாலாகா தெனல்—4, சாம்பனுக்கு நாரதன் சொல்லால் குட்டநோய்வரக் கண்ணன் சாபமிடல் — சாம்பன் காசி சேர்தல்—சாம்பாதித்தன் எனச் சூரியன் பெயரடைந்தமை.*

நாற்பத்தொன்பதாவது :—

துருபதாதித்தன் கதை *எனத்திருத்துக. அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம். துருபதன் புதல்வி திரௌபதி சூரியனை நோக்கித் தவஞ்செய்து அக்ஷய பாத்திரம் பெற்றது—அதனால் சூரியனுக்குத் துருபதாதித்தன் என்ற பெயர் வந்தமை.*

ஐம்பதாவது :—

*சூரியன் தவஞ்செய்து இறைவனுக்குக் கண்ணானமை.*

ஐம்பத்தொன்றாவது :—

*கடோற்கம் என்றதால் கடோற்காதபன் எனப்பெயர் வந்தமை — விநதை கத்துருவை சம்வாதம்—கருடன் அமுதம் கொணர்தல் — விநதை அடிமை நீங்குதல் — கருடன் மாலுக்கு இரண்டு வரந்தால் — கருடன் காசியை அடைந்து இறைவனை வழிபட்டமை.*

ஐம்பத்திரண்டாவது :—A.

*விநதை காசிபன் அருளால் கூகை, அருணன், கருடன் இவரைப் பெறுதல். அருணன்காசியில் தவஞ்செய்து சூரியன் தேர்ப்பாகன் ஆதல் – விருத்தன் இளமைப்பருவமடைதல் – தேசவன்*

ஈசனைப் பூசித்தமை-பிரமப்பொருளைத் திருமால் பகர்தல்-16,17,18. விமலன் சூரியனைப்போற்றி மரபுமுழுதும்குட்டம்வாராவரம் பெறல் –அருணாதபன் விருத்தாதபன் எனச் சூரியன் பெயர் பெற்றமை.

## ஐம்பத்திரண்டாவது :—B.

பிரமன் சிவபிரான் கட்டளைப்படி காசிக்குச் செல்லல்—திவோதானன்பால் சென்று அசுவமேதம் செய்ய வந்ததாக மொழிதல் –பத்து வேள்வி யாற்றுதல் – உருத்திரமடுக்கரையில் பிரமேச்சுரரைப்பிரமன் பூசித்தல்

## ஐம்பத்துமூன்றாவது :—

சிவகணங்களின் தலைவர் பெயர் சில கூறப்படும். சிவபூசைச் சிறப்பு—6. திவோதானன் பால் சென்று காரியம் பலியாமல் சிவலிங்கம் அமைத்துப் பூசித்தல்.

## ஐம்பத்துநான்காவது :—

வான்மீகி என்னும் அந்தணன் சிவலிங்கத்தைப் பூசித்தல்— அலகை வடிவம்—3. இரப்போர் அலகை யாவார் எனல் – சிவசிவ எனலால் தீவினை தீர்தல் – அலகை தீர்த்தமாடித் தெய்வவுலகம் சேர்தல்.

## ஐம்பத்தைந்தாவது :—

கணபதி காசிக்கு வரல் – காசி நகரத்தார்பால் கணபதி கணித் திறம் உரைத்தல் – கோள்நிலை கூறல்.

## ஐம்பத்தாறாவது :—

கணபதி திவோதானனைக் காணல் – லீலாவதி மறையோன் வரவு கூறல் – எட்டு நாளில் வரும் மறையோன் சொல்லைக்கேள் எனல்.

ஐம்பத்தேழாவது :—

திருமால் காசியை அடைதல் – ஆதிகேசவனும் அமர்தல் — ஒரு கூற்றால் புத்தவுருவோடு புண்ணியகீர்த்தியும் — கலுழன் வினய கீர்த்தியும் திருமகள் கவுந்தியும் ஆதல் – புத்தர் சித்தராக விளங்குதல் – 9 பாடல் முதல் 12 முடிய புத்தசமயக் கொள்கை போதித்து மருட்டல் – கவுந்தி மகளிர் கற்புநெறியைக்கலைத்தல்.

ஐம்பத்தெட்டாவது :—

திவோதாஸன் திருமாலை உண்மையிற் கண்டு திருவடிசூட்ட வேண்டல் – அமரரை இகழ்ந்த பாவம் அகல இரத்தல் – இறைவனுண்மையைத் திருமால் இயம்பல் – கங்கைக் கரையில் இலிங்கம் அமைத்து வழிபடச்சொல்லல் – ஏழ் நாளில் முத்தி கிடைக்கும் எனல் – சயனுக்கு மணிமுடி கவித்தல் – ஏழாம்நாளிலே திருமால் கூறியபடி விமானம் வருதல்–சிவசாரூபம் பெற்றுத் திவோதாஸன் கயிலையை அடைதல்.

ஐம்பத்தொன்பதாவது :—

பிருகுவின் வழித்தோன்றல் வேதசிரஸ் தோற்றல் – சசிவரால் – மகளிரை நினைப்பினும் மனமுருகும் எனல் – சசிபால் மகட்பெறுதல் – மகள் தவஞ் செய்தல் – தருமன் வலிதில் தழுவல்–நதியாருக எனச் சபித்தல் – சிலையாகுவை எனத்தருமன் அவளைச்சபித்தல்– சந்திரகாந்தக் கல்லாகித் தூதபாவை என்னும் நதியாய்த் தருமமாநதத்தில் கலக்க என முனிவன் தவவலியால் நியமித்தல்–தருமநதி தூதபாவை, கிரணை, யமுனை, கங்கை ஆகிய பஞ்சநதங்கள் – இவற்றில் தோய்வோர் முத்தியடைவார் எனல்.

அறுபதாவது :—

பஞ்சநதக்கரையில் முகுந்தன் இருத்தல் – விந்துமாதவன் வழிபடல் – கார்த்திகை மாதத்தில் பூசித்தலின் பேறு–நான்கு யுகங்களினும் வழங்கும் பெயர் – சிவபிரானை நிந்திப்போர் நிரயத்திடைச் சேர்வர் எனத்திருமால் கூறுதல்.

**அறுபத்தொன்றாவது :—**

பாதோதகக் கரையில் சங்கமேச்சுரனைத் திருமால் வழிபடல் —ஆதிகேசவன் முதலாகப் பிரயாகை மாதவன் ஈறாய் உள்ள இருபத்துமூன்று மாதவராய் இருத்தல்—மணிகன்னிகை அளவு இஃதெனல் — 3-ஆம் பாடல் தியானம் — மூலமந்திரம் செபித்தல் — பாசுபத தீர்த்தம், பசுபதீசன் வழிபடல் — உருத்திரவாசம் — முத்திதீர்த்தம் — அவிமுத்தம் — தாரகதீர்த்தம் — கந்தவாவி துண்டிவாவியிற் படிதல் — பவானிதீர்த்தம் ஞானவாவி மாதவதீர்த்தம் பிதாமகதீர்த்தம் பகீரததீர்த்தம் மார்க்கண்டதீர்த்தங்கள்—காசிக்கரைப் பாதுகாப்போர்—ஆதிநாயகன் வரவைத் திருமாலுக்குக் கருடன் தெரிவித்தல்.

**அறுபத்திரண்டாவது :—**

விசுவநாதர் காசியை அடைதல்—திருமால் முதலியோர் எதிர்கொளல் — அவர்கட்கு அருள் செய்து இருத்தல் — கோலோகத்திலிருந்து சுனந்தை, சுமனசை, சுசீலை, சுரபி, பத்திரை ஆகிய பஞ்சதேனுக்கள் வந்து பால் பொழிந்து வாவிகளை நிறைத்தல் — கபில தீர்த்தம் — ஆடினோர் பேறு கூறல்.

**அறுபத்துமூன்றாவது :—**

விசுவநாதர் சைகிடமுனிவனை அழைப்பித்தல் — வரந்தரல் — யோகாசாரியன் என வாழ்த்தல்.

**அறுபத்துநான்காவது :—**

முனிவர் இறைவர்பால் அடைதல் — முனிவருக்கெல்லாம் வரமளித்தல்-அம்மையார் பந்து விளையாடல்—அசுரர் சூழ்ச்சி—பந்தினாற் கொல்லல் — பந்து சிவலிங்கமாதல்.

**அறுபத்தைந்தாவது :—**

பிரகலாதன்மாமன் துந்துபி — மறைந்து மறையவரைக் கொல்லல் — சிவசந்நிதியில் பிராமணர் அனைவரையும் கொல்லக் கோயிலிற்

குறுகுதல்—அவனை இறைவர் அழித்தல்-சேட்டேச்சுரன் வியாக்கி ரேச்சுரனுதல்.

அறுபத்தாறுவது :—

இமயவேந்தன் காசியை அடைதல்—காட்சிகளைக்காணல்—காசி விசுவேசரை உவப்பித்தல் – பாவசயிலம்அமைத்தல் – கோயில்முன் இரத்தினங்களைக்குவித்தல்-அம்மையாரோடு இறைவர்மலையரையன் செய்வித்த கோயிலில் உறைதல்.

அறுபத்தேழாவது :—

மலையரசன் செய்தவத்தால் இரத்தினக்குவியல் இலிங்கமாதல் – இரத்தினுவல்லி கந்தருவஅரசன் மகளாதல் – இறைவரை வழி படல் – இறைவர் வரமளித்தல் – கனவில் இரத்தினசூடன் தழுவல் –காசியை அடைந்து இறைவரை வழிபட்டுச் சோலையை அடைதல் —காமத்தால் வருந்தல் – தோழியர்பால் கனவு நிலைகூறல் — தோழி யர் படம் தீட்டிக்காட்டல் – இரத்தினசூடன் எனத்துணிதல் — சுவா என்னும் அசுரன் மகளிர் நால்வரையும் வலிதின் எடுத்துச் செல்லல்—அவர் அரற்றல்—இரத்தினசூடன் தோன்றிப் போர்செய்து தலை துணித்தல் – வாவிபடிந்து ஈசன் முன் சேறல் – வசுபூதிவரல் —இரத்தின சூடனுக்கு வதுவை செய்வித்தல்—போகந்துய்த்திருந்து சிவனடிசேர்தல்.

அறுபத்தெட்டாவது :—

மயிடாசுரன் புதல்வன் கயாசுரன் – சூலத்திற் குத்திவந்தல்— கயாசுரன் தோலையணிந்தமை — கிருத்திவாசேச்சுரம்—சூலபாடன தீர்த்தம் முதலியன.

அறுபத்தொன்பதாவது :—

துர்க்கன் ஆட்சியின் கொடுமை — சுவப்பிரானபால திருமால் முதலிய தேவர்கள் விண்ணப்பித்தல் — இறைவன் இறைவியை

நோக்கித் தேவர்கள் துன்பம்துடைக்க எனல் — காளராத்திரியைத் தூர்க்கனிடம் தூதுவிடல் — அவன் விரும்பல் — தூதுவந்தோரைக் கவர்தல் கூடாதெனல்—பற்றவந்தோரைக் காளராத்திரி சாம்பராக்கல் — தானையை அழைத்தல்.

எழுபதாவது :—

தூர்க்கன் எதிர்த்தமை கூறல்—சத்திதம்பால் பல சத்திகளைத் தோற்றுவித்து எதிர்விடுத்தல்—தூர்க்கனை ஐயை உதைத்துவீழ்த்தல்.

எழுபத்தொன்றாவது :—

தூர்க்கன் எழுந்து விண்ணில்மறைதல் — போருக்காற்றாது களிற்றுவடிவங்கொள்ளல் — வாளினால் துதிக்கையை வெட்டி வீழ்த்துதல் — பகட்டுவடிவங்கொளல் — பின்பு ஆயிரங்கரம் ஆயிரம் முடியுடன் எதிர்த்தல் — தூர்க்கனை சங்கரித்தல்.

எழுபத்திரண்டாவது :—

முகுந்தன் முதலியோர் வச்சிரபஞ்சர கவசம் கூறித்துதித்தல் — (1—12). ஓதும் முறை பயன் முதலியன — அம்மை வரமளித்தல் — தூர்க்கை பெயர்க்காரணம் — தூர்க்கையைப் போற்றும் நாள் — தூர்க்கை ஒன்பதின்மர் காசிநகரைக் காத்தல் — வயிரவர் எண்மர்— அறுபத்துநான்கு கூளிகள் தேவியர்நால்வர் இவர்கள் காசியைக் காப்பர் எனல்.

எழுபத்துமூன்றாவது :—

திரிலோசனலிங்கம்— பிப்பிலதீர்த்தம்—முத்திக்ஷேத்திரம்—காசிக்கு இதயம்—14 லிங்கங்கள் உயர்ந்த தத்துவங்கள்—ஓங்காரலிங்கங்கள் —பிரமன் யோகு செய்தல் — 21 முதல் 26 வரை துதிகள் — பிரமனுக்கு இறைவன் வரங்கொடுத்து மறைதல்.

எழுபத்துநான்காவது :—

*தமனன் ரேவதிக்கரையை அடைதல்-குரவனைக்காணல்-காசி மகிமை — ஓங்காரலிங்கமகிமை கூறல் – மாதவி வரலாறு – இசை கூறப்படும் 14–15: பணி செய்து இலிங்கத்தில் கலத்தல். தமனன் காசியடைந்தது – பூசித்துப்பேறு பெற்றமை.*

எழுபத்தைந்தாவது :—

*திருலோசனலிங்க வரலாறு.*

எழுபத்தாறுவது :—

*புறு தன் பெடையோடு வசித்தல் – பருந்து அவைகளை உண்ணப் பதுங்கல் – ஆண் புறு தன் பெடைக்குத் தன் ஆண்மை கூறி ஆற்றுதல் – பருந்து புறுவோடு சமர் செய்தல் – தப்பிப் புறுக்கள் அயோத்தியைச் சார்தல் – கந்தருவனுய்ப்பிறத்தல் – நாகர் உலகத்தில் பேடை இரத்தினுவல்லியாகப்பிறத்தல்—காசியில் வந்து இறைவரைப் பூசித்திருத்தல் – கனவிலே இறைவர் தோன்றுதல் – பரிமளாலயனை மணக்க நியமித்தல் – முற்பவங்கூறல் – அதற்கு முந்திய பிறப்புணர்த்தல் – முந்திய மூன்றும் பிறப்பையும் சொல்லல் – திரிலோசனனைப் பூசித்தமை.*

எழுபத்தேழாவது :—

*பாவகாமடுப்படிதல்—கேதார இலிங்கத்தை வழிபடல்—வசிட்டர் கேதாரேசரைத்தொழுது வழிபடுதல் – வசிட்டர் பொருட்டுக் கேதாரேசர் காசியைச்சார்தல்.*

எழுபத்தொன்பதாவது :—

*கிளிகளுக்கு இறைவன் முத்திமண்டபச் சிறப்பு உரைத்தல்.*

**எண்பதாவது :—**

*இந்திராணி இறைவனை வழிபட்டுச் சில வரம் வேண்டல்—விநாயகமூர்த்தியின் தியானம் ( 5 ) கூறி நோன்பு இயற்றில் விரும்பிய பொருள் சித்திக்கும் என இறைவர் கூறினமை— அதனை நோற்கும் விதியையும் வகுத்தல் — 6 முதல் 15 வரை: நோன்பின் பயன் — நோற்றுப் பேறு பெற்றவர்.*

**எண்பத்தொன்றாவது :—**

*விருத்திராசுரனைக் கொன்றபழிதீர இந்திரன் குரவனை வேண்டல் — காசியை அடைக எனல் — கங்கையில் நீராடித் தருமேசனை வழிபடல் — இந்திரனும் சசியும் தனித்தனி சிவலிங்கம் அமைத்து வழிபடல்—தூர்த்தமன் வரலாறு-வேட்டையின்மேல் அவன் காசிக்கு அணித்தாக் வருதல் — தருமலிங்கேசரை வணங்குதல் — புண்ணிய விசேடத்தால் தன் நகர்க்குச் சென்று மகனுக்கு முடி சூட்டுதல் — மீண்டு காசியை அடைதல் — தருமேசரைப் பூசித்து முத்தியைச் சார்தல்.*

**எண்பத்திரண்டாவது :—**

*மித்திரசித்து என்னும் அரசன் திருமால் வழிபாடு உடையவன் — விரதநியமங்களுமுள்ளவன் — அவன்பால் நாரதர் வருதல் — மலையகந்தியை கங்காளகேது என்னும் அசுரன் வெளவல் — திருமால் அடியவனே தன்னை மணப்பான் எனக் கௌரி கூறியதாகக் கூறுதல்—மித்திரசித்தை அவன்பால் சம்பகாபதிக்குச் செல்ல நாரதன் விடுத்தல் — இருவரும் சந்தித்தல் — சூலத்தால் அவுணன் ஆவியைக் கவர்தல் — இருவருக்கும் மண முடித்தல்—காசியை அடைதல்.*

**எண்பத்துமூன்றாவது :—**

*அபீட்டதிரிதிகை விரதம் ஆற்றியமை-புதல்வனைப் பெற்றமை —பஞ்சமுத்திரைப் பீடத்து விகடைபால் மகவைவிடுக எனல்-கன்னி*

யர் எழுவரும் இப்புதல்வன் அரசாளுவான் எனல்—புதல்வன் காசியில் தவம் ஆற்றுதல் – வீரேச இலிங்க வரலாறு.

**எண்பத்துநான்காவது :—**

துருவாசர் காசியில் இலிங்கம் அமைத்துப் பூசித்தல்—காசியை முனிவர் முனிதல்—கணங்கள் கோபித்தல்—இறைவர் துருவாசருக்கு வரந்தந்து மறைதல். சனிப்பிரதோஷத்தில் வணங்குபவர் பேறடைவர் என்பது.

**எண்பத்தைந்தாவது :—**

குரவன், அவன் மனைவி, மக்கள் உவப்பன செய்தும் எனக் கூறி வித்தை கற்றுப்பின் காசியை அடைந்து இறைவரைப்பூசித்து விசுவகன்மன் என்னும் பெயரும் சிற்பநுட்பமும் கைவரப் பெற்ற ஒரு சீடன் முற்கூறியபடி உவப்பன குரவர் முதலாயினோருக் குச் செய்து முடித்துக் காசியை அடைந்தமை.

**86, 87, 88, 89 அத்தியாயங்கள் :—**

தக்கன் வேள்வி செய்தல், தேவி வேள்விச்சாலை யடைந்து நொந்து திரும்புதல், தக்கன் வேள்வி வீரபத்திரரால் அழித்தமை கூறுகின்றன. தக்கன் வதை கூறப்படும். சிவபரத்துவம் கூறும் செய்திகள் மிக்க சுவையுடையன.

90, பாறுவதீசன்,—91–கங்கேச்சுரன்,—92–நருமதேசன், 93–சதீச்சுரன், 94 அமுதேசன் முதலிய இலிங்கங்களின் மகிமை கூறப்படும்.

**தொண்ணூற்றைந்தாவது :—**

வியாதமுனிவர் சிவபரத்துவம் கூற நாணித் திருமாலுக்குப் பரத்துவம் கூறிக்கையும் நாவும் எழாமையும், பின்பு வசப்பட்டமையும் கூறப்படும்.

**தொண்ணூற்றாறாவது :—**

*வியாதன் சாபமிட இறைவர் அதனை மாற்றிக் காசியில்வசிக்காமல் வந்து வணங்குக என மொழிதல்.*

**தொண்ணூற்றேழாவது :—**

*க்ஷேத்திரமகிமை தீர்த்தமகிமைகள் விரிவாகக் கூறும்.*

**தொண்ணூற்றெட்டாவது :—**

*முத்திமண்டபச் சிறப்பு – குக்குட மண்டபம் எனப் பெயர் பெற்றமை – படித்து இன்புறத்தக்கது.*

**தொண்ணூற்றொன்பதாவது :—**

*விசுவநாதர் மகிமையும், வழிபாடு செய்வோர் பேறும் விரிவாக வுள்ளது—13-ம் செய்யுள் காண்க.*

**நூறாவது :—**

*காசியாத்திரைக்குச் செல்வோர் சேவிக்கும் முறைமை 36 பாடல்களில் சொல்லப்பட்டுள்ளது. 37 – முதல் 60 வரையுள்ள பாடல்கள் அத்தியாயமுறை கூறுவன. இதனைப்பதிகம் எனவும், பதிகங்கூறும் அத்தியாயம் எனவும் கூறலாம். இது கடவுள் வாழ்த்தின் பின் இருத்தற்குரியது எனினும், அச்சிட்ட புத்தகங்களிலும் ஏடுகளிலும் தொடர்ந்திருக்கின்றமையாலும், ஸ்ரீ நமச்சிவாயத்தம்பிரான் சுவாமிகள் ஆகிதப்பிரதியில் மட்டும் இப்பகுதியைத்தனியே எடுத்து முன்னே சேர்த்து இருத்தலானும், 60 பாடல்களுக்குமேல் உள்ள பகுதியை இடம் விட்டுப்பின்பு எழுதியிருத்தலாலும் துணிந் முன்னேசேர்க்கஅஞ்சி, 37 முதல் 60 வரை கோடிட்டுவரைப்படுத்தியுள்ளேன். நூல்கற்போர் – பயன் – புண்ணியப்பேறு – இந்நூலைத் தானஞ்செய்வோர் – பரவச்செய்வோர் அடையும் பேறுகள் முதலியனவும் கூறப்பட்டுள்ளன.*

பின்பு வாழ்த்துடன் நூல் முற்றுப்பெறுகிறது.

இதனை சுமார் 200-பக்கங்களில் வசனமாகக் கற்றோரையன்றி மற்றோரும் அறிந்து துய்க்குமாறு எழுதித் தனியே அச்சிட ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தில் கட்டளையிட்டருளியது. அவ்வேலையும் பெரும்பகுதி முடிந்து விட்டதால் இதில் விரிவாக வசனம் சேர்க்கப்படவில்லை. செய்யுள் நூலில் நுழைவதற்கு உதவியாகச் சில செய்திகள் மட்டுமே இப்பொருட்சுருக்கத்தில் தரப்பட்டுள்ளன. குற்றம் பொறுத்தருள்க. இன்னும் பலவித ஆராய்ச்சிக் குறிப்புகளும், செய்யுளகராதியும், ஒப்புமைப்பகுதிகளும் சேர்த்து வெளியிடக்கருதியும் காலச்சுருக்கமும் — புத்தக விரிவும் கருதி இம்மட்டுமே முடிக்க நேர்ந்தேன். 'தொடர்ந்து' என்பது 'துடர்ந்து' எனவே எல்லாப்பிரதிகளிலும் இருத்தலின் அவ்வாறே அச்சிட்டேன். சில பகுதிகள் திருத்துதற்கு உரியனவேனும் திருத்தவில்லை. அடுத்த பதிப்பில் அவைகளை யெல்லாம் சேர்க்கும் கடப்பாடுடையேன்.

**காசிகண்ட அத்தியாயப் பொருட்சுருக்கம்**
**முற்றிற்று.**



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

உலகெலாமுணர்ந்தோதற்கரியவன்
நிலவுலாவியநீர்மலிவேணியன்
அலகில்சோதியனம்பலத்தாடுவான்
மலர்சிலம்படிவாழ்த்திவணங்குவாம்.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

# ஸ்ரீ காசிகண்டம்

# அத்தியாய அகராதி.


ஸ்ரீ காசி போகும்
சாலை மார்க்கம்
தேவப்பிரயாகை
ஹரித்துவாரம்
டில்லி
யமுனா நதி
கங்கா நதி
குவாலியர்
கான்பூர்
பிரயாகை
ஸ்ரீ காசி
ஷிவபுரி
ஜான்ஸி
சோணபத்ரா நதி
ஸ்ரீ புத் கயா
உஜ்ஜயினி
இந்தூர்
ஸ்ரீ மத் துவாரகை
நருமதை நதி
தபதி நதி
கல்கத்தா
பஞ்சவடி
பம்பாய்
பூனா
பெல்காம்
ஹூப்ளி
அரபிக் கடல்
வங்காளக் குடாக் கடல்
பெங்களூர்
கிருஷ்ணகிரி
சேலம்
விருத்தாசலம்
திருவாவடுதுறை
மாயவரம்
இந்து மகா சமுத்திரம்
வ
மே
கி
தெ

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# காசிகாண்டம்.

## பாயிரம்.

### விநாயகர் காப்பு.

மாற்றரியதொல்பிறவிமறிகடலினிடைப்பட்டுப்
போற்றுறுதன்குரைகழற்றாட்புணைபற்றிக்கிடந்தோரைச்
சாற்றரியதனிமுத்தித்தடங்கரையின்மிசையுய்ப்பக்
காற்றெறியுந்தழைசெவியகடாக்களிற்றைவணங்குவாம்.

வேறு.

### சிவபெருமான்

சீர்பூத்தசெழுந்தரங்கத்தீம்புனன்மந்தாகினிதண்டேனார்கொன்றை
தார்பூத்தசெஞ்சடையிலணிந்தமதன்மேல்விழைவுதணியானாகிக் [த்
கார்பூத்தவிருவிசும்பிற்கங்கைநதிசூழ்கிடந்தகாசிவாழும்
ஏர்பூத்ததனிமுதலினிணையடிப்பூங்கமலமலரேத்துவாமே. (1)

வேறு.

### உமாதேவியார்.

அலகிலாக்கருணையென்னுமந்தளிரீன்றுதொல்லை
உலகெலாம்பூத்துக்கங்கையுவட்டெடுத்தொழுகுஞ்சென்னி
மலையினிற்படர்ந்தபச்சைமரகதக்கொடியைஞானக்
கலையமுதொழுகுதீஞ்சொற்கனியினைக்கருத்துள்வைப்பாம். (2)

### ஸ்தல விநாயகர்.

கரைபொருகங்கையாற்றிற்காளிந்திமடுப்பதென்னச்
சொரிமதக்கலுழிவெள்ளஞ்சுழித்துவார்ந்தொழுகக்காசித்
திருநகரினிதுவைகுந்திங்களங்குழவிக்கோட்டு
வரைபுரைகளிநல்யானைமலரடிவணங்குவாமே. (3)

குமாரக்கடவுள்.

இலைமுகப்பைம்பூண்டாங்கியோர்குடியிருந்தகொம்மை
முலைமுகிழ்பூத்தவள்ளிமுயங்குதோள்வெற்பினானை
மலைமுகம்புழுங்கவாட்டிமாமுதறடிந்துவெய்ய
கொலைபழுத்தொழுகும்வைவேற்குழகனைவணங்கல்செய்வாம். (4)

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

கேழ்கிளர்புனிற்றுத்திங்கள்கிடந்தொளிர்சடையோன்பங்கில்
தாழிருங்கூந்தற்பேதைதடமுலைத்தீம்பான்மாந்தி
ஏழ்நிலவரைப்புமுய்யவீர்ந்தமிழ்மாரிபெய்த
காழிமாமுகிலின்செய்யமலரடிகருத்துள்வைப்பாம். (5)

வேறு.

திருநாவுக்கரசு நாயனார்.

கருவாழிக்கரைகாணாச்சாக்கியர்கள்கற்றூணிற்சிக்கயாத்துப் பெருவாழியிடைவீழ்ப்பவதுபுணையாக்கரையேறிப்பெட்பினுள்ளம் உருகாமெய்ம்மயிர்பொடிப்பவோங்கெயின்மூன்றெரித்தோனையுவந்துபாடுந், திருநாவுக்கரசனிருசேவடிப்பூங்கமலமலர்சென்னிசேர்ப்பாம். (6)

வேறு.

சுந்தரமூர்த்தி நாயனார்.

கதழெரிநேமிதண்டிக்கராங்கவர்குரவனீன்ற
மதலையையழைத்தசெங்கண்மாலெனவருந்துரமல்
அதிர்கடலமிர்தமன்னவருந்தமிழ்ப்பதிகம்பாடி
முதலைவாய்ப்பிள்ளைதந்தமுதல்வனைவழுத்தல்செய்வாம். (7)

வேறு.

மாணிக்கவாசகசுவாமிகள்.

கொழுதியினவரியளிகள்கூட்டுண்ணுங்கொன்றையந்தார்க்குழகன்றனிற், பழுதறுசொற்பாமாலைபுனைந்தேத்தியெறிதிரைநீர்ப்பரவையாடைமுழுதுலகுமதிக்கவிகைதனிநிழற்றியொருசெங்கோன்முறைநடாத்தும், வழுதிமுனம்பரியழைத்தவாதவூரிறைவனடிவழுத்தல்செய்வாம். (8)

அறுபத்துமூவர்.

முறுவற்றண்கதிர்மதியுமுரிபுருவக்குனிசிலையுமூசிவண்டு
கறிகற்குமலர்க்குழலுங்குழைதடவுங்கருந்தடங்கட்கயலுந்தாங்கும்
மறுவற்றமதிமுகத்துமானிடத்தர்மழுவலத்தர்மலர்த்தாள்சேர்ந்த
அறுபத்துமூவர்மலரடியிணைகளெமதுசிரத்தணிதல்செய்வாம். (9)

பரமாசாரியர்.

திருக்கிளர்வெண்பிறைக்கொழுந்துஞ் செஞ்சடையுமறிமானுந் திண்டோளெட்டும், உருக்கிளர்வெம்புலியதளுங்காந்துமானுடவடிவி னுலகிற்போந்து, மருட்கிடனாமெனைப்பிணித்தவல்வினையின்றொடரனைத்துமாயநூறி, அருட்கடைக்கணளித்தாண்டசுவாமிதேவன் றிருத்தாளகத்துள்வைப்பாம். (10)

சிவனடியார்கள்

அவிராழிச்சுடர்ப்படைகொண் டுலகளிக்குநெடுமாலுமயனுங்காணுத், துவர்வாய்மெல்லியல்பாகன் றிருவருள்பூண்டிரங்குதிரைசுருட்டுந்தெண்ணீர், உவராழிசூழ்கிடந்தவிருநிலத்திற்பாதலத்திலும்பர்காட்டில், சிவவேடந்தரித்தவர்மற்றெவருளரங்கவர்மலர்த்தாள் சென்னிசேர்ப்பாம். (11)

வேறு.

அறந்தவாதொழுகும்வைதிகசைவநெறியினிலகனிலமருங்கிற்
பிறந்துளோர்பிறவாநின்றுளோர்பிறப்போர்பெய்கழற்றாமரைப்போதின், மறந்திடாதன்புபூண்டுளோர்யாவராயினுமுவந்துமற்றவர்தஞ்
சிறந்தபூங்கமலமருட்டிவீடளிக்குஞ்சேவடிசென்னியிற்சேர்ப்பாம்.
(12)

வேறு.

வாழ்த்து.

அருமறைமுனிவர்வாழ்கவானினம்வாழ்கதெண்ணீர்
விரிதிரையுலகங்காக்கும்விறல்கெழுவேந்தன்வாழ்க
மருவியதிங்கடோறுமழைவளஞ்சுரக்கவெங்கோன்
பொருவறமொழிந்ததொன்னூல்பொற்பொடும்பொலிகமாதோ.(13)

தடஞ்சினைமரங்களெல்லாஞ்சந்தனம்வேழமெல்லாங்
கடம்பொழிபுழைக்கைநால்வாய்க்கழற்சினக்களிநல்யானை
அடைந்துலாம்விலங்கியாவுமருங்கடிநாந்தநாவி
மிடைந்துறுபறவையாவுங்கின்னரமிதுனமாதோ. (6)

இனையனவளங்கொள்விந்தமானுடவுருவமெய்திக்
கனைகதிர்ச்செல்வனென்னக்கதிர்பரந்தெதிர்க்கப்போந்த
வினையறுதவத்துமிக்கவீணைமாமுனியைக்காணூப்
புனைகழல்வழுத்தவெண்ணிப்போயெதிர்கொண்டதன்றே. (7)

தீங்தொடைமகதிவீணைத்தெய்வமாமுனிவன்றனில்
ஏங்கெழிற்குடுமிக்குன்றங்குழைவொடுமிறைஞ்சிற்றென்றூற்
பாந்தளின்பிடரின்மேயபடுகடலுடுத்தபாரின்
வாய்ந்தநற்றவத்தின்மிக்கதுளதெனவுரைக்கலாமோ. (8)

வணங்கலுந்தழீஇக்கொண்டன்பின்வரம்பிலாவாசிகூறும்
பிணங்குநூன்மார்பனுள்ளம்பெட்புறவுவகைபொங்க
இணங்கியமுகமனேடுமருக்கியமுதலவீந்து
தணிந்துதாள்வருடிப்போந்தவருத்தமுந்தவிர்த்ததன்றே. (9)

மாதவவிவணீபோதமனத்திருளகன்றதம்பொற்
பாதநுண்டுகளாலின்றென்பவக்கடறார்ந்ததிற்றைத்
தீதறுநாளுநன்னாளாயதுசேணினேங்கு
பூதரமென்னும்பேருமெனக்கினிப்பொலிந்ததன்றே. (10)

என்றலுமுயிர்ப்புவீங்கிநாரதனிருப்பநோக்கித்
துன்றிரும்புவிகளெல்லாஞ்சுமப்பவன்யானேமற்றைக்
குன்றெலாஞ்சுமக்குமென்னல்கூற்றலாற்றரிக்கலாற்று
பொன்றிணிந்திருக்குநீரான்மேருவும்பொலிந்ததன்றே. (11)

உயர்தருமத்தமில்லாதிடதுமமவுணரோங்குஞ்
செயிருடையுதயவெற்புஞ்செம்மையினீலக்குன்றும்
இயல்புறநடத்தல்செல்லாரேவதக்கிரியுநாகம்
பயிலியற்பொதியவெற்புமெனக்கிணைபகரலாமோ. (12)

கண்ணில்மந்தாரமும்வெய்யகடும்பனிநலியவோங்கும்
அண்ணலங்குடுமிக்குன்றமகனிலஞ்சுமக்கலாகா
விண்ணுயர்சையமுங்கிரவுஞ்சமும்வேலைஞாலத்
தெண்ணுறுகிரிகள்யாவுமெனக்கிணையல்லமாதோ. (13)

என்றிகல்விந்தங்கூறவிருஞ்சடைக்கடவுள்வைகுங்
குன்றமேமுதலாயுள்ளகுலவரையனைத்துநிற்க
நன்றுகொலிதனுக்குற்றமனச்செருக்கென்றுநக்கு
மன்றலங்கமலப்புத்தேண்மகனுளத்தெண்ணிச்சொல்வான். (14)

-திரைப்பரவைஞாலத்துயர்விசும்பகடுதோயுங்
கடவுண்மால்வரைகட்கெல்லாமிறையெனக்கழறலென்னே
வடவரைநின்னையாதுமதிக்கிலாதுரைத்தமாற்றந்
தடவரைக்கிறைவநின்பாற்சாற்றுவான்புகுந்துளேனால். (15)

பின்னுழையடைந்தபோழ்தினெட்டுயிர்ப்பெறிந்தவாறும்
அன்னதுகருதியென்னுவறைந்துநன்முகமன்கூறி
இன்னிசைமகதிவீணையிருந்தவர்க்கிறைவன்வானோர்
பொன்னகரதனைநோக்கிப்போயினன்போயபின்னர். (16)

கலிவிருத்தம்.

வீழ்புனல்வழிமணம்விடுநர்வாழ்க்கையுஞ்
சூழ்வினைமுடித்திடார்துய்த்துவாழ்வதுந்
தாழ்விலன்புடையதன்றமரிகழ்ந்திட
வாழுநர்வாழ்க்கையும்வாழ்க்கையாகுமோ. (17)

திருந்தலர்புகழொடுஞ்செல்வந்துய்த்திட
வருந்தியுங்கருணையோடடிசில்வாய்மடுத்
தருந்தியுந்துயின்றுநல்லின்பமாற்றியும்
இருந்துயிர்சுமப்பதிலிறத்தனன்றரோ. (18)

புந்தியைக்கொடியவெம்பசியைப்பொற்பினை
அந்தமின்முயற்சியைத்துயிலையாற்றலை
நந்தலிலுயிரினைநன்னர்நெஞ்சினைச்
சிந்தையொன்றெய்திடிற்சிதைக்குமென்பவே. (19)

உருத்தெழுவெப்புநோய்பழகினுய்யுமா
றருத்தியமருந்தினிலமையுஞ்சிந்தைவெப்
பெரித்துநாள்பற்பலகழியினீண்டுமால்
வருத்துவரோவிஃதாற்றவல்லரோ. (20)

மெய்ம்மைநூற்றுறைபடிவீணைவல்லவன்
பொய்ம்மொழிபுகல்வனென்றெண்ணல்புல்லிதே
அம்மவோமேருவுமமருக்கெண்ணுமேல்
நம்முடையெறுழ்வலிநன்றுநன்றரோ. (21)

பொலனெடுங்கிரிக்குறுபுகழ்ச்சியாதவன்
வலம்வருகின்றதால்வந்ததாமவன்
செலவினைத்தடுப்பனென்றெண்ணித்தெண்டிரை
உலகளந்தவனெனவிசும்பினோங்கிற்றே. (22)

மழகதிர்கனைகடன்முகட்டின்வந்துமேல்
எழுவதுசெய்கடனிறுத்தற்கெண்ணுபு
பழமறையந்தணர்பார்க்குந்தன்மைபோல்
நிழலுமிழ்மணிவரைநோக்கிநின்றதே. (23)

## முதலாவது நாரதர்விந்தவரையைக்கண்டவத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—40.

## இரண்டாவது

# தேவர்கள் பிரமலோகமடைந்த அத்தியாயம்.

### கலிவிருத்தம்.

அருமறையந்தணர்கடன்களாற்றிட
மருவிரிகமலமேல்வண்டுபாண்செய
விரிகதிர்திசைதொறும்பரப்பும்விண்ணவன்
முரிதிரைக்கருங்கடன்முகட்டிற்றோன்றினான். (1)

எழுந்தவெய்யவனழற்கிறைவன்றிக்கினைக்
கழிந்துபோய்ச்செந்தமிழ்க்கடவுண்மால்வரை
தழங்கிசையருவியிற்றவழுந்தென்றலங்
கொழுந்துலாந்தென்றிசைக்குறுகன்மேயினான். (2)

கனைகதிர்ப்பரிதியங்கடவுள்வானவன்
துனைவயப்புரவிகடூண்டச்செல்கில
எனையரோதடுப்பவரென்னவெண்ணுறா
வனைகழலருணனும்வணங்கிக்கூறுவான். (3)

என்னுடைப்பணியினாலன்றியெல்லொளி
மன்னவபொலங்கிரிவலங்கொளேலென
மின்னகுமணிதிகழ்விந்தமால்வரை
தன்னுடைவலியினாற்றடுத்ததாமென்றான். (4)

என்றலுமிருட்குறும்பெறியும்வெய்யவன்
துன்றிருவிசும்பெலாமறைத்ததோற்றத்தால்
நன்றுநன்றிதன்வலியென்றுநன்மணிக்
குன்றினைவியப்பொடுங்குறித்துநோக்கினான். (5)

வடதிசைக்குணதிசைமருவிவாழுநர்
படர்வெயில்கனற்றலிற்பையுளெய்தினர்
குடதிசைதென்றிசைக்குழுமிவாழுநர்
மிடையிருட்பிழம்பினுள்ளம்வெம்பினர். (6)

அருமறைவேள்விகண்முதலவாகிய
கருமமென்றுரைத்தவையாவுங்காய்கதிர்
இரவியஞ்செல்வனையின்றியின்மையால்
விரிகடலுலகெலாந்துயரின்வீழ்ந்தவே. (7)

தோற்றுவித்தளித்தவைதுடைத்தல்காலங்கள்
போற்றுதல்வெங்கதிர்ப்புனிதனன்றிமற்
றாற்றுநரின்மையாலுலகம்யாவையும்
மாற்றருஞ்சித்திரமென்னவைகுமால். (8)

ஓரிடைவெயிலிருளோரிடத்ததாய்ச்
சேர்தலினாகருந்தேவர்யாவரும்
பார்மிசைமுனிவரும்பங்கயாசனன்
வார்கழற்றாமரையடைந்துவாழ்த்தினர். (9)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அருவமாயுருவமாகியாதியாயநாதியாகிப்
பிரமமாயடைதற்கெட்டாப்பேரின்பவீடதாகி
இரணியகருப்பனாகியாருமாயெவையுமாகித்
தெரிவரும்பொருளாய்நின்றநின்னடிசென்னிசேர்ப்பாம். (10)

எழுதருமறைகட்கெய்தாதெங்குமாய்நின்றாய்போற்றி
மொழியுடன்மனதுக்கெட்டாமுழுப்பரம்பொருளேபோற்றி
தொழுதகுதவத்தோர்நெஞ்சத்துவெளியதனிற்றோன்றி
அழிவருஞ்சோதியாயவருமறைக்கொழுந்தேபோற்றி. (11)

விச்சையாயவிச்சையாகிவிளங்குமுக்குணத்திற்றோன்றி
முச்செயல்புரியாநின்றமூவராய்க்காலமேவா
திச்சையிற்புருடனாகியிறைஞ்சுநர்பவத்தில்வீழும்
அச்சமதகற்றிநின்றவமலனேபோற்றிபோற்றி. (12)

ஐம்பெரும்பூதமாகியவற்றுறுகுணங்களாகி
ஐம்பொறியாகியந்தக்கரணமாயறிவுமாகி
ஐம்பெருங்கருமமாகியவினைத்தினுந்தோய்ந்துந்தோயா
ஐம்பெருங்கடவுளாகுமாதிநின்னடிகள்போற்றி. (13)

வெருவருங்காமமாதிவெஞ்சுறவெறியநீங்கா
இருவினைத்திரைகளெற்றும்பிறவியங்கடலுளெய்தி
மருளுறுமுயிர்களெல்லாம்வருந்துறாதெடுப்பஞான
அருளுருவெடுத்தவுன்றனடியிணைக்கன்புசெய்வாம். (14)

உயிர்ப்புறுமறைகள்வேறிவ்வுலகெலாஞ்செய்யபொற்றாள்
பயிர்ப்புறுநிலநின்சென்னிபரமவாகாயமாகும்
வியப்புறுசுழிகளுந்திநடுவெளியாகுமெய்யின்
மயிர்தொகையனைத்துமெண்ணில்வான்றருக்குலங்களாமால். (15)

கடவுணின்மனத்திற்றோன்றுங்கலைமதிகண்ணிற்றோன்றும்
படர்வெயிற்கற்றைகான்றுபாயிருள்பருகும்வெய்யோன்
மிடைதருபுவனமெல்லாநின்னுழைமேயவேத்தப்
படுபுகழ்புகழ்வோன்போற்றப்படுநிலநீயேயாமால். (16)

என்றடிதொழுதுபோற்றியிமையவர்நிற்பவோங்குங்
குன்றிருஞ்சிறைகளீர்ந்தகுரிசில்வாண்முகத்தைநோக்கித்
துன்றிருவிசும்பினின்றும்போந்தமைசொல்லுகென்ன
மன்றலங்கமலப்புத்தேண்மனமகிழ்ந்துரைக்கலுற்றான். (17)

வழுத்துமித்துதியாலென்னைமுகுந்தனைமழுவலானை
முழுத்தபேரன்புமுற்றிமுறையினிற்பரவினோர்க்கும்
விழுத்தகுபொருள்களாகிவேண்டுவவெறுப்பநல்கித்
தொழத்தகுமறைகளேத்துந்தூயவீடளித்துமன்றே. (18)

வெருவரவொழிந்துநெஞ்சின்வெந்துயர்தவிர்கநீவிர்
அருமறைமுதலவாயவிஞ்சைநன்மகங்களான்ற
பொருவரும்வாய்மைநீதிபுனிதமாதவங்கள்யாவும்
உருவுகொண்டெம்மைநீங்காதுவப்பொடுமினிதுவைகும். (19)

ஒலிமுதற்புலன்களைந்துமொடுக்கியுட்கரணஞ்செற்றோர்
அலகிலான்மறையுந்தெள்ளியறநெறித்துறையுணின்றோர்
பலன்விழையாதுகோற்போர்பத்தினிப்பெண்டிராவின்
குலமினிதருந்தப்பைம்புற்கொடுப்பவர்தவத்தின்மிக்கோர். (20)

பிறர்மனைவிழைதல்செய்யார்பெற்றதாய்தந்தைதாளின்
நறுமலர்தூவித்தாழ்வோர்நான்மறைக்கிழவர்பாதத்
துறுபுனனுகர்வோர்கங்கைக்கரையினிலுடலநீத்தோர்
மறைபுகழ்பிரயாகைதன்னின்மாகநீர்படிந்ததூயோர். (21)

ஒளிமதியணஞ்சார்ந்தோருடையகோமுகியையீந்தோர்
அணியுடனிறந்தோர்க்கெல்லாங்கயையினிலன்னமீந்தோர்
தெளிவுடன்புனிதராகித்திங்களொன்றிடையிட்டுண்போர்
களிதருகாமமாதிகழிமலங்கழுவுநீரார். (22)

ஈங்கிவர்யாருமெம்பாலினிதுவீற்றிருந்துபின்னர்
நீங்கருங்காசிதன்னிற்பிறந்துவெண்ணீற்றுமேனிக்
கோங்குறழ்முலையாள்பங்கன்குரைகழற்கமலம்போற்றி
ஆங்கவனருளான்மீளாப்பேரின்பமடைவர்மாதோ. (23)

உறுபுலனடக்கிவேதநெறிவழியொழுகிநின்ற
அறுதொழிலோரும்யானுங்குலமொன்றாமவருளாய்ந்து
மறுவறுமறையோர்தம்பான்மந்திரமனைத்தும்வைத்தேன்
தொறுவிடையவிகள்யாவுந்தோமறத்தொகுத்துவைத்தேன். (24)

### பசுவின்மகிமைகூறுதல்.

ஆன்குளம்படியிற்சேர்ந்தவருந்துகடோயப்பெற்ற
ஊன்பயில்யாக்கைகங்கைதோய்ந்ததாமருப்பினுச்சி
வான்புனற்கடவுட்பேர்யாறிருக்கும்வானிலவுகாலுங்
கூன்பிறைமுடித்தசெல்விகொம்பிடைவதியுமாதோ. (25)

கோசலந்தெய்வநன்னீர்நருமதைகோமயந்தான்
ஆசறுயமுனைதீம்பாலலைபுனற்கங்கையாகும்
மாசில்வெண்டிங்கட்கண்ணிவாதனுமயனுமாலுந்
தேசுடையதனிலென்றுஞ்சேர்ந்தினிதிருப்பரன்றே. (26)

உலகெலாமுறுப்பின்வைகுமாவினையுவந்துபோற்றி
வலம்வரிற்றேவையெல்லாம்வலம்வருபயனுண்டாகுங்
குலவும்வானுதியான்மெய்யிற்றைவரிற்கொடுநோய்துன்பங்
கலதிபோய்நறுமென்கூந்தற்கமலைவந்தடையுமன்றே. (27)

குடநிகர்செருத்தனல்லான்கோதறுமுனிவர்வேதங்
கடவுண்மீன்கற்புமாதர்வள்ளியோர்வாய்மைகாப்போர்
இடைவிடாதுவந்துதானம்வழங்குநரெழுவராவார்
புடவிகீழ்விழாதெஞ்ஞான்றுமெளிதினிற்பொறுக்குநீரார். (28)

விளங்குமுலகின்மேலாம்வைகுந்தமதன்மேற்கந்தன்
வளங்கெழுமுலகம்வெற்பின்மாதுலகதனின்மேலாங்
களங்கனியனையகண்டனுலகதன்மேலாம்பாங்கர்
உளங்கவர்வனப்பின்மேவுங்கோவினதுலகமாமே. (29)

கூறுநான்மறைவல்லோருக்கானினைக்கொடுக்குமேலோர்
ஈறில்பேரின்பந்துய்த்துநரைதிரைமூப்புமின்றி
ஆறெலாம்பாலாய்ச்செய்யவளறுபாலடிசிலாய
வீறுயர்கோலோகத்தின்மேவிவீற்றிருப்பர்மாதோ. (30)

ஏதமின்மறைகடேராரிருபிறப்பாளரல்லர்
ஆதியிற்றோன்றிநின்றவேதமுமங்கமாறும்
ஓதியபுராணநூலுங்கண்களோடுள்ளமாகும்
மேதகுமவையிலாதார்விழியொடுமனமிலாதார். (31)

விந்தமால்வரைபொற்கோட்டுமேருவோடிகலிவெய்யோன்
அந்தரத்தியங்காவண்ணந்தடுத்ததாலமீரீங்கு
வந்தநீர்காசிதன்னில்வாரன்றவம்புரியாநின்ற
செந்தமிழ்முனிவனல்லால்யாரதுதீர்க்குநீரார். (32)

காசியினுறையுமுக்கட்கனியருட்கடலின்மூழ்கி
ஆசறவிளங்குகின்றகுடமுனிக்கரியதுண்டோ
தேசுடைமுனிபானீவிர்சென்மின்களென்னவோதி
வாசமென்கமலவீட்டுமறையவன்மறைந்துபோனான். (33)

உடைதிரைப்பரவையேழுங்குடங்கையின்வாரியுண்ட
கடவுண்மாமுனிவன்றன்னைக்காண்பதுநிமித்தமாகப்
படவரவசைத்தமுக்கட்பரமன்வீற்றிருக்குங்காசி
அடைதுமென்றுநெஞ்சங்களித்தனரமரரெல்லாம். (34)

காசியைக்குறித்துச்செல்லுங்கால்களேகால்களாகுங்
காசியைவழுத்துநாவேநாவெனக்கழறலாமால்
காசியின்கதைகள்கேட்குஞ்செவிகளேசெவிகளாகுங்
காசியையினிதுகாணுங்கண்களேகண்களாமால். (35)

எனவுளமகிழ்ச்சிபொங்கவிமையவர்குழாங்கொண்டேகிக்
கனைதிரைக்கங்கைசூழ்ங்காசியிலடைந்தாரென்று
வினையறுதவத்துச்சூதன்வேட்கையோடிருந்துநோற்ற
முனிவாரினிதுகேட்பமுகமலர்ந்துரைத்தானன்றே. (36)

## இரண்டாவது—தேவர்கள்பிரமலோகமடைந்த அத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்–76

## மூன்றாவது
## தேவர்கள்அகஸ்தியர்ஆசிரமத்தில்வந்த அத்தியாயம்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மாசிறவத்தின்றுறைபோயமறைதேர்முனிவர்மகிழ்கூர்ந்து
காசியடைந்துவிண்ணவர்களிழைத்தவாறுங்கடல்பருகும்
ஆசின்முனிவற்சேர்ந்ததுவுமன்னோன்விந்தமடக்கியதும்
பேசுகென்னச்சூதமுனிபிறழாதினிதின்மொழிந்தனனால். (1)

ஆயுமலர்க்கற்பகநறுந்தேனருவிகொழிக்குமகல்விசும்பின்
மேயபுகழ்விண்ணவர்போந்துவிரிநீர்மணிகன்னிகையாடிக்
காயுங்கதிரோன்குணக்கெழுந்தகாலைக்கடவகடன்கழித்துத்
தூயமறையோர்மனங்களிப்பத்துகடீர்தானத்தொழின்முடித்தார். (2)

பொங்கிப்பரந்ததிரைக்கங்கைப்புனல்சூழ்காசிநகருறையுந்
திங்கட்கண்ணிமுழுமுதலின்செய்யமலர்த்தாளிணைதொழுது
கொங்கிற்பொலிந்தநறுமலர்தூய்க்கோயில்வலங்கொண்டோரைந்து
கங்குற்பொழுதுகழித்துமனங்களிகொண்டுருகிக்கனிந்தனரால். (3)

எறிநீர்க்கங்கைசூழ்கிடந்தவின்னகரினெஞ்ஞான்றும்
பறவையினமும்விலங்குகளுமிறக்குங்காலைப்படர்சடையெம்
இறைவன்புகலுந்தாரகப்பிரமவுபதேசத்தாலீறில்கதி
பெறுபவென்னிலிங்குறைவார்பெறுபேறியாமோபேசுவதே. (4)

இந்நகரினிடைப்பிறந்தமலத்தின்புழுவுமீறெய்தின்
மன்னும்பிறவிக்கடற்படிந்துவருந்தாதழியாவீடெய்தும்
முன்னரிழைத்தநல்வினைகண்முழுதுமுலப்பின்விசும்பொழிந்து
பின்னுநிலத்தினிடைவந்துபிறப்பேநமதுபேறினிதால். (5)

மற்றநகரின்வீற்றிருந்துமதிவெண்கவிகைதனிநிழற்றுங்
கொற்றவேந்தராதலினுங்குளிர்வெண்டரளமணிவரன்றி
எற்றுதிரைநீர்க்காசிதனில்யாரேயெனுமிறத்தலினித்
தொற்றைநுதற்கட்பெருமானுயுறையுந்தன்மைத்தாதலினால். (6)

முளரிப்பொகுட்டில்வீற்றிருக்குமுதல்வன்பகற்போதெட்டிலொன்றி
ற், குளிர்வெண்மதிச்செஞ்சுடர்ப்பரிதிகுடுமிவரையின்சிறகரிந்த
மின்னிருக்குலிசப்படைசுமந்தவேந்தன்முதலோரிறந்திடுவர்
அளவில்பிரமாழிந்திடினுமழியாரிந்நகருறைவோர். (7)

மறிமானோக்கியொருபாகன்வாழுங்காசிக்கேகுதுமென்
றறியான்சொல்லுமடிக்கடியோர்புரவிமகப்பேறடைந்திடுவன்
குறியாநடந்துகுரைதிரைநீர்க்கங்கையாடிக்கொன்றைபுனை
இறையோன்பாதந்தொழுமவர்பேறெம்மாற்கூறுந்தகைமைத்தே.

கடவுட்கங்கைப்பேரியாறுகாணிலாடிற்கடன்கழிக்கில்
தொடில்வானெறிசென்றடைந்திடுவர்சூழ்ந்துகோயில்வலம்வந்து
முடியாற்காசிமுழுமுதலைவணங்கிமுத்திமண்டபத்தோர்
நொடியாயினுமுள்ளுறைந்திடுவோர்நுவலற்கரியவீடடைவார். (9)

என்றுகாசிவீறனைத்துமெண்ணியெண்ணிவியப்பெய்தி
மன்றற்றருவினீழலுறைவயிரப்படையோன்முதலமரர்
ஒன்றிநீங்காமுக்குறும்புமெறிந்துபுலன்களோரைந்தும்
வென்றகலசமுனியுறையுமிருக்கைநோக்கிவிரைந்தெழுந்தார். (10)

அழலுங்கனலும்வெய்யவனுமழற்றுவாகிமருண்மாலைக்
குழவிமதிபோற்குளிர்தூங்கும்புரிகோட்டிரலையிளங்கன்றும்
முழையினுறைவெம்புலிப்பறழும்விளையாட்டயருமுள்ளெயிற்றுத்
தழல்கட்பாம்பினழல்வாயையளையென்றெலிகடனிதுயிலும். (11)

அரிமானெயற்றிற்கூன்பிறைக்கோட்டண்ணல்வேழமுதுகுரிஞ்சும்
வெருவாசரபந்தலையணையாவெங்கணரிமான்விழிதுயிலும்
புரிகோட்டிரலைபுனிற்றுமறிபொங்கியெழுந்துவால்குழைத்துப்
பரிவாற்கடைவாய்பாலொழுகப்பாய்வெம்புலியின்முலையுண்ணும். 12

கேழற்பன்றிமருப்பினிலிங்கிளையாளுமலிமேற்றுயிலும்
பேழ்வாய்க்கராடிமயிருளர்ந்துமுதிர்சூன்மந்திபேனெடுக்கும்
ஊழிக்கனல்பாய்ந்தொழுகுவிழியுரகங்கீரிமேலுறங்கும்
மாழைச்சிறுமான்குழக்கன்றைவந்துநரிகடைவருமால். (13)

பொருவின்மறையினுபநிடதப்பொருள்கடேர்ந்துபூவையொடும்
உருவச்செந்தார்ப்பசுங்கிள்ளையுரையாநிற்கும்பலவிலங்கும்
வெருவல்செய்யாதடுசினத்தவேடர்சிலையின்முதுகுரிஞ்சுங்
குருகுவாவியருகிருங்குமுகளுமீனங்குத்தாவால். (14)

கவரியினங்கள்கடைகுழன்றுகருமைவார்ந்தவாலதியைக்
குவிமென்கொங்கைக்குறத்தியர்தங்குழலோடொப்புக்காணுமிக
நவையென்றெண்ணிக்கூரெயிற்றகொடுவெம்புலியுநயந்துதசை
கவர்தல்செய்யாதெஞ்ஞான்றும்பசுந்தோட்டறுகுகறித்திடுமால் (15)

புழுவுந்தசையும் வெண்ணிணமும்பொதிந்தகுரம்பைவீங்குதற்குக்
கழிபூனுகர்ந்தோர்கொடுநரகிற்கற்பகாலங்கிடந்தழுந்தி
விழைவின்முன்னர்த்தானுகர்ந்தவிலங்குமவர்தம்மெய்த்தசையை
அழிவெம்பசியாற்பறித்தருந்துமென்னும்பான்மையறிந்தேமியா (16)

கொன்றுவிலங்கின்றசைநுகருங்கொடுமையோரவ்விலங்கினுடல்
துன்றுமயிரொத்தனையாமத்தனையகாலம்வெந்நரகின்
ஒன்றிநுகர்வாய்ப்புழுவொழுகவுழப்பரென்கையுணர்ந்தேயோ
கன்றுசினவெங்கொடுவிலங்கும்புலனூன்றின்னக்கருதாவால். (17)

ஒருமீன்புலவுவாய்மடுப்பினொழியுந்தசைகளனைத்தினையும்
பரிவானுகர்ந்தோர்வீழ்கின்றபாழ்வெந்நரகிற்படிவரென்னும்
அருமாமறையின்பொருடேர்ந்தோவந்தாமரைநாண்மலர்பொதுளும்
விரிநீர்வாவிபயின்மீன்கள்விழுங்காதுலவும்புள்ளினமே. (18)

நசையானறவுவாய்மடுத்தோர்நரகிலளப்பினுளழுந்தி
வசையான்மீட்டுங்கள்ளுண்ணுமாந்தராகிநிலத்துதித்து
மிசையாதனவுமிசைவரெனும்வேதமொழியின்பொருளுணர்ந்தோ
இசைதேர்சரும்பர்மதுகரமென்றிருந்துந்தேறலருந்தாவே. (19)

சேவலன்னமணப்பதற்குச்செல்லவிருடியுறைவிடமென்
றுவியனையபெடைவிலக்குமந்தண்மாவினிளங்குயிலுங்
கூவல்செய்யாப்பவக்கடலைக்குழவிமதிவேணியனன்றி
யாவர்கடத்துவாரென்னுப்பூவைகிளியோடியம்புமால். (20)

இனையதாயவாச்சிரமத்தெறிக்கும்வடவைப்பேரொளியுங்
கனவெங்கதிருமொருங்கெழுந்துகதிர்விட்டெறிக்கும்பான்மையென
தனிநான்மறையோர்வடிவெடுத்ததன்மையென்னவொளிதழைந்து
வினைதீர்தவத்துக்குறுமுனிவனுறைதனோக்கிவிழிகளித்தார். (21)

மடமென்பிணையினிளம்புனிற்றுமறியுந்தறுகட்கூரெயிற்ற
கொடுவெஞ்சினத்தபுலிப்பறழுங்குலவியாடுமுற்றத்துக்
கடவுட்கற்பிணிகரிலாக்காதற்பன்னிகமலமலர்
அடிமென்சுவடுகண்ணுறலுமமரர்யாருமவணங்கினரால். (22)

குறைகூறுதற்குவந்தடைந்தகுலிசப்படையோன்முதலமரர்
நறவூற்றிருந்துபொதியவிழ்க்குநளிர்மென்கமலமலர்ப்பொகுட்டின்
உறைவோனென்னவினிதியற்றும்யோகமொழிந்துவீற்றிருக்கும்
மறையோன்கமலமுகரிநோக்கிவாழிவாழியெனவுரைத்தார். (23)

எத்துமமரர்தமைநோக்கியெழுந்துமுகமனினிதியம்பி
வாழ்த்தியுவந்தாங்கவர்க்கியன்றவிருக்கையீந்துவானுலகம்
நீத்தெதங்குடிலிற்புகுந்ததென்னையென்றுநெறியிலைம்பொறியுங்
காத்துமறையி பொருடெரிந்தகடவுட்பெருமாதவத்தோனே. (24)

## மூன்றுவது தேவர்கள் அகஸ்தியர் ஆசிரமத்தில்வந்த அத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—100

## நான்காவது
## கற்பிலக்கணங்கூறிய அத்தியாயம்.

### கலிவிருத்தம்

தீதெறிந்ததமிழ்முனிசெப்பலும்
யாதுசொற்றனர்விண்ணவரென்றருள்
மாதவத்தினர்கேட்பமகிழ்வுடன்
சூதமாமுனிசொல்லலுற்றனரோ. (1)

அரியநான்மறைதேருமகத்தியன்
பரவினன்மொழிகேட்டலும்பண்புடைக்
குரவன்வாண்முகநோக்கினர்கோதிலா
இருவிசும்பினிமையவர்யாருமே. (2)

பனிவிசும்பினிருந்துபரிவொடும்
புனைகருங்கழல்விண்ணவர்போந்தமை
முனிவகேட்டிமொழிகுவன்யானென
இனிதினந்தணனோக்கியியம்புவான். (3)

மன்னுகானினுமோங்குவரையினும்
முன்னருந்தவமாற்றுமுனிவரில்
அன்னவூர்தியையன்றியருந்தவ
நின்னையொப்பவர்நீணிலத்தியாவரே. (4)

கங்கைசூடியகண்ணுதற்சாமிதன்
பொங்குபேரருள்பூண்டவருந்தவ
அங்கண்வானத்தமரர்குறையுறின்
எங்குமேவுவர்நின்னிடத்தன்றியே. (5)

செயிரில்கற்பின்றிகழ்மணிக்குன்றனை
மயிலனையின்மனைக்குரியாளெனில்
உயருந்தவவுன்றனுளத்திடை
முயலிலேதுமுடித்தற்கரியதே. (6)

விளங்கருந்ததிமேனைசுநீதியுள்
துளங்குசாவித்திரியனசூயைநின்
களங்கமற்றதோர்கற்புடையாளொடும்
உளம்பொருந்திநிகர்சொலவொண்ணுமே. (7)

கொழுநனுண்டபின்றானுகர்கொள்கையும்
விழிதுயின்றபின்றுஞ்சலுமென்றுயில்
எழுதன்முன்னமெழுதலுமேயன்றோ
பழுதில்கற்புடைப்பாவையர்செய்கையே. (8)

எரிமணிப்பொலம்பூண்சுமந்தின்னுயிர்க்
குரியகேள்வருவப்பமுன்னெய்துவார்
பிரியுங்காலையிற்பெய்கலன்யாவையும்
ஒருவிமாசுடனுண்டிடவைகுவார். (9)

இனியகேள்வர்முனியினெதிர்நின்று
துனிகொணெஞ்சொடெதிர்மொழிசொல்கலார்
அனையகேள்வவெறியினுமன்பொடுங்
கனிவர்நெஞ்சகங்கற்புடைமாதரே. (10)

எய்துமிற்றுறந்தேகலரில்லகல்
ஐயலார்முகங்காணினுஞ்சாம்புவார்
மையில்காதலர்வந்தெதவையாயினுஞ்
செய்திரென்றலுஞ்செய்தனமென்பரால். (11)

விழவுகண்ணுறன்மேதகுநோன்புறல்
பழுதிற்றூநதியாடுதல்பண்ணவர்த்
தொழுதுவாழ்த்துதரேமறுகற்பினோர்
கொழுநரேவலினன்றிக்குறிக்கொளார். (12)

வளையுந்தங்கலன்மாற்றவட்கியினும்
முனிவுசெய்கலர்மூப்பினர்சேர்வுறத்
தனியிற்சேர்கலர்தாம்பிறரிற்புகார்
புனிதநெஞ்சுடைப்புண்ணியமாதரே. (13)

திருந்துமாயுள்சிதையுமென்றெண்ணித்தம்
பொருந்துகாதலர்நாமம்புகன்றிடார்
இருந்தபோதன்றித்தாமுனிருந்திடார்
அருந்துமிச்சிலமிழ்தினுகர்வரால். (14)

அறந்தவாத்தமதன்பருளினால்
துறந்துளோரிறப்போர்தொழில்செய்குநர்
சிறந்ததொல்குலத்தெய்வம்பசுவிருந்
திறந்துளோர்க்கும்பகுத்தினிதுண்பரால். (15)

மேவுகாதலருள்ளம்விழைந்தன
ஏவுமுன்னர்குறிப்பினியற்றுவார்
தாவிலன்பர்தமையலர்தூற்றிடும்
பூவையன்னவர்புன்முகநோக்கலார். (16)

இல்லறத்திற்கியைவனவீட்டுவார்
அல்லசெய்கைதவறிநினைழித்திடார்
புல்லுகாதலராபுன்பொலிவுற
மல்லலோங்கண்மஞ்சனணிவரால். (17)

கொழுநன்சொற்கடவாதுறைகொள்கையே
வழுவினல்லறம்வான்றவமாற்றுதல்
தொழுதுசெய்வம்பாரம்மலர்தூவுதல்
பழுதில்கற்புடைப்பத்தினிக்கென்பவே. (18)

அழகின்வீக்கஞ்சிறிதிலராயினும்
ஒழிவிலைஞ்சிரப்புற்றனராயினுங்
கிழவுத்தன்மையராயினுங்கேள்வரைப்
பழுதுசொல்கலர்பண்பின்முயங்குவார். (19)

அன்பர்துஞ்சிடிற்றுஞ்சுதலாங்கவர்
துன்பமெய்திடிற்றுமத்துன்புறல்
இன்பமுற்றிடிலின்புற்றிருத்தலே
மன்பெருந்தவங்கற்புடைமாதர்க்கே. (20)

வாள்விழிக்குலமங்கையரன்பர்பொற்
றாள்விளக்கிய தண்புனல்கங்கையக்
கேள்வரேகிளர்தேவர்கண்மூவரில்
ஆளுமெய்ம்மையடிகளென்றெண்ணுவார் (21)

ஆன்றகற்பினர்பூப்பினகன்றுறை
மூன்றுநாளுமுகமலர்காட்டலர்
தோன்றயாதுஞ்சொல்லார்புனறோய்ந்தபின்
சான்றகாதலர்தம்முகநோக்குவார். (22)

புனிதமாகிப்பூம்புனலாடுநாள்
இனியகாதலர்வேற்றிடமெய்திடில்
அனையகேள்வரையன்பின்மனக்கொடு
பனிவிசும்பிற்பரிதியைநோக்குவார். (23)

இசையில்காதலர் தாய் தந்தையை குழீ
அசதியாடிலான்பரழைத்திடின்
மிசையுநல்லமுதேனும்விடுத்துள
நசையினோடுபொருக்கெனநண்ணுவார். (24)

தாதைதன்னினுந்தன்னையர் தம்மினும்
மாதர்மென்மொழிமைந்தர்கடம்மினுங்
கோதில்கற்புடையார் தங்கொழுநர்பாற்
காதல்கூர்ந்துகளிமகிழ்வெய்துவார். (25)

உரலிலம்மியிலோங்குமுலக்கையிற்
பரவும்வாயிற்படியின்முறத்தினில்
திருவகன்றிடுமாலெனச்சேர்ந்திரார்
பொருவில்கற்புடைப்புண்ணியமாதரே. (26)

உரியகேள்வருவந்துபணிந்திடா
தரியநோன்பொடுபூசனையாற்றுவார்
கரியகூற்றுவன்றூதர்கடிந்திட
எரியுந்தீநரகத்திடையெய்துவார். (27)

கடிமணஞ்செயுங்காதலர் தம்பழி
மடமையோடுமொழிபவர்மற்றவர்
உடன்வெகுண்டுரையாடுநரோரியாய்
முடுவலாகப்பிறப்பர்முடிவினே. (28)

கொழுநர்சீறிற்குறுகிமுன்வைபவர்
குழுவையாகப்பிறப்பருருத்துநெஞ்
சழலமாற்றவட்சீறுமறிவிலோர்
கழல்கட்கூகைப்பிறப்பிற்கழிவரால். (29)

ஏதிலான்றனெழில்கண்டுவப்பவர்
பேதுசெய்துழல்பேயுருவெய்துவார்

பாதகஞ்செயும்பன்றியிற்றோன்றுவார். (30)

மருவுகாதலராருயிர்மாய்ந்திடில்
எரியின்மூழ்கியிறந்துபடுவதற்
கருநெறித்தலைவைக்குமரிவையர்
புரவிநன்மகப்பேறுபொருந்துவார். (31)

முற்றுசெந்தழன்மூழ்கியகற்பினோர்
புற்றராக்கொடுபுள்ளரசேகல்போல்
எற்றுகாலபடர்கைப்பறித்தினி
துற்றகேள்வரோடும்பரினேகுவார். (32)

கொழுநன்பாவியெனினுங்கொழுநனோ
டழலின்மூழ்கினள்கற்புடையாளெனின்
விழியிலன்னவட்காணில்வெங்கூற்றுவன்
உழுவலன்பனைக்கைவிடுத்தோடுமே. (33)

வடபுலத்துவயக்குமருந்ததிக்
கடவுட்கற்பினர்காந்திதங்கண்ணுறிற்
படர்சிகைக்கனல்வெங்கதிர்பான்மதி
சுடர்மழுங்கிப்பொலிவிலதோன்றுமால். (34)

நீடுகாதலனோடுயிர்நீத்திடும்
வீடில்கற்பினண்மெய்ம்மயிரொன்றினுக்
காடகப்பசும்பொன்னிலத்தாயிரங்
கோடிகாலங்கொழுநனோடின்புறும். (35)

கற்புமேயகனங்குழைமாதரைப்
பெற்றுளோர்தம்மரபும்பெருந்தவக்
கற்பினோட்கொண்டகாதலனாருயிர்ச்
சுற்றம்யாவுந்துறக்கத்தினெய்துமால். (36)

பொருவில்கற்பின்வழீஇயபுன்மங்கையர்
உரியமூன்றுமரபினுள்ளோரையும்
வெருவந்தேங்கிவிழுங்கியுமிழ்கலா
எரியுந்தீநரகிற்குடியேற்றுவார். (37)

நண்ணுகற்புடைநங்கையர்சீறடி
பண்ணினெவ்விடத்தேதாயினுமற்றஃ
தெண்ணுகின்றதலங்களெவற்றினும்
புண்ணியத்தலமென்றுபுகல்வரால். (38)

கவ்வைவெண்டிரைக்கங்கைமுதலவாந்
தெய்வமாநதியாவுஞ்செறிந்ததம்
வெவ்வமற்றிடக்கற்பினியைந்திடும்
நவ்விநோக்கியராடநயக்குமால். (39)

மண்ணுநன்மணிவேய்ந்துவயங்கிய
அண்ணன்மாடங்களாயினுங்கற்புடைப்
பெண்ணினல்லவளில்லெனிற்பேய்க்கணம்
நண்ணுகின்றவனமெனநாட்டுவார். (40)

காற்றும்வெய்யகனைகதிருங்கடல்
தோற்றுதண்ணிலவுச்சுடர்த்திங்களும்
போற்றுகற்பிற்புரிகுழற்பூங்கொடி
மேற்றெறும்பொழுதுள்ளம்வெருவுமால். (41)

மேவுகாதலன்வீயப்புனல்பொழி
காவியங்கட்கலன்கழிமாதரை
ஆவிநீத்துக்கிடந்திடுமாக்கைபோல்
யாவருந்தொடறீதென்றியம்புவார். (42)

மாற்றருங்கலனீத்தமகளிரை
ஆற்றெதிர்ப்படினேகலராயலாற்
போற்றிவாழ்த்துதல்பூண்கழிமாதரில்
வேற்றுமாதர்சொல்வெவ்விடமென்பரால். (43)

கைம்மையாகியகற்புடைமங்கையர்
தம்மொழுக்கந்திறம்பிடிற்றமலால்
அம்மதங்குலத்தோரையுமாரழல்
வெம்மைசேர்நரகத்திடைவீழ்த்துவார். (44)

நிழல்செய்பொற்கலனீத்தமடந்தையர்
குழலினைக்குறையாதுமுடித்திடில்
அழல்கட்கூற்றுவன்றூதர்மற்றங்கவர்
விழையுங்கொல்வினைப்பாசத்தில்வீக்குவார். (45)

மருவுகாதலன்மாய்ந்திடின்மங்கையர்
ஒருபகற்பொழுதுண்டரும்பாகிலை
விரியும்பாயல்வெறுத்துமண்மேற்றுஞ்சி
அரியமேநோன்புகளாற்றிடவேண்டுமால். (46)

சுடர்செய்பொற்கலனீத்திடுங்கோதையார்
கடவுள்பூசனைகாதலினாற்றிடும்
உடலமாகணவுள்ளுயிர்நீத்திடா
தடகுழலமருந்திடவேண்டுமால். (47)

எரிசெய்பொற்கலனீத்தவரின்னணம்
விரதம்பூண்டுவிழுத்தவமாற்றிடிற்
பரவுகின்றபதியுலகெய்துபு
பொருவிலாவரும்போகநுகர்வரால். (48)

இன்னவற்றுளியம்பியகற்பியல்
அன்னைநின்னிடத்தெய்தினளாதலின்
உன்னையெய்திவினையொழிந்தோமென
மன்னுமாதவன்பன்னியைவாழ்த்தினார். (49)

பொருவில்கற்புடையாள்பதம்போற்றிய
தெருளுநெஞ்சுடைவிண்ணவர்தேசிகன்
முரிதிரைக்கடலுண்டமுனிவனைப்
பரவியின்மொழிபற்பலகூறுவார். (50)

குடிலைநீயிவள்கோதறுமாமறை
வடிவினற்றவநீயிவள்வான்பொறை
அடிகளாதலினின்னுளத்தாயுங்கான்
முடிவுறுதனவில்லைமொழியினே. (51)

தூயவானத்தமரர்கள்யாவருஞ்
செய்வதொன்றிலராகித்திகைப்புற
மையல்விந்தம்வளர்ந்ததுவானுற
வெய்யவன்றடந்தேரைவிலக்கியே. (52)

பொன்னங்குன்றொடிகலிவிண்போகுயர்
அன்னவெற்பின்வலியையடக்குவார்
முன்னமேழ்கடலுண்டமுனிவர
னின்னையன்றிநிகழ்த்திடின்யாவரே. (53)

என்றுதேவர்குரவனிசைத்தலுங்
குன்றின்வீக்கங்குறைப்பலமரர்நீர்
சென்றுநும்பதிசேர்கெனவோதினன்
துன்றுவேலைபருகியதூயவன். (54)

**நான்காவது கற்பிலக்கணங்கூறிய அத்தியாயம்**
**முற்றிற்று.**

---

ஆகத்திருவிருத்தம்—154

## ஐந்தாவது
## அகத்தியர்விந்தத்தையடைந்த அத்தியாயம்.

---

சந்தக்கலிநிலைத்துறை.

விண்ணவர்யாவருமேகியபின்னர்விரிகொன்றைக்
கண்ணிமிலைச்சுஞ்செஞ்சடைமுக்கட்கனிதன்னை
எண்ணிமனத்தாலைம்புலனென்னுமிகல்செற்றோன்
நண்ணுமுலோபாமுத்திரையோடுநவில்கின்றான். (1)

குன்றனைத்தும்வார்சிறையீர்ந்தகுலிசத்தோன்
இன்றொருவெற்பையடக்கும்வலித்திறமில்லான்போல்
நின்றுதவத்தைநிரப்புகவேதியனென்றுமல்
என்றுகொளம்முழைவந்ததுகற்பினலமிக்கோய். (2)

பன்னிருவெய்யவரீறுசெய்கூற்றுப்படர்செந்தீ
மன்னியவட்டவசுக்கள்மருத்துவர்வானோர்கள்
உன்னினுமண்டமனைத்துமிடிந்திடுமொல்லார்போல்
என்னுழையெய்தியிரந்தமையென்னுறிலென்னேபோ. (3)

இருநிலமேத்தியகாசியில்வாழ்தற்கிடையூறு
வருமெனமாதவரோதியமாற்றம்வழக்காகும்
பொருவருதேவருநம்மையிரந்துபுகன்றார்பூங்
கருநெறிசேர்தருமென்குழலீங்கதுகண்டேமால். (4)

தத்துவம்யாவுமுணர்ந்துதனிப்பொருடானாகிக்
கைத்தலமேவியநெல்லியெனும்படிகண்டோர்கள்
சித்தமுவந்துறைகாசியிலீசன்றிருவுள்ளம்
இத்திறமாகவிழைந்திடின்மாற்றுவதெவ்வாறே. (5)

மெல்லியல்பங்கனுவந்துறைகாசியைவிட்டேனைத்
தொல்லைநெடும்பதிதன்னைவிரும்புதல்சூழுங்கால்
நல்லமிர்தந்தமதங்கையிருப்பவுநச்சாமற்
புல்லறிவோடுபுறங்கையைநக்குதல்போலாமால். (6)

அறத்தினிருப்பிடமாகியகாசியடைந்தோர்கள்
வெறுத்தறிவில்லவர்போலதுதன்னைவிடுத்தக்கால்
மறுத்துவினைத்திடிவெய்துவதெங்ஙனமாசின்றித்
திறப்படமுத்திவிழைந்தவர்விட்டயல்செல்லாரே. (7)

மூவரிருப்பிடமாய்முகிலூர்திமுதற்றேவர்
மேவருதற்கரிதாயருண்முத்தியின்வீடாகிப்
பாவமகற்றுறுகாசியின்வாழ்வுபடைத்தோர்கள்
யாவரவர்க்கரிதாயவிழுப்பொருள்யாதேயோ. (8)

வையகமேழுமிடிந்திடுகாலையுமாயாதே
ஐயனெடுத்தொளிர்சூலநுதிக்குளமைந்தேதாங்கும்
மெய்யுணர்வோருறைகாசியைவிட்டொருநற்றனம்
எய்தமனத்தைவிடுக்குநர்பேதைமையென்னேயோ. (9)

மாசறுபேதைமைதம்மைமறைப்பமறைந்தானு
ஆசையெனுஞ்சுறவெற்றுபவக்கடலாழ்கின்றோர்
ஈசனுவந்துமையோடகலாமலிருந்தோங்கு
காசியெனும்புணையன்றியெவ்வாறுகடப்பாரே. (10)

செய்யவழற்றலைநின்றுதவம்பலசெய்தாலும்
எய்தரும்யோகமளப்பிலநாளுமிழைத்தாலும்
மையறுகாசியைவார்பிறைசென்னிவனைந்தாடும்
ஐயனருட்சிறிதன்றியடைந்திடலாகாதே. (11)

அறம்பொருளின்பமியற்றுதவத்தினடைந்தாலுங்
கறங்குதிரைக்கடனஞ்சநுகர்ந்தருள்காமாரி
உறைந்தவளங்கெழுகாசியினல்லதையொன்றாலும்
துறந்துபிறந்துழல்வோர்தனிமுத்தியினெய்தாரே. (12)

அருமறையாகமமாகியநூல்களனைத்தேயும்
பொருவறுகாசியையன்றிவழுத்தல்பொருந்தாவால்
இருவினைவிட்டொருமும்மலமாயையிகழ்ந்தோர்கள்
திருவமர்காசியைவிட்டயலோர்பதிசெல்லாரே. (13)

இடைகலைபிங்கலைவாலைசிறந்துடனிவைகூடும்
முடிவறுவாரணவசிநடுவுயர்சுழுமுனையென்று
விடையமறுத்துயர்மெய்த்தவமேவியகாபாலி
யடைவினுரைத்தனனிந்நகருக்கிணையாதேயோ. (14)

இத்தலமெய்தியிறக்குநர்யாருமிளைப்பாற
உத்தரிகங்கொடுமாதுமைவீசிடவுமையோர்பால்
வைத்தவரும்பொருண்மேவருதாரகமறையோதி
முத்தியளித்திடுமிப்பதியார்விடமுயல்வாரே. (15)

ஆசில்வளர்ந்தெழுமூவுலகத்தினுமாபுங்காற்
காசிநகர்க்கிணையாகியநற்பதிகாணேமால்
மாசறுதிங்கண்முடித்துயர்மன்றின்மகிழ்ந்தாடும்
ஈசனையொப்பவர்தேவர்கணத்திடையாரேயோ. (16)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

என்றுகுறுமுனிநினைந்துகாலராசனையருள்கூறியநகர்கோனைக்
தன்றமரர்முற்பிரமன்சம்பிரமனெனத்துதண்டதரனையார்க்குந்
துன்றுபவக்கடல்கடத்துந்துண்டிவிநாயகனைவரிச்சுரும்பர்வீழும்
மன்றநறுமலர்தூவிச்செய்யபொலந்தாமரைத்தாள்வணங்கியேத்தி. (17)

ஆசாகேசகாசிசிந்தாமணிபோற்றிச்சித்திவிநாயகனென்றுய
தேசாரும்விநாயகரோரைவரடிபணிந்துவரிசிந்திநீண்ட
ஏசாநல்லெழிலுண்கட்கொற்றவைதன்றுணைப்பாதமிறைஞ்சிநுஞ்சீர்
பேசாரிற்றமியனையிக்காசியைவிட்டகற்றுவதுபெருமைத்தாமே. (18)

தேவருறுபகைதொலைப்பத் ததீசிமுதுகென்பளித்தான்றிருமால்
வேண்ட, ஓவறுசீரெறுழ்வலித்தோட்கொடுஞ்சிறையபுள்ளரசூர்தி
யானான், மாவலிமூவுலகளித்தான் மதுகையிடவருஞ்சிரமுன்வழங்கி
னரால்,மேவரியகாசியைவிட்டும்பருறுகுறைமுடித்தல்விழுமிதாமால் (19)

என்றினையபலகூறிக் குழவிமதி புனைசடிலத்தெம்மான் காசித்,
துன்றுசராசரம்பலவுந்தொழுதுவலங்கொண்டகல்வான்சுருங்கவோங்
கு, குன்றினூறுவலி தணிப்பான்குறுமுனிவனேகுதலுங்குழைந்துமாழ்
கிப், பொன்றினர்தம்முகம்போலப் பொலிவழிந்ததுயர்விந்தப்
பொருப்புமாதோ. (20)

ஆற்றலரும்பெருந்தவத்துக்குறுமுனிவன் காசிநகரகன்றுஞால
ம், போற்றுபெருங்கற்புடையலோபாமுத்திரையினொடுபோதலோடு
ம், ஊற்றிருந்துநறவொழுகுங்கமலநாயகனியங்காதும்பர்யார்க்கும்,
மாற்றரிய வலியுடைத்தாயெழுந்து திசையளந்தோங்கு வரையைக்
கண்டான். (21)

கடலேழுமொருகுடங்கைக்கொண்டருமுனிவருதல்காண்ட
லோடும், உடல்வேர்வுவரவுள்ளம்பதைபதைப்பத்தலைபனிப்பவுயிர்ப்பு
வீங்கிப், படியூடுபுகுவதெனப்பணிந்துமறை கிழவமொழிற்படிவந்தாங்
கித், தடமேருவுடனிகலும்விந்தவரைமுனிவனடிதாழ்ந்ததன்றே.
(22)

தன்றுணைத்தாடொழுதெழுந்தவிந்தவரை முகநோக்கித்தவத்
தின்மிக்கோன், இன்றுமுதல்பொதியவரைநீங்கியானிவ்வழிமீட்டெய்
துகாறும், உன்றனதுபெருவமவ்வண்ணமடுக்கவெனவுரைத்துப
போனான், தென்றலிளங்குழவியொடுசீர்தமிழுமினிதுலவுந்தென்
பான், மன்னோ.
(23)

அருந்தவத்தோனேகுதலும்விந்தமால் வரையுளத்தினச்சநீங்
கிப், புரிந்துபுரிந்தவனேகும்வழிநோக்கிநோக்கியுடல்புளகம்பூப்பப்,
பெருந்தவத்தோன்சபியாமலேகுதலாலின்றன்றோ பிறந்தோமென்
று, வருந்திநனிபணிந்திருப்பப்பரிதிவானவன்மேருவலங்கொண்டா
னால்.
(24)

மலர்தலையவுலகமெல்லாம்பண்டுபோற்றருமநெறிவளர்ந்தனா
லுங், கலனிழந்தமகளிரிளமுலைபோலவிந்தவரைகவின்கவர்ந்த, துலை
வறுநற்றவமுனிவனமலனுறைகாசிநகருள்ளத்தோரா, அலர்கமலப்
பொகுட்டுறையுந்திருமகள்சேர்சினகரத்தையடைந்தான்மன்னோ.
(25)

மூவுலகுமிடரியற்றுமடலவுணருயிரொழியமுனிவுகூர்ந்த,
பூவையுறழ்திருமேனியருட்கடவுள்கண்மார்பிற்பொலிந்துதோன்றித்
தேவருலகினும் விளங்குபுகழ்க்கொல்லாபுரத்தினிதுசேர்ந்துவைகும்
பாவையிருதாடொழுதுபழமறைதேர்குறுமுனிவன்பழிச்சுகின்றான்.
(26)

கொழுதியிசையளிமுரலுந் தாமரைமென்பொகுட்டிலுறைகொ
ள்கைபோல, மழையுறழுந்திருமேனிமணிவண்ணனிதயமலர்வைகு
மானே, முழுதுலகுமினிதீன்றவருட் கொம்பேகாகமல முகிழ்த்த

நாளுங், கழிபெருங்காதலிற்றொழுவோர்வினைதீரவருள்கொழிக்குங் கமலக்கண்ணாய். (27)

கமலைதிருமருமார்பன்மனைக்கிழத்தி செழுங்கமலக்கையாய்செய்ய, விமலைபசுங்கழைகுழைக்கும்வேனிலான்றனையீன்றவிர்ந்தைதூய, அமுதகும்பமலர்க்கரத்தாய்பாற்கடலுளவதரித்தோயன்பர்நெஞ்சத் திமிரமகன்றிடவொளிருஞ்செழுஞ்சுடரேயெனவணக்கஞ்செய்தான் மன்றோ. (28)

மடற்கமலகுழும்பொகுட்டிலாசிருக்குஞ்செந்துவர்வாய் மயிலே மற்றுன், கடைக்கணருள்படைத்தன்றோமணிவண்ணனுலகமெலாங் காவல்பூண்டான், படைத்தனன்முகக்கிழவன்பசுங்குழவிமதிபுனைந்தபரமன்றானுந், துடைத்தனனின்பெருஞ்சீர்த்தியெம்மனோராலெடுத்துச்சொல்வற்பாற்றோ. (29)

மல்லனைந்தம்புவியனைத்தும்பொதுநீக்கித் தனிபுரக்கு மன்னர் தாமுங், கல்வியினிற்போறிவிற்கட்டழகினிகரில்லாக்காட்சியோரும், வெல்படையிற் பகைதுறந்து வெஞ்சமத்துவாகைபுனைவீரர் தாமும், அல்லிமலர்ப்பொகுட்டுறையுமணியிழைநின்னருளோக்கமடைந்துளாரே. (30)

செங்கமலப்பொலந்தாதிற் றிகழ்ந்தொளிருமெழின் மேனித்திரு வேவேலை, அங்கணுலகிருடுறக்குமலர்கதிராய்வெண்மதியாயமரர்க் கூட்டும்,பொங்கழலாயுலகளிக்கும்பூங்கொடியேநெடுங்காணிற்பொருப் பின்மண்ணில், எங்குளைநீயவணன்றேமல்லல்வளஞ்சுரந்தோங்கி யிருப்பதம்மா. (31)

என்றுதமிழ்க்குறுமுனிவன்பன்னி யொடுமிருநிலத் திறைஞ்ச லோடும், நன்றுனதுதுதிமகிழ்ந்தேதம்நான்மறையோயித்துதியைநவின்றோர்யாரும், பொன்றலநம்பெரும்போகநுகர்ந்திடுவரீங்கிதனைப் பொறித்தவேடும்,மன்றமனையகத்திருப்பின்வறுமைதருதவ்வையவண் மருவல்செய்யாள். (32)

அந்தணனின்றுயரறிந்தேதங்காசிநகரகன்றெவரேயாற்றவல்லார்
இந்துவகிர்புனைசடிலத்திறையவனுங்காசிதணந்தேகியோங்கும்
மந்தரவெற்பினையடைந்துகாசிபிரிந்துறைவிரகமம்மர்நோயால்
வெந்துயருற்றவண்மேவவிரிஞ்சன்முதல்வானவரைவிடுத்தல்செய்
தான். (33)

கஞ்சமலரயன்முதலோர்கண்ணுதல்பான்மீளாதுகாசிமேவி, எஞ்ச
வினல்வளநோக்கியிருந்தனர்பைந்துளவணியுமெம்மான்சூழ்ந்த, வஞ்ச
னையான்முழுமுதல்சேர்காசிநகர்தனின்விரும்பிமகிழ்ந்தானென்றால்,
நெஞ்சுதனிற்காசிதனைப்பிரிந்தேகநினைப்பவரேநெறியிலாதார். (34)

அருமறையோய்காசிவருமிருபத்தொன்பானுகத்திலடைதிநீயுங்
குருபரனுய்க்கலைமுழுதுமுணக்குணர்த்துசுடர்வடிவேற்குமரன்
றன்னை, மருவுவையீண்டகன்றேகினணித்தாகக்கங்கைநதிவளங்
கொள்காசிப், பொருவருஞ்சீர்த்தலமுழுதுமற்றவனேநீயுணரப்புகல்
வனென்றாள். (35)

உரவுநீர்க்கடலேழுமொருகுடங்கைதனிலேந்தியுண்டமேலோன்
விரைகொள்பூந்தாமரையின்மெல்லியலையடிவணங்கிவிளங்குகற்பின்
பொருவில்சீர்ப்பூவையொடுந்திசைமுகனையருஞ்சிறையிற்புகுத்து
ஞான,முருகவேளினிதுறையும்பதிதேடியவன்பாதமுன்னிச்சென்
றான். (36)

**ஐந்தாவது அகத்தியர் விந்தவரையையடைந்த
அத்தியாயம் முற்றிற்று.**

---

ஆகத்திருவிருத்தம்—190

## ஆறுவது
## தீர்த்தமகிமையுரைத்த அத்தியாயம்.

---

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அங்கணுலகிருணீக்கியருந்தவத்தோனேகுமொருநெறியிஞெப்பண்
திங்களிளம்பசுங்குழவிக்கோடுரிஞ்சநறியமுகைசிதைந்து தண்ணெனன்
கொங்குகமழ்நறுங்கொன்றைத்தேனருவியலைத்தொழுகுகோடீரத்
துக், கங்கைநதியுவட்டெடுக்குங்கடவுளுறைதிருச்சைலங்கண்ணுற்
றனே. (1)

### கலிவிருத்தம்.

பன்னிகேளிப்பருப்பதம்யோசனை
உன்னிலெண்பத்துநான்ககன்றோங்கிடும்
மன்னுமியாவுமிலிங்கவடிவின
துன்னுவார்தம்பவங்கடுடைக்குமால். (2)

ஆதலாலிவ்வரைவலங்கொண்டலர்
போதுதூவிப்பணிகெனப்பொற்றொடி
ஈதுகண்ணிற்பிறப்பறுமென்றிடில்
தீதில்காசியைச்சிந்திப்பதென்கொலோ. (3)

என்றுபன்னியியம்பலுமுத்திவீ
டொன்றநல்குபதிபலவுண்டென
மன்றநற்றவரோதினர்மாணிழை
நன்றுகேட்டியெனநவின்றனரோ. (4)

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அதிர்புனற்பிரயாகைவிளங்குமோங்காரமவந்திகாலாஞ்சரமயோத்தி
மதுரைகோகனம்புட்கரமகராலயந்துவாரகைவளக்காஞ்சி
வெதிரிகாச்சிரமந்திரியம்பகங்கங்கைவேலையிற்புகுமிடஞ்சிந்து
நதிசரச்சொதியோடொன்றிடங்குருக்கேத்திரமொடுநைமிசாரணி
யம். (5)

ரிபுனற்கங்காத்துவாரைநற்றுறக்கம்வீடருணீடிருச்சைலம்
ருகுகச்சஞ்சேர்பெற்றுயர்பிருகுதுங்கமென்றின்னனவன்றித்.
ரைபுகழ்தாராதீர்த்தம்வெண்டாங்கச்சத்தகோதாவிரித்தடமென்
ரைபெறுகடவுட்டீர்த்தமாநிலத்திலுண்டெனவோதினருயர்ந்
தார். (6)

த்தியந்தானஞ்சம்மதமின்சொற்சாற்றுதலொருவழிப்படுதல்
த்தியேமுதலகாணமோர்நான்குமடங்குதல்புலன்கள்போம்வழியி
ன்,உய்த்திடாதமைத்தல்பொறைதிடஞானமுமிர்க்கெலாந்தண்ணளி
ரிதல், இத்திறமனைத்துமானததீர்த்தமெனவெடுத்தியம்பினர்மே
லார். (7)

அறத்துறைபயிலுமானததீர்த்தமாடலராகிநீராடிற்
புறத்தழுக்கொழிவதல்லதுபுனிதராகிலர்பூந்திரைசுருட்டுஞ்
நிறைப்புனலதனின்முழையுறழ்பகுவாய்த்தீவிழிச்செறியெயிற்றிடங்
கர், சுறக்குலமுதலவளப்பருங்காலந்தோய்ந்ததாற்றுறந்கமுற்றன
வோ. (8)

கலிவிருத்தம்.

முதுக்குறைவிலாதவர்மொழியுந்தெய்வநன்
நதிப்புனலாடினுநவையினீங்கலர்
மதுக்குடம்பன்முறைவரம்பின்மாநதிப்
புதுப்புனலாடினும்புனிதமெய்துமோ. (9)

கற்றதங்கல்வியுங்கடவுட்பூசையும்
நற்றவமியற்றலுநவையிரனமும்
மற்றுளவறங்களுமனத்தின்பாலழுக்
கற்றவர்க்கேபயனளிக்குமென்பரால். (10)

பொறிவழிப்புலன்செலாதடக்கிப்புந்தியை
நிறைபரம்பொருளிடைநிறுத்துநின்மலர்
உறைவிடமல்லதையுள்ளதாங்கொலோ
எறிபுனற்றீர்த்தமென்றியம்பப்பட்டதே. (11)

உரைப்பருமானதீர்த்தமோதிடிற்
சுருக்குமின்ஞானநீர்தோய்தன்மற்றது
விருப்பொடுவெறுப்பெனவிளம்பப்பட்டதோர்
கருப்புகுத்திடுமலங்கழுவுமென்பவே. (12)

உடலுறுமவயவத்துத்தமாங்கம்போல்
தொடுகடல்வரைப்பினுட்டோயுமாற்றினுட்
கடவுண்மாநதியுளவவற்றிற்காதலாற்
படிகுநரழிவிலாப்பதத்திற்சேர்வரால். (13)

புண்ணியதீர்த்தங்கள்பொருந்தியாடினோர்
மண்ணிடைப்பறவைகள்விலங்குமற்றுள
எண்ணறும்யோனிகள்யாவுமெய்திடார்
விண்ணிடைக்கடவுளராகிமேவுவார். (14)

அறத்திறந்திறம்பினோருளிலாதவர்
துறக்கமொன்றில்லெனச்சொல்லும்புன்மையோர்
சிறப்புடைப்பயனுறுத்தர்க்கஞ்செய்குநர்
பெறற்கருந்தீர்த்தநற்பயன்பெறார்களே. (15)

அருளுடன்றீர்த்தங்களாடவேண்டினோர்
ஒருபகலுணவொழிந்தொழுகுமும்மதக்
கரிமுகன்றாளிணைகருதிமற்றைநாட்
பரிவொடுபாரணம்பண்ணியேகுவார். (16)

மன்பெருந்தீர்த்தங்களாடிமாநிலம்
பொன்பசுமுதலிவைவழங்கிப்பூசுரர்க்
கன்பினாலமுதுறழடிசிலூட்டிப்பின்
தென்புலத்தவர்கடன்செய்யவேண்டுமால். (17)

ஒருத்தனைத்தன்மனத்துன்னிவான்புனல்
திருத்தகுதீர்த்தங்களாடல்செய்திடில்
தருப்பையாலவனுடறன்னையொப்பதோர்
உருப்படவியற்றிகல்லுதகமாட்டுவார். (18)

ஆடகமளித்துநீராட்டுவித்தவர்
கூடுவரோரிருநான்குகூறுமற்
றூடுநரொருபதிற்றிலொன்றுதாங்
கேடில்பேறடைகுவர்கிளக்குங்காலையே. (19)

அலைபுனற்றீர்த்தங்களடைந்தவற்றைநாள்
உலைவரப்பாகிலையுண்டிநீத்துப்பின்
தலைமயிர்குறைத்துநீர்த்தடத்துமூழ்கிடில்
நிலைபெறுபாவங்களனைத்துநீங்குமால். (20)

காசிமாயாபுரியவந்திகாஞ்சிமற்
றோசைகொளயோத்திவண்டுவரையொப்பறும்
எசிலாமதுரையென்றிசைக்குமேழ்பதி
மாசறுமுத்தியைவழங்குமென்பவே. (21)

ஒலிபுனற்பிரயாகைகேதாரமோங்குசீர்
மலிதிருச்சைலமென்றுரைக்குமாண்புடை
நிலைபெறுதலங்களுநினைத்தற்கெய்துறு
அலைவறுமுத்தியையினிதளிக்குமால். (22)

நெடுநிலவரைப்பினினிகழ்த்துதானங்கண்
மடிவறுமுத்தியைவழங்குமென்றது
கடவுணீர்க்கங்கைசூழ்காசிமாநகர்
அடைவதற்கேதுவாயமைந்தவாற்றினால். (23)

எதமில்தானங்கள்யாவுங்காசிபோன்
மேதகுமுத்தியைவிளைத்திடாவெனச்
சீதரன்கணத்தினோர்சிவசன்மாவினுக்
கோதியகதையினைமுனிவனோதுவான். (24)

**ஆறாவது தீர்த்தமகிமையுரைத்த அத்தியாயம் முற்றிற்று.**

---

ஆகத்திருவிருத்தம்—214.

## ஏழாவது
## சத்தபுரியின்சிறப்புரைத்த அத்தியாயம்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மல்லல்வளஞ்சிறந்தோங்குவடமதுரைப்பதியினிலோர்மறைவலாள
ன், எல்லையினற்றவமாற்றியினிதீன்றசிவசன்மாவென் போன்மேனா
ட், தொல்லைமறைப்பொருடேர்ந்துதுகளறுசீர்ப்பலகலையின்றுறை
கள்போகிக், கல்வியெனும்பெருங்கடலின்கரைகடந்துநிதியீட்டிக்
களித்தானன்றே. (1)

இயற்றரியபலவினையம்யாவுமுயன்றருநிதியைமெனைத்துமீட்டி,
உயிர்க்குயிராமழலைமொழிங்கிண்கிணிக்காற்சிறுவர்களையுவப் பினீன்
று,பயிர்ப்புறுமிற்கிழத்தியொடுமளகையர்கோனெனப்போகம் பல வுந்
துய்த்து, வியப்பொடுதன்புதல்வர்பெறவீட்டுநெறியனைத்தினையும்
விழைவினீந்தான். (2)

மழவிடைபோற்செம்மாந்துமகளிர்வரிவிழிகளிப்பவாழுநாள்போய்
எழிலிளமையுருவகலக்கோலூன்றிநரைதிரைவந்தெய்தநோய்செய்
கிழனுற்றுமறனியற்றாதித்துணைநாள்கழிந்ததெனக்கேடினெஞ்சங்
குழைவுறக்கண்பனிதூங்கச்சிவசன்மாவுளத்தினிடைக்குறித்தல்
செய்தான். (3)

தாளாண்மையுடனிதியம்பலவீட்டிவிஞ்சையினாற்றர்க்கமேற்று,
வாளாநற்பகலனைத்துங்கழித்தனன்செஞ்சடைமௌலிவரதனன்பர்
க்,காளாகியாங்கவரைத்தொழுதிலன்வண்டுழாயலங்கலண்ணறாளின்
மாளாதவன்பினொடுங்கொழுமலர்தூஉய்வணங்கியுளமகிழ்ந்திலே
னால். (4)

ஐங்கரனைச்செவ்வேளையலர்கதிர்வானவனைவழிந்தமுதங்காலுந்
திங்களிளங்கண்ணிபுனைசெல்விதனைவழிபாடுசெய்திலேனீண்
மங்குறவழ்குடுமிநெடுஞ்சினகரங்கடேவுறையவகுத்திலேன்வான்
பொங்குபுனற்றடங்கூபங்குளத்தொடுநற்றருமமிவைபுரிந்திலேனால்.
(5)

அருநெறியினிழல்பரப்பத்தழைகுழைக்கும்பராரைமரமமைத்திலே
ன்றண், மருவுயிர்க்குநறுந்துளவமொன்றேனுமினிதுவைத்துவளர்த்
திலேனால், விரைகமழுநறுந்தண்ணீர்வேனில்வாய்வேட்டவருக்
களித்திலேனாட், கருதரியவருமகங்கள்பலவாற்றித்தேவர்கடன்
கழித்திலேனால். (6)

அழிபசியால்வருந்தாமலந்தணருக்கின்னமுதமளித்திலேன்செல்,
வழிவருத்தந்தீர்ந்தேகவாங்கவர்க்குக்குடைசெருப்புவழங்கிலேன்வ
ண்,தழைபசுந்தோட்டறுகுபறித்தானருந்தக்கொடுத்திலன்றண்கழ
னிபைம்பொன், இழைதவழுங்கொம்மைமுலைக்கன்னியரைமறைய
வர்கட்கீந்திலேனால். (7)

முதல்வனுருத்திரசமகம்பவமானநாடோறுமொழிந்திலேன்வெங்
கதழெரியிலெட்டுவேள்விக்கழிபெருபாவக்கடலைக்கடந்திலேனாற், புதை
யிருளும்வெள்ளியுமோர்பதின்மூன்றுந்திதியுடனேபொருந்துசெங்
கேழ்க், கதிரவன்வாரமுமொழிந்த நாளாசைவலங்கொண்டு களித்தி
லேனால். (8)

தகரமதியாலவட்டம்பாகிலைநல்விரைகமழுந்தண்ணீர்ப்பந்தல்
துகடீர்ந்தபுனனிறைக்குமணிக்கும்பங்கலையினதடுலங்குசோதி
அகலாதசுடர்முதலதானமுழுவதுமறையோர்க்களித்திலேனால்
இகலோடுங்காலபடர்கொடும்பாசத்திறக்கிலினியென்செய்கேனே.
(9)

ஆய்ந்தமுதுமறையவர்க்குமதிதியர்க்கும்பூசைபுரிந்தறிகிலேனால்
எய்ந்தவிருவினைதொடருமல்லாமனமதேயென்றிருந்தவில்லும்
வாய்ந்தமனைக்கிழத்தியரும்புதல்வருமிவ்வுடலுமுடன்வருவதுண்
டோ, வீந்துகொடுநரகழுந்திநல்குரவாய்மறுமையிலும்மெலிகு
வேனே. (10)

எனநினையபலகூறிநிலையில்லாயாக்கையினிலிருக்குங்காறுங்
குன்றினும்வார்திரைசுருட்டுங்கடலாடைப்புவியிடத்துங்கோதில்தீர்
த்தஞ், சென்றுகொடுந்துயரகலவாடுவலென்றுளத்தினிடைச்சிந்தை

செய்தான், மன்றவருந்தவமாற்றும்வடமதுரைப்பதிவாழுமறைவல்
லோனே. (11)

தெள்ளுமுதுமறைக்கிழவன்சத்தபுரியிடத்தினியாஞ்சேறுமென்று
வெள்ளியகல்லோரைதனிலைங்கார்பொற்றாமரைத்தாளுவந்து
போற்றி, முள்ளரையசெழுங்கமலமுகையுடைந்துவழிதேறன்முருகு
காறும், அள்ளலஞ்சேற்றகல்வயல்சூழயோத்திமாநகரதனிலடைந்தா
னன்றே. (12)

சரயுநதிப்புனல்படிந்துதென்புலத்தோர்கடன்கழித்துத்தழல்செய்
வேள்வி,அருமறையோரினிதுவப்பவமுதுறழுமின்னடிசிலமையவூட்
டிப், பரிவினொடு மங்கரிற்பஞ்சராத்திரமுறைந்துபவளஞ்சிந்தி
விரிகதிர்வெண்மணிகொழிக்கும்வீங்குபுனற்பிரயாகைமேவினானே.
(13)

உடைதிரைநீர்ப்பிரளயத்துமார்க்கண்டன்முதன்முனிவருறைதவ
தாய, வடதருவைப்புனிற்றுமதியலைபுரட்டுங்கங்கையொடுவனைந்த
வேணிக், கடவுளைவெண்மணிகொழிக்கும்பாலாழிதுறந்துசெழுங்க
மலையோடும், அடியர்துயரகற்றுவலென்றினிதடைந்தமாதவனையாங்
குக்கண்டான். (14)

பெறலரியவருமகத்தின்பேறெல்லாம்விரிதெண்ணீர்ப்பிரயாகையாற்
றான்,அறலிலொருநுண்மணற்குநிகர்தூங்காகொடும்பாவமனைத்து
மன்னொ, றுபெயர்கேட்பினுநடுங்குமாடுகருமாண்டுவதிந்துயிர்விட்டோ
ருங், குறைதவில்பரகதியடைந்துவீற்றிருப்பரெனமறைகள்கூறக்கேட்
டான். (15)

செங்கதிர்ச்செல்வனுமாதிகேசவனுங்கண்களாய்த்தெய்வநன்னீர்ப்
பொங்குதிரைமணிகொழிக்கும்வருணையசிகைகளாய்ப்புனலிற்றோய்ந்
தோர், வெங்கொடும்பாதகந்தொலைத்துவீடுதருந்திருவேணிவேணி
யாய, கங்கைவிரிபுனலாடைக்காசியணங்கினைநோக்கிக்களித்தான
ன்றே. (16)

மதிதவழுமுயர்பொலங்கோட்டிமையமேருவரைமுதலவரைகள்யாவுந்
ததைமலர்ப்பைந்தருமுதலதருக்களுமெண்ணறுபுவனந்தனிலுள்
ளோரும், விதிமுறையினுங்கடைந்துபுகழ்மாகத்திங்கடனில்விளங்கும்
வெய்யோன், கதிர்மணித்திண்டேர்கடவுபுலரியின்வாய்ப்புனலாடல்
கண்ணிறகண்டான். (17)

கண்டுகளிமகிழ்தூங்கியாங்கதனின்வளமனைத்துங்கருத்திஞேர்ந்து
மண்டுபுனற்பிரயாகைதனிலோர்திங்களுறைந்ததற்பின் வளங்கொள்
கங்கைத், தண்டுறைசூழ்காசிநகர்புகுமளவின்மலர்தூவித்தாழ்ந்துதா
ழாத், திண்டிறல்வெங்கரிமுகத்தோ னிலங்குபொலந்தாமரைத்தாள்
சென்னிசேர்த்தி. (18)

கடவுண்மணிகன்னிகையிற்புனல்படிந்துதிரைபுரட்டுங்கங்கையாடி
அடைவிலருமுனிவர்கடன்றென்புலத்தோர்கடனாற்றியோரைந்
தாய, விடயமறுத்திடுமறையோனைம்பெருந்தீர்த்தமுழூழ்கிவிரிந்த
கொன்றைத், தொடைபுனையுமகிலேசன்றாள்வணங்கியந்நகரைத்து
தித்தல்செய்தான். (19)

தூயசெழுங்கங்கையலைசுழித்தெறியும்புனலிலொருதுளியுண்டோருந்
தாய்முலைப்பான்மீட்டருந்தாத்தன்மையாலாங்குடலந்தனைவிட்டோ
ர்க்கு,வேயனையதோளிபங்கன்றாரகத்தைவலச்செவியில்விளம்பறன்
றாற், சேயுயர்விண்ணவருலகோகாசிநகர்க்கிணையாகச்செப்புமாறே.
(20)

முத்தியளித்திடுநகரிந்நகரெனவேயறிந்துமுதுக்குறைவிலாரிற்
சத்தபுரியிடத்தினும்போய்வருதுமெனுஞ்சங்கற்பந்தவறுமென்றுப்
பித்தரிற்றீவினைகள்பிடர்பிடித்துந்தப்புறம்போகிப்பிறைசேர்வே
ணி, அத்தனினிதுவந்துறையுமல்லல்வளஞ்சிறந்தோங்குமவந்திசேர்
ந்தான். (21)

ஆதியுகமொழிந்துவருமூன்றுகத்துமாகாளமவந்திமற்றை
ஓதுவளஞ்சிறந்தோங்குமுச்சினியெனுநகரினுடன்றுகூற்றைக்
காதியிடுமாடகேச்சுரர்தாரகேச்சுரர்மாகாளரென்னச்
சோதிவடதருவினிழலினிதுறையும்பரமனடிதொழுதுபோனுன். 22

காதலிற்சென்றிறந்தோர்க்குச்சாரூபஞ்சிவனளிக்குங்காஞ்சிமேவி
ஆதரத்தினேழ்பகலாண்டிருந்திறந்தோரென்பனைத்தும்அலங்கற்றி
ண்டோட், சீதரன்றன்வளையாழியுருவாகுந்துவாரகையிற்சென்று
பின்னர், மாதவத்தோரெஞ்ஞான்றுமுவந்துறைமாயாபுரியின்வந்து
சேர்ந்தான். (23)

பொன்னகரினுயர்மாயாத்துவாரமென்றும்பொருவிலரித்துவாரமெ
ன்றுந், துன்னுதடந்திரைக்கங்கைசுழித்திடைபோதலிற்கங்காத்து
வாரமென்றும், இன்னனமுப்பெயருடைத்தாய்வைகுந்தத்தினிதேற
மேணியாக, மன்னியமாயாபுரியிலினிதிருந்தானருந்தவத்துமறைவல்
லோனே. (24)

தோமறுமேகாதசிநோன்பினிதாற்றிக்கங்குலிடைத்துயிலுருமற்
பூமகள்கேள்வனைவணங்கிவழிநாட்பாரணமினிதுபுரியுமுன்னர்
ஏழுறுவெப்பொடுகுளிர்வந்தெய்திடலுமிறப்பதனையெண்ணிமா
யோன், காமருபொற்செழுங்கமலமலர்பொருவுமிருசரணங்கருத்துட்
கொண்டான். (25)

வாளமரின்வெருவாதுமருமம்போழ்ந்தயிலுருவமடிந்துளோருந்
தாளிணைகள் சிவப்பூரத்தீர்த்தயாத்திரைபோகிச்சாகின்றோருங்
காளமுகிலெனக்கரியகாலபடர்தமைவிழியிற்காணுரென்று
நாளுமறையுரைப்பதெண்ணிவெருவொழிந்தானருமறைகணவிலுநா
வான். (26)

வெய்யகொடுநோய்கனற்றவேழுநாள்கழிந்ததற்பின்மேனிவாடிக்
கையறவாய்ச்சிவசன்மனிறந்திடலுந்தண்டுளவோன்கணங்களாய
பொய்யிறவச்சுசீலனுமெய்ப்புண்ணியசீலனுந்திதலைபூத்துவீங்கு
தொய்யின்முலையரம்பையர்சூழ்விமானமொடுமிருநிலத்திற்றோன்றி
னரால். (27)

வளங்கெழுமாயாபுரியிறசிவசனமன்னனுமறையோனமாய்தறன்னுற்
களங்கனிபோன்மேனியான்சாரூபமடைந்துவருகணங்களோடும்

உளங்கவருமரமகளிரொண்மணிச்சாமரையிரட்டவொளிருஞ்செம்
பொன், விளங்குமணிவிமானத்துவிண்ணவர்பூமழைதூவவிசும்பிற்
போனான். (28)

## ஏழாவது சத்தபுரியின் சிறப்புரைத்த அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் -- 242

# எட்டாவது சிவசன்மாவை இயமன் எதிர்கொண்ட அத்தியாயம்.

### கலிநிலைத்துறை

என்னமாமுனியியம்புதலுமேழைபுகல்வாள்
முன்னமேழ்பதியுநல்குமுயர்முத்தியெனநீ
சொன்னவாறொழியமாயனதுதொல்லையுருவம்
அன்னவேதியனடைந்ததெவனென்னவறைவான். (1)

ஆசிலாதபதியாறினுமடைந்திடுதலக்
காசியெய்தியுயர்முத்திபெறுகாரணமதா
மாசிலாவினையவாறுசிவசன்மன்வினவக்
கேசவன்கணமொழிந்ததுகிளக்குவனரோ. (2)

மேவுகின்றகணநாதரைவியந்துமறையோன்
யாவதும்பெயர்நலங்கிளர்சுசீலனெனவுந்
தாவருந்தருமசீலனெனவுந்தொழிலினால்
ஓவிலன்பொடுவினைத்தனனுரைத்திரெனலும். (3)

நறையிதழ்க்கமலேகேள்வனடிநண்ணுமடியார்
அறிவதற்கரியதாயபொருள்வேறுமுளதோ
மறையவர்க்கிறைவவெம்பெயர்மதிக்கிலவையே
குறைவினற்கதைகள்கேட்டனகுறித்துமொழிவேம். (4

என்றுகூறியுடனேகுதலுமோருலகுகண்
டொன்றுமிவ்வுலகமியாதுவிகடங்கொளுருவுங்
குன்றுசெல்வமுமுளாரெவர்கள்கூறுகெனலும்
நன்றுகேளெனமகிழ்ந்துகணநாதர்நவில்வார். (5

இலகுவெண்பிறையெயிற்றெறிசிந்துபகுவாய்
அலகைசேருலகமீதுசசியின்றியானை
மலர்கடேவினருமின்றெனவளித்துமனநொந்
துலைவிலேனுடுதயருற்றவருமிங்குறைவரால். (6

தாதருந்திவரிவண்டுமுரறண்டுளவினேன்
சீதரன்றனதுதாள்பரவுதெய்வமறையோய்
ஈதுகுய்யகவுலோகமிவணுளுமுறைவோர்
கோதில்வெற்றிபெறுகுய்யகரெனப்புகல்வரால். (7

தொகுத்தநற்பொருளறத்தினுயர்தூயவர்பெறப்
பகுத்தருந்தியகலின்றியுயர்பாழிவயிறிற்
புகுத்திமன்னுயிர்களுக்கிடர்புரிகிலர்களாய்
மிகுத்தவன்பினுறைவாருறைவரென்னவியவா. (8

ஆங்குநின்றகலுமங்கெறியிலோருலகுகண்
டீங்குமேயவுலகெவ்வுலகமென்னவினவத்
தேங்கனிக்கொழுகுதெள்விளியுடைத்திவவியாழ்
ஓங்குசெல்வமுறுகந்திருவர்வாழுலகமே. (9

அரியநல்விரதமாற்றுநர்களன்பினுருக
இருவிசும்புறையும்விண்ணவரையாழினவில்வோர்
புரிநரம்பிசைமகிழ்ந்தாசர்நல்குபொருள்கொண்
டுரியதானமுனளித்தவர்களிங்குறைவரால். (10)

ஆதிநம்பனுருநாதவுருவாகுமெனமுன்
ஓதுகின்றமறையாவையுமுரைத்திடுதலாற்
கீதமீசன்முனநாளுநவில்கேண்மையுடையோர்
நீதிவிவ்வுலகுசேர்குவரெனவுரைசெய்தார். (11)

ஆண்டுநின்றுசெலுமந்நெறியிலோருலகமுன்
காண்டலோடுமிஃதெவ்வுலகமென்றுகழற
மாண்டநற்றவமியற்றருமறைக்கிழவகேள்
வேண்டுபோகநுகர்விஞ்சையர்கள்மேவுலகமே. (12)

பயன்விழைந்துசிவபூசைபுரிவோர்பயிலுவோர்க்
கயிலுமின்னடிசிலாடைபொருள்யாவுமுதவி
மயல்செய்கின்றபொருணச்சுதலிலாதுமகிழ்கூர்ந்
தியலிசைப்பனுவனல்குமவரீங்குறைவரால். (13)

என்றியம்புகணநாதருடனேகுநெறியின்
மன்றலோதியரமங்கையர்நெருங்கியிருபால்
நின்றுசாமரையிரட்டவொளிர்நீலவரைபோல்
வென்றிசேர்தருமன்வந்துளம்வியந்துபுகல்வான். (14)

அரியநான்மறைமுதற்பலகலைக்குமறிவால்
ஒருவனுயினையுவப்பினொடுசத்தபுரியும்
மருவிவல்வினைதுடைத்தனைமகிழ்ச்சியதனாற்
பொருவினின்னையெதிர்காணியபுகுந்தனனியான். (15)

என்னநன்முகமனன்பொடுமியம்பிமறைதேர்
மன்னருந்தவனைவாழ்த்திவிடைகொண்டுமகிழ்வால்
துன்னுகாலபடர்சூழ்வரவிளங்குதருமன்
தன்னிரும்பதியில்வந்தினிதுசார்ந்தனனரோ. (16)

தருமனேகலும்வியந்துசிவசன்மன்மொழிவான்
உருவும்வாய்மையுமுளத்தினையுருக்கவிழைவான்
மருவியேகுமிவனேமறலிமற்றிவனையோ
வெருவும்வெய்யவுருவத்தினனெனப்புகல்வதே. (17)

வடிவமீதலதுமற்றுமுளதோவினையன்மாட்
ட்டைவர்யாரிவனகர்க்கணடையாதகல்வர்யார்
புடைகொள்சையமினியீதுகொல்புகன்றிடுகவென்
றுடனுறைந்திடுகணங்களொடுரைக்கமொழிவார். (18)

தருமநீதிபொறையன்பொடுதயாவிவைகளோர்
உருவுகொண்டனையன்மற்றிவனையொக்குமவர்யார்
அருமறைக்கிழவனின்னிகரருந்தவர்முனம்
பொருவினல்வடிவின்வந்துமுகமன்புகல்வனால். (19)

அலகிலாவுயிரடங்கலும்விழுங்குபகுவாய்
இலகுவாளெயிறிலங்கவெரிசிந்துமுசலம்
மலைதிரண்டனபுயங்களில்வயங்கியொளிர
உலறுகுஞ்சிவடவைக்கனலையொத்தெரியவே. (20)

ஆழிவெண்டிரையுயிர்த்தகொலையாலமுடனே
ஊழிவெங்கனலொருங்குசுழல்கண்களுமிழப்
பாழிவாயிதழ்துடிப்பவெடிபட்டுகெடுவான்
எழுமுலகுமுருமுக்குரலிடித்ததிரவே. (21)

வெய்யபாதகர்வெருக்கொளுமுருக்கொடுநிணத்
தொய்யில்பூசுகதைசுற்றியெதிர்தோன்றிமறலி
கையில்வாண்மழுவசைத்துலவுகாலபடரைச்
செய்யகட்கடையினோக்கியிவைசெப்பிடுவனால். (22)

துன்முகாகதைசுழற்றிநெறியற்றவிவர்தஞ்
சென்னிமூளைகெடறித்திடவடித்திடுதிமற்
றன்னபாதகரடித்துணைபிடித்துமறுக
மன்னுபாறையிலடித்துடலமாய்த்திடுதியால். (23)

வெட்டுவாள்கொடுகழுத்தினின்மிதித்துவிழியைத்
தொட்டகழ்ந்திடுதுடிக்கவடிபாசமதனாற்
கட்டியங்கவர்கழுத்தறவிறுக்கறையின்வாய்
இட்டரைத்திடுதிமெய்த்தசையையீர்ந்திடுதியால். (24)

பிறர்மனைக்குரியபேதையரிடத்துவிழைவாற்
குறுகுகாலிணைகுறைத்திடுதிகொம்மைமுலைமேல்
இறுகுறத்தழுவுகையிணையையீர்தியவர்மேல்
உறுசினத்திறெடுமூசிகணிறுத்திடுதியால். (25)

வெம்மையோடுபிறர்தம்பழிவிளம்பியுழலுஞ்
செம்மையில்லவர்கடீயுமிழும்வாயிலயலார்
தம்மில்வாழ்பவரைநோக்கினர்கடங்கண்மிசையும்
அம்மவோவெனவிருப்புமுளைகொண்டறைதியால். (26)

மின்னுநக்ககதிர்வேல்விகடபத்திரமிகப்
புன்மையில்லவர்தமைப்பழிபுகன்றவிவரைத்
துன்னுமூளைதசைசோரிநிறைபாழ்நரகின்வாய்ச்
சென்னிகீழுறமடுத்தனைசெறித்திடுதியால். (27)

போற்றுதம்பொருள்புதைத்துவறியோரின்மெலியா
ராற்றிசைக்கணுநடந்தடிவருந்திநசையால்
ஏற்றருந்துமவர்கையதனிலெண்ணையொழியா
தூற்றிருந்தொழுகவாக்கியெரியூட்டிடுதியால். (28)

தருக்குமைம்புலனெறிந்துபொறைசால்குரவனை
மருக்கொள்கொன்றைபுனைவானவன்முதற்கடவுளைச்
செருக்கினோடுபழிசெப்புமவர்வாயினிடைசெம்
புருக்கிவெந்தழல்கனன்றொழுகவூற்றிடுதியால். (29)

விருப்பினோடொருவனீவதுவிலக்கியிடுவோர்
உரைக்குநாவையறுவேதியரொடும்பர்பொருளை
அருப்பமாயினுநுகர்ந்தவர்வயிற்றையகழா
இருப்புமுள்ளொடுமலப்புழுநிறைத்திடுதியால். (30)

உம்பர்வேதியர்விருந்தினரையூட்டிநுகரார்
தம்பசிக்கனறணிப்பநனிதுய்த்தவிவரை
வெம்புகண்டகருளத்தின்மிகவெம்மைபுரியுங்
கும்பிபாகநரகத்திடைகுளிப்பவெறிவாய். (31)

உடல்சினத்தறுகணுக்கிரமுகத்தவரெதளிந்
தடைகுநர்க்கிடரிழைத்தவரையஞ்சொன்முதிரா
மடநடைப்புதல்வாருயிரைவவ்வுமிவரைக்
கொடியமாரவுரவத்திடைகுளிப்பவிடுவாய். (32)

மருள்செய்கின்றநறவுண்டவரைமண்டுகடல்போற்
குருதிவாய்நரகினுய்த்திடுதிகோதினெறிசேர்
அருமறைக்கிழவராருயிர்செகுத்தவிவரை
இருள்செறிந்தநரகத்திடையெடுத்தெறிதியால். (33)

மாலுழந்துகுருபன்னியைமணந்தவிவரைச்
சாலநற்பொருள்கார்ந்துகவர்தன்மையரைவெங்
காலசூத்திரமெனுங்கொடியகாய்நரகின்வாய்
ஓலிடும்படியிழுத்துநனியுய்த்திடுதியால். (34)

ஆயுநான்மறையருந்தவர்தமாவிகவருந்
தீயபாவமுதனுன்குநனிசெய்யுமவரோ
டேயிரேணையசிபத்திரமெனப்பெயரவாங்
காயும்வெந்நரகினிட்டுடல்கனற்றிடுதியால். (35)

ஈட்டுபாதகரைவெய்யதழலெண்ணெயிடையே
மாட்டிமற்றவருடற்றசைகள்போழ்ந்துவளையுந்
தோட்டியென்னவொளிர்துண்டமதனுற்பறவைகள்
கூட்டுணுங்கொடியகோரநரகத்திடுதியால். (36)

தேடருந்துணைவராரெனுதிருந்திழையினர்
வாடிநொந்துளம்வருந்தவதைசெய்தவிவரைக்
கூடசன்மலியெனுங்கொடியவெந்நரகினிட்
டாடன்மாபுயவெம்மத்திகையெடுத்தறைதியால். (37)

மாதர்தம்மனையிருப்பவயன்மங்கையர்தமைக்
காதலான்மருவுகையிணைபிடுங்கியெறிவெங்
கோதமுற்றுமனைதோறரிகொளுத்துமிவரை
ஏதமெய்தவெரிகாலுநரகத்திடுதியால். (38)

கோளுரைத்துநிதிகொள்பவர்நடுப்புகல்கிலார்
மாளநஞ்சமிடுவோர்நிறையின்மல்குமளவில்
நாளும்வஞ்சகமிழைத்தவர்நடுக்கமுறவெங்
காளகூடநரகத்தினிடைகட்டியெறிவாய். (39)

இச்சையுற்றருளினோடுமினிதாடுபுனல்வாய்ப்
பிச்சரென்னவுமிழ்நீர்மலம்விடுத்தபிழையோர்
அச்சமுற்றழுதரற்றிநனியாவிமறுக
மிச்சில்வெய்யகொடுவாய்நரகின்வீழ்த்திடுதியால். (40)

கருவழித்தவர்கடங்களுடலைக்கருவியால்
அரிபொருத்துபினுமம்மியிடையிட்டரைநெடுந்
திரிகைவாயிடைதிரித்துருவமாக்கியடரா
வெருவருங்கொடியபாழ்நரகில்விட்டிடுதியால். (41)

அறுசுவைப்பொருள்பகர்ந்துழலுமந்தணர்தமை
நறியகன்னலிடுமாலையினறுக்கிடுதிதம்
முறைதிறம்பவுலகாளுமுடிமன்னவர்தமை
வறியகூவலிடைதள்ளுதிமறிந்துவிழவே. (42)

மருள்கொடுக்குநறைவிற்கும்வணிகக்கபடரை
வெருவரத்தசைகளென்புபொடியாகவிரைவின்
உரலிலிட்டுயருலக்கையினிடித்தொழிகலா
நரகிடைப்பதைபதைக்கநனிநண்ணவிடுவாய். (43)

நெடியதந்திரமறைக்கிழவர்நேமியரசர்
படியில்வாழ்வணிகர்முன்னம்வெருவாதுபழிகூர்ந்
தடிகணீட்டியசதுர்த்தரையதோமுகமெனுங்
கொடியபாழ்நரகினிட்டுடல்குறைத்திடுதியால். (44)

மற்றொருத்தன்மனையாடனைமணந்தவிவரைக்
கற்பிகந்துபிறர்போகநுகர்கன்னியர்தமைச்
செற்றுவெங்கனல்கனிந்தொழுகுசெம்புருவநீர்
பற்றிமேவுதிரெனப்பதைபதைக்கவிடுவாய். (45)

பாசபாணிவிடமெண்ணெயொடுபஞ்சிபொருண்மேல்
ஆசைகூரநனிவிற்றுழலுமந்தணர்தமை
ஊசல்போலுயரநாற்றியழல்பொங்கியுமிழும்
மாசுசேர்கரியசேற்றிடைமடுத்திடுதியால். (46)

அரியநோன்பினிதிஞற்றியிடைவிட்டயர்வுறுந்
திருவில்பாதகரையீயிஞெடுவண்டுசெறியும்
கிராயமுட்புகவிடுத்திடுதிர்நீவிரெனநின்
றாறுசொல்லிஞெடுபாவிகள்மூனுற்றிடுவனல். (47)

அன்னபாவிகணமன்புகநல்கேட்டுளயரா
முன்னர்நாடொறுமிழைத்தபிழைமுற்றுமுணரா
என்னைசெய்துமினியென்றுமதிமாழ்கிவெருவோ
டுன்னருங்கொடியதூதர்முன்னுறப்பதறுவார். (48)

முறைவழாதுலகமுற்றுமினிதாழிநடவும்
அறைதருங்கழலலங்கல்வடிவேலரசரைப்
பொறையிஞேடளவளாயெதிர்புகுந்துமகிழ்வான்
மறலிபூசனைபுரிந்தடிவழுத்தியிடுமால். (49)

மறைவலோர்கண்முதஞென்குவருணத்தவர்களும்
நெறிவழாதுதம்மொழுக்கநெறிநின்றனர்களேல்
தெறுசினத்தபகடூர்தியணிசெம்பொனணைமேல்
உறைதிரென்றினிதுவந்துமுகமன்புகல்வனல். (50)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தருமசேனன்விடபறுவன்றந்தவக்கிரன்சயத்திரன்
பருதிவடிவேற்கார்தமனும்பாசன்றிறல்கொள்பாரந்தகன்வெங்
குருதிவடிவாட்டிபதனுவாக்குக்கீரியுமாத்தனன்சிறந்த
உருவத்தண்டார்ச்சகத்திரசித்துவனுச்சுவன்போருச்சுனனே. (51)

எறிவேற்றுனைநிபுஞ்சயன்சீரிரந்திதேவன்பலகலையின்
துறைபோயுயர்ந்தபரமாத்திசுவனுவாவென்றிவர்முதலாந்
திறல்வாளரசர்விண்ணுலகிற்சிறந்தசுதர்மைமண்டபத்தின்
உறைவார்திருகுசினமறலியுறையுநகரிற்செல்லாரே. (52)

நீலகண்டன்மழுவேந்திநெற்றிக்கண்ணன்பூதேசன்
காலகாலன்விடையூர்ந்தோன்கங்கைசூடிகாமாரி
சூலபாணிகரியுரித்தோன்ரேகைபாகன்காபாலி
ஆலமுண்டோன்மதிசூடியந்தகாரியீசானன். (53)

வாசுதேவன்சனார்த்தனன்போர்மதுசூதனனச்சுதனெடுமால்
ஈசனான்சங்கரன்கிரிசனிறைவன்பினாகபாணிசிவன்
கேசிநாசன்மணிவண்ணன்கெருடத்துவசனரசிங்கன்
நாசமில்லோன்விடையூர்திநம்பன்மிருத்துஞ்செயன்பாகன். (54)

அரவாபரணனழலேந்தியட்டமூர்த்திசெகதீசன்
புருடோத்தமன்கேசவன்கண்ணன்புயங்கசாயிபுள்ளூர்தி
பரமசாந்தன்கணநாதன்பவன்முக்கண்ணன்சருவேசன்
திரிவிக்கிரமன்கமலைபதிதேவன்சவுரிமாதவனே. (55)

புராரிதாமோதரன்சயம்புபூவைவண்ணன்கோபாலன்
முராரியனந்தன்கோவிந்தன்முகுந்தன்சார்ங்கபாணியரி
கிரீசனென்னும்பெயர்முதலாக்கிளக்குநாமநூற்றெட்டும்
பரவுமவர்கள்யமனுலகம்படாரரழியாப்பதம்பெறுவார். (56)

என்றுசிவசன்மாவினுடனினவண்டூதமருவுயிர்க்கும்
மன்றற்றுளவோன்கணநாதர்வகுத்துமொழியுமமையத்துப்
பொன்றாழ்திதலைப்பொம்மன்முலைப்புரிமென்கூந்தலரமகளிர்
ஒன்றிமகிழ்வோடினிதுறையுமுலகமதனைக்கண்ணுற்றான். (57)

**எட்டாவது சிவசன்மாவை இயமனெதிர்கொண்ட அத்தியாயம் முற்றிற்று.**

---

ஆகத்திருவிருத்தம்–299.

## ஒன்பதாவது
## சிவசன்மா சூரியவுலகங்கண்ட அத்தியாயம்

### கலிவிருத்தம்.

கண்டுமகிழ்வோடினியகண்கவர்வனப்பிற்
றொண்டையிதழ்மாதரிவர்யார்கொலெதிர்தோன்றும்
மண்டுவளமெய்தலகம்யாதெனவழங்க
விண்டுகணநாதர்கள்வியந்தினிதுரைப்பார். (1)

ஈங்கிவர்கள்வேள்விபுரிவோரையிமையோரை
நீங்கரியகாதலுறநெஞ்சினையுருக்குந்
தீங்குதலைமென்மொழியதெய்வமடமாதர்
வாங்குதிரைவேலையமுதத்தினொடும்வந்தார். (2)

பொன்னெழுகிவார்ந்தனையபொற்புடைநரம்பின்
இன்னிசையவீணையொடுபாணிநடமுஞ்சொற்
பன்னரியதெய்வநவில்பாடைகலைமாட்சி
மன்னுமதனூல்சுரதவிஞ்சையிவைவல்லார். (3)

அலம்புசைமனோகரையுருப்பசியணிப்பூஞ்
சிலம்புபுனைசீறடியிமாவதிதிருந்து
நலந்திகழுமேனகைகலாவதிநடத்தால்
இலங்குகனமஞ்சுளைநிகர்காந்திமதியென்பார். (4)

மனங்கவர்கலாநிதிசுபானனைமழைக்கண்
அனங்கதிலகங்கிருதுசுற்கையழகாருங்
கனங்குழையினுண்மதனமோகினிகளிப்பால்
தினம்புதுநலந்தருதிலோத்தமையரம்பை. (5)

சந்திரகலைசந்திரவிலேகைதவசுற்கை
ஐந்துபரிவேள்விபுரிவோரணையுமங்கை
உய்ந்திடநினைந்துபலவேள்விகளுஞற்றும்
வெந்தழலிலந்தணர்விரும்புமடமாதர். (6

இன்னவர்களாதிமடவாரெனையரென்னில்
அன்னவர்களாறுபதினாயிரவராவார்
மன்னிளமையோடுயர்வனப்பொருவிலாதாள்
உன்னுவிழைவின்படியுருப்பலவெடுப்பார். (7)

இங்கிவர்களன்றியுயரேழ்கடல்வரைப்பின்
மங்கையர்கண்மாதவுபவாசம்விடுபோதின்
அங்கதுதன்னெஞ்சமறியாதுதவறுற்றார்
கொங்குகமழ்விண்ணிலுறைகூத்தியர்களாவார். (8)

நீதின்மனமன்பொடுபொருந்துதல்செய்யாமல்
ஏதிலனொருத்தன்வலிதிற்புணரினேங்கிக்
காதலனைநெஞ்சுறநினைந்துருகுகற்பின்
மாதர்களுமிவ்வுலகம்வைகிடுவரன்றே. (9)

தூயமறையோனொடுவிரும்புமொருதோகை
ஏயகலவிக்கினிதியைந்தவைகொடுத்தோர்
ஆயபலன்வேட்டுயருந்தவமுயன்றோர்
மீயுயருமிவ்வுலகமேவுவர்களன்றே. (10)

கன்னியையொருத்தனுறுகாதலொடுசேரில்
அன்னவளுமன்றுமுதலாகநனிவாட
மன்னுவிரதத்தொடும்வருந்தியுறைவாளேற்
தன்னிகரில்பொற்பினொடுமிவ்வுலகுசார்வாள். (11)

என்றுகணநாதர்களியம்பவவைகேளா
நின்றினிதுசென்னெறியினீதிமறைவல்லோன்
மன்றல்கமழ்செங்கமலவாண்முகமலர்த்துந்
துன்றுகதிரோன்மருவுதொல்லுலகுகண்டான். (12)

மின்பொருவுசெங்கதிர்விரிந்திருள்விழுங்கும்
பொன்பிறழுமோருருளினேழ்புரவிபூண்ட
மன்பெரியதேரிலுறைவானவனைநோக்கி
அன்பொடுவணங்கவருள்செய்தனனகன்றான். (13)

ஆதவனகன்றிடலுமந்தணனுரைப்பான்
யாதுதவமாற்றினர்களிவ்வுலகுசேர்வார்
போதல்புரிதேவிநிலையென்புகறியென்னக்
காதலொடுவிண்டுகணநாதர்களுரைப்பார். (14)

பூதமெவையுந்தனிபுரந்திடுவன்யாவன்
ஏதமறமுத்தொழிலியற்றிடுவன்யாவன்
வேதவடிவாய்த்தனிவிளங்குமவன்யாவன்
மாதவவவன்கொலிவனென்னமறைகூறும். (15)

இன்னகதிர்வானவனையானெனமதித்துப்
பொன்னடிபணிந்தினிதுபூசனைபுரிந்தோர்
மன்னவர்களிப்பதம்வழுத்தல்புரியாதோர்
துன்னவரிதாகுமிருடேங்குலகுசேர்வார். (16)

வேறு.

கதியளித்திடுங்காயத்திரியினை
உதயகாலையிலுச்சியின்மாலையில்
விதியினோதல்விடுத்துறைகின்றவப்
பதிதாகுவரேழுபகலினே. (17)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பொருவருகாயத்திரியினையுதயம்பொருந்திடுமளவுநின்றுரைத்து
மருவுநண்பகலிற்பரிதியைநோக்கிநவின்றுபுன்மாலையம்பொழுதில்
விரிகதிருடுக்கடோன்றிடுகாறும்விழைவொடுமோனமாயிருந்து
திரிதருபுலன்களடக்கினர்செபிக்கிற்செங்கதிருலகிடைச்சேர்வார். (18)

மைந்துடைமந்தேகாசுரர்தெறுவான்மாலையுங்காலையும்பகலும்
அந்தணருதவுமருக்கியப்புனலையாதவனினிதுவந்தருள்வான்
முந்துசீர்க்காயத்திரியினாற்காலமும்முறையருக்கியம்புரிதல்
நந்தலில்சிறப்பாருலகமோர்மூன்றுந்தானமாய்நல்குதல்பொருவும். (19)

அறிவருங்காயத்திரிதனக்கிணையாயமறைவதொன்றில்லையாங்கது
போ, னிறைபுனல்வளங்கூர்காசியம்பதிக்குநிகர்தருபதியுமாங்குறை
யும், இறைவனைநிகர்க்குங்கடவுளுமில்லையாலியம்புகாயத்திரியெழுதா
மறையொடுங்கமலமலரினான்முகற்குமீன்றதாயெனவகுத்துரைப்
பார். (20)

தெரிவருந்தவத்துக்கோசிகன்காயத்திரிதனைச்செபித்ததாலன்றே
அருமறைப்பிரமவிருடியாய்ப்படைக்குமருந்தொழிற்கொருவனாய
மர்ந்தான், பரவுநான்மறையுமறுவகைநூலும்பயின்றுளானந்தணனல்
லன், பொருவில்சீர்க்காயத்திரிதனைவிதியிற்புகன்றுளானந்தணனா
வான். (21)

கருதருஞ்சுடருமலரினான்முகனுங்கருங்கடல்வண்ணனுமறையுந்
தெரிவருங்காயத்திரியெனப்புகல்வர்மறைகளுமங்ஙனஞ்செப்பும்
பரிசினாற்காயத்திரிக்குமொள்ளொளியபரிதிவானவற்குமெஞ்ஞான்
றும், ஒருவிலாவாச்சியவாசகசம்பந்தமுமுண்டெனவுரைப்பரால். (22)

சிறந்தபல்லுயிர்க்குமெண்பெருந்திசைக்கும்வியாபியாஞ்செங்கதிர்ச்
செல்வன், பிறந்ததும்பிறவாநிற்பதும்பிறக்கப்படுவதும்பேசிலாங்க
வனே, அறிந்துணர்காயத்திரிதனையோதியலர்கதிர்ச்செல்வனையன்
பால், நறுந்துணர்தூவிக்கைதொழுமவரேநண்ணுமிப்பதத்தில்வீற்றி
ருப்பார். (23)

அருக்கபூசத்திலருக்கமூலத்திலருக்கவத்தத்திலுத்திரத்தில்
திருக்கிளருக்கவாரமென்பதனிற்செழுஞ்சுடர்ப்பரிதிவானவனைக்
கருத்துறநினைத்துமெய்ம்மயிர்பொடிப்பக்கைதொழுதிருகணீர்வார
மருக்கிளர்மலர்தூயிறைஞ்சுவார்தமதுமனத்தினில்விழைந்தனபெறு
வார். (24)

பூசமாதத்திலருக்கவாரத்திற்புலரியினீரிடைப்படிந்து
மாசறுதானமோமநற்செபங்கண்மனமகிழ்சிறப்பவாங்கியற்றிப்
பேசருங்காமக்குரோதம்விட்டருளாற்பிறங்குசெங்கதிரவற்றொழு
வோர், ஏசலில்வனப்பினரம்பையர்மருவவிரவிநன்பதத்தில்வீற்றி
ருப்பார். (25)

மருவியவயனத்தருமறைகூறுமந்திரம்புகன்றுதென்புலத்தோர்க்
குரியநற்கடன்கள்கழித்துளோர்நறுநெய்யுடன்றிலவோமங்கள்புரிந்
தோர், பரிவொடுகடவுட்பராயினோர்விளங்குபரிதிபோன்றிலங்குரு
வெடுத்துப்,பெருகுநோய்துன்பமூப்பிவையொழிந்துபிறங்குமிப்பதத்
தினிலுறைவார். (26)

மேயநல்லயனத்தெறிபுனல்படிந்துவேதியர்க்கரும்பொருள்வழங்கார்
வாயில்கடோறுமில்லெனவிரந்துமறுகுவர்வாளெயிற்றரவஞ்
சேயொளிவிரிக்கும்பரிதியைத்தீண்டுகாலையிற்றிலத்தொடும்பொரு
ளைப், பாய்புனற்குருக்கேத்திரந்தனிற்றானம்பண்ணினரிப்பதம்பெ
றுவார். (27)

இரவியையராத்தீண்டேல்வையிலெறிநீர்யாவையுங்கங்கையைநிகர்க்
கும், அருமறைக்கிழவரியாருநான்முகனைப்பொருவுவரும்பொருளை
வையும், விரிசுடர்ப்பசும்பொன்போலுமவ்வேலைவீங்குநீராடுதலோம
ம், புரிதனற்றானம்வழங்குதலிரவிபதத்தினிற்பொருந்துகாரணமாம்.
(28)

ஆயிரங்கதிரோனெனும்பெயர்முதலாவலர்கதிர்ப்பரிதியீருகத்
தூயநான்மறையுமியம்பியவெழுபானுமமும்விதிமுறைதுதித்து
மேயபோன்பாற்கொழுமலர்தூவிவிரைமலர்ச்சேவடிதொழுவார்
பாயிருள்பருகியுலகெலாம்விளக்கும்பகலவன்பதத்தில்வீற்றிருப்பார்
(29)

செம்பின்வள்ளத்திற்றண்புனனிறைத்துச்செய்யசாந்தறுகுவெள்ள
ரிசி, வம்பவிழலரிப்போதுதூய்முழந்தாண்மண்ணிடையூன்றிமுன்னு
ரைத்த, ஐம்பதோடிருபானுமமுமோதியாங்கதுசென்னிமாட்டேந்
தித், தம்பொறியடக்கியருக்கியங்கொடுப்போர்தயங்குமிப்பதத்தினி
ற்சார்வார். (30)

மன்னுபேரொளிகட்குறையுளாம்பரிதிவானவன்பெருமையையா
ரே, இன்னதென்றெடுத்துமொழிகுவரெம்மாலியன்றனமொழிந்தன

மென்னாத், தன்னமர்கணங்கண்மொழிதல்கேட்டனோர்தம்மொடு விழைவினுங்ககன்று, சென்னெறியதனிற்புரந்தரனுறையுமுலகுகண் டுளமகிழ்சிறந்தான். (31)

## ஒன்பதாவது சிவசன்மாசூரியவுலகங்கண்ட அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—330.

## பத்தாவது
## சிவசன்மாதெய்வலோகங்கண்ட அத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

காண்டலோடும்விழிகள்களிப்புற
ஈண்டுதோன்றுமுலகமியாதென
மாண்டநற்றவன்கேட்டிடவான்றொட
நீண்டமாயன்கணங்கணிகழ்த்துமால். (1)

கனைத்துவண்டுஞ்சுரும்புங்கஞலிய
நனைப்பொலந்தருநண்ணிவ்வுலகினை
வினைப்பருந்தவப்பேற்றினிலைபெற
மனத்தினால்வகுத்தான்மயனென்பவே. (2)

மண்பெருந்தருமாணிழைநல்கலாற்
பொன்செய்கொல்லருமில்லைபுதியவாய்
அன்பிற்றுய்ப்பனவானினநல்கலால்
இன்பவுண்டியடுநருமில்லையால். (3)

அண்ணல்யானையடலயிராவதம்
மண்ணுசெய்யமணிகள்சிந்தாமணி
உண்ணுமுண்டியமிர்தமுயர்பொழில்
கண்ணகன்சினைக்கற்பகச்சோலையே. (4)

வாமமேகலையாரரமங்கையர்
தாமவீதிகள்யாவுந்தமனியஞ்
சேமநற்குடியாவையுந்தேவர்கள்
காமதேனுக்கறவைகளென்பவே. (5)

கருமணித்தொகைநள்ளிருள்காட்டலும்
விரிபசும்பொனிளவெயில்வீசலும்
மருவலன்றிவளங்கெழுமாநகர்க்
கிரவுமில்லைபகலுமிங்கில்லையால். (6)

திருவநீணகர்காக்குந்திறலினோன்
மருவுமேழ்திசைப்பாலர்மணிமுடி
பொருதுசேந்துவெயிற்கதிர்பூத்தொளிர்
எரிமணிக்கழலிந்திரனென்பவே. (7)

புரவிமாமகநூறுபுரிந்துளோர்
கருநெடுங்கட்புலோமிசைகண்கவர்
வருமுலைத்தடம்புல்லியிம்மாநகர்க்
காசராகவினிதிருந்தாள்வரால். (8)

ஆன்றவேதமறைதருமுப்பத்து
மூன்றுகோடியமரர்முறைமுறை
சான்றகேள்விச்சதமகன்பூங்கழல்
வான்றணைப்பதம்போற்றிவணங்குவார். (9)

வெருவலின்றிமருமத்துவேனுழைந்
துருவனாட்பினுயிர்விடுமன்னவர்
அருமகம்புரிவிப்பவராற்றுநர்
எரிசெய்பொன்னிலத்திங்கெய்துவார். (10)

துலங்குசெம்பொற்றுலைபுகுமன்னவர்
அலங்குளைப்பரிநன்மகமாற்றுநர்
இலங்குபைம்பொனளப்பிலவீந்துளோர்
நலங்கொளிவ்வுலகத்திடைநண்ணுவார். (11)

தவமிழைத்துந் தனிமகமாற்றியும்
புவிகளேழும்புரந்திடும்வேந்தரும்
மவுனசித்தராக்கரியக்கர்மற்
றெவருமிந்நகரெய்தவிரும்புவார். (12)

எனவிளம்புதல்கேட்டியன்மாதவன்
துனைவிலேகுநெறியினோர்தொன்னகர்
முனம்விளங்கியதியாதுமொழிகென
வினவலுங்கணநாதர்விளம்புவார். (13)

ஈதுபாவகலோகமெரிபுகும்
மாதர்வேள்விகளாற்றுமறையவர்
சீதந்தீர்ப்பனநல்குந்திறத்தினோர்
ஆதரத்திவ்வுலகினடைவரால். (14)

விண்ணுளோருமிவனுகர்மிச்சிலே
உண்ணவேண்டுவரொண்பிறைக்கண்ணியான்
கண்ணுமீங்கிவனின்னகடவுளை
எண்ணுறாதவர்பாழ்நரகெய்துவார். (15)

இந்தவெந்தழற்செல்வனுக்கின்றருள்
தந்தையாரெத்தவமுயன்றிப்பதம்
வந்தடைந்தனன்கூறுமின்மற்றென
அந்தணனுக்காங்கவர்கூறுவார். (16)

கொன்றைவேணிக்குழகனுக்கன்பினன்
மன்றநற்றவமாற்றிவரும்புலன்
வென்றுநோற்றபுகழ்விசுவாநரன்
என்றுளானொருபிறப்பாளனே. (17)

பெருமைசான் றபிரமசரியத்தின்
மருவுநாளின்மறைநபயிலந்தணன்
அரிதினுற்றுறுமாச்சிரமங்களின்
உரியதியாதெனவுள்ளத்திலெண்ணினன். (18)

இறந்துளோர்க்குமிரவலர்க்குந்தனி
துறந்துளோர்கட்குந்துப்புரவீதலால்
அறந்தவாதுயரில்லறமாற்றுதல்
சிறந்ததென்னவினிதுளந்தேறினன். (19)

எசலின்றியியம்பியநாள்களின்
மாசில்கற்பின்மனையவட்சேர்ந்திடல்
பேசுகின்றபிரமசரியமென்
ருசில்வேதங்களியாவுமறையுமால். (20)

இல்லறத்தினியைந்துங்கிளையொடும்
புல்லிப்பாத்துணனீத்தவர்பூந்திரை
மல்குநீர்படியாதவர்மாண்பொருள்
நல்கிடாரிவரேநரகெய்துவார். (21)

அரிவைபூம்புனலாடியநாண்முதன்
மருவுபன்னிருநாளுமணந்திடல்
ஒருவனில்விழையாமலொழுகுதல்
பெருமைசான்றபிரமசரியமே. (22)

தனதிலாளொடுமுத்தழல்வேள்விசெய்
தினிதினல்லறமாற்றியிருப்பனேல்
மனைவியோடுவனத்திடைவைகிய
புனிதர்தம்மிற்புகழினனுவனால். (23)

புல்லுகானிற்பொருந்தியில்வாழ்க்கையின்
மல்குசெல்வமனத்திடையெண்ணினோன்
இல்லறத்திணிருந்துதவஞ்செய்வோன்
அல்லன்வானப்பிரத்தனுமல்லனால். (24)

பெற்றவேகொண்டருந்திப்பெறா தன
மற்றியாவுமனத்தில்விழைந்திடா
திற்றிறம்பிலராகியிருக்குநர்
முற்றுநீத்தவர்தம்முளுமுந்தினோர். (25)

அனைத்துநீத்தவராகியுமொன்றினை
மனத்தினால்விழைந்தோர்மனைவாழ்குநர்
எனைத்துணைவளித்தாலுமற்றின்புறார்
நினைப்பருந்தவநீத்தபதிதரே. (26)

இல்லறத்தினுயர்ந்ததொன்றில்லெனத்
தொல்லைநான்மறையாளன்றுணிவுறா
முல்லைமூரன்முகிண்முலைங்கொவ்வைவாய்
வல்லிதன்னைமணம்புணர்ந்தானரோ. (27)

மனையறந்திறம்பாதுமறையவன்
புனைசெய்மேகலையோடும்பொருந்துநாட்
கனையிருட்குழற்கற்புடைக்காதலி
முனைவகேட்டியெனமொழிவாளரோ. (28)

அடிகணின்னருளெய்தியடியனேன்
ஒடிவில்செல்வமுலப்பிலபெற்றனன்
வடவரைச்சிலையானன்னமைந்தனைக்
கடிதினல்கெனக்கைதொழுதேத்தினாள். (29)

அரனையன்னமகவையளித்தியென்
றுருவமேகலையாளிங்குரைத்தது
கருதிலின்னவள்சொல்லன்றுகண்ணுதல்
திருவுளச்செயலாமென்றுதேறினான். (30)

மையகண்ணிமகவளிப்பேனுளத்
தையமெய்தலென்றாற்றியருந்தவஞ்
செய்யவெண்ணித்திரைபொருகங்கைசூழ்
பொய்யில்காசியிற்போயடைந்தானரோ. (31)

மாசிலா தமணிகன்னிகைப்புனல்
ஆசில்வே தியனுடிமுத் தாபமுந்
தேசினீக்கித் திருவளர்காசிவாழ்
ஈசர்யாரையுமேத் தியிறைஞ்சினன். (32)

உடைதிரைப்புனற்றீர்த் தங்களொன்றற
அடைவினுடியருமறைவே தியன்
மிடையுமீசரில்யாவர் விழைந்தன
கடிதினல்குவரென்றுகருதினன். (33)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

காசிநகரினிதுறையுமோங்காரவிலிங்கமுதற்கருணைகூரும்
ஆசறுமித்திரர்வருணவிலிங்கமீருகவருமறைகளுன்கும்
பேசுபுகழிலிங்கத்தில்வீரேசனன்றிமகப்பேறுநல்கும்
ஈசரெவரெனநினையாவுளமுருகிவிழிபனிப்பவிறைஞ்சிநின்றான்.(34)

அத்தலையில்வீரேசன்றிருமுன்னரமர்சத்திபீடந்தன்னில்
வித்தகஞ்சேர்பிரகடையொடுவிகடையெனுமணங்குறையுமதனின்
பாங்கர், சித்திவிநாயகனுறையுமீங்கிவரையெஞ்ஞான்றுஞ்சிந்தைசெ
ய்வோர், முத்தியினிதடைவரெனமுதுக்குறைந்தமாதவத்தோர்மொ
ழிந்தாரன்றே. (35)

பஞ்சசுரனேழ்புவியும்புரக்கும்வசுபூரணனும்பழிப்பில்வேந்தன்
அஞ்சலிசெய்தருள்கொழிக்கும்வீரேசனடியிணையிலடைந்தார்செய்ய
கஞ்சமுகைகவற்றுமுலைக்கோதிலாவரம்பையெனுங்கனிவாய்த்தீஞ்
சொல், வஞ்சியரமகளாடல்புரிந்தவன்றன்சேவடியின்மருவினளே.
(36)

விரிகதிர்சூழ்பிறைமௌலிவேள்விபுரிதருபாத்துவாசன்மிக்க
அருமறைதேர்வேதசிரசெனுந்தவத்துமறைமுனிவனன்பினோடும்
பொருவிலுருத்திரசமகம்விதிமுறையினேதிநறும்புனலினட்டி
உருவினெடும்வீரேசன்றிருவுருவினென்றுகவுறைதல்செய்தார்.(37)

இன்னரமாதொருத்திதனதுயிர்க்குயிராயினிதுறையுங்கேள்வனோடும் இன்னிசையாழ்பயின்றீசன்சரணடைந்தாளெழிற்சங்க சூடனென் னும், பன்னகவேந்தொளிகெழுதன்பணாமணிநீராஞ்சனஞ்செய்பரிசு தன்னால், துன்னரிதாயணித்தாகும்பேரின்பக்கடல்படிந்து துளைந்தா னன்றே. (38)

சிலைத்தடந்தோட்சயித்திரதன்வீரேசன்சேவடியிற்சிந்தைசேர்த்தி நிலக்கிழமையனைத்துமுனமெய்திறன்விடுரதனுநிகரில்வேந்தும் இலக்கமில்சீர்வசுதத்தனெனும்வணிகர்க்கிறைவனுமிவ்விறைவன் செய்ய, மலர்க்கமலத்தாள்வணங்கிவானவரும்பெறலரியமகப்பெற் றாரால். (39)

ஆதலினிவ்வீரேசனடிபோற்றியருமகப்பேறடைவலென்று ஏதமறுமதிக்கூவற்புனலாடியைம்புலனுமிகலைநூறிக் காதலெனுங்காமமுதன்முக்குறும்புமெறிந்துளத்துக்கவலைநீங்கி வேதமுறைதெரிந்தருளும்விச்சுவாநரனரியவிரதம்பூண்டான். (40)

ஓர்திங்களோர்பகலுண்டோர்திங்களிரவருந்தியொருவாநல்கின் ஓர்திங்களயின்றுமற்றையோர்திங்களெவ்வுணவுமொழிந்துதீம்பால் ஓர்திங்கள்குடித்தடைக்காயோர்திங்களருந்தியெள்ளினுறுநுண் பிண்டி, ஓர்திங்கணுகர்ந்துபின்னரோர்திங்கள்பரிவிறெடுமுறுநீர் மாந்தி. (41)

ஓர்திங்களானுதவுமைந்தினையும்புனிதமாயுவந்துமாந்தி ஓர்திங்கள்சாந்திராயணம்புரிந்துதருப்பைநுனியொழுகுதெண்ணீர் ஓர்திங்கள்பருகிமற்றையோர்திங்கள்வளியருந்தியுடலம்வாட்டிப் பாரெங்குமதிசயிப்பப்பன்னிருதிங்களுந்தவத்திற்பயின்றானன்றே. (42)

திங்களொருபன்னிரண்டுங்கழிப்பின்மற்றைத்திங்கடனிற்றிரைகு லாய, கங்கைநறும்புனலாடிவீரேசனடிபரவுங்கருத்தினோடும், அங்குறலுமவ்விலிங்கத்தாண்டிருநான்கமைந்துவளர்செவ்வியோடுந் தங்கநெடுஞ்சடாமௌலித்தாபதன்போலோருருவுதோன்றக்கண் டான். (43)

வெண்ணீறுபுனைவடிவுமருமறைநகண்மழலையுறமிழற்றுவாயும்
உண்ணீர்மைதிரிந்துருகக்காதளவுமோடியருளொழுகுகண்ணுந்
தெண்ணீர்முத்தெனவொளிருங்குறுநகையுஞ்சிறுசதங்கைச்சிலம்புந்
தாளுங், கண்ணீர்நுண்டுளிசோரமயிர்பொடிப்பவிதயமலர்களிப்பக்
கண்டான். (44)

அருவுருவாயேகமாய்க்குணங்குறிகளெவையுமின்றியசலமாகி
நிருமலமாயெவ்வுயிர்க்குமுயிராகிச்சுடரொளியாய்நித்தமாகிக்
கருதரியவானந்தக்கடலாகிமெய்ஞ்ஞானக்கனியாய்நின்ற
வரதனினதடிக்கமலமனத்திருத்திக்கொழுமலர்தூய்வழுத்தல்செய்
வாம். (45)

இலகொளியகதிரொன்றாயிரம்புனல்பெய்குடங்கடொறுமியைந்துநா
ளும், அலகில்பலவுருவாகித்தோன்றுதல்போற்சராசரங்களனைத்து
மாகி, உலகமுழுவதற்குமொருதனிக்கடவுளாகியுலகளந்தமாலும்,
மலரயனுமறியாதுநின்றநின்சேவடியிணைகள்வணங்குவாமே. (46)

கானலிடைத்தெண்ணீருங்கயிற்றினில்வாளரவுமலைகடலிற்பட்ட,
கூன்முதுகிப்பியிற்றோன்றுவெள்ளியுமம்முதலுண்மைகுறிக்கிற்றீரு
ம், ஆனவைபோனினையறியிற்றோன்றுசகமனைத்துநில்லாதழியுமாற்
றால், தேனவிழ்பூங்கடுக்கையணிசெல்வநினதறைகழற்றாள்சென்னி
சேர்ப்பாம். (47)

நீரினிடைத்தண்மையுஞ்செந்நெருப்பினிடைவெம்மையும்வெண்ணி
லவுத்திங்கள், சேர்தருதட்பமுமிலகுசெஞ்ஞாயிற்றழற்சியுந்தீம்பாலி
னெய்யும், ஈர்மலரினறுமணமுமென்னலாயுலகமெலாமிருக்குமெந்தை
வார்கழற்சேவடிக்கமலநறவொழுகுமலர்தூவிவணங்கல்செய்வாம்.
(48)

நோக்கின்றிக்கண்டுநனிகையின்றிக்கொடுத்துமறைநுவல்வதாய
நாக்கின்றியறுசுவையுமினிதுணர்ந்துங்காலின்றிநடத்தல்செய்தும்,
மூக்கின்றிமணங்கவர்ந்துஞ்செவியின்றிக்கேட்டுமறைமுதல்வரியார்
க்கும், வாக்கின்றிமனத்தினுக்குமெட்டாநின்றாமரைத்தாள்வணங்க
ல்செய்வாம். (49)

வண்டுழாய்ப்பசுந்தெரியன்மாயவனுநான்முகனும்வானுளோரும்
அண்டர்நாயகனுமறைமுனிவர்களுமறிவரிதாயன்புமுற்றுந்
தொண்டரானவர்க்கெளிதாய்த்தோன்றுதனிச்சுடர்க்கொழுந்தே
சுருதியென்னும், பண்டைநூன்முடிவிலுறைபராபரநின்னடிக்கமலம்
பணிதல்செய்வாம். (50)

குலங்குடிகோத்திரமின்றிப்பிறப்பிறப்புப்பெயர்வண்ணங்குணமுமி
ன்றி, இலங்கொளியவெறுவெளியாயிருந்துநெடுநீருலகம்யாவும்வேட்
ட, நலங்கொள்பொருளனைத்தினையுநல்குதலானளிமதிச்செஞ்ச
டையோய்மற்றுன், பொலன்கழற்றாமரைமலரென்புன்றலையின்மி
சைசூட்டிப்போற்றுவேனால். (51)

முதியவனீகாளையுநீமுதுக்குறைவில்பாலனுநீமுளரிவாட்டும்,
மதிபுரையும்வாண்முகத்துமலைமடந்தைகொழுநனுநீவானோர்போற்
றுங், கதழெரிகான்மூவிலைவேற்கங்காளநாதனுநீயாதலானுன்,
பொதியவிழ்தாமரையனையபூங்கழல்களெஞ்ஞான்றும்போற்றல்செய்
வாம். (52)

என்றினையதுதிகூறியிறைஞ்சுதலுமாங்கவனையெழுகவென்னா,
நன்றுனதுதுதிமகிழ்ந்தேம்நீவிழைந்தனநல்குவம்விரைவினவிறி
யென்ன, மன்றவுயிர்க்குயிராயவரதநினக்கறிவரிதாய்மற்றொன்றுண்
டோ, புன்றொழிலேன்றனைக்கேட்டதென்னையெனமறைமுதல்வன்
புகல்வன்மாதோ. (53)

மின்போலுநுடங்கிடைநின்மனைக்கிழத்தியவள்வயிற்றின்விண்ணோ
ர்போற்ற, என்போலுமொருபுதல்வன்கிரகபதியெனும்பெயரினி
யைவனன்பர், உன்போலாரித்துதிப்பேருவகைபுரியட்டகமீதுலகி
னுளும், அன்போடுந்துதித்திறைஞ்சில்வந்தியருமருமகப்பேறடைவர்
மாதோ. (54)

என்னமொழிந்தருந்தவத்தோன்வேட்டவரமுவந்தருளியிலிங்கநாப்
பண், துன்னியிறைமறைந்திடலுஞ்சூழ்புலன்வென்றிருவினையுந்தொ

லைத்துநீங்கா, மன்னியவாணவமுதலமலமூன் றின்வேரகழ்ந்தமறை வலாளன், தன்னமர்காதலியுறையுமனையகத்தின்மகிழ்வினெடுஞ்சா ர்ந்தானன்றே. (55)

## பத்தாவது தெய்வலோகங்கண்ட அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—38[illegible]

## பதினென்றுவது சிவசன்மா அக்கினியுலகங்கண்ட அத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

தொழுதகுதவத்தின்மிக்கதொன்மறையந்தணாளன்
விழைவொடுமறங்களாற்றிமேதகவொழுகுநாளில்
எழில்கனிந்தொழுகச்செம்மாந்தெழுமுலையறன்மென்கூந்தற்
கழையுறழ்தோளினுட்குக்கருப்பம்வந்துற்றதன்றே. (1)

அலர்முலையம்மெல்லோதியரிமதர்நெடுங்கட்செவ்வாய்
விலகிவில்லுமிழும்பூணுள்வியாழகேந்திரத்திற்றூய
கலனுறுமோரைதன்னிலுண்மலர்மாரிசிந்த
உலகெலாமுவகைபொங்கவொருமகவுயிர்த்தாளன்றே. (2)

பொன்மழைபொழிந்தவானம்பூநறுஞ்சுண்ணஞ்சிந்தித்
தென்வரையுயிர்த்ததென்றறிசைதொறுந்தவழ்ந்ததொல்கி
மின்னுறழ்மருங்குனுவிளைசையர்மகளிராடக்
கின்னரமிதுனமியாவுங்கிளர்நரம்புளர்ந்தவன்றே. (3)

அத்திரிமரீசிகார்க்கனங்கிராவசிட்டன்சன்னு
முத்தழல்வேள்வியாற்றுமுற்கலன்சிலாதன்சங்கன்
உத்துங்கன்வியாதன்வற்சனுரோமசன்பரத்துவாசன்
மெய்த்தவமதங்கன்தக்கன்விபாண்டகன்மிருகசிங்கன். (4)

காசிபன்சாதுகன்னன்காலவனாபத்தம்பன்
கோசிகன்சீதன்பார்க்கன்குர்ச்சன்றேவலனாரீதன்
மாசில்கண்ணுவன்மார்க்கண்டன்வான்மீகன்சாலங்காயன்
ஆசறுபிருகுசெஞ்சொலகத்தியன்வாமதேவன். (5)

நாரதனாதியாயநான்மறைமுனிவர்விண்ணோர்
கார்நிறச்செங்கண்மாயன்கலைமகள்கொழுநனந்தி
போருடைக்குலிசவேந்தன்பொன்புகருரகவேந்தர்
சீர்கெழுமறைவலாளனில்வயிற்சேர்ந்தாரன்றே. (6)

உரவுநீர்க்கடல்களேழுமொலிகெழுகடவுள்யாறும்
அருவியஞ்சாரற்குன்றுமலர்சினைத்தருக்களியாவும்
மருவுதம்முருவமாற்றிமானுடவுருவுதாங்கி
எரியழற்கடவுடோன்றுமில்வயிற்போந்தமாதோ. (7)

விதிமுறைசாதகன்மம்வேதியன்சிறுவற்காற்றிப்
பதினொன்றாநாளிலின்பபதியெனப்பேருஞ்சாத்தி
மதுமடைதிறந்துபாயும்வண்டுழாய்முகுந்தனோடுந்
தலைதமலர்க்கமலப்புத்தேடன்னகர்க்கேகினானே. (8)

தேசினிலுருவிலீசனையவிச்சிறுவற்பெற்ற
மாசறுகடவுட்கற்பின்மடந்தையைமறைவல்லானை
ஆசிகள்கூறியீசனன்பினர்க்கரியதுண்டே
பேசிலென்றியாருந்தத்தம்பெரும்பதியடைந்தார்மன்னோ. (9)

சிறுவனுங்குறையுநாளிற்றிங்களோர்நான்கிற்செய்ய
மறுகிடைமிதிப்பித்தாறுமதிதனினலவாய்ச்செய்யா
அறையுமோராண்டில்வாய்ந்தமயிர்வினைமுடித்தாண்டைந்தின்
முறையின்முப்புரிநூலிட்டுமுதுமறைபயிற்றுவித்தார். (10)

அறிவுடைக்குரவன்சான்றாய்விஞ்சைகளனைத்துமுற்றி
மறையினுக்கொருவனென்னவான்புகழுலகம்போர்ப்ப
உறைதருநாளிற்றெய்வமகதியாழிசையினோங்கும்
நறைமலர்ப்புத்தேளீன்றநாரதமுனிவன்போந்தான். (11)

ஆயுமியாழ்முனியைப்போற்றியளவளாய்முகமன்கூறி
மேயநல்லிருக்கைநல்கும்விச்சுவாநரனைநோக்கி
மாயிருஞாலம்போற்றுமகவினைப்பயந்தாய்நின்போல்
எயினரியாரேசீர்த்திமகப்பெறார்க்கின்பமியாதே. (12)

தந்தைதாய்பணித்தல்செய்யுந்தவமலாற்றவம்வேறில்லை
மைந்தருக்கெதிகளேனும்வணங்குவர்தாயைத்தந்தை
அந்தமைந்தனையேபோற்றல்வேண்டுமற்றாதறன்றாற்
சிந்தையுற்றுணரிற்றாயேதந்தையிற்சிறந்தாண்மன்றே. (13)

எத்திருவுடையரேனுமின்கனிமழலைச்செவ்வாய்ப்
புத்திரனிலாதோரென்றும்பொறியிலராயவாற்றான்
மெய்த்தவம்புரிந்துமைந்தர்ப்பெறுவதேவிழைவர்யாரும்
உய்த்தநன்மகவுமோரேழ்பான்மையாயுரைப்பர்மேலோர். (14)

மனைவிதன்கொழுநற்கீன்றோன்மற்றவனருளினாலே
அனையவளயலாற்கீன்றோனரும்பொருள்கொடுத்துக் கொண்டோன்
இனிதுறுதெத்தமைந்தன்மகவெனப்புகுந்தமைந்தன்
தனையேசெய்தன்னாலாவியுய்த்தவன்றனையராவார். (15)

ஈங்கிவர்முறையிற்றாழ்வரெனவெடுத்தியம்பிச்செய்ய
பூங்கழற்குமரன்றன்னைவருகெனப்புகன்றுநோக்கி
ஆங்கவனிலக்கணங்களியாவையுமறைவலென்னாத்
தூங்கிசைமகதிவீணைநாரதன்சொல்லலுற்றான். (16)

கடிகொள்குங்குமச்சேறாட்டுநூலினாற்காமனன்னான்
அடிமுதன்முடியீறாகநான்முறையளந்துநோக்கி
நெடுமையுங்குறுக்குநூற்றெட்டங்குலமாகினீர்சூழ்
படிமுழுதலகங்காக்கும்பார்த்திபனாவனன்றோன். (17)

ஐந்துநீண்டைந்துநேர்ந்துவாறிடமுயர்ந்தேதழ்சேர்ந்து
முந்துமூன்றகன்றுமூன்றுகுறுகிமூன்றாழ்ந்திருக்கும்
அந்தமில்குணங்கள்முப்பானிரண்டொடுமமர்ந்தமாந்தர்
இந்திரதிருவினோங்கியினிதுவீற்றிருப்பர்மாதோ. (18)

நீண்டிடுமைந்துகண்கைகதுப்புநீண்முழந்தாண்மூக்கு
மாண்டுநேர்ந்திருக்குமைந்துமயிர்விரலுகிர்தோல்வெண்பல்
ஈண்டுயராறுநெற்றிதோள்வயிறிருகைமூலம்
பூண்டுயில்கொள்ளுமார்பம்பொற்புடைப்புறங்கையாமால். (19)

ஏழிடஞ்சிவத்தலங்கையிணையடிகடைக்கணண்ணாங்
கீழிதழிதழ்நாக்காகுங்கிளத்தியவகலமூன்று
தாழ்மருங்ககலநெற்றிகுறுகுமூன்றிடங்கள்சாற்றிற்
சூழ்கபோலம்முழந்தாள்கீழதாண்குறியுஞ்சொல்லும். (20)

மூன்றிடமாழ்தலுந்திமொழியுடனாற்றலின்ன
ஆன்றவிச்சிறுவன்றன்பாலமர்ந்தனவன்றியேயுன்
தோன்றான்மேன்மையாகத்தோன்றலாலங்கைவண்மை
என்றியல்பாதலான்மற்றிவனிறையாகுமன்றே. (21)

சிறவிரறன்னினின்றுதற்சனியளவுந்தீரா
உறுவரைகிடந்தவாற்றாலொழிவறுமாயுளெய்தும்
நறுமலர்த்தாள்களொத்துத்தசைந்துவேர்வெழாதுநன்காய்
உறுபரடொத்தவாற்றாலுலப்பறுதிருவனாவான். (22)

அங்கையில்வரைகளற்பமாகியுஞ்சிவந்துமேய
சங்கொடுகுலிசநேமிதநுவொளிர்மகரம்போல
இங்கிவன்றன்பால்வாய்ந்தவிலக்கணங்கிடக்கைதன்னாற்
பொங்குயர்வெறுக்கையெய்திப்புரந்தரன்போல்வனன்றே. (23)

நெற்றியிலைந்துகீற்றுநிலவலால்வலமதாகச்
சுற்றியோர்தாரையாய்நீர்வீழ்தலாற்றுணைப்பொற்றாளின்
உற்றுமேனோக்கிரேகைகிடத்தலாலொழுகுதாது
பொற்புறுகமலவாசம்போன்மெனக்கமழ்ந்தவாற்றால். (24)

கைவிரனீக்கமின்றியிருத்தலாற்கண்கடேன்போற்
செவ்விவாய்ந்திருக்குமாற்றாற்சிங்கத்தின்வயிறுபோல
அவ்வயிறமைதறன்னாலாயுளுந்திருவுமல்கி
எவ்வெலாத்திசையும்போற்றவின்பமுற்றிருப்பன்மாதோ. (25)

இலக்கணமுடையனாகுமீங்கிவன்பன்னீராண்டின்
அலக்கணுற்றாவிசோரவசனியேறதிர்ந்துவீழும்
விலக்குவதுண்டேனீவிர்விலக்குகவென்றுகூறி
நலத்தகுமகதிவீணைநாரதன்போயினானே. (26)

நாரதன்மொழிந்ததெண்ணிநவையறுபன்னியோடுஞ்
சீர்கெழுமறைவலாளன்றேசழிந்தாவிசோர
வார்பனிநெடுங்கண்போர்ப்பமற்றினியென்செய்வேமென்
றேர்கெழுகுமரற்புல்லியிடைவிடாதரற்றுகின்றான். (27)

ஆற்றருந்தவங்களியாவுமாற்றியுமளப்பில்காலம்
நோற்றுநற்றானமெய்திநுவலருமறையால்விண்ணோர்ப்
போற்றியுந்தமியேனிந்தப்புதல்வனைப்பயந்ததெல்லாங்
கூற்றினுக்குணவாய்வாளாகொடுப்பவோவென்றுநைந்தான். (28)

பொறியிலாக்கொடியேற்கென்னோபுதல்வனையளித்தாயெந்தை
அறநெறிதிறம்புகின்றேற்கருமகவிருக்குங்கொல்லோ
மறுகுபுன்னரகினின்றுமற்றினியெடுப்பாரியாரென்
றுறுதுயர்க்கடலின்வீழ்ந்துகரைபெறாதுழல்கின்றானே. (29)

மாலயன்முதலோருய்யமறிகடலகட்டிற்றோன்றும்
ஆலமுண்டிருண்டகண்டத்தமலவென்றுரைப்போர்தம்பாற்
காலன்வந்தணுகான்காலகாலனீயளித்தவிந்தப்
பாலனையளித்தல்வேண்டுமென்றுயிர்பதைத்துச்சோர்ந்தார். (30)

தந்தைதாய்வருத்தநோக்கித்தளர்ந்திடனீவிர்முக்கண்
எந்தைசீரடியார்தம்பாலெய்திடவெரிகட்பேழ்வாய்
வெந்திறற்கூற்றுமஞ்சுமசனியோவீழுமெண்டோள்
அந்தணன்மலர்த்தாள்போற்றியாங்கதுதடுப்பனென்றான். (31)

ஆங்கதுகேட்டலோடுமையநன்குரைத்தாய்தண்ணந்
தீங்கதிர்க்குழவித்திங்கட்கண்ணியன்செய்திகேட்டி
பூங்கழல்வழுத்திநின்றபாலற்காய்ப்புகைகுலாய
ஓங்கழற்றாட்கூற்றையுதைத்துயிரளித்தானன்றே. (32)

ஆசறுசுவேதகேதுவாருயிருய்யக்கூற்றின்
பாசமதொழியக்காத்தான்சிலாதன்மெய்ப்பாலனாவி
நாசமதுறுமற்பற்றுநமனையாங்கடர்த்தான்விண்ணோர்
வாசவனாவியுய்யமறிகடனஞ்சமுண்டான். (33)

நிலந்தலைமயங்காவண்ணநெறியலாநெறிமேற்கொண்ட
சலந்தரனாவியுண்ணத்தாளினானேமியுய்த்தான்
அலந்தலைவிளைக்கும்வெய்யவந்தகாசுரன்றன்வாணாள்
உலந்திடவளப்பில்காலம்வெயிலிடையுலர்த்தினானே. (34)

வடவரைவில்லதாகவாசுகிநாணினேற்றிக்
கடனிறவண்ணனம்பாக்கதழெரிநுதியதாக
அடையலர்புரந்தீமூட்டுமழனிறக்கடவுட்போற்றி
இடிவரல்விலக்குகென்னவேத்தினன்விடைகொண்டானே. (35)

களங்கனியனையமேனிக்கண்ணனுங்கமலத்தேவும்
அளந்தறிவரியதாகுங்காசியிலடைந்துபின்னர்த்
துளங்குநீர்க்கங்கைமூழ்கித்தூமதிக்கண்ணியானை
உளங்கனிந்துருகப்போற்றியுவப்பொடும்வழிபட்டானே. (36)

முத்திவான்றருவிலின்பமுதிர்ந்தநன்கனியோதூய
சித்திநன்முளையோமுத்தித்திருமகளேந்துபந்தோ
மெய்த்தவரிதயநீங்காவெறுவெளிச்சுடரதேயோ
இத்தலையெய்தியார்க்குமருள்புரியிலிங்கமாதோ. (37)

இன்னிசைக்கிழவன்முன்னரியம்பியநெறியாலீசன்
பொன்னடிபரவப்பெற்றேனென்றுளமுவகைபூப்பத்
தன்னுடைப்பெயராலாங்கோரிலிங்கந்தாபித்தியார்க்கும்
முன்னரும்விரதமொன்றுமுறைபிறழாதுநோற்றான். (38)

குடங்கணூற்றெட்டிற்கங்கைக்குளிர்புனலேந்தியன்பி
னுடன்றினந்தோறுந்தெய்வவுருத்திரசமகத்தாட்டித்
தடந்திகழ்குவளையோராயிரத்திருநான்குசாத்தி
அடங்கலர்புரந்தீயூட்டுமண்ணலைவழிபட்டானே. (39)

மென்பழுஞறுதிங்கள்வீழ்சருகாறுதிங்கள்
இன்புனலாறுதிங்களெறிவளியாறுதிங்கள்
அன்புடனருந்தியீராண்டருந்தவமிழைத்தபின்னர்
மின்பயிலசனியேறுவீழுநாளடைந்ததன்றே (40)

அவ்வழிச்சிறுவன்முன்னாகவிருவிசும்புகாக்குந்
தெவ்வடுவயிரவொள்வாட்புரந்தான்வந்துசேர்ந்து
வெவ்வினையறநீயாற்றுந்தவத்தினைவியந்தேன்மைந்த
எவ்வரங்கேட்டியேனுந்தருகுவனியம்புகென்றான். (41)

மணிநிறவண்ணன்செங்கேழ்மலரயன்முதலினோரை
அணுவளவேனுமுள்ளத்துணர்கிலேமமலனன்பர்
துணிவுறினவர்கட்கெய்தாப்பொருளைவைசொல்லினன்னோர்
பணிதலைக்கொள்ளுநீயோவளிக்குவைபகர்தியென்றான். (42)

அந்தணன்சிறுவன்கூறக்கேட்டலுமழலுநெஞ்சத்
திந்திரன்சினமீக்கூரவென்னினும்வலியன்கொல்லோ
சந்திரமௌலிபேதைமதியினைத்தவிர்திதாழா
துய்ந்திடவரங்கள்கேட்டியெனவவனுரைக்கலுற்றான். (43)

நள்ளிருட்கங்குற்போதிலகலிகைநலனுண்டேகுங்
கள்வநின்வெளிற்றுநெஞ்சம்கற்றறவைகழறவேண்டாம்
அள்ளிலைச்சூலமேந்தியிடத்தலால்வரங்களம்ம
கொள்வனோபிறந்துஞ்செத்துங்குலவியவமரர்தம்பால். (44)

என்னலுங்கனன்றுசீறியிருவிசும்பளிக்குமேலோன்
மின்னகுவயிரவொள்வாளுருமுகவிதிர்த்தலோடும்
அன்னதுநோக்கிமைந்தனயர்தலுமமலன்றோன்றித்
தன்னமர்கையான்மேனிதைவந்துதளரலென்றான். (45)

அயிலெயிற்றரவமார்த்தே தானங்கையினீவப்பெற்றுத்
துயிலுணர்ந்தெழுந்தான்போலவெழுந்துறு துயரநீங்கி
முயலுறுதிங்கட்கண்ணி முதல்வனைக்கண்ணிற்காணான்
மயிருடல்பொடிப்பக்கண்ணீர்வார்தரமகிழ்ச்சிகூர்ந்தான். (46)

திருநகைசிறியகோட்டிச்சிறுவன்வாண்முகத்தைநோக்கி
வெருவினைபோலுமற்றுனுளத்தினைத்தெரியவேண்டி
உருமுவீழ்குலிசமேந்தியுற்றவனியானேபாரில்
இருவிசும்பினிலென்னன்பர்க்கியாரிடரியற்றுவாரே. (47)

இந்திரன்பதிக்கும்வெய்யயமனுறைபதிக்குநாப்பண்
வெந்தழற்கடவுளாகியினிதுவீற்றிருத்தியென்னச்
சுந்தரப்பைம்பொன்மௌலிவிண்ணவர்வணங்கச்சூட்டித்
தந்தைதாயோடுமாங்குச்சார்கெனவருளினானே. (48)

இங்குநீயமைத்துப்போற்றுமிலிங்கமெஞ்ஞான்றும்வெய்ய
பொங்கழற்கடவுளென்னுநாமத்திற்பொலிவதாக
அங்கதுவழுத்தினோர்மேலசனிவீழாதென்றோதி
மங்கையோர்பாகன்றூயவிலிங்கத்தின்மறைந்திட்டானே. (49)

ஆரழற்கடவுடன்மையீதெனவறிதியின்னுஞ்
சீர்பெறவறியற்பாலதெரித்துநீகேட்டியென்னாக்
காருறழ்மேனியான்றன்கணமெடுத்தியம்பலோடும்
பார்புகழ்சிவசன்மாவும்பரிவொடும்பகர்தலுற்றான். (50)

**பதினொன்றாவது சிவசன்மா அக்கினியுலகங்கண்ட**
**அத்தியாயம் முற்றிற்று.**

---

**ஆகத்திருவிருத்தம்—435.**

பன்னிரண்டாவது

# சிவசன்மா நிருதியுலகமும் வருணனுலகமும் கண்ட அத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

எரியின் றன்மையியம்பினிரீங்கினி
நிருதி தன்மைநிகழ்த்திடவேண்டுமென்
றரியநான்மறையந்தணன்கூறலுங்
கரியமாயன்கணங்களியம்புமால். (1)

இழிகுலத்தினியைந்துமறநெறி
வழுவலின்றிமறைநிறம்பாதுயர்
தொழுகுலத்தவர்தாண்மலர்சூடுவோர்
விழையுமிவ்வுலகத்திடைமேவுவார். (2)

அரக்கரென்பதையல்லதுமற்றவர்
இரக்கந்தம்முயிரென்னவுயிரெலாம்
புரக்குந்தன்மைபொறைநிறைவாய்மையால்
உரைக்கும்வானவர்தம்மினுயர்ந்துளார். (3)

நண்ணுமித்திசைநாளும்புரந்தருள்
அண்ணல்செய்தியறைகுவங்கேட்டியால்
விண்ணினேங்குயர்விந்தப்பொருப்பயல்
எண்ணில்வேடரிருக்கையொன்றுண்டரோ. (4)

இங்குமேவியவேடர்க்கிறைவனும்
பிங்கலாக்கனருமறைதப்பேரியாற்
றங்கரைக்கணிருந்ததரேகுநர்
தங்களுக்கிடர்தீர்க்குந்தகைமையோன். (5)

கடவுட்கங்கைசூழ்காசியினேகுநர்க்
கடிசில்வைகுமிருக்கையரும்பொருள்
குடைசெருப்புக்கொடுத்துத்தன்பெயர்சொலின்
இடைதடுக்குநரில்லெனவேவுவான். (6)

கலலென்சும்மைத்திரைபொருகங்கையிற்
செல்லுமன்பர்க்கிடுக்கண்செயுமென
வல்லியங்கண்முதலியமாக்களைக்
கொல்வதன்றிமற்றியாவுங்குறைத்திடான். (7)

ஆறலைக்குநராலரனன்பருக்
கீறிலாமலினிதினளிக்குநாள்
மாறுகொண்டொருவேடன்வழிச்செல்வோர்க்
கூறுசெய்யவொளித்தயல்வைகினான். (8)

அன்னகானிடையாரிருட்போதினில்
துன்னும்வெய்யபுலிதொடர்ந்தேகலுந்
தன்னெடும்படைநீங்கத்தமியனாய்ப்
பொன்னிறக்கட்புளினனும்வைகினான். (9)

அருநெறிக்கட்கரந்தமர்வேட்டுவர்
பொருவில்காசியிற்போகின்றவன்பரை
உருமெனச்சென்றூரறிமற்றாங்கவர்
வெருவயாவும்பறித்திடும்வேலையின். (10)

மங்கைபாகன்மலரடிகைதொழ
இங்குயாங்கள்புகுந்தனமித்தலைத்
துங்கவேடர்தொடர்ந்தனரென்செய்கோம்
பிங்கலாக்கவெனப்பெயரோதினார். (11)

வெஞ்சினப்புலிவேட்டத்தின்மேவிய
செஞ்சிலைப்பிங்கலாக்கன்செவியிடைத்
தஞ்சமில்லவர்சாற்றொலியேற்றலும்
அஞ்சலஞ்சலென்றாங்குவந்தெய்தினான். (12)

வெங்கணோக்கினன்வீக்கியகச்சினன்
சிங்கவேற்றினெழுமடிச்சீற்றத்தன்
கங்கைசூடிதனன்பரைக்காய்ந்தநீர்
எங்குமேவுதிரென்றெதிர்ந்தானரோ. (13)

ஈறிலாமலியானிங்கிருக்கவும்
நீறுபூசிதனன்பரைநீவிரோ
ஊறுசெய்குவிரென்றுரையாடினன்
மாறடர்த்தவரிவிற்றடக்கையான். (14)

வரிவினாணொலிகேட்டிகல்வஞ்சகர்
வெருவியோடலும்வேதியரியாரையும்
புரியினுய்த்துவெம்போர்க்கறைகூவிமேல்
திருகுவேடன்முன்சென்றெதிர்ந்தானரோ. (15)

சிறக்குநங்குலச்செய்தியொழிந்திவன்
மறக்குலக்குவழுவெனத்தோன்றினன்
ஒறுத்துமியாமெனவொக்கலைக்கூவினன்
வெறித்தகுஞ்சியன்வெள்ளியங்கண்ணினன். (16)

ஆங்கவன்றனிகூவிநின்றார்த்துடன்
வீங்குதோளினர்வில்லினர்வாளினர்
பாங்கரிற்பிங்கலாக்கனைப்பற்றுபு
வாங்குதெண்டிரைபோல்வளைந்தாரரோ. (17)

முற்றுசேனைமுடியுமென்றன்புடன்
செற்றமின்றியெதிர்ந்துசெருச்செயும்
அற்றநோக்கிக்கவசம்வில்வார்கணை
துற்றுமாவமிவைதுணித்தாரரோ. (18)

வில்லும்வாளியுமின்றிவெறுங்கையான்
மல்லவேறனையானனிவாய்மடித்
தொல்லைமுன்சென்றமரினுழக்கலுங்
கொல்சினத்தகாரரக்கன்குறைத்திட்டான். (19)

கரியகந்தரக்கண்ணுதல்வானவன்
உரியவன்பர்க்குதவிபுரிந்துவெஞ்
செருவிலாருயிர்நீத்திடுஞ்செய்தியால்
நிருதியாயினனென்னநிகழ்த்தினார். (20)

நிருதிசெய்திநிகழ்த்தினிர்நீதிசால்
வருணன்செய்திவகுத்துரைப்பீரெனச்
சுருதிநூற்றுறைபோயவன்கேட்டலும்
பொருவின்மாயன்கணங்கள்புகலுமால். (21)

முன்னைநான்மறையாளர்க்குமுத்தமிழ்
கன்னலோடுங்கழனியளித்துளோர்
தன்னுதீர்த்தத்துறைபடிகட்டினோர்
மன்னுவெஞ்சிறைவல்லிவிடுத்துளோர். (22)

முறையினீட்டுபொருள்கொடுமொய்ம்மலர்த்
துறைகொள்வாவிகுளம்பலதொட்டவர்
நெறியிற்சாலைதண்ணீர்ப்பந்தல்வைத்துளோர்
உறைவராலிவ்வருணனுலகினே. (23)

உருத்திரற்றொழுதியோகினுறங்குமோர்
கருத்தனம்பிரசாபதிகண்ணென
அருத்திசேர்மகவாயசுசிட்டுமான்
விரித்ததெண்டிரைநீர்த்துறைமேவினான். (24)

உறுதவத்துமுனிவருயிர்நிகர்
சிறுவரோடுமச்சோதத்திற்சேர்ந்துயர்
சறியதீம்புனலாடலுநண்ணியோர்
கறுவுசிற்றக்காரங்கவர்ந்தேகிற்றால். (25)

முதலையொன்றுயிர்வெளவமுனிவனின்
மதலைவீந்தனனென்றுமறையவர்
புதல்வர்வந்துபுகலவுங்கேட்டிலான்
இதயமீசன்பதத்திலிருத்தலால். (26

அண்டகோடிகளியாவுமானுழைக்
கண்டுயோகங்களிந்துறையந்தனன்
மண்டுதீம்புனலோடுதன்மைந்தனைத்
திண்டிறற்காம்பற்றுபுசேறலும். (27)

முழங்குதண்புனற்றேவிமுதுக்கரா
விழுங்குமைந்தனைவெய்யகராவொடுந்
தழங்குவாரியினுய்ப்பத்தழலெனப்
புழுங்கியோர்கணநாதன்பொருவிலான். (28)

தெண்டிரைக்கடற்செல்வனைநோக்கிநீ
அண்டர்நாயகனன்பன்புதல்வனைக்
கொண்டுவந்தவென்றவனெனக்கூறலும்
மண்டுதெண்டிரையுள்ளமறுகியே. (29)

மறுவில்செங்கதிர்மாமணியாவையுஞ்
சிறுவன்மேனியிற்சேர்த்திமுதலையோ
டெறிதிரைக்கடலெய்தியதன்மையாங்
கறிவிஞேக்கினனம்பொறிசெற்றுளான். (30)

இன்னநோக்கிமுனிவனிருத்தலும்
பன்னுநான்மறைப்பாலனையார்கலி
அன்னவெய்யகராத்தொடுமாதிதன்
முன்னருய்த்துவணங்கிமொழியுமால். (31)

ஆதிநாதவடியன்பிழைத்திலன்
காதிவெய்யகராங்கவர்பாலனைச்
சீதவான்புனற்றேவியென்பாலுய்த்தாண்
மாதவர்க்கிம்மகவையளித்தியால். (32)

அண்ணனின்னுடையன்பன்புதல்வனென்
றெண்ணியோர்கணநாதனிசைத்திட
உண்ணடுங்கியிங்குய்த்தனனென்னத்
தண்ணந்தாமரைத்தாள்பணிந்தேகிற்றே. (33)

கள்ளயர்வுயிர்க்குங்கமழ்கொன்றையோன்
தெள்ளுகான்மறையோய்நின்சிறுவனைக்
கொள்கவென்னவவனுங்குறிக்கொளா
உள்ளமின்புற்றியோகமொழிந்திட்டான். (34)

சேந்தகண்ணுஞ்செழுமணிமார்பமுந்
தோய்ந்தகுஞ்சியுஞ்சோர்வுறுமுள்ளமுங்
காய்ந்தவெங்கட்காரங்கவர்கையுமாய்
ஏய்ந்தமைந்தனைநோக்கினனின்புற்றான். (35)

அன்பினோடுமடிதொழுமைந்தனை
இன்பமெய்தத்தழீஇயவிருந்தவன்
தன்பெருந்தவநோக்கித்தனையனும்
மன்பெருந்தவமாற்றன்மனக்கொண்டான். (36)

தந்தைநல்லருள்பூண்டுதழல்விழி
எந்தைமேவியகாசியிலெய்தித்தன்
சிந்தைகூரச்சிவலிங்கமொன்றமைத்
தந்தமில்லதோர்மாதவமாற்றினான். (37)

ஆற்றுநற்றவநோக்கியகமகிழ்ந்
தேற்றினேறுமிறைவன்மதலைமுன்
தோற்றிவேட்டனகேளெனச்சொற்றலும்
போற்றிநெஞ்சங்குழையப்புகல்வனால். (38)

தளிநறாவுமிழ்கொன்றையந்தாரினோய்
நளிபுனற்கிறையாம்வரநல்குதி
அளியனுக்கெனத்தாழ்ந்தடிபோற்றினான்
வெளிறெறிந்தவிரிதருகேள்வியான். (39)

கருணைவெண்பிறைக்கண்ணியன்றாவருங்
கருணையோடுகடற்கிறையாகநல்
அருணையந்திட்டமார்குழாந்தொழ
வருணனென்றுமணிமுடிசூட்டினான். (40)

சீர்கொண்மைந்தநீபோற்றுசிவலிங்கப்
பேருநின்பெயராகப்பெருந்தவத்
தார்வமோடுமருச்சனைசெய்துளோர்
நீரினெய்துநோயாவையுநீங்குவார். (41)

என்றுகூறியிறைவன்மறைதலுந்
தன்றுணைப்பெருஞ்சுற்றமுந்தானுமாய்
மன்றநாளும்வருணபதத்தினில்
ஒன்றியின்புற்றுவந்திருந்தானரோ. (42)

பன்னிரண்டாவது சிவசன்மா நிருதியுலகமும் வருண னுலகமுங்கண்ட அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்–477.

பதின்மூன்றாவது

## சிவசன்மா வாயுவினுலகமும் குபேரனுலகமுங் கண்ட அத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

என்னநெடுமால்கணமுரைப்பவினியபொருடேர்மறைக்கிழவன்
மன்னுகாற்றின்வரன்முறையும்வழுவாதுரைத்திரெனவோடும்
பொன்னங்கமலத்தயனோடும்புவனம்பூத்தோனருளடியார்
பன்னுமறையின்பொருடேர்ந்தமுனிவனோடும்பகாலுற்றார். (1)

ஈதுவளர்காற்றிறைவனகரின்னேன்காமக்குறும்பெறிந்த
நீதிறவத்துக்காசிபன்றன்சிறுவன்காசிநகரடைந்து
பாதிமதிவேணியனிருதாள்பத்துநூறுயிரமாண்டு
காதலோடுமினிதேத்திக்கருதற்கரியதவம்புரிந்தான். (2)

ஆற்றுந்தவத்தாலவனமைத்தவிலிங்கமதனிலமலனன்பால்
தோற்றியுனதுதவமகிழ்ந்தோம்விழைந்ததியாதுசொல்லுகெனப்
போற்றுமறைதேர்காசிபன்றன்புதல்வனுவகைமீதூர
ஏற்றுக்கொடியோன்பாதமலரிறைஞ்சியேத்தத்தொடங்கினனால். (3)

தண்ணங்கமலைகேள்வனுக்குந்தனிநான்முகற்கும்புரந்தரற்கும்
நண்ணற்கியைந்தபதங்கொடுக்குநளிமாமதிச்செஞ்சடையினோய்
எண்ணற்கரியமறைநான்குமிதுவன்றிதுவன்றென்பதல்லாற்
கண்ணற்கரியாயென்போல்வாரெவ்வாறுன்னைக்கருதுவதே. (4)

துதியுந்துதிக்கப்படுவோனுந்துதிக்குமவனுமுலகீன்ற
விதியும்விதியையளிப்போனுமிவர்களறியாவிழுப்பொருளாம்
பதியுமாகியெவ்வுயிர்க்குமுயிராயவற்றிற்பற்றில்லா
முதல்வநின்னையுணர்ந்தெவ்வாறெளியேனேத்தமுயல்வதுவே. (5)

நீருஞ்சுலவியெறிவளியுநெருப்பும்புனைதந்தநெடுவானும்
பாரும்விந்துநாதமுதலெவையுமொருங்குபடைத்திடுமுன்
பேரும்வடிவுமில்லாதபெம்மானின்னைத்தனிதுறந்தோர்
யாருமறியாநின்சீர்த்தியானோநாவாற்பழிச்சுவனே. (6)

அருவமாகிச்சலமின்றியொன்றாயுறையுமமைதிதனின்
மருவுமிச்சையுயரிச்சாசத்தியாகமறைப்பொருளாம்
ஒருவாநீரேசத்திசிவமென்னவிரண்டாயுறைந்தீர்நும்
பொருவிலுருவஞானமிச்சைசத்தியுருவிற்பொருந்தியதால். (7)

சத்திசிவமாநுமதிடத்திற்கிரியாசத்தியுதித்ததற்பின்
மொய்த்தவலகில்புவனமெல்லாமுறையினுதித்தஞானசத்தி
பெத்தமறுநல்லுருவநீர்கிரியாசத்தியுருப்பிறையை
வைத்தமௌலிப்பரைகிரியாசத்தியுருவாம்வளருலகம். (8)

ஆயவாற்றாலனைத்தினுக்குமையநீயேகாரணமாந்
தூயமலரோனின்வலப்பாற்றுளவநெடுமாலிடப்புறனுங்
காயுமெரிசெங்கதிர்மதியங்கண்மூன்றாகுநினதுயிர்ப்பு
மேயமறையாந்திரைபுரட்டும்விரிநீர்க்கடனின்வெயர்வாமால். (9)

இறைவனினதுசெவிவழியாந்திசையீரைந்தினதுகரம்
மறுவின்மறையோர்களினதுமுகமற்றன்றடந்தோள்வாள்வேந்தர்
செறியுந்திசைக்கள்விரித்தசைத்தகுறங்குவணிகர்தேவர்முடி
அறையுங்கழல்கள்சூழ்கிடந்தவம்பொற்சரணம்பின்னவரே. (10)

பெண்ணுமாணுமெனவுறைந்திவ்வுலகமுழுதும்பெற்றாய்நீ
தண்ணந்துளவத்தாரோனுந்தண்டாமரையினுறைவோனும்
எண்ணவரியபரம்பொருணீயென்றாவேத்தியெனக்குவரம்
அண்ணனின்மேலன்பென்றுமழியாதிருத்தலெனத்தொழுதான். 11

தொழுதசிறுவன்முகநோக்கிச்சூழ்ந்துதுதைந்துதாதாடிக்
கொழுதியினவண்டிசைபயிலுங்கொன்றைவேணியருட்பரமன்
விழையுமுயிர்களனைத்தினுக்குமுயிராயுலவைவேந்தனெனத்
தழையுமோசைதிசைபோர்ப்பவடமேற்றிசையிற்சார்குதியால். (12)

ஆர்வமோடுநீயினிதினமைத்தவிலிங்கம்பவனனும்
பேரதாகவதுபணிந்தோர்நமதுபதியிற்பிரியாது
சார்கவென்னவரமுதவித்தாளங்கொழிக்கக்கழைகுனிக்கும்
மாரற்காய்ந்தோனருளொடுமவ்விலிங்கநாப்பண்மறைந்தனனால். (13)

என்றுகாற்றுக்கிறைசெய்தியாவுமுரைப்பவினிதுவந்து
கன்றுசினவெங்குறும்பெறிந்துமறைநூற்கடலின்கரைகடந்த
வென்றிமுனிவனிதிக்கிழவன்செய்தியனைத்தும்விளம்புகென
மன்றல்கமழுந்துழாயலங்கனெடுமாலடியார்வகுத்துரைப்பார். (14)

குடக்காய்த்தெங்கின்பழமுதிரக்குதிக்குங்கயவாய்நெடுவாளை
மடற்பூங்கமுகின்மிடறொடிக்குமல்லல்வளங்கூர்காம்பிலியிற்
கடற்பாரனைத்துமிசைபோக்கிக்காமமுதலமுக்குறும்பின்
தொடர்ப்பாடறுத்தவேள்வித்தனென்னவுளனோர்தொன்மறை
யோன். (15)

அன்னமறையோன்பலகாலுமாற்றுந்தவத்தாலருளொடுமோர்
கன்னற்குதலைமகவீன்றானவன்பேர்காமர்குணநிதியாம்

றன்னூற்கருமமுடித்ததற்பின்மதியின்வளர்ந்துமுதுக்குறைவாற்
பன்னுமறையின்பரப்பனைத்துங்கடந்தான்பனுவலினிதுணர்ந்தான். (16)

இனையகாலையூழ்த்துரப்பவுள்ளம்வேறாயெழிற்புதல்வன்
மனையினீட்டும்பொருளனைத்துங்கவர்ந்துகொடுபோய்மதிமருட்டும்
வினையம்வல்லார்பொருசூதின்வாளாவழங்கிமேவரிய
தனதுதொல்லைமறைநெறியுந்திறம்பினானுந்தவறிழைத்தான். (17)

தாதைமகனியாண்டுளனென்றுகேட்குந்தோறுந்தாய்வெருவி
ஓதற்ககன்றானெனச்சூதுமறைத்துமொழியவுணர்கிலனாய்த்
தீதிறவத்துவேள்விதத்தனென்னுஞ்செழுநான்மறைவல்லோன்
காதற்புதல்வற்கருங்கற்பிற்காமர்கன்னிமணமுடித்தான். (18)

### கலிநிலைத்துறை.

ஆயுமைந்தனைவருகெனவழைத்துநீயிழைக்குந்
தீயசெய்தியையுந்தையின்றுணர்ந்திடிற்செயிர்த்துக்
காயுமென்னொடுநின்னையுமென்பதுகருதி
மாயவெங்கவறாடுதன்மறைத்தியான்மொழிந்தேன். (19)

உந்தைசெய்தியுமொழுக்கமுமுணர்கிலையன்றி
மைந்தநங்குலக்கிழமையுமதிக்கிலைமறைதேர்
அந்தணாளர்தஞ்சிறுவர்நல்லொழுக்கமிங்கறிந்து
சிந்தைசெய்கிலையென்றுகண்கலுழ்ந்திவைசெப்பும். (20)

ஊற்றிருந்துவாட்டடங்கணீர்சோரநின்றுரைக்கும்
மாற்றங்கொள்கலாதாங்கவனுறைதலின்வஞ்சம்
வேற்றிவின்புறல்கள்ளுணல்வேட்டவெங்கவறு
போற்றல்செய்குநர்புணர்ப்பினையாவரேதடுப்பார். (21)

இன்னதன்மையினியைந்துளான்றனையினிதீன்ற
அன்னைகண்படுமமைதியிற்றந்தையாங்களித்த
மின்னுநன்மணிமெல்விரன்மோதிரங்கவர்ந்து
தன்னருங்கவறாடுநர்க்கதனையுந்தோற்றான். (22)

நினைவருந்தவமாற்றியங்கிரினான்மறையோன்
மனைவிகையிடைக்கொடுத்தனன்மணிவிரலாழி
இனிதணிந்துளானொருவனைமறுகிடையெதிராப்
புனையுமாழிமற்றெனதெனவாங்கவன்புகல்வான். (23)

பன்னற்கேள்வியோய்களவினிற்கொண்டிலன்பரிவால்
நென்னலென்றுகிற்சூதினிற்கவர்ந்துநின்பாலன்
மன்னுமோதிரமின்றுதோற்றனன்வனைகலன்கள்
பொன்னின்றூசிவைநாடொறும்பொருதுதோற்குவனால். (24)

தீதினற்றவமறைபயினின்னிளஞ்சேயைச்
சூதுவல்லவர்சிகாமணியெனப்பலர்சொல்வார்
ஈதறிந்திலைபோலுமென்றெதிர்ந்தவனுரைப்பக்
காதறீர்ந்துளம்வெள்கினன்கலைமறைக்கிழவன். (25)

நாணொடுந்தனதில்வயிற்போகினான்மறையோன்
வாணிலாநகைபுரிந்துதன்மனைவியைநோக்கி
எணில்சிந்தைநின்சிறுவனியாண்டேகினனென்னப்
பூணுலாமுலைநீர்த்துறைப்புகுந்தனனென்றாள். (26)

ஈதுநிற்கயானெண்ணெயாட்டயர்வுழியீந்த
தீதிலென்கையிற்சிறுவிரன்மோதிரந்தருகென்
றோதவுள்வெரீஇநண்பகலுறுகடன்கழிக்கப்
போதிர்துய்த்தபினாழிநல்குவனெனப்புகன்றாள். (27)

நெறியிகந்துதம்மரபினினீரலசெய்யும்
மறுவின்மைந்தரைப்பெறுதலின்மகப்பெறாதனாற்
றுறைதனன்றுமற்றொருவனாலுயர்குலமுழுதுஞ்
சிறுமையெய்திலாங்கவற்றுறந்துறுபழிதீர்ப்பார். (28)

என்னநூற்கடல்கடந்துளோருரைப்பதையெண்ணி
முன்னர்நின்றுபொய்மொழிந்திடுமுகின்முலைத்தவர்வாய்ப்
பன்னிதன்னொடுமகத்துறந்தந்தணன்பரிந்தோர்
பொன்னின்வார்முலைப்பூவையைக்கடிமணம்புரிந்தான். (29)

தந்தைநீத்தனன் றன்னொடுந் தாயினையென்று
அந்தமில்லதோர்வெந்துயர்க்கடலிடையாழ்ந்து
முந்துசெய்ததீத்தொழிலினைமுன்னிநெஞ்சழிந்து
சிந்தைசெய்தனன்செய்யுமாறென்னெனத்திகைத்தான் (30)

கற்றிலேமொருகலைகளுங்கைப்பொருளீட்டப்
பெற்றிலேமினியெங்கணுய்குவமெனப்பேதுற்
றற்றமில்பசிக்கனல்கொளுத்திடவயர்போழ்தின்
ஒற்றையாழியான்குடகடற்றிரையில்வீழ்ந்தொளித்தான். (31)

உற்றஞான்றுயர்சிவநிசியாதலினுவந்து
கற்றைவார்சடைக்கடவுளையருச்சனைபுரியும்
மற்றொர்வேதியன்பின்றொடர்ந்தாலயமருவி
அற்றநோக்கினனேற்றுமின்னமிழ்தெடுத்தயில்வான். (32)

முருந்துவாணகைபங்கனையருமறைமுதல்வன்
புரிந்துபூசனைகண்டுயில்பொருந்திலனாகி
வருந்திநோக்குபுவைகறையாமத்தினளவும்
இருந்துமற்றவன்றுயில்வதுகண்டனனெழுந்தான். (33)

ஆண்டெழுந்துபோயீசன்முன்னமிழ்தினையெடுப்பக்
காண்டல்செய்திலன்மழுங்கியகனைசுடர்விளக்கைத்
தூண்டல்செய்துவெண்சோற்றினையெடுத்தனன்விரைவின்
மீண்டபோழ்திலோர்வேதியன்காலிடைமிதித்தான். (34)

மிதித்தபோதிலவ்வேதியன்றுண்ணெனவிழித்து
மதித்திடாதிவண்வந்திடுகள்வன்யாரென்னக்
கொதித்தநெஞ்சினன்கூக்குரலெழுப்பலுங்காப்போர்
அதிர்த்துவந்துகைப்படுத்துமற்றவன்றலையறுத்தார். (35)

ஆக்கைநீத்திடுசிறுவனையந்தகன்றூதர்
வீக்கியேகலும்விடுமின்கள்விடுமின்களென்றுத்
தீக்கனன்றுமிழ்மூவிலைச்சூலவேறிரித்துக்
காக்குமாறொழுங்கண்ணுதற்கணங்கள்வந்தடைந்தார். (36)

நுதல்கிழித்தொளிர்விழியினன்கணங்களைநோக்கிப்
பதம்வழுத்திவெங்கூற்றுவன்றூதுவர்பகர்வார்
முதுகுலத்தொழுக்கிகந்துதாய்மொழிவதுமுனிந்து
மதிமருட்டிவெஞ்சூதினைவைகலுமிழைத்தோன். (37)

பஞ்சின்மெல்லடிப்பாவைதன்மனைவயிற்பதைப்ப
அஞ்செஞ்சீறடிக்கூத்தியரணிமுலைதோய்ந்த
வஞ்சனெந்தைநின்மாலியங்கவர்ந்தனனிவன்மற்
றஞ்சுபோவதற்கிழைத்ததெத்தவமெனவுரைத்தார். (38)

ஈதுகேட்டலுஞ்சிவநிசிதனிற்றுயிலின்றி
மாதுபாகனையன்பொடுவழிபடக்கண்டான்
சோதியஞ்சுடரொளியுறத்தூண்டினனவற்றால்
தீதொழிந்தனன்கலிங்கநாட்டிறைவனாய்ச்சேர்வான். (39)

என்றுகூறியசிவகணநாதரையிறைஞ்சிக்
கன்றுவெஞ்சினக்கூற்றுவன்றூதுவர்கயிற்றின்
ஒன்றவீக்கியசிறுவனையொல்லையின்விடுத்துத்
தென்றிசைக்கிறைநகர்வயிற்சென்றடைந்தனரால். (40)

நீர்க்குடக்கனிசுமந்துநீண்முடம்படுதெங்கின்
கார்க்குலந்துயில்கழனிசூழ்கலிங்கநாடளிக்கும்
ஆர்க்கும்வண்கழலருந்தமன்புதல்வனாகென்னப்
போர்க்கணிச்சியோனடியராங்குரைத்தனர்போனார். (41)

ஈசனன்பர்தமருளினாற்குணநிதியென்பான்
காசுகண்படுபுரிசைசூழ்கலிங்கர்கோன்மகவாய்
மாசிலாதநல்லோரையின்மகிழ்வுறத்தமனென்
றோசைபோகியபெயரொடுமுதித்தனனன்றே. (42)

முற்பவத்துறுதொடர்ச்சியின்முதுக்குறைவெய்திச்
சிற்பரன்றிருவாலயமெங்கணுந்தீபம்
அற்பினாலமைத்தளப்பருமறம்புரிந்தீசன்
பொற்பதத்தினில்வைகலும்பூசனைபுரிந்தான். (43)

இன்னநல்லறம்பற்பலநாளிருந்தியற்றிப்
பின்னர்மாய்தலும்பிஞ்ஞகனாலயந்தோறும்
மின்னுசெஞ்சுடரேற்றலாற்சுடர்மணிவிளக்கம்
மன்னுகோநகரளகைக்குமன்னவனானான். (44)

அளகைமாநகரீங்கிவன்முன்னினிதாண்ட
ஒளிறுவேலரசெவனெனமறையவனுரைப்பக்
களிறுகூப்பிடக்கருணைசெய்கடவுளைப்பரவும்
வெளிறெறிந்தநற்கேள்வியோரிவைவிளம்புவரால். (45)

விதியளித்திடும்புலத்தியனுதவுவிச்சிரவா
மதலையாகியவச்சிரவணனரன்மலர்த்தாள்
துதிசெய்தாங்கவனருளினாற்சுடர்மணியளகைப்
பதிபுரந்தனன்பதுமகற்பத்தினிற்பரிவால். (46)

கற்பமாங்கதுகழிந்தபின்கமலவீட்டுறைவோன்
அற்பினாலுயர்சராசரமனைத்தையுமளிப்பப்
பொற்செழுந்தருநீழல்வாழ்புரந்தரன்முதலோர்
உற்பவித்தலுமீங்கிவன்குபேரனாயுறைந்தான். (47)

முன்னமாலயத்தொண்சுடர்தூண்டலான்முறையே
இன்னசெல்வமுமளகையும்பெற்றனனென்னாப்
பொன்னந்தாதுகுகொன்றையான்காசியம்புரியின்
மன்னியாங்கொருசிவலிங்கமகிழ்வொடுமமைத்தான். (48)

மாசில்சித்தமாந்தகழியினன்புநெய்வாக்கி
ஈசனன்றிவேறில்லெனுந்திட்பநுண்டிரியில்
தேசுடைத்தனிஞானவொண்செழுஞ்சுடரேற்றி
ஆசில்கொள்கையோன்பற்பகல்யோகினிலடைந்தான். (49)

அன்னகாலையினாங்கவன்றவத்தினைவியந்து
முன்னமூவெயின்முருக்கியமுக்கணெம்பெருமான்
பொன்னவாஞ்சுணங்கரும்பியபுணர்முலையுமையாள்
தன்னொடுஞ்சுடர்ப்பிழம்பெனவவ்வுழிச்சார்ந்தான். (50)

அளகைகாவலவாற்றியவருந்தவமகிழ்ந்தேதம்
உளம்விழைந்தனவுரைத்தியாமுதவுவமென்னக்
களைகணாகியகருமிடற்றெந்தையாங்குரைப்பத்
துளிகண்போர்த்திடநோக்கரிதாயிவைசொல்வான். (51)

மாசிலாதவாளப்பிலரெழுந்தெனவயங்குந்
தேசுபூத்தநின்செழுமலர்ச்சேவடிகாணக்
கூசுகின்றனகண்ணிணைகூசிடாவண்ணம்
ஈசநல்குதியன்னதேவரமெனக்கென்றான். (52)

காக்குமாயனுங்கடிமலர்க்கமலநாயகனும்
வாக்கினாலுயர்மனத்தினாற்காணொணாவடிவம்
நோக்குமாறருள்புரிதலுநோக்கியப்பரனை
நீக்கமின்றிவாழன்னையைப்பார்த்திதுநினைவான். (53)

முன்னவன்றிருமேனியினுறைந்திடமுயன்ற
தென்னநற்றவமென்னினுமிவளெனநோனா
துன்னிநோக்கலுமொருவிழிமறைந்திடவிவன்யார்
துன்னுவஞ்சகனெனவுமையரனொடுஞ்சொன்னாள். (54)

மாதுநின்றவப்பெருமையைமதித்தனனல்லால்
யாதுசொற்றனன்முனியலையிவன்விழியருள்கென்
றாதிநாயகனறைதலுமம்பலத்தமர்ந்த
போதரிக்கணாளளித்தலும்பொற்கணானதுவே. (55)

இழந்ததன்விழிபெறுதலுமியக்கர்தம்பெருமான்
குழைந்தவெண்பிறைக்கண்ணியன்குரைகழல்வணங்கித்
தழைந்தவன்பினாற்பரையிருதாமரைச்சரணம்
விழைந்துபோற்றிநல்லுவகைமீதூர்ந்தெழத்தொழுதான். (56)

தொழுதவேந்தனைத்துணைமலர்க்கைகளாற்றைவந்
தெழுகவின்றுதொட்டென்னுயிர்த்தோழனீயென்னாப்
பழுதினல்வரமருளிநீபரவியவிலிங்கம்
விழையுநின்னுடைப்பெயரினால்விளங்குகவென்றான். (57)

இயக்கர்விஞ்சையர்குய்யகர்கின்னரரிறைஞ்சி
வியக்கநீணிதிக்குபேரனும்பெயரொடுமேவிப்
பயக்குநல்வளத்தளகையிற்பரிவின்வாழ்கென்ன
முயற்களங்கமின்மதிமுகத்துமையிவைமொழிந்தாள். (58)

வரமளித்தபின்வரிமிடற்றஞ்சிறையறுகால்
அரவவண்டிமிர்கொன்றையஞ்சடைமுடியண்ணல்
உருவமேகலையுமையொடுமறைதலுங்குபேரன்
பரிவின்வாழுமிவ்வளகையீதெனப்பகர்ந்தனரால். (59)

**பதின்மூன்றாவது சிவசன்மா வாயுவினுலகமும் குபேரனுலகமும் கண்ட அத்தியாயம் முற்றிற்று.**

ஆகத்திருவிருத்தம்—536

## பதினான்காவது
## சிவசன்மா ஈசானனுலகமுஞ் சந்திரனுலகமுங் கண்ட அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

உரைத்தவிந்நகரின்கீழ்பாலுலப்பறுசெல்வத்தோங்கித்
திருத்தகத்தோன்றுகின்றவுலகெதுசெப்புகென்ன
அருத்தியின்மறையோன்கூறவாய்பிழிமலர்மென்கூந்தன்
முருக்கிதழ்க்கமலைகேள்வனடியவர்மொழியலுற்றார். (1)

ஈண்டுமுன்றோன்றுகின்றதீசானலோகமீங்கு
மாண்டநற்றவத்தின்மிக்கோர்மழுவலான்றளிலன்பு
பூண்டுளோர்பயன்வெஃகாதுபொங்கழல்வேள்விசெய்வோர்
காண்டகுசிறப்பின்மிக்ககண்ணுதலுருவிற்சேர்வார். (2)

பகருமிவ்வுலகங்காக்குமவர்பதியொருவரன்றோர்
வகிர்மதிக்கண்ணியையந்தைதமருவியகாசிநண்ணி
நிகரிலீசானலிங்கநெறியினிலமைத்துப்போற்றிப்
புகரினற்றவங்களாற்றிப்பூசனைபுரிந்தாரன்றே. (3)

பூசனைமகிழ்ந்துதண்ணென்புனிற்றிளந்திங்கட்கண்ணி
ஈசனல்லருளாலன்றோர்க்கீறிலாவாயுளோடு
தேசுறுபரிதிகாணச்செழுஞ்சுடர்ப்பிழம்பாயோங்கு
மாசறுதனதுபெதால்லைமாணுருநல்கினனே. (4)

ஆறணிசடையுநீலகண்டமுமலங்குசோதி
நீறணிமெய்யுஞ்செய்யநெற்றியிற்கண்ணுந்தோன்ற
மாறடுமழுவுமானுந்தரித்துவண்கடுக்கைசூடி
ஏறுயர்த்தீசனென்னவீங்கினிதிருக்கின்றாரே. (5)

எனவருங்கணங்கள்கூறக்கேட்டனனேகுங்காலைப்
பனியிருவிசும்பினூடுபகலிடைநிலவுகாலுந்
தனிநகர்கண்டுமற்றிந்நகரெதுசாற்றுகென்னப்
புனைதுழாய்ப்படலைமார்பனடியவர்புகறலுற்றார். (6)

மலரயன்மனத்திற்றோன்றுமத்திரிவரம்பில்காலம்
உலகிடைத்தவஞ்செய்காலைத்தாதுமேலோங்கியங்கட்
புலன்வழியொழுகிப்பத்துத்திசையினும்போர்ப்பத்திக்காம்
அலர்முலைமாதர்தாங்கலாற்றலர்மண்ணின்வீழ்ந்தார். (7)

சிந்தியதிவலைபைங்கூழாயினதிரண்டுவீழ்ந்த
துந்துநீருலகமுய்யவிமானமேலுலகம்பூத்த
அந்தணன்வைத்தானன்னவாருயிர்பெற்றுமுக்கண்
எந்தைவாழ்காசிமேவியிலிங்கமொன்றமைத்ததன்றே. (8)

பரமனைவணங்கிநூறுபற்பநற்றவஞ்செய்காலை
அருள்கனிந்திறைவன்றோன்றியந்தரவனிபைங்கூழ்
விரியுநீரிவற்றுக்கெல்லாம்வேந்தனாயுறைதியென்ன
ஒருகலைவாங்கிக்கங்கையொழுகுவார்சடையின்வேய்ந்தான். (9)

ஒண்ணிறவுரோணி தன்னோடுவந்தினி திருப்பமற்றைப்
பெண்ணலங்கனிந்தமாதர் தந்தையோடதனைப்பேசத்
தண்ணளியிலாததக்கன்சபித்தலாற்பக்கந்தோறும்
விண்ணிடைத்தேய்தலோடும்வளர்தலுமேவினானே. (10)

போற்றிமூவுலகுங்காக்கும்புரவலனாகிப்பின்னர்
ஆற்றருமிராசசூயமாற்றியிவ்வுலகமெல்லாஞ்
சாற்றுநான்மறையோர்க்கீந்துதையலோர்பாகத்தெந்தை
மாற்றருமருளாற்சோமனெனும்பெயர்மருவினானே. (11)

முறையினிற்சந்திரேசன்முன்னர்நல்வேள்விசெய்து
நிறைதவம்புரிந்தபேற்றானிரையிதழ்முகைவாய்விண்ட
செறிமலர்க்கொன்றைவேணிச்சிகாமணியாயதன்றிக்
கறைமிடற்றரவம்பூண்டகண்ணுதற்கண்ணுமானான். (12)

பரிதிவெங்கதிரால்வாடும்பற்பலவுயிருமுன்றன்
விரிகதிர்க்கற்றைதோயின்மெய்குளிர்ப்புறுகயாமும்
பொருவில்பூரணையினின்பேர்புனைந்தவிவ்விலிங்கந்தன்னின்
மருவுதுமிமயமீன்றமயிலியன்மடந்தையோடும். (13)

மதியுறுமுவாவிற்றிங்கள்வாரம்வந்தியையின்முன்னாள்
விதியினிலுண்டிநீத்துவிழிதுயிலாதுகாலைக்
கதிர்மதிக்கூபமூழ்கியிறந்துளோர்கடன்களாற்றின்
அதிர்புனற்கயையிற்பிண்டமிட்டபேறடைவரன்றே. (14)

சித்திரைத்திங்கடன்னின்முழுமதிசேருங்காலை
இத்தலமெய்தியிந்தவிலிங்கத்தைவழிபட்டோர்கண்
முத்தியிலடைவர்சித்தியோகபீடத்தின்முன்னாட்
பத்தியின்வழிபட்டுய்ந்தோர்பலருளராவரன்றே. (15)

அட்டமிதோறுமிந்தப்பீடத்தினருச்சித்தோர்க்கு
மட்டவிழ்கூந்தற்சத்திவாமினிதளிக்குமென்னாக்
கட்டழலதனால்வென்றிவார்சிலைக்காமற்காய்ந்த
விட்டொளிர்திங்கள்வேணிவிமலனுமறைந்துபோனான். (16)

அன்றுதொட்டுலகமெல்லாங்குளிர்ப்புறவகல்வான்போர்த்த
துன்றிருட்பிழம்புசீக்குஞ்சோமன்வாழுலகமீதாம்
என்றுபூந்துளவோனன்பரிசைப்பவேகுதலும்பன்மீன்
ஒன்றியவுலகநோக்கியாதெனவுரைக்கலுற்றார். (17)

பதினான்காவது சிவசன்மா ஈசானனுலகமும்
சந்திரனுலகமுங்கண்ட அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—553.

## பதினைந்தாவது

## சிவசன்மா தாரகையுலகமும் புதனுலகமுங் கண்ட அத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

நறுமலர்க்கமலவீட்டுறைறயுநான்முகன்
துறுகழற்காற்பெருவிரலிற்றோன்றிய
செறிதவக்கிழவனுந்தக்கன்சீர்பெற
அறுபதுமகளிரையருளினனரோ. (1)

ஆங்கவர் தம்மின்மூவொன்பதங்கலார்
நீங்கறுகாசியின்வரணைத்தீரத்தின்
பாங்கரினிலிங்கமொன்றமைத்துப்பண்புடன்
தாங்கருமன்பினிற்றவமியற்றினார். (2)

அகில்வயிறார்ந்துமிழும்மேலோதியர்
திகழ்புருடாயுதமென்னுஞ்செய்தவந்
தகவுடனாற்றலுமகிழ்ந்துதாழ்சடை
வகிர்மதிக்கண்ணியான்வந்துதோன்றினான். (3)

செய்தவமகிழ்ந்தனம்விழைதல்செப்புமின்
தையலீரென்றலுந்தலைவநின்னிகர்
மையறுகொழுநனைவழங்குவாயென
ஐயனும்பெரிதுவந்தருளன்மேயினான். (4)

கொலைபழுத்தொழுகியவேற்கட்கோதையீர்
மலர்தலையுலகினிலிருளைமாற்றுதண்
கலைமதிக்கடவுளுங்கணவனாமென
அலர்முலைபாகனுங்கருளினானரோ. (5)

உயர்புருடாயுதமென்னுமொண்டவம்
மயர்வறவாற்றலிற்புருடமாட்சிமை
இயல்புறவேண்டுழியடைதிரெண்ணிலாச்
செயிரறுமுடுக்களிற்சிறந்துவைகுவீர். (6)

ஆர்வமுற்றமைத்தவிவ்விலங்கமங்கலீர்
தாரகைப்பெயரதாய்த்தயங்கியோங்குக
ஈர்மதிப்பதத்தின்மீதிருத்திர்நீரெனா
வார்சடையந்தணன்மறைந்துபோயினான். (7)

மதர்விழிமங்கையர்திங்கள்வானவன்
பதியெனப்பயிலுறுபதமற்றீதெனுங்
கதையினைக்கேட்டனனேகுங்காலையிற்
புதனுயருலகினைப்பொருந்தநோக்கினான். (8)

பொற்றருவிழுதுவிட்டனையபூஞ்சடை
நற்றவன்கணங்களைநயந்துநோக்குறுச்
சிற்பநூல்கிடந்தவித்தெய்வமாநகர்
அற்புதமொழிகெனவுறைதன்மேயினார். (9)

நண்வழுக்குறுசுடர்காலுமோர்கலை
அண்ணறன்சடைமிசையமைத்தவாற்றினான்
எண்ணுமூவுலகமுமேத்தலான்மதி
விண்ணவற்குள்ளமும்வேறுபட்டதே. (10)

மருவுகாதலின்மதிக்கடவுள்வானவர்
வெருவினர்விலக்கவுங்குரவன்மேவிய
முருகுவாய்மடுத்தளிமுசுபூங்குழற்
றெரிவையைவலிதினிற்சேர்த்திட்டானரோ. (11)

பானிலாக்கடவுளுங்குருவின்பன்னியை
மானமற்றின்புறமணந்ததன்மையாற்
கூன்முதுகிளம்பிறைமுடித்தகோனன்றி
வேனில்வேள்பகழியார்விலக்கவல்லரே. (12)

வெய்யகூற்றுருத்தெறிவேல்விலக்கினும்
எய்துமூழ்வினைத்தொடரெண்ணிமாற்றினுந்
தையலார்முழுமதிமுகத்திற்றங்கிய
மையகட்காலவேன்மாற்றலாகுமே. (13)

அரும்பெறற்செல்வம்வந்தடைந்தகாலையில்
திருந்தியநல்லறஞ்செய்துநாடொறும்
விரிந்தநற்புகழினைவிளைத்தல்வீறுசால்
புரந்தரற்காயினும்புரியலாகுமே. (14)

தனித்தனிமுச்சுடரியற்றித்தங்கிய
அனைத்துலகிருளையுமகற்றுநான்முகன்
நினைப்பருஞ்செல்வம்வந்தெய்தினீடிய
மனச்செருக்கெனுமிருளகற்றவல்லனே. (15)

ஏர்பெறுமிருநிதிச்செருக்குமெய்திடில்
தேர்செவியுடையருஞ்செவிடராகுவர்
ஓர்தருமுரைவலோரூமராகுவர்
கூர்விழியுடையருங்குருடராவரால். (16)

ஈர்மதிப்புங்கவனிளநிலாநகைத்
தாரையைவிடுக்கலன்றருக்கின்வைகலாற்
கார்முகங்குழைத்துவிண்காக்கும்வானவர்
போர்முகத்தழன்றுளம்புழுங்கியெய்தினர். (18)

விண்ணவர்சோமனைவெகுண்டுளாரென
எண்ணுறுவன்பரெத்தவறிழைப்பினுந்
தண்ணளிபுரிந்தினிதளிக்குந்தாழ்சடைக்
கண்ணுதல்பிநாகவிற்கைக்கொண்டெய்தினான். (19)

எய்தினரமாருமமரினேற்றெதிர்
மையுறழ்கண்டனும்வரிவில்வாங்கினான்
உய்யுமேயுலகமரொழிப்பல்யானெனச்
செய்யதாமரைமலர்ச்செல்வனெய்தினான். (20)

புல்லறிவுடையரிப்புலவரோநிகர்
வில்லொடும்போந்தெதன்கணைவிடுத்திடில்
அல்லலுற்றுலகெலாமழியுமின்றென
வல்லியோர்பாகனைவணங்கிக்கூறுவான். (20)

எந்தைமற்றிமையவர்குரவன்பன்னியை
மைந்தினிற்கவர்ந்தனன்மதியென்றோதலும்
வெந்திறற்கணிச்சியோன்விடுதிநீயெனச்
சந்திரன்விடுத்தனன்றாரைதன்னையே. (21)

நண்ணியபன்னிதன்கருப்பநான்மறை
அண்ணறன்முனிவினால்வீழ்ப்பவாங்கது
மண்ணிடைவீழ்தலும்வானினோங்கிய
விண்ணவரொளிகெடவிளங்குகின்றதே. (22)

மங்கையிக்கருவினையுயிர்த்தன்மாசறும்
எங்குலக்குரவற்கோவுவரியேழுடை
அங்கண்மாநிலத்திருள்பருகுமாய்கதிர்த்
திங்களுக்கோவெனத்தேவர்கூறினார். (23)

பூண்சுமந்தோங்கியபொம்மல்வெம்முலை
நாண்சுமந்தொல்கிமெய்ந்நடுக்கமெய்துறச்
சேண்பயிலமரரைமுனிவுசெய்தலும்
பாண்சுரும்பிமிர்மலர்ப்பரமன்கூறுவான்.

வெறிமதுக்கலுழியஞ்சேற்றின்மென்சிறை
அறுபதம்வழுக்கிவீழ்ந்தாற்றுபூங்குழல்
உறுசினந்தணிதிமற்றெவர்க்குயிர்த்தனை
செறிகதிருமிழுமிச்சிறுவன்றன்னையே. (25)

தேர்ந்திலம்யாதுநீசெப்புகென்றலுங்
காந்தண்மென்முகிழ்விரல்கூப்பிக்கண்கவர்
எந்திழையிருட்குறும்பெறியுந்தண்சுடர்
வேந்தனுக்கீன்றனனெனவிளம்பினாள். (26)

பைந்தொடிநல்லுரைகேட்டுப்பாற்கதிர்ச்
சந்திரன்கரங்களாற்றழுவியன்புடன்
மைந்தனையுச்சிமோந்துளமகிழ்ச்சிகூர்
புந்தியானாமமும்புதனென்றோதினான். (27)

அண்ணலுமறைந்தனனம்பொற்றாமரைப்
பண்ணவன்மருவுதன்பதியினெய்தினான்
தண்ணிலாமுகிழ்நகைத்தாரைதன்னொடும்
விண்ணவர்குரவனும்விசும்பினேகினான். (28)

உருவினும்வலியினுமுவமைவேறிலாத்
திருமிகுசிறுவனுந்திங்கள்வானவன்
அருளொடுங்காசியிலடைந்துநல்லருள்
புரிதருமிலிங்கமொன்றமைத்துப்போற்றினான். (29)

ஒருபதினாயிரம்பருவமூணிகந்
தரியநற்றவமினிதாற்றுமெல்லையில்
தெரிவையோர்பங்கமர்திங்கள்வேணியன்
மருவுமவ்விலிங்கத்தின்வந்துதோன்றினான். (30)

கார்வரனோக்கியகளிகொண்மஞ்ஞையின்
ஆர்வமொடினிதெழுந்தாடிக்கண்ணிணை
நீருகநெஞ்சகங்குழையமுக்கணான்
வார்கழற்சேவடிவணங்கியேத்தினான். (31)

மல்லலந்திருவொடுமகிழ்ந்துவாழினும்
அல்லலம்படுகுழியழுந்திமாழ்கினுஞ்
செல்வநின்றாளிலென்சிந்தைநீங்கிடா
நல்வரமருளெனநவின்றுபோற்றினன். (32)

இறைவனுமுளமகிழ்ந்துடுக்களியாவையும்
உறைதருமுலகின்மேல்விளங்கியொன்பதென்
நிறைதருகோளிலொன்றாகிவாழ்கெனப்
பெறலருநல்வரம்பெரிதுநல்கியே. (33)

வீதியினிற்போற்றியவிலிங்கம்வீறுசால்
புதனெனும்பெயரொடும்பொலிகவீண்டெனாத்
தனைமலர்க்கொன்றையான்மறையத்தண்ணிலா
மதிமகனிப்பதிவைகினனரோ. (34)

அவ்வுலகிதுவெனவறைந்துசெல்வழித்
தெய்வநான்மறையவன்சிறப்பினோங்கிய
சவ்வைசால்கவியுலகினிதுகண்ணுறா
இவ்வுலகியாதெனவியம்பன்மேயினர். (35)

பதினைந்தாவது சிவசன்மா தாரகையுலகமும்
புதனுலகமுங்கண்ட அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—588.

# பதினாறாவது
# சிவசன்மா சுக்கிரனுலகங்கண்ட
# அத்தியாயம்.

---

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

கொடியவவுணர்கிருதர்தொழுங்குரவன்பெயர்சுக்கிரனாகும்
படவெவ்வரவமருங்கசைத்துப்பாவைத்திரையினுருத்தெழுந்த
விடமுண்டிருண்டகண்டனருள்மிருதசஞ்சீவனியென்னும்
ஒழிவில்விஞ்சையினிதுணர்ந்தவுரவோனீங்குவைகினனால். (1)

மிருதசஞ்சீவனியென்னுவிஞ்சையெவ்வாறிவனுணர்ந்தான்
மருவுபெயர்சுக்கிரனென்னவந்ததெவ்வாறோதுகென
அரியமறைதேர்கலைமுனிவன்கேட்பவறுகால்குடைந்தூத
முருகுவிரியும்பசுந்துளவோனன்பர்வகுத்துமொழிகுவரால். (2)

கூற்றம்வெருவவழலுமிழுங்கொலைவேலந்தகாசுரனென்
றூற்றல்சான்றவவுணனொடுமமரியாருமமரினெதிர்
ஏற்றகாலைப்பசுகுண்டன்முதலாமவுணரிறந்தொழியச்
சீற்றமிகுமோரவுணர்பதிசென்றுகுரவற்கியம்பினனால். (3)

எண்ணிலவுணரமரர்விடுங்கணையாலாவியிறந்தொழிந்தார்
அண்ணனீவந்தளிப்பினல்லாலுய்யேமளியமெனவுரைப்பத்
தண்ணங்கமலப்புத்தேளையுவமைசாலுந்தனிமுனிவன்
துண்ணென்றேகியமர்க்களத்திற்சுடர்வேலவுணனொடுஞ்சார்ந்தான்.

வீந்தவவுணருயிர்பிழைப்பமிருதசஞ்சீவனியென்ன
வாய்ந்தவிஞ்சைமறைக்கிழவனறையத்துயிலற்றவர்போல
மாய்ந்தோரியாருமுடனெழுந்துவடிவாள்விதிர்த்துவாய்மடித்துக்
காய்ந்துசுழல்கட்டழல்சொரியக்கனன்றமரிற்கைகலந்தார். (5)

இறந்தோரியாருமுயிரெய்தியிகல்வெஞ்சமத்தினெதிர்ந்தனரென்
றறந்தாழ்நெஞ்சத்திமையோர்கள்வெருவாநந்தியுடனறையச்
சிறந்தவிசும்புதனிபுரக்குந்தேவர்வெருவாதிருத்திரென
மறந்தாழ்கணிச்சிவானவனைவணங்கிச்சிலாதன்மகனுரைப்பான். (6)

றுயனினதுதிருவருளாலருமாதவத்துப்பார்க்கவன்முன்
வய்துமரியவிஞ்சையினுலிறந்தவவுணரியாவரையும்
உய்யச்செய்தானினியமருய்யாரென்னவோதுதலுந்
தையல்பாகன்பார்க்கவனைக்கொணர்தியென்றுசாற்றினனுல். (7)

சாற்றலோடுநந்தியருண்முக்கட்பரமன்றாள்வணங்கிக்
காற்றுமனனும்புறங்கொடுப்பக்கடிதினேகியவுணரணி
வீற்றுவீற்றுயிரிந்தோடத்துரந்துவெள்ளிதனைப்பற்றி
ஏற்றுக்கொடியோன்முன்னுய்ப்பவிறையுமவனைவிழுங்கினனுல். (8)

மறுவின்முயற்சியில்லாதமக்கள்போன்றுமாற்றரிய
பொறியின்மாந்தர்தாளாண்மைபோன்றுமரன்மேலன்பில்லார்
நெறியினூற்றநல்விரதம்போன்றுநிகரில்கவியின்றி
எறிவேலவுணர்பெருஞ்சேனைபொலிவற்றிடரினாழ்ந்ததுவே. (9)

வெருவலவுணர்பார்க்கவனைமீட்பலின்னேயெனவெகுண்டு
முரசமார்ப்பவளைகாலமூரித்தானைமுன்னடப்பக்
கருவிமுகிறேய்தடங்குடுமிக்கயிலையடைந்துகறைமிடற்ற
அரவாபரணன்கணங்களொடும்பொருதானந்தகாசுரனே. (10)

உவணமுயர்த்தோன்மயிலூர்தியுடன்வெஞ்சினத்தவேழமுகன்
தவளக்களிற்றுப்பெரும்பாகன்முதலாமமரர்தலைப்பெய்து
புவனமுழுதும்புகைப்படலம்போர்ப்பக்கணையால்புதைத்திட்டார். 11

தூர்க்கும்படையால்வளைப்புண்டுதுளங்குமவுணர்வெருவெய்த
ஆர்க்குமமலைசெவிமுதல்வந்திசைப்பவடுவெங்களிற்றுரிவை
போர்க்குமமலன்வயிற்றுறையும்வெள்ளிகேளாப்புலம்புற்றுத்
தீர்க்கவரிதாமிடரெய்திப்போமாறுளத்திற்சிந்தித்தான். (12)

சிந்தித்திருக்குங்காலையிளந்திங்கட்கண்ணியிறைவயிற்றில்
உந்துதடந்தேரவுணருடன்றேவருடற்றுங்கொடுஞ்சமருங்
கொந்துகமழுந்துழாயலங்கற்கொண்டன்முதலாம்வானவரும்
அந்தமில்லாப்பகிரண்டமனைத்துநோக்கியின்புற்றான். (13)

அன்னநோக்கியொருநூறாண்டியோகமொழியாதமர்வெள்ளி
பின்னரிறைவன்சுக்கிலமாய்வீழ்ந்துபெம்மானடிபாவ
மன்னுமதுசுக்கிலமாய்வந்தவாற்றாற்சுக்கிரனென்
றுன்னையுலகம்புகலவினிதுறைதியெனலுந்தொழுதகன்றான். (14)

அன்னோன்பெயரின்முறைவழுவாதறைந்தேதங்கரியினுரிபோர்த்த
முன்னோனளித்தவிஞ்சைமுறைகேட்டிபிருகுமுனிபுதல்வன்
இன்னோன்காசிநகரடைந்தேதாரிலிங்கமமைத்துமலர்தூவிப்
பன்னாள்வழிபாடியற்றிடவும்பரமன்றோன்றக்கண்டிலனால். (15)

உலவாக்கொடியமும்மலமுங்கழுவிப்புலன்களுள்ளடக்கி
இலையார்கணிச்சிப்பெம்மானையிதயகமலத்தினிதிருத்திக்
கலைதேர்முனிவனெய்யரியின்புகைவாய்மடுத்துக்கண்முகிழா
அலையாதோராயிரம்பருவமரியவிரதமாற்றினனால். (16)

ஆற்றுமரியதவநோக்கியந்தாமரையின்முகையவிழத்
தோற்றும்பரிதியொருகோடியெழுந்தாலென்னச்சுடர்மேனி
ஏற்றுக்கொடியோன்றோன்றுதலுமிதயங்களிப்பமயிர்பொடிப்பப்
போற்றியமரர்முடியுரிஞ்சும்பொன்னங்கழலின்மிசைவீழ்ந்தான். (17)

தொழுதுவீழ்ந்தமுனிவரனையெடுத்துநமதுசுக்கிலத்தின்
விழையுமகவாய்வருதியென்றுமிருதசஞ்சீவனியென்னும்
பழுதின்மறையுமளித்திவணீபழிச்சுமிலிங்கநின்பேரால்
தழைகவென்னவருள்கூர்ந்துதழற்கட்பரமன்மறைந்தனனால். (18)

தென்னவிளம்புமுறைகேளாவேகுநெறியினியன்முனிவன்

மூன்னரங்காரகனுலகந்தோன் றலோடுமொழிகென்னைப்
பொன்னூர்திகிரிநெடுமாயனன்பாதனைப்புகல்கின்றார். (19)

## பதினாறுவது சிவசன்மா சுக்கிரனுலகங்கண்ட அத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—607.

## பதினேழாவது சிவசன்மாசெவ்வாய் வியாழம்சனியுலகங்கண்ட அத்தியாயம்.

கலிவிருத்தம்.

செவ்வாயுலகீதரிசிந்தியவேல்
மைவார்விழிமங்கையொழிந்திடலும்
வெவ்வாளரவஞ்சடைமீதணியும்
அவ்வானவனற்றவமாற்றினனால். (1)

தனைநோக்கியதாழ்சடையோனுதலிற்
பனிவேர்வுயர்பார்மிசைவீழ்ந்ததுவோர்
கனிவாய்மகவாயதுகண்டெடுநீர்
வனைமேகலைமங்கைவளர்த்தனளால். (2)

மண்மங்கைவளர்த்தலின்மண்மகனென்
றெண்ணும்பெயரெய்தியதீங்கிவனுங்
கண்ணன்புகழ்காசியடைந்தெதிர்நீர்த்
தண்ணந்துறைவானதிசார்ந்தனனால். (3)

வெங்காமமெறிந்துயர்மெய்ந்நெறியில்
தங்காவிழைவொடுதவம்புரியப்
பொங்காரழன்மேனிபொடித்தெழலால்
அங்காரகனாயினனன்னவனே. (4)

நெறிசேர்தவநோக்கினைத்தருணான்
மறையோதியமைந்தன்முன்வந்தணுகி
அறைவார்கடனஞ்சமருந்தியசீர்
இறையோனுமளித்தனனிவ்வுலகே. (5)

எனவோதுதல்கேட்டினிதேகுதலும்
முனமோர்நகர்தோன்றமுதுக்குறைவால்
தனிநான்மறையோனிதுசாற்றுகென
வினைதீர்கணநாதர்விளம்புவரால். (6)

வேறு.

பனிமலர்க்கமலவீட்டுறையும்பண்ணவன்
முனமுலகியற்றுவான்முன்னுபோதவன்
மனனிடையத்திரிமரீசியங்கிரா
எனுமிவர்முதலினோரெழுவர்தோன்றினார். (7)

அனையரின்மறைபயிலங்கிராவருள்
புனையுமாங்கிரதனென்றுரைக்கும்பொற்புடை
முனைவனையீன்றனனவனுமுக்கணான்
இனிதுறைதீம்புனற்காசியெய்தினான். (8)

அருளினோரிலிங்கமாண்டமைத்துமீயுயர்
இருவிசும்புறைதருதேவராண்டினுள்
ஒருபதினாயிரம்வருடமோங்கிய
பொருவருநற்றவம்புரிந்திட்டானரோ. (9)

எற்றிருங்கொடிவலனுயர்த்தியாணர்வெண்
நீற்றொளிபழுத்ததெண்ணிலவுக்கண்ணியான்
ஆற்றருந்தவத்தினுக்கிரங்கியாயிடைத்
தோற்றியாங்கிரதனைநோக்கிச்சொல்லுவான். (10)

அளப்பருந்தவமினிதாற்றியன்பினின்
உளத்தையிவ்விலிங்கத்தோடொன்றநோக்குபு
திளைத்தலினுலகெலாஞ்சிவனென்றுனைக்
கிளைத்தகநெறிவழாக்கேடில்சிந்தையோய். (11)

அருளினனீயினிதமைத்தலிங்கப்பேர்
பொருவருவியாழத்திற்பொலிகமற்றது
பாவினர்மலர்கடூய்ப்பழிச்சினோரெலாந்
தெருளொடும்புந்தியிற்சிறந்துவைகுவார். (12)

மன்பெருங்குணங்களையுடையவாற்றினும்
என்பெருங்கருணையின்றியைந்ததானுநீ
பொன்பயிலிருவிசும்பளிக்கும்புங்கவற்
கன்புடைக்குரவனேயாதியீண்டென்றான். (13)

அந்தரதுந்துபிகறங்கியார்த்தெழப்
பைந்தொடியரம்பையராடப்பங்கயன்
இந்திரன்முதலினோரினிதினேத்திடச்
சுந்தரச்சுடர்மணிமௌலிசூட்டியே. (14)

ஊற்றிருந்தளிகருவொழுகுகொன்றையோன்
ஏற்றவவ்விலிங்கத்தின்மறைந்திட்டானியல்
ஆற்றல்வாசவன்முதலடைந்துளோரெலாம்
போற்றுதம்பதியிடைப்போயினாரரோ. (15)

ஆதலால்வியாழத்தினுலகென்றுங்கவர்
ஓதல்கேட்டேகுமந்நெறியிலோர்பதி
நீதறக்காண்டலுஞ்சிவசன்மாவிஃ
தியாதெனமாதவன்கணமியம்புமால். (16)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அருந்தவக்கிழமைபூண்டகாசிபற்கதன்மென்கூந்தற்
கருந்தடங்கிடந்தவுண்கட்காரிகையதிதியென்னும்

முருந்திளமுறுவற்பன்னிமொய்யிருட்பிழம்புசீக்குந்
திருந்துசெங்கதிர்கள்பூத்ததினகரன்றன்னையீன்றாள். (17)

தூயநற்றவஞ்செய்தொட்டாவின்றருடுணைமென்கொங்கை
ஆய்பிழியறன்மென்கூந்தற்சங்ஞைதன்னையன்பிற்
காயழற்கடவுள்சான்றாக்கடிமணம்புரிதல்செய்தான்
பாயிருட்பிழம்புசீக்கும்பரிதியஞ்செல்வன்றானே. (18)

மல்லலைத்தெழுந்துவீங்கிமறங்கிளர்திணிதோட்குன்றின்
றொல்லுலகளிக்கும்வைவச்சுதமநுவினையும்வெய்ய
கொல்சினப்பகடுதூண்டுங்கூற்றையும்யமுனையென்னும்
அல்லினுங்கனிர்த்தமேனியணங்கையுமினிதினீன்றாள். (19)

அன்னவள்வெய்யோன்மெய்யினழல்கதிர்க்காற்றாளாகித்
தன்னிழறன்னையாங்கோரணங்கெனச்சமைத்துநீங்கா
தின்னணமிருத்தியிவ்வாறியம்பனீயென்றுதாதை
தொன்னகர்க்கேகியீன்றோற்குற்றவையனைத்துஞ்சொன்னாள். (20)

ஆங்கதுகேட்டதாதையழலெழவிழித்துநோக்கி
ஈங்கிதுபுரிவர்கொல்லோகற்புடைமகளிரென்னத்
தீங்கிழைத்தனமீட்டேகிற்கதிரவன்சீறுமென்னாத்
தாங்கருந்தவங்கள்செய்வானுத்தரகுருவிற்சார்ந்தாள். (21)

பதனழிசருகுதின்றுபரிதியைமனத்தினோர்ந்து
திதலைபூத்தலர்ந்தகொங்கைசெய்தவம்புரியுமெல்லை
மதர்வைமென்னோக்கிசெய்தமாயைமற்றிவளென்றெண்ணான்
ததைதமலர்க்கூந்தற்சாயாதேவியைத்தழீயினானே. (22)

சாவனீயென்னுமெட்டாமநுவினைச்சனியைவெய்ய
ஏவெனமிளிருமுண்கட்பத்திரையென்னுமானை
ஓவறுமன்பினீன்றுமுன்னவளுவப்பினீன்ற
மூவரைப்போற்றல்செய்யாண்முனிவொடுமிகழ்ச்சிசெய்தாள். (23)

இகழ்வுமுனிதல்செய்யான்மநுவினிதிருப்பப்பொங்கி
வெகுளியின்மறலிதாயையுதைப்பத்தாளெடுக்கும்வேலைத்

நகவறமுளத்தானாகிச்சமனையேபுழுங்கச்சீறி
பகவின்றாண்முறிகவென்றுவன்பெருஞ்சாபமிட்டாள். (24)

வேறு.

அன்னைமுனிந்தவாறனைத்துந்தாதைதக்கடுங்கூற்றெடுத்துரைப்ப
என்னைசெய்தபிழையென்னமறையாதனைத்துமினிதியம்பக்
கன்னலனையதீங்குதலைப்புதல்வர்பிழைப்பினுளங்கனன்று
முன்னவரியகொடுஞ்சாபமீன்றோர்புகறன்முறையன்றே. (25)

மழைமானோக்கிகொடுஞ்சாபந்தீர்தற்குனதுமலரடியிற்
புழுவாய்மடுத்துச்சிலதசைகளருந்தியொழிகவெனப்புகலா
இழைதாழ்பொம்மன்முலையணங்கினுள்ளமின்னேயறிவனெனும்
விழைவாற்றனதுமனைக்கிழத்தியுறையுமிருக்கைமேவினனால். (26)

அன்னமென்னவெதிர்போந்துவணங்குமணங்கின்முகநோக்கி
முன்னரீன்றமக்களொருமூவர்தம்மைமுனிவுசெய்து
பின்னரீன்றமக்கடமைப்பெருகுமுவப்பிலளித்திடுதல்
என்னையென்னவுளம்வெருவியாதுமுரையாதிருந்தனளால். (27)

உரையாதிருப்பநிகழ்ந்தவெலாம்யோகினுணர்ந்துகொடுஞ்சாபம்
புரிவானினைந்தவெங்கதிரோனுள்ளமோர்ந்துபுழுகொழுகு
மருவார்கூந்தற்செய்தியெலாமறையாதுரைப்பப்பொறையதனால்
அருண்மீதூரமுனிவகற்றிமாமன்றன்பாலடைந்தனனால். (28)

இரவியடைந்தென்மனைக்கிழத்தியாண்டையாளென்றுரைத்திடலும்
பொருவினினதுகதிர்வெம்மைக்காற்றாளாகப்பெரும்போகம்
மருவிநகருத்தரகுருவிற்பெட்டைப்பரியின்வடிவாகி
அரியபெருமாதவமினிதொன்றாற்றாநின்றாளாயிழையே. (29)

அம்மெலோதியிடத்துறையினழற்றுநினதுகொடியகதிர்
வெம்மையடக்கல்வேண்டுமெனவிடைகொண்டேகிப்பூண்சுமந்த
பொம்மன்முலையாங்கிருந்துதவம்புரிதனோக்கியிருள்சீக்குஞ்
செம்மற்கதிர்வானவனவள்பாற்பரியினுருவிற்சென்றடைந்தான்.30

மருவுபொழுதிற்குழைகிழித்துமதர்க்குங்குவளைக்கருநெடுங்கட்
புரிமென்கூந்தல்யார்கொலெனப்புரியுமருமாதவநீங்கி
வெருவியோடப்பின்றொடரும்வேலைத்தாதுமூக்கின்வழிச்
சொரிதலோடுமருத்துவரோரிருவாதனிற்றோன்றினரால். (31)

ஆயகாலைவெருவேனின்னன்பன்யாவனென்றரும்பெறற்றன்
மேயவுருவிற்றோன்றுதலும்விழைவினுற்றுந்தவப்பேற்றால்
ஏயகொழுநற்சேர்ந்தனமென்றிரவியோடுமவளிருப்பச்
சாயாதேவியினீன்றசனியுங்காசிநகரடைந்தான். (32)

ஆங்குமேவித்தன்னுடைப்பேர்தனாலிலிங்கமொன்றமைத்துப்
பாங்கினியற்றுமருந்தவத்தானெடுவெண்டிங்கட்பைங்கண்ணிக்
கோங்கமுலையாளொருபாகன்புரியுமருள்மேற்கொண்டுவகை
ஓங்குவெய்யோன்றருபுதல்வனினிதினுறையுமுலகிதுவே. (33)

கங்கையெறிநீர்த்திரைகொழிக்குங்கடவுட்காசிநகருறையும்
மங்கைபாகன்சினகரத்தின்றென்பான்மருவிவீற்றிருக்கும்
பொங்குகதிர்வானவனீன்றசனிப்பேரிலிங்கம்போற்றுமவர்
அங்கணுலகிலெஞ்ஞான்றுமழியாப்பெரும்பேறடைகுவரால். (34)

என்றுகூறுமுறைகேளாவேகுநெறியிலைம்புலனும்
வென்றபெருமாதவரொழுவருறைதனோக்கிவிழிகளிப்பக்
கன்றுசினவெங்குறும்பெறிந்தமறையோனிவரார்கழறுகென
மன்றல்கமழுந்துழாயலங்கன்மாயனன்பர்வகுத்துரைப்பார். (35)

பதினேழாவது செவ்வாய் வியாழம் சனியுலகங்கண்ட
அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—642.

# பதினெட்டாவது

# சிவசன்மா சத்தவிருடிகளுலகங்கண்ட அத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

அருந்தவம்புரியுமீங்கிவரையாய்மறை
திருந்துமேழிருடிகளென்றுந்தேமலர்
இருந்துலகியற்றுமேழ்பிரமரென்னவும்
விரித்தநூற்கேள்வியோய்விளம்புவாரரோ. (1)

மலர்தலைநிலம்புகழ்மரீசியத்திரி
புலகனற்புலத்தியன்கிரிதுபோற்றரும்
இலகுபேரங்கிராவசிட்டனீங்கிவர்
நலனுறுபன்னியர்நாமங்கேட்டியால். (2)

தேசுறவிளங்குசம்பூதிதேவரும்
பேசனுசூயைவான்சமைபிரீதிமற்
றோசைபோஞ்சந்ததிமிருதியோங்கிய
எசிலாக்கற்பருந்ததியென்றோதுவார். (3)

அருமறைநூற்பொருள்வடித்தவந்தணன்
பொருவறுமுலகெலாம்புனிதமாதவர்
தருதிரென்றிசைத்தலுமவருந்தண்புனல்
திரைதவழ்காசியிற்சென்றுமேயினார். (4)

தம்பெயராற்றிகழிலிங்கந்தாபித்தோர்
உம்பர்வேட்டவியுணத்தவமுஞற்றலும்
வம்பவிழலங்கலங்கொன்றைவார்சடை
நம்பன்முன்றோன்றியிவ்வுலகநல்கினான். (5)

இருடிகள்பன்னியொழுவர்தம்முளங்
கருணைசாலருந்ததிகடவுட்கற்பினைத்
திருமறுமார்பனுமயனுஞ்செல்வியும்
உருவுடைவாணியும்விழையவோதுவார். (7)

முப்புரிநூலணிமுனிவரேத்திய
மெய்ப்பொருளிலிங்கத்தைவிதியிற்போற்றுவோர்
கெப்பொருளெய்துதற்கரியமற்றவர்
செப்பரும்பிரமகற்பதத்திற்சேர்குவார். (7)

பதினெட்டாவது சிவசன்மா சத்தவிருடிகளுலகங்கண்ட அத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—649

## பத்தொன்பதாவது
## துருவன் தவஞ்செயப்புறப்பட்ட அத்தியாயம்.

கலிவிருத்தம்.

எனவுரைத்தேகுழிமேருவுச்சியிற்
கனகதிர்க்கயிறுகைப்பற்றிக்கண்கவர்
தனியொளிபரப்பியசோதிசக்கரந்
துனைவினிலியற்றுவான்யாவன்சொற்றிரால். (1)

என்றருமறையவனியம்பவீர்ந்துழாய்
மன்றறலங்கலம்பரிதிமார்பினன்
பொன்றிகழ்திருந்தடிபோற்றியைம்புலன்
வென்றசீரடியவர்விளம்பல்மேயினர். (2)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஈயத்தோங்குமாயிரவாய்ப்பாம்பின்முடிக்கிடந்தபுவிபரிக்குந்தெண்
ணீர், முத்தாரந்துயல்வருந்தோட்சுவாயம்புமனுவாயமுரிவேலான்,
உத்தானபாதனெனுமொருமகவையுவப்பினொடுமீன்றனன்றேன்,
மைத்தாழ்பூங்கரியகுழற்சுருதியொடுசுநீதியையும்வதுவைசெய்தான். (3)

கன்னல்பசுந்தேனொழுகுகனிபழுத்தாலனையமொழிக்காலவேற்கட்,
பொன்னவிருஞ்சுணங்கணிந்தபொம்மன்முலைச்சுருதியெனும்புரைதீர்
வல்லி, அன்னவளுத்தமனென்னுமகவீன்றாள்சுநீதியெனுமறன்மென்
கூந்தல், எந்நிலமும்புகழோங்கவீங்கிவனையருந்தவஞ்செய்தினிதினீ
ன்றாள். (4)

மைதோய்ந்தமதர்நெடுங்கட்சுருதியருண்மைந்தனைத்தன்மடியின்வை
த்து,நெய்தோய்ந்தவடிவேலானிரையுளமானரியணையினிருக்குமெல்
லை, ஐதேந்துமகலல்குற்சுநீதியுந்தன்மகவினைநல்லணிகள்பூட்டிக்,
கொய்தாமம்புனைந்துய்ப்பவ்வனும்போய்த்தாதையடிகுறுகினனே.(5

சென்றடைந்தமழலைமொழிக்கிண்கிணிக்காற்றளர்நடையசிறுவன்
போந்து, வென்றிவடிவேல்வேந்தனரியணைச்சென்றேறுதலும்வெ
குண்டுநோக்கிக், குன்றிரண்டுதாங்கியெழில்கனிந்தொழுகுகற்பகப்
பூங்கொம்பானாள், கன்றுசினத்தொடும்வேந்தன்மடியேறலெனவி
லக்கிக்கனன்றுசொல்வாள். (6)

நன்மரபுதனிற்றோன்றியரசன்மணிமுடிக்குரியநங்கையாய
என்வயிற்றிற்பிறவாமற்பொறியில்லாளவ்வயிற்றினியைந்தமைந்தா
மன்னுறையுமரியணையிலேறறகாதெனவுரைப்பமைந்தன்மாழ்கித்
தன்னமர்தாய்மருங்கணைந்துதளர்வோடுழிவையனைத்துஞ்சாற்றின
னே. (7)

உரைக்குமகவினைத்தனதுகுறங்கிருத்திமெய்தழுவியுச்சிமோந்து
வரைத்தடந்தோண்மன்னவன்றன்மனைவியரிற்றலைமைபெறுமாட்சி

தன்றேல், விருப்பமுறு தன்புதல்வற்கல்லாதிவ்வரசுரிமைமேவாதெ
ன்னுஞ், செருக்கினுரைத்தனளவள்போற்றவம்புரியாவெளியவே
உன்செய்வதென்றான். (8)

அருந்தவத்தாற்பெறலரியவரசுரிமையாக்கவள்செய்தடைந்தாளென்
னில், வருந்தியருந்தவமாற்றிவானவர்க்கும்பெறற்கரிதாய்வயங்கு
சோதி, திருந்துமுயருலகடைவன்விடைதருதியெனவிருதாட்சென்
னிசேர்த்தான், பொருந்துதிரைக்கடற்பிறந்தவமுதனையமழலைமொ
ழிப்புதல்வன்றானே.

இருநான்குபருவமின்னுநிறைந்திலதுகெடிபடுகானிடையிற்போகி
ஒருவாதுதவம்புரிதற்கொன்றுமோகிற்பிரிந்துமுய்வேன்கொல்லோ
வெருவாவுள்ளுயிர்பதைப்பமாற்றவமொழிவிடத்தால்வெதும்புவே
னின், அரிதாயமழலைமொழியமிழ்தருந்தாதாற்றுவன்கொலந்தோ
வென்றாள். (10)

அளியரற்றுநறுங்கூந்தலிவ்வண்ணமழுதரற்றியவலங்கூரத்
தொளிபழுத்ததண்பணையிற்றள்ளுகயல்செழுங்கமலப்பொகுட்டிற்
றுஞ்சும், வளவயல்சூழ்நாடொருவிமழலைமொழிக்கிண்கிணிக்கான்
மைந்தனேகி, முளியரில்சூழ்கொடுங்கானில்வெருவருமோர்தவமினி
தாமுயலுமேல்லை. (11)

அழலூட்டிப்பின்னுகருமறுதொழிலேழ்முனிவராராண்டடைந்திக்கா
னத், துழைவேட்டுத்தவம்புரிந்தாயாரைநீயெனவவர்தாளுவப்பினே
த்தி, மழையோட்டுகொடைத்தடக்கையுத்தானபாதனருண்மதலை
யென்றான், குழையோட்டிக்குமிழ்மறியுங்கொழுங்கயற்கட்சுநீதியருள்
குமரன்றானே. (12)

உடைதிரைநீர்க்கடல்வலயம்பொதுநீக்கித்தனிபுரக்குமுரவோனமை
ந்த, கெடிபடுகானிடைப்போந்துதவம்புரிதற்குற்றதெவனிகழ்த்துகெ
ன்ன, அடலரியாசனத்திருக்கைமறுத்தனடாயாங்கதனுலமாரியார்க்
குந், தொடர்வரியபதம்பெறுதற்கடைந்தனனியான்பெறுமுறைநீர்
சொல்கவென்றான். (13)

கன்னிகறும்பசுந்துளவின்குழையலங்கறுயல்வருமேதாட்காயாமேனி
முன்னவன்பொன்னடிபோற்றின்முடியாதபொருளுளவோமுருகுநா
றிப், பொன்னவிர்பூந்தாதவிழ்க்கும்பூங்கமலப்புத்தேளு மயனுமன்
னோன், தன்னுருவாகியவெழுத்தோரீராறுகவின்றெவர்க்குந்தலைவ
ரானார். (14)

கன்னியிளம்பசுந்தாற்றுக்கதலிவனம்விளிம்புடுத்தகழனிநாட்டு
மன்னருந்தவப்பேற்றின்வருபுதல்வவுலகளந்தமாயோன்செய்ய
பொன்னடியையினிதியப்பூங்கமலத்தினிதிருத்திப்புலவர்யார்க்கும்
உன்னரியபதம்பெறுதியெனவுரைத்துக்கடவுண்மறைமுனிவர்
போனார். (15)

## பத்தொன்பதாவது துருவன் தவம்செயப் புறப்பட்ட அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—664.

## இருபதாவது
## துருவன் தவஞ்செய்த அத்தியாயம்.

---

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

துருவனாண்டகன்றமதுவனத்தெய்திச்சுடருமிழொருமணிகிடந்த
திருமறுமார்பன்கழலிணைநினைந்துதிகழொளிதிசையெலாம்போர்ப்ப
அரியமாதவமொன்றியற்றலும்வெருவியார்பதம்பெறுவதற்கின்னோ
ன்,புரிகுவதினைக்கெடுப்பனென்றமரர்புங்கவன்புந்தியினோர்ந்தான்.

கருங்கயன்மருட்டிக்கடைகுழையெறிந்துகாலவேல்பொருவுவாட்ட
டங்கண், அரம்பையர்குழாத்தோடளிவிருந்தயருமைங்கணைக்கிழவ
னைவிடுப்பின், திருந்துமென்மழலைச்சிறுவனாதலினாற்கலவியிற்சிந்தை
செய்கிலன்மேல், வருந்திநெஞ்சழிவானலகையாலென்றுமவன்பெ
ரும் பேய்க்கணம்விடுத்தான். (2)

விடுத்தவெங்கனற்கணைவலைகமற்றெறவையும்வெருவாலியற்றவும்வெ
ருவான், சுடர்ப்படைத்திகிரியண்ணன்மேலன்பின்றணிவுகண்டாங்
கொர்பேய்விட்கால், அடுத்தவனன்னையுருவுகொண்டெய்தியரும்பெற
ற்குமரவுன்றனையான், கெடுத்துயிர்வாழ்வெனமருட்டிடவுங்கேடி
லானுளந்துளங்கிலறல். (3)

யழலையஞ்சிறுவனருந்தவம்புரிபுனைவலிநோக்கியுண்ணடுங்கி
அழல்விழிப்பரூஉத்தாட்கூளிமற்றியாவுமமரர்கோன்மருங்கணைந்தெ
ம்மால், விழைவொடுஞ்சிறுவனருந்தவம்புரிதல்கெடுக்குமாறரிதென
விளம்ப, உழையுறுமமரர்குழுவொடுமலரோனுறையுளிறெல்லையி
னடைந்தான். (4)

தாளதாமரையினாசுவீற்றிருக்குஞ்சதுமுகக்கடவுளைவணங்கி, வா
ளரா முடியிற்கிடந்தபார்பரிக்குமனுகுலத்தோன்றலாங்கியற்றும்
நீளிருந்தவத்தாலார்பதம்பெறற்கிசைந்தனன்கொல்லெனவிகழ்த்த
ஆளுநம்பதத்தில்விழைவிலன்மேலாம்பதம்பெறுமருத்தியினமைந்
தான். (5)

ஆங்கவன்மேலாம்பதம்பெறினீவிரடைந்திடும்பதமெவற்றினுக்கும்
நீங்கருமுறுதிபயந்திடுமென்னநான்முகனிகழ்த்தலுமகிழாப்
பூங்கழல்வணங்கியமரர்தம்பதத்திற்போயினர்துருவனுண்டியற்றுந்
தீங்கறுதவத்தாலுளமகிழ்கூரச்செங்கண்மாலவனுழைச்சேர்ந்தான்.
(6)

கனைகடல்வயிறுகுழையமத்தெறிந்துகடவுளர்க்கின்னமுதளித்த
வனைதுழாயலங்கறயல்வருந்தடந்தோண்மரகதவண்ணனைநோக்கி
நினைவரும்விழைவிற்கண்பனிதுளங்கநெஞ்சகங்குழைந்துநெக்குருக
வினையறுத்துயர்ந்தோரிதயம்விட்டகலாமென்மலர்ச்சேவடிபணிந்
தான். (7)

குவலயம்பொதிந்தகுரைகழன்முளரிவணங்கியகுமரனையெடுத்தாங்
குவகையங்கடல்வாய்மடைதிறந்தென்னவுளங்கவர்முகிணகைபுரிந்து

ன், தவமினிதுவந்தேம்வேட்டனயாவுந்தருகுவமியம்புதியெனலும்,
ணையறநோற்றவரசிளங்குமாரனாணற்பழிச்சுகின்றனனால். (8)

## இருபதாவது துருவன் தவஞ்செய்த அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—672.

## இருபத்தொன்றாவது
## துருவன் தவம்செய்துபேறுபெற்ற அத்தியாயம்.

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

துரைகழலமரர்கணத்திலிந்திரனீகோட்களிற்பரிதிவானவனீ
உரைபெறுமுலகிறைன்முகனுறையுமுலகநீயுடைதிரைக்கடலில்
திரைகொள்பாற்கடனீகடவுண்மாநதியிற்றீம்புனற்கங்கைநீயுயர்ந்த
வரைகளினிமயப்பொருப்புநீயானின்வளமிகுசுரபிநீயாமால். (1)

அரியநான்மறையிற்சாமநீயெழுத்தினகரநீயருமறைப்பொருளிற்
புரைதவநின்றவுபநிடதமுநீவேள்வியிற்புரவிநன்மகநீ
விரைவினில்வளிநீவருணமோர்நான்கின்வேந்தனீமருவியகரணத்
துரைபெறுமனநீபூதமோரைந்தினோங்கிருவிசும்புநீயாமால். (2)

ஊதியமதனிலருமகப்பேறுமூதியநீயுகநான்கில்
ஆதியாமுகநீதருக்களிற்சிறந்தவரசுநீயுடுக்களியாவையினும்
மேதகவிளங்குபூசநீபுல்லிற்றருப்பைநீவிழையுநன்பொருளின்
மாதர்நீதருமமனைத்தினுஞ்சந்திவந்தனைமற்றுநீயாமால். (3)

கொடிகளிற்சேமக்கொடியுநீயுலகங்கூறியயோகமோரெட்டில்
ஒடிவறுபிராணாயாமநீபுவனமனைத்துநீயென்றுவந்தேத்தி
அடிமலர்தொழுததுருவனைநோக்கியாய்பிழிக்குறுந்துளிபிலிற்றுங்
கடிகமழ்படலைப்பைந்துழாயலங்கற்கடனிறவண்ணனீதுரைப்பான் (4)

கழிபெரும்பதங்களெவற்றினுமேலாம்பதமுறக்கருதினையுணர்ந்
தேம், விழைவுறுபூதமியாவையுமன்னமயத்தினன்மேவுமவ்வன்னம்
மழையினற்றோன்றுமம்மழைதனக்குமருவுகாரணமெனவிளங்கும்
ஒழுகொளிச்சுடரோனவன்முதற்கோளநாட்களுமும்பரினுலவும். (5)

காற்றெனுங்கயிற்றின்வீக்கியுள்ளொளிய கறங்கெனவிடையறாதுழலு
ம், மாற்றறுஞ்சோதிச்சக்கரந்திரித்து வடவரைமுகட்டினின்றியோடு
ஆற்றலினிருத்திகற்பமொன்றிறக்குமமைதியின்யானுமற்றிதனை
எற்றுயர்கொடியோனருளினாலடைந்தேனீங்கிதுநினக்களித்தன
னால். (6)

சலந்தரனுடலம்பிளப்பதற்கிறைவன்றமைத்தாளினாலமைத்த
வலம்படுதிகிரிபெறுவதைவிரும்பிவைகலும்வண்டுபாண்மிழற்ற
அலர்ந்தசெங்கோட்டுக்கமலமாயிரங்கொண்டருச்சனைபுரியுழியொரு
நாள், இலங்கிதழ்க்கமலமொன்றிலாதன்கணிடந்தவனடியினிட்ட
னனால். (7)

துகிர்விழுதோட்டிப்படர்ந்தெனக்கிடந்ததூய்ச்சடையண்ணலுண்ம
கிழ்ந்து, திகிரியம்படையன்றளித்தனனதனாற்றெண்டிரைக்கருங்க
டற்புவியும், அகலிருவிசும்பும்பாதலமுழுமளித்தனனினக்குயான
ளித்த, புகலரும்பதமுநிலைபெறவேண்டிற்புராரியினருள்பெறவேண்
டும். (8)

காளமுண்டிருண்டமணிமிடற்றெந்தைகாசியிற்கார்த்திகைமதியில்
நாள்விழவயர்தனெருழுவதற்குளத்தினயந்தனன்வருதியென்னா
நீளிருந்தவஞ்செய்துருவனோடலங்கனேமியோனேறும்புட்கலுழ
ன், தோளிடைப்போகிக்காசியினெல்லைதோன்றுழியதனினின்றி
ழிந்தார். (9)

துருவனோடேகித்திரைபொருங்கடவுட்டுமணிகன்னிகையாடி
உருகியுண்ணெகிழக்கண்பனியுகுப்பவுவகையின்மெய்ம்மயிர்பொடிப்
ப, கருமணியனையதிருமிடற்றெந்தைகனைகழற்சேவடிவணங்கி
அரிதினோரிலிங்கமவ்வழியமைப்பினதன்பலமளவிடலரிதால். (10)

ஏற்றினிதுவந்துமழகதிர்விரிக்கும்பொற்றுகிலெழின்மருங்கசைத்து
ன்றலந்துளவோனுரைத்தலுந்துருவன்வயித்தியநாதர்தம்மருங்கி
ன், ஒன்றியவுளத்தோடிலிங்கமொன்றைநன்மையாவுளுற்றருந்தவமினி
தாற்றக், கொன்றையங்கண்ணிப்படர்சடைக்கூத்தன்குழைவொடு
டாங்குவந்தடைந்தான். (11)

பழிபடுபுலன்களடக்கிநீநோற்றபரிவினூற்சிறுவவிப்பதத்தின்
அழிவுறுதிருத்தியெனவாநல்கியாதியம்பரமனேகுதலும்
விழைவொடுந்துருவனிப்பதமதனின்மேவிவீற்றிருந்தனன்பசிய
கழையிசைத்தானின்கணங்குவித்தருளுங்கண்ணனுந்தன்னகரடைந்
தான். (12)

துருவனுண்டமைத்தவிலிங்கமேத்திடுவோர்தூயநன்சரிதைகேட்ட
ருள்வோர், திரைபொருதுருவகுண்டநீர்க்கரையிற்றென்புலத்தவர்க
டன்கழிப்போர், விரிதிரையளக்கர்சேறுபட்டொழியமென்புனன்
மொண்டுகொண்டெழுந்த, கருமுகில்விளர்ப்பவிருள்படுமேனிக்கண்
ணன்வாழ்பதத்தில்வீற்றிருப்பார். (13)

## இருபத்தொன்றுவது துருவன் தவம்செய்துபேறுபெற்ற அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—685.

## இருபத்திரண்டாவது

## சிவசன்மா மகலோகமுதலாக நான்குலோகமுங் கண்ட அத்தியாயம்.

---

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

என்னத்துருவன்சரிதையெல்லாமியம்பியேகுமந்நெறியில்
துன்னவரியமகலோகந்தோன்றநோக்கிச்சிவசன்மா
மன்னுமுலகமியாதெனலுமறங்கூறவுணர்மிடல்சாய்த்த
பொன்னந்திகிரிவலனுயர்த்தபுத்தேளடியார்புகலுவரால். (1)

இனையலோகமகலோகமிதனினறவமலிதுளவம்
புனையுங்கடவுள்பதம்பணிவோர்கற்பகாலம்பொருந்துவரென்
றனையோருரைப்பமுன்றோன்றுமுலகமியாதிங்கறைதிரெனச்
சனகாதியர்வாழ்சனலோகமிஃதென்றுணரச்சாற்றினரால். (2)

ஏகுநெறியிலோருலகந்தோன்றலோடுமியாதெனலும்
யோகினிருந்தோரோர்திங்களுண்டிநீத்தோரொருபருவம்
ஆகம்வருத்தவிழையாமலுறைவோரூழ்த்தசருகயில்வோர்
மோகமெறிந்துமூச்சவித்தோர்திங்கட்கொருகான்மூச்செறிவோர்.

இன்னோருறையுந்தவலோகமீதென்றியம்பியேகுதலும்
முன்னோருலகமெதிர்தோன்றமுளரிப்பொகுட்டின்வீற்றிருக்கும்
அன்னோனுலகமெனமொழியாவன்னமுயர்த்தமறைக்கிழவன்
பொன்னார்கமலச்சேவடிகள்போற்றலோடுமவன்புகல்வான். (4)

வேயாலாவின்கணங்குவித்துவெற்பொன்றேந்தியினிதளிக்குங்
காயாமலரினிறம்பழுத்தகமலக்கண்ணனுவந்துறையும்
மாயாபுரியினிறந்தனனல்வழுத்தற்கரியவெவ்வுலகம்
ஏயாதுனக்குநீநினைப்பினெழுதாமறையின்பொருளுணர்ந்தோய். (5)

ஆடகேசனுறைபுவனமதனிற்சிறந்ததிலாவளிதம்
நீடுதரங்கக்கடலுடுத்ததீவோரேழினிகரெறிந்த
பீடார்சம்புத்தீவதனிற்பிரித்தகண்டமொன்பானில்
வீடில்பாதகண்டமொன்றேகருமபூமியெனவிளங்கும். (6)

கமைசேர்மற்றைக்கண்டமெட்டிற்கன்மபோகக்குறைநுகர்வார்
இமயத்தெதன்பாலொன்பானாயிரமென்றோதுமியோசனையின்
அமையுமிமயவிந்தத்துளமைந்தநிலம்புண்ணியபூமி
யமுனைநதிக்குங்கங்கைக்குமிடையாநிலமந்தரவேதி. (7)

பொருவில்கடவுணிலங்கடம்மிற்புகலுங்குருக்கேத்திரஞ்சிறந்த
துரைசானைமிசாரணியமதனிற்சிறந்ததொலிக்குநெடுந்
திரைசேர்பிரயாகையாங்கதனிற்சிறந்தததனிற்றெய்வநன்னீர்க்
கரைசேர்கங்கைசூழ்கிடந்தகாசிப்பதியேசிறந்ததுவால். (8)

அன்னவாற்றாலாங்கிறந்தோர்முத்தியடைவாருமறையோய்
இன்னதுள்ளம்விழைந்ததுவுமஃதென்றுணர்ந்தேநெடுமாயன்
தன்னையேத்துமடியர்நினைக்குரைப்பரெனலுந்தாழ்ந்திறைஞ்சி
மன்னுங்கணங்களொடுமாயன்பதத்திற்செல்வான்வழிக்கொண்டான்
(9)

**இருபத்திரண்டாவது மகலோகமுதலாக நான்குலோகமுங் கண்ட அத்தியாயம் முற்றிற்று.**

---

**ஆகத்திருவிருத்தம்–694.**

# இருபத்துமூன்றாவது
# சிவசன்மாவுக்கு அண்டத்தினளவுசொல்லி மானுக்கு முடிசூட்டின அத்தியாயம்.

---

கலிநிலைத்துறை.

கடந்தயோசனையெத்துணையெத்துணைகடப்பான்
கிடந்தயோசனைமுத்தியென்றடைகுவன்கிளர்கென்
றடன்றுமுக்குறும்பெறிந்துயர்யோகினிஞளும்
அடைந்தவந்தணன்கேட்டலுமாங்கவரறைவார். (1)

ஏழ்தடங்கிரியேழ்பொழிலேழ்பெருந்தீவும்
ஆழ்பெருங்கடலேழுடையவனியினெல்லை
கேழ்கிளர்ந்தசெங்கதிரவன்கிளர்வெயிற்கற்றை
சூழ்கிடந்தனவெத்துணைசொல்லினத்துணையே. (2)

அன்னபூதலத்தும்பரினலர்கதிர்ச்செல்வன்
மன்னுமண்டலமிலக்கமியோசனைமதிக்கடவுள்
துன்னுமண்டலமதனின்மேலத்துணையதன்மேன்
மன்னு தாரகைமண்டலம்விளம்பினற்றாமால். (3)

ஈதின்மேற்புதன்மண்டலமிலக்கமோரிரண்டாம்
ஓதுசுக்கிரனுலகதன்மீதிரண்டிலக்கங்
கோதில்சேயுலகத்துணைகுணிக்கின்மேலதனின்
மீதுபொன்னுலகத்துணையோசனைவிளம்பும். (4)

இதனின்மேற்சனிமண்டலமிலக்கமோரிரண்டாம்
அதனின்மேலெழுமுனிவரரமர்ந்தினிதுறையுந்
துதிகொண்மண்டலமிலக்கமொன்றதனின்மேற்றுருவன்
பதமிலக்கமொன்றியோசனையாமெனப்பகர்வார். (5)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பூதலத்தின்மேற்பதினைந்திலக்கமாகும்புவலோகமதனும்பர்சுவலோ
கந்தான், ஏதமறுமெண்பத்தைந்திலக்கமாகுமிதனின்மேன்மகலோ
கமிரண்டுகோடி, ஓதுசனலோகமதன்மேலெண்கோடியும்பரிற்பன்
னிருகோடிதவலோகஞ்சேர், மேதகையவாங்கதன்மேலீரெண்கோடி
விளங்குறுசத்தியலோகம்விளம்புங்காலே. (6)

ஆங்கதன்மேற்பிரமபதமூன்றுகோடியதன்மேன்மாயவனுலகமூன்று
கோடி, ஓங்குமதன்மேற்புனிற்றுத்திங்கள்வேணியும்பர்பிரானுறை
புலகநான்குகோடி, ஈங்கிதன்மேலிவைமுழுதுமண்டபித்தியொருகோ
டிலமுதலாமீதுகாறும், நீங்கருமைம்பதுகோடியாகுமேலோர்திகழ்
த்திடுமியோசனைமறைநூனெறியினின்றோய். (7)

ஓதியவிம்மூவுலகமனைத்துந்தோன்றவுலப்பரியதிருவருளாலினிதி
னீன்று, காதலுடன்காத்தழிக்குமிச்சைக்கென்றுங்காரணமாய்க்கா
ரணாதீதமாகிச், சாதல்பிறப்பிவையின்றியநாதியாகித்தற்பரமாய்த்
தனிதிகழுமவனேதண்ணீர்ச், சீதநெடுந்திரைக்கங்கைபுடைசூழ்
காசித்திருநகரிலவீற்றிருக்குஞ்செல்வன்றனே. (8)

தாங்குமெயிலொருமூன்றுமெரியமுன்னந்நகைகோட்டியபரமன்சு
டர்செய்கேமித், தாங்கியசெந்தாமரைக்கட்டேவைநோக்கிச்சராசர
ங்களனைத்தினுந்தானேயாகி, நீங்கரியமுத்தொழிலுமியற்றுகென்ன
நிறையுளமானரியணையிலினிதினேற்றி, ஓங்குகதிர்நவமணியின்முக
டுவேய்ந்தவொழுகொளிச்சாமரைகளிரண்டுவப்பினல்கி. (9

பழவயிரச்சலாகையொருகோடிவேய்ந்துபாயிருள்சீத்தொளிர்காம்பு
கோளுவிச்செய்ய, அழலுமிழுமணிகுயின்றமகுடஞ்சேர்த்தியாயிரமி
யோசனைபரப்பினளவைத்தாக, வழுவறுநூற்கடல்கடந்ததெய்வத்
தச்சன்மனத்தினன்மிகவருந்தியினிதிற்செய்த, முழுமதியினெழில்
கவற்றிநிலவுகாலுமுத்தநெடுந்தனிக்குடையொன்றுவந்துநல்கி.(10)

புலவுகமழ்சுடரிலைவேலமரர்விஞ்சைப்புரவலர்கின்னரரியக்கர்சித்தர் நாகர், குலமகளிரொருகாழ்முத்தணிந்துவீங்குகொம்மைமுலைப்பொறைசுமந்துகுழைந்துதேம்பி, அலமருநுண்ணிடைவருந்தநடிப்பவின்ஞேரஞ்சலிசெய்தலர்மாரிபொழிந்துபோற்ற, மலைமகடன்செழுங்கரத்தாற்கலன்கள்பூட்டிமலர்மகளேயாங்கவன்பாலமைப்பமன்ஞே.11

பொழிகதிர்நித்திலங்கொழிக்கும்புணரியேழிற்புரிவளைசூலுளைந்தலறிமுத்தங்காலும், ஒழுகுபுனற்கங்கைமுதனதியிற்றெண்ணீரொள்ளொளிப்பொற்குடத்தேந்திமுறையிஞட்டி, மழகதிருமிளவெயிலிற்கற்றைகாலுமணிமவுலிசூட்டிமலர்ப்பொருட்டின்மேய,பழமறையோன்முதலமரரியாரும்போற்றிப்பணிகவெனமதுமலர்த்தாட்பணிதல்செய்வார். (12)

குழந்தைமதிக்கோடுரிஞ்சமுகைவாய்விண்டுகொழுநறவுகொப்பளிக்குங்கொன்றைமாலை, தழங்குதிரைப்புனற்கங்கைபசும்பொன்றூற்றுந்தன்மையெனத்தாதுக்குஞ்சடிலத்தெம்மான், முழங்குதிரைப்பாற்கடலினடுவட்டுஞ்சுமுகுந்தன்முகநோக்கியநம்பொருளோடின்பம், வழங்குதிநீயெவ்வுயிர்க்குமுத்தியாமேவழங்குதும்மலமெறிந்தமதியிஞேர்க்கே. (13)

ஆற்றல்வடிவாட்டடக்கையவுணராலுமகல்விசும்புதனிபுரக்குமமரராலும், மாற்றறிதாயெவ்வுயிர்க்குமயக்கஞ்செய்யுமாயைநினக்களித்தனமெம்மிடப்பானீயே, ஊற்றிருந்துநறவொழுகுந்துளவத்தாரோயுனையிகழ்ந்தோரெமையிகழ்ந்தோரென்னவோதி, ஏற்றையிருங்கொடியுயர்த்தகங்கைவேணியிறைவனுயர்தடங்கயிலையெய்திஞனே. (14)

பொறிவரிவாளரவுபடப்புடைக்குஞ்சீற்றப்புள்ளரசுவலனுயர்த்தபூவைவண்ணன், மறியிளமான்கரத்தேந்துமண்ணல்செய்யமலரடிதன்மனத்திருத்திமகிழ்ச்சிகூர்ந்து, பெறலரியவைகுந்தத்தடைந்துதீந்தேன்பில்குபொலந்தாதுக்குந்தருவினீழ,லுறைதருவானவர்ப்பேணியவுணர்ச்செற்ருங்குறைந்தனஞன்மறைதெரிந்தவுணர்வின்மிக்கோய். (15)

*ஆதலகினிலையனைத்துமொழிந்தேமீளாமுத்திபெறுந்தன்மையினி*
*மொழிவங்கேட்டி, நீதருமாயாபுரியினுடலநீத்தசெய்தியினல்வைகு*
*ந்தத்தினிதின்மேவிக், காதலுறுமரமகளிர்குமுதச்செவ்வாய்க்கதிர்*
*முறுவலின்னமுதங்களிப்பமாந்திப், போதுறைநான்முகன்யாண்டி*
*லோராண்டெல்லைபுத்தேளிரடிபரவப்பொருந்திவாழ்வாய்.* (16)

இருபத்துமூன்றாவது சிவசன்மாவுக்கு
அண்டத்தினளவுகூறியதும் மாலுக்கு முடிசூட்டியதுமாகிய
அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—710.

## இருபத்துநான்காவது
## *சிவசன்மா முத்திபெற்ற அத்தியாயம்.*

---

*எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

*பாகடுத்தலைக்கடைசியர்களைந்தபணிமலர்குதட்டிமோட்டெருமை*
*நாகிளங்கமுகினறுநிழற்றுஞ்சுநந்திவர்த்தனமெனுநாட்டில்*
*வேகவெஞ்சிலைக்கையரசரேத்தெடுப்பவிருத்தகாளப்பெயர்மருவி*
*ஓகையோடுலகமொருகுடைநிழற்றவுனதடிப்படுத்திவீற்றிருப்பாய்.*
(1)

*ஒண்டொடியனங்கலேகையேமுதலாமொருபதினாயிரமகளிர்*
*வண்டுபாண்முரலுநறுந்தொடைகிடந்தவளரிளவனமுலைமணந்து*
*தெண்டிரையமிழ்திற்கனிந்தமென்மழலைச்சிறுவர்முந்நூற்றுவர்ப்பய*
*ந்தாங், கெண்டிசையரசரிடுதிறையளப்பவிருநிலம்புரந்திடுநாளில்.* (2

கங்கைநீர்ப்படிந்துகாவடிகொணர்ந்தகலைமறைமுனிவர்நிறபரவி மங்கையோர்பாகத் தண்ணலவீற்றிருக்குங்காசியின்வளமெடுத்துரைப்பத், தங்குமுற்பவத்தினறிவுவந்தெய்தித்தடங்கணீர்வாரவுண்மெகிழ, இங்கியாமுரைத்தயாவையுங்கருதியின்பவாரிதியிடைத்திளைப்பாய். (3)

காவடிகொணர்ந்தமறையவர்க்களப்பில்காசொடுமிருநிதிவழங்கிக் கோவடுசுடர்வேற்றிறல்கெழுமகற்குக்கொழுங்கதிர் மணிமுடிசூட்டி ஏவடுதடங்கட்செய்யவாயனங்கலேகையோடின்னருள்சுரக்கும் மாவடுநோக்கிபங்கன்வீற்றிருக்குங்காசியிலெனல்லையின்மருவி. (4)

அருமறைக்கிழவர்முகந்துகொண்டேகவளப்பருநிதிபலவழங்கி இருவினைதுடைக்குமிலிங்கமொன்றமைத்தாங்கீரம்புனல்வாவியொன்றகழ்ந்து, திருவமர்செம்பொற்சினகரமியற்றித்திருவிழாநடத்திமேல்லை, உருவவார்சடிலனிலவுவெண்ணீற்றனொருசிவயோகிவந்தடைவான். (5)

அடைந்தநீயாரையணங்கிவளியார்கொலாலயமியற்றினரியாவர் தொடர்ந்தவல்வினைவேரறுத்திடுமிலிங்கப்பெயரெதுசொல்லுதியென்ன, மிடைந்துவண்டறைதார்விருத்தகாளப்பேர்வேந்தனியான் மென்சிறையறுகால், குடைந்துதேனருந்துபூங்குழலிவளென்கோமனைக்கிழத்திமற்றுமால். (6)

திருவமரிலிங்கப்பெயருணர்ந்திலன்யான்சினகரமியற்றினன்சிவனே அரியநற்றவஞ்செய்முனிவரவெனலுமன்புமீக்கூர்தரவிந்தக் குருகுபாய்தடத்தினீர்முகந்தளித்தியென்னலுங்கொணர்ந்துநீரளிப்பப், பருகலுங்கிழவுத்தன்மைநீத்தெண்டோட்பழமறையந்தணனாகி. 7

கிற்றலுமுன்னைக்கிழவுருநீத்துகிருமலனுருவினையெடுத்த தெற்றெனவேலொடுமிளகைகோட்டியீங்கிவண்முற்பவமதனிற் கற்றுணர்சுபாசுப்பெயர்மறையவன்றன்கன்னிகைசுபானனையென்பாள், நற்றவம்புரியுமயித்துருவிவளைமணந்துதன்னுளுலந்ததனல். (8)

இம்மையாயிவளுமந்நெறிவழாதுகடவுளர்ப்பேணியெஞ்ஞான்றும்
உம்மையினேற்றவருந்தவப்பேற்றானுரவுத்தோள்வழுதிதன்மகளாய்
இம்மையினுதித்துன்மனைவியாயினைநீயிறந்தமுற்பவத்தினில்வளந
கர், செம்மைசேர்மதுராபுரியினன்மறையோர்சிவசன்மனெனும்பெ (9)
யர்தரித்தாய்.

வங்கெழுமாயாபுரியினிலுடலமாய்ந்தசால்வைகுந்தமதனில்
கனங்கனிவண்ணனடிமலர்தொழுதுகழிபெரும்போகங்களுகர்ந்து
விளம்பருஞ்சேடபுண்ணியமதனைந்திவர்த்தனனெனவிளங்குந்
துளங்கலிறேயத்தரசனாய்த்தோன்றிச்சுரிகுழலோடுமீங்கடைந்தாய்.
(10)

வேந்தநீயமைத்தவிலிங்கநன்னுமம்விருத்தகாளேசுரமாக
ஆய்ந்தநன்மலராலருச்சனைபுரிந்தோரரும்பெறன்முத்தியினடைக
மாந்தளிர்மேனியணங்கொடுநீயும்வருகெனமலர்க்கரம்பற்றிப்
பூந்துணர்க்கொன்றைவெறிமணங்கமழும்புராரிதன்னிலிங்கத்திற்பு (11)
குவான்.

என்றவர்கூறவருமறையோனுமீர்ந்துழாய்மாயவன்பதத்திற்
சென்றினிதடைந்துபெறலரும்போகந்திளைத்தபினந்திவர்த்தனத்தி
ல், வென்றிவேலிறையாய்க்காசியிலடைந்துமேதகுமுத்தியெய்தின
னென், றின்றமிழ்முனிவன்விழைவொடுமுலோபாமுத்திரைக்கி (12)
னிதியம்பினனால்.

## இருபத்துநான்காவது சிவசன்மா முத்திபெற்ற அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—722.

## இருபத்தைந்தாவது
## அகத்தியர் முருகனையடைந்த அத்தியாயம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பொருவருகற்பிற்பன்னியோடின்னபுகன்றசீரருந்தமிழ்முனிவன்
சரிதையானின்னுமுரைக்குவலென்றுதவமொருவடிவெடுத்தனைய
விரிதருகேள்வியாதன்முன்னுரைத்தவண்ணம்யான்விளம்புவலெ
ன்ன, அருமறைக்கிழவனையநன்முனிவர்க்கருளொடுஞ்சூதனுண்டு
ரைத்தான். (1)

துயிலியல்கன்னிக்கற்புடைப்பன்னிதன்னொடுந்தூய்மறைமுனிவன்
மயிலினமகவுமுயர்திருச்சயிலம்வலங்கொடுமழலையாழ்மிழற்றக்
குயில்குடைந்தாடமுகைமுறுக்குடைந்துகோங்கவிழ்படப்பையூடேகி
அயிலுடைக்கடவுளினிதுவீற்றிருக்குமுலோகிதவரைமருங்கடைந்
தான். (2)

அண்ணலங்குடுமிக்கவிழ்தலையருவிகொழித்திடுமறையுரலதனில்
வண்ணவாண்முகத்துக்கொடிச்சியர்யானைமருப்பினுலவனமிடிக்கு
ங், கண்ணகன்சாரற்காடெறிந்துழுநர்காழகில்சுடுபுகைதவழ
விண்முகில்வெதும்பிவெய்துறைபிலிற்றுமீயுயர்பனிவரையிவர்ந்தா
ன். (3)

குரைகடல்வயிறுகிழியவேரோட்டுங்கோடுயர்மாமுதறடிந்து
வரையகடுளையமாட்டியவடிவேல்வானவர்க்கிறைவனைநோக்கி
இருகணீர்வாரமெய்ம்மயிர்பொடிப்பவென்புநெக்குருகநெஞ்சுவர்து
முருகுகொப்புளிக்குநறுமலர்தூவிமுழுதுணர்முனிவனேத்துவனல்.
(4)

முருகுவாய்மடுத்துக்கோடிவண்டாற்றுமுளரியந்தவிசுறைகடவுட்,
கரியநான்மறையின்பொருடெரிந்துரைத்தேதாயாய்பிழிக்குறுந்துளிபி

விற்றுந், தெரியல்சூழ்கிடந்தபன்னிருதடந்தோட்செம்மலேயென
வெடுத்தேத்திப், பொருவருமமரர்மணிமுடியுரிஞ்சுபூங்கழல்சென்னி
சேர்த்தினனால். (5)

தொழுதலுமெழுகென்றவன்முகநோக்கித்துகிரெறிதடந்திரைப்பு
ணரி, முழுவதுங்குடங்கைகொண்டினிதருந்துமுனிவரவமரர்வந்திர
ப்ப, ஒழுகொளிப்பரிதிபோக்கறநிவந்தவுயர்வரையிருநிலத்தடக்கி,
விழைவொடும்போந்ததுணர்ந்தனனிருத்திவிளம்புவலெனவிவைவி
ளம்பும். (6)

பாடகத்தொடர்ச்சிப்பழவினைசிமிழ்ப்பப்பற்றறவெறிந்துவீட்டளி
க்குஞ், சேடமைகாசியுறையுநர்மேனிதீண்டினும்பவக்கடலழுந்தார்,
நீடுயர்தவமாண்டியற்றியீண்டடைந்தநின்னிகரியாரெனவியவாத்,
தாடொழுமுனிவன்மேனிதைவந்து சரவணமுயர்த்தசேயுரைப்பான்
(7)

திறந்தடைப்பில்லாவாயிலோரொன்பான்செறிந்ததோற்றுருத்தியி
னாலும், உறைந்திடும்பிராணவாயுவாதாரவுயிரஃதொருவுதல்வியப்
பன், றறைந்தமற்றதனிற்றங்குதற்கேனையதிசயமென்பதையுணர்ந்து
ங், கறங்குநீர்க்கங்கைக்காசிமாநகரையொருவுதல்கழிமடனாமால். (8)

அவிசொரிந்தழலினைம்புலனடக்கிய தன்பயன்விழைவுற்றோங்கும்
இவுளிமாமகங்களளப்பிலவியற்றியெண்வகையோகமாற்றினரும்
நவையடிப்பொறிமான்கன்றுகைக்கொண்டகறைமிடற்றெந்தைவீற்
றிருக்கு, நவையறுகாசிகாசியென்பவர்போனவிலருந்துறக்கவீடடை
யார். (9)

என்றினிதுரைத்துக்காசிமாநகரையிதயபங்கயத்தினிலிருத்திக்
குன்றெறிசுடர்வேற்குரிசில்கண்முகிழ்த்துக்குழையொடுமிருத்தலுமம
லன், மன்றலங்கூந்தலுமையொடுமுறைத்தல்கவான்மிசைவதிந்து
நீகேட்ட, தொன்றறவுரைத்தியெனமுனிகேட்பவுருள்பசுந்தாரவனு
ரைப்பான். (10)

மாயிருஞாலமெறிபுனற்செந்தீவளியுயர்வானகமுதலா
மேயதத்துவங்களனைத்தையுங்கடந்தவிண்ணவனினிதுவீற்றிருக்கு
ம், பாய்புனற்கங்கையாறுசூழ்கிடந்தபகர்வருங்காசியின்பெருமை,
ஆயிரமுகத்தாலுரைப்பரிதென்றாலறுமுகத்தெதங்ஙன்யானுரைக்கே
ன். (11)

களிபுனனகரின்றேற்றமுமதற்குநவையறுகாசிமாமயானம்
வளமலிவாரணசிபுகழுருத்திரவாசமானந்தகானகமென்
றுளமகிழ்ந்துரைக்கும்பெயர்புணர்ந்தனவுமுயர்மணிகன்னிகையாவு
ந், தெளிவுறவுரைப்பல்கேட்டிநீயென்றுச்சேவலங்கொடியவன்புகல்
வான். (12)

## இருபத்தைந்தாவது அகத்தியர் முருகனையடைந்த அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—734.

# இருபத்தாறுவது
# மணிகன்னிகையின் சிறப்புரைத்த அத்தியாயம்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

இருபெருஞ்சுடரும்வானத்தியங்கியகோளுநாளும்
விரிதருபுவனமியாவும்விளங்குதத்துவமுநேமி
அரியயன்முதலாவுள்ளவமாருங்குணங்கண்மூன்றும்
உரைசெயற்கரியவிந்துநாதமுமொடுங்குங்காலை. (1'

வாக்கொடுமனத்துக்கெட்டாவயங்குபேரொளியதாகிப்
போக்கொடுவரவுமின்றிப்புனிதமாயேகமாகி
நீக்கரும்வியாபியாகிநித்தமாய்ச்சித்தாய்வைகும்
மேக்குயர்பொருட்கிரண்டாம்விச்சையொன்றுதித்ததன்றே. (2)

அருவமாயேகமாயவரும்பொருளருளினாலோர்
உருவினையமைத்ததிந்தவுருவம்யான்யானேயார்க்குந்
தெரிவரும்வியாபியாகிச்சித்துமாயெவரும்போற்றும்
பொருவருமாதியாகியழிவின்றிப்பொருந்துவேனால். (3)

ஏகனுயிருக்குமேல்வையென்னினீங்கரியளென்றும்
மோகமில்பிரதானையென்றுமொழிபிரகிருதியென்றும்
போகமேபுரியும்புத்திதத்துவச்சென்னியென்றும்
ஓகையின்மறைகள்கூறுமுனையினிதளித்திட்டேனால். (4)

பன்னெடும்பூதமெல்லாம்படைக்குமுன்பவளச்செவ்வாய்
உன்னொடுமினிதுவைகவொளிதிகழ்மஞ்சமாக
மன்னுமிக்காசிதன்னைவகுத்தனனென்னவெந்தை
என்னமரன்னையோடுமினிதெடுத்தியம்பல்செய்தான். (5)

உடைதிரைப்பரவையேழுமுடைந்துயரண்டகோடி
அடைவுகெட்டிறந்தஞான்றுமமலனுமுமையுமாக
விடலரிதாகியீங்குவீற்றினிதிருத்தறன்னால்
இடுபெயரிதற்குநாளுமவிமுத்தமென்பர்மாதோ. (6)

பொருவருமறைகணான்கும்புனைந்துரையென்றுகூறும்
மருளுடைமாந்தர்க்கிந்தமறைமொழியுரைக்கிற்றீதாந்
திருவமர்காசிநாளுஞ்சிவானந்தமளிக்குமாற்றாற்
பெருகுமானந்தகானமெனப்பெயர்பெற்றதன்றே. (7)

பொன்னவிர்கடுக்கைவேய்ந்தபுனிதற்றிளந்திங்கட்கண்ணி
முன்னவன்பின்னுமற்றோர்புருடனைமுறையினல்க
மன்னியவிச்சையாற்றன்வாமபாகத்தைநோக்க
மின்னகுதிகிரியேந்தும்விண்ணவனுதித்தானன்றே. (8)

தண்ணறும்பூவைவண்ணன்றமரைவதனநோக்கி
நண்ணுநின்பெயரெஞ்ஞான்றுநாரணனாகமற்றுன்
உண்ணிகழுயிர்ப்புவேதமவற்றினாலெவையுமோர்கென்
றண்ணலுமுலகம்பூத்தவணங்கொடுமறைந்துபோனான். (9)

ஐயனதாளைசென்னிகொண்டலர்கமலக்கண்ணன்
கையுறுநேமியாலோர்கடிமலர்வாவிதொட்டு
மெய்யுறவேர்வுதன்னானிறைத்தனன்கரையின்மேவி
மையிலைந்தயுதமியாண்டுவான்றவமாற்றினானே. (10)

சேட்டிளம்பரிதியன்னதிருமணிகிடந்தமார்பன்
ஈட்டியதவத்தைநோக்கியிளம்பிறைக்கண்ணியெந்தை
பாட்டளிகூந்தற்செவ்வாய்ப்பரையொடுமினிதினெய்தித்
தோட்டலரிதழித்தண்டார்ச்சுடர்முடிதுளக்கிச்சொல்வான். (11)

முருகவிழ்துளவத்தண்டார்துயல்வருமுழவுத்திண்டோள்
திருமறுமார்பவுன்றன்செய்தவமகிழ்ச்சிகூர்ந்தேதங்
கருதுவயாவுமின்னேதருகுவங்கழறுகென்ன
உருகியவுள்ளத்தோடும்பணிந்தவனுரைக்கலுற்றான். (12)

நீற்றொளிபழுத்தமேனிநிமலவோர்சிறுவனுய்யக்
கூற்றுயிருண்டவெற்றிக்குரைகழற்கமலப்போதிற்
போற்றுமென்னிதயத்தும்பிபொருந்தியெஞ்ஞான்றுநீங்கா
மாற்றருமயக்கந்தீர்ந்துவந்தினிதிருத்தல்வேண்டும். (13)

என்றலுமுலகம்யாவும்வெருவரவாற்றியெய்துங்
கன்றிளமறிமானேந்துகண்ணுதற்கடவுணோக்கிக்
குன்றினின்மாரிகாத்தகுரிசினீவிழைந்துகேட்ட
மன்றநல்வரங்களியாவுமகிழ்வொடும்வழங்கினேமால். (14)

களங்கனியனையமேனிக்கண்ணநின்றவத்தென்சென்னி
துளங்கலுங்குழையிற்றாழ்ந்தசுடர்மணிவிழுந்தவாற்றால்
வளங்கெழுமிந்தவாவிக்கொளிமணிகன்னிகைப்பேர்
விளங்குகவிதனிற்றோய்ந்தோர்பெறலரும்வீடுசேர்வார். (15)

நால்வகைத்தோற்றத்துள்ளவுயிரெலாநலங்கொள்வாவிப்
பாலுயிருலப்பின்மீளாப்பதத்தினிற்சேருமியாருங்
காலவன்பாசந்தத்தங்கழுத்துறப்பட்டதன்மை
மாலுறவுணர்ந்துமென்றேகாசியின்மருவல்செய்யார். (16)

யோசனைநூற்றுக்கப்பாலுறையுநரேனுமிந்தக்
காசியைநினைந்துவீயிற்கற்பகத்தருவினீழல்
தேசொடுமமர்ந்துபின்னராரசராய்ப்புவியிற்சேர்ந்து
மாசிலிந்நகரின்மேவிமருவரும்வீடுசேர்வார். (17)

உருவமும்பொருளுமாக்கையிளமையுமொருங்குநோக்கி
அரிவையர்முயக்கினுள்ளமகிழ்ந்துவெவ்வழல்கட்கூற்றின்
எருமையேறணிந்தகண்டையொலிசெவிக்கிசைத்ததென்று
மருவருங்காசிசேரார்மக்களுட்பதடியாவார். (18)

இருபத்தாருவது மணிகன்னிகையின்சிறப்புரைத்த
அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—752.

## இருபத்தேழாவது
## கங்கையின் சிறப்புரைத்த
## அத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஆதியுகத்தில்யோகத்தான்முத்தியடையுமதன்பின்னர்
ஓதுமுகத்திலருந்தவத்தான்முத்தியுளதாமோங்கொளிசேர்
சோதிஞானத்தான்முத்திமூன்றாமுகத்திற்றுன்னுமுயிர்
காதலோடுங்கலியுகத்திற்கங்கைபடியின்வீடடையும். (1)

அன்பின்மலர் தூய்ச்சிவலிங்கமருச்சித்தோர்களமரரெல்லாம்
இன்பமெய்தவழிபட்டபலனெய்தி தல்போலடைந்தவர்கள்
துன்பமகற்றும்புனற்கங்கைதோய்ந்தோர்கடவுணதியினைத்தும்
நன்குபடியும்பேறனைத்துமொழியாதினிதினண்ணுவரால். (2)

கடவுட்கங்கைநதிப்படிவான்செல்லவொருவன்கருதுமுனம்
இடர்கூர்பாவமவனையொழிந்தியாண்டுசெல்வோமெனக்கருதும்
விடயமதனின்மனம்போகாதடக்கிஞானவெறுவெளியில்
அடையுமவரேகாசிநகாரடைவார்பெறும்பேறடைவாரால். (3)

கும்பமொருகைதனிலேந்தியொருகைகுளிர்பூம்புனல்சொரிய
அம்பொற்கரமொன்றருள்வரதமபயமொருகையாகவமைத்
தும்பர்மதியமொருகோடியொளிர்வதென்னவொளிபரப்பும்
பம்புதிரைவான்புனற்கங்கைதன்னையுளத்திற்பாவித்தே. (4)

அருளினோடுமருக்கியமேமுதலவழிபாடினிதாற்றித்
தெருளாவென்னைநான்முகனைத்திருமாறன்னையிமவானை
மருளிறவத்துப்பகீரதனைமலயச்சாந்தால்வாலரியால்
விரகினமைத்துக்கொழுமலர்தூய்விருப்பினோடும்பணிந்தேத்தி. (5)

கன்னிவாழைகவிழ்தாற்றுக்கனியெட்பயறுசெழுந்துவரை
இன்னமறையோர்மகிழ்வெய்தவியைந்தநல்கிமீனைமை
அன்னந்தவளேநீர்க்காக்கைகுரண்டமுதலவணிகிளர்செம்
பொன்னின்மாவில்வெள்ளிதனிலமைத்துக்கங்கையிடைப்போக்கி. 6

இன்னவாறுமகிழ்சிறப்பப்பூசைபுரிந்தோரெழுபிறப்பும்
முன்னவரியகொடும்பாவமனைத்துநீங்கிமுதக்குறைவால்
தன்னையுணர்ந்துமுழுதலகுந்தாஞயுறையுந்தவத்தோனுந்
துன்னவரியபேரின்பத்துறைவாய்ப்படிந்துதிளைத்திடுவார். (7)

## இருபத்தேழாவது கங்கையின் சிறப்புரைத்த அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—759.

# இருபத்தெட்டாவது
# கங்கையில் எலும்புவிழுந்த அத்தியாயம்.

---

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சூழ்ந்தோரென்புகழைபுரட்டுங்கங்கையாற்றினைத்துணைனான்
றழிந்திடாதுகிடந்திடுமற்றந்நாள்காறுமாங்கவர்கள்
விழைந்தவன்போடரமகளிர்வேய்மென்றடந்தோணலனுகர்ந்து
வழிந்துதேறன்முருகுயிர்க்குந்தருவினீழல்வாழ்குவரால். (1)

வெய்யகொடும்பாதகம்புரிந்துவிளிந்தோரென்புகங்கையிடைப்
பெய்யினவர்தீவினையொருவிப்பெறுதற்கரியவான்கதிசேர்ந்
துய்யுந்தன்மையுரைத்தியெனவுலகம்பூத்ததிருவுந்தி
ஐயன்றொழுதுகேட்டிடலுமானேறுயர்த்தோனறைகுவனால். (2)

புயல்வாய்தடவுமடற்கமுகின்புனிற்றுப்பசுங்காய்க்குலைசிதறக்
கயவாய்வாளைக்களிறுகளுங்கலிங்கநாட்டிலொருமறையோன்
மயறீர்கேள்வித்துறையனைத்தும்வழுத்திமறையோர்நெறிசிறிதும்
பயிலானாகிப்படிற்றொழுக்கம்பயின்றுதிரியுமந்நாளில். (3)

கல்கூர்ந்துழலுங்கைக்கோளன்மனைவியொருத்திநலனுகர்ந்து
செல்லற்கரியகொடுங்கானிற்கரந்துசேய்ச்சென்றடிவருந்தி
அல்லல்கூர்ந்துவிழிதுயிலுமறையோன்றன்னையயிலெயிற்றுக்
கொல்லுஞ்சினத்தினோருழுவையாண்டுக்குறுகிக்கொன்றதுவே. (4)

எரிகட்பகுவாய்ப்புலிப்போத்தாலிறந்தமறையோனிடக்காலை
விரிமென்சிறையகழுகொன்றுகவ்விவிசும்பினேகுங்கால்
திருகுசினத்தினொடும்வேறோர்தீவாய்க்கழுகுபறித்திடலும்
பெருகுதிரைவான்புனற்கங்கைப்பேரியாறதனில்வீழ்ந்ததுவே. (5)

இறந்தமறையோன்றனைப்பற்றியெரிசெங்குஞ்சிநமன்றூதர்
பிறங்குநிலவுக்கதிருமிழும்பிறைவாளெயிற்றுக்கூற்றுவன்முன்
கறங்கினிதயஞ்சுழன்றயரக்கடிதிற்கொடுபோயுய்த்திடலும்
மறந்தாழ்நெஞ்சிற்சித்திரகுத்திரரைநோக்கியறைந்திடுவான். (6)

இன்னோனிழைத்தவிருவினையும்வழுவாதுரைத்திடெனவேலோடும்
அன்னோர்மறலிதாள்வணங்கியையமறைதேரந்தணர்க்குச்
சொன்னவொழுக்கநெறியினைத்துந்துறந்துபிறனில்விழைந்தவரும்
முன்னவரியபாவமிவன்புரிந்ததுரைக்கமுடியாதால். (7)

கற்பின்மகளிர்தமைவலிதிற்கலந்துங்கள்ளுண்மாந்தருடன்
அற்பினையின்றுங்கொலைகளவுபுரிந்துமறவோர்தமையிகழ்ந்தும்
விற்கலாகாச்செம்பஞ்சிநறவுபகர்ந்தும்வெண்ணிணத்திற்
பற்கண்மறையத்தசைநுகர்ந்தும்பன்னாள்களிப்பினிருந்தனனால். (8)

எரியுங்கொடியராவுரவத்திற்கற்பகாலமிவன்கிடத்தற்
குரியனெனலுஞ்சினங்கதுவியெரிவாய்நாகினுய்த்திடெனத்
திருகுசினவெங்காலபடர்சிக்கயாத்துமறையோனைக்
குருதிவாயிற்கொப்புளிக்கக்குத்திநாகின்மடுத்தனரால். (9)

உய்க்குங்காலையவனிடக்காலதனையொழுகுபசுங்குருதி
கக்குந்தீவாய்க்கழுகுபுனற்கங்கையாற்றின்வீழ்த்தியதால்
புக்குநமதுகணமவனைப்பொன்செய்விமானத்தினிதேற்றி
நக்கபசும்பொன்சுடர்பரப்புநாகலோகந்தனில்விடுத்தார். (10)

அனையகடவுட்பெயராற்றங்கரையினானென்றலங்கரித்துப்
புனலினோடுமுளமகிழ்ந்துபுனிதமறையோர்க்கினிதளிப்பின்
வினையினீங்கியப்பசுவின்மெய்யின்மயிரொன்றொன்றினுக்குக்
கனைவண்டிமிர்பூந்தருநிழலிற்கற்பகாலமினிதிருப்பார். (11)

## இருபத்தெட்டாவது கங்கையில் எலும்புவிழுந்த அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—770.

## இருபத்தொன்பதாவது

## கங்கையின் ஆயிரநாமமுரைத்த அத்தியாயம்.

என்னலோடும்புனற்கங்கையெய்தியாடவலியில்லார்
பின்னற்றரங்கந்தவழ்கங்கைப்பேரியாருடும்பெரும்பேறு
துன்னும்வண்ணமுரைத்தியெனச்சுடர்செய்திகிரிப்படைசுமந்த
கன்னித்துளவமால்கேட்பமுக்கட்கடவுள்கட்டுரைக்கும். (1)

அமுதேதாதகையச்சுதையனகையதுலையனந்தையபிராமி
கமலைகவுரிகந்தவதிகங்கைகாந்தைகலியாணி
உமையாமளையானந்தவல்லியேகையுதாரையோங்காரை
விமலைதாரைபராநந்தைவிபூதிதேவிதயாதாரை. (2)

கருணையகோரைபராசத்திகாந்திதுர்க்கைநிராலம்பை
வரதைகாமரூபைதிரிபதகையபயைவசுதாரை
பரமீச்சுரவல்லபைசொரூபைபானுமதிசுவினிவிசையை
விரதையனுதைநாததவரூபைமாதாவிபாவரியே. (3)

சத்திவிநதைசீலவதிதாருசாரைகுணாதீதை
சித்திரூபைரதிவாமதேவிமந்தாகினிவாணி
பத்திரைலீலாவதிசாந்தைபவானிபாகீரதிநிமலை
முத்தியருண்மானினிவேதமுதலாரியைகாயத்திரியே. (4)

வேகவதியம்பிகையைந்திரத்துதிசந்தினிசானவிவிளங்கு
போகவதிசொற்கலாவதியோகினிமாதவிபுண்ணியைமுதல
ஆகவருமாயிரம்பெயருமுள்ளத்துணரினரும்பிறவிச்
சோகந்தணிக்கும்புனற்கங்கைதோய்ந்தபலமிங்கடைகுவரால். (5)

இன்னகடவுணாமங்களியாவுமெழுதிமனையில்வைப்பின்
முன்னைவினைகடீர்ந்துலகமுழுதுமேத்தவருபுதல்வர்

மன்னுந்தியமுதல்பெருக்குத்திருவினோங்கிவாழ்வரென
மின்னுகதிர்ச்செஞ்சடைக்கடவுள் திருமாலோடும்விளம்பினனால். (9

## இருபத்தொன்பதாவது கங்கையின்ஆயிரநாமமுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—776.

## முப்பதாவது
## வாராணசியின்சிறப்புரைத்த அத்தியாயம்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சகரர்வீட்டின்பந்துய்ப்பத்தழங்குநீர்க்கங்கையாற்றைப்
பகிரதன்கொணர்ந்துதெண்ணீர்ப்படுகரின்விடுத்தலாலும்
முகில்புரைகரியமாயன்றவத்தினால்முதல்வன்காதில்
திகழ்மணிவீழ்தலாலுஞ்சிறப்புடைத்தாயதன்றே. (1)

சார்ந்தவர்பாவங்கைததகைதலானவரணையெனறும
ஆர்ந்தநீர்படிந்தோர்பாவமறுத்தலாலசியேயென்றும்
சேர்ந்தனநாமந்தெற்குவடக்கதாயுண்மைதேர்ந்தோர்
ஓர்ந்திடுமுத்திவைப்பின்காவலாயொழுகுமன்றே. (2)

குடதிசையதனின்முத்திகொடுக்குந்தேகளியென்றோதுங்
கடகரிமுகத்தோன்றன்னைக்காவலாயமைத்தார்பாவத்
தொடருடைமாந்தர்காசிதுன்றிடாராதறன்னால்
அடல்கெழுகணிச்சியெந்தையருளின்றியடையொணாதால். (3)

முருகுகொப்புளிக்குங்கொன்றைமொய்ம்மலர்க்கண்ணியெந்தை
அருள்பெறார்கடவுட்காசியடைந்திடாரதற்குமுன்னர்
உறைபெறுகாதைதமற்றென்றுண்டெனவிசும்பினோங்குங்
குருகுபேர்க்குன்றங்கொன்றகுமரவேளுரைக்குமன்றே. (4)

கனம்படிந்துண்ணுஞ்சேதுக்கரையினிற்கருணைகுன்றாத்
தனஞ்செயனென்றோர்நாய்கனுளனவன்றந்தைதாயை
மனஞ்செய்துவழுத்தல்செய்வோன்வான்பொருளீட்டியோசை
தினஞ்செயும்வெய்யோனாழிசென்றுழிச்செல்லாநின்றான். (5)

பைந்துழாய்ப்படலைமாலைப்பண்ணவற்கன்புபூண்டோன்
இந்திரதிருவனாகிவறுமையொன்றில்லானேனும்
உய்ந்திடவரியபாவவறுமையொன்றுடையன்வேனில்
மைந்துடையழகனேனும்பிறர்மனைவிழைதல்செய்யான். (6)

மழகதிர்ப்பருதியேய்க்கும்பகட்டெழின்மார்பனிவ்வா
றொழுகிநன்கியற்றுநாளிலுவப்பொடுமுவலையீன்றாள்
குழவுவந்தெய்திநீங்காநோய்பலகெழுமியோங்கத்
தழைவுறுமைம்மேலுந்தியாருயிர்சாம்பினாளே. (7)

பொற்பினிற்செம்மாந்தன்னோன்புலன்வழியுள்ளம்போக்கிக்
கற்பிகந்தல்லசெய்தவாற்றினாற்கற்பகாலம்
எற்பழுந்தியாக்கைவாடநரகிடையெய்துமென்ன
அற்புடைப்புதல்வனெஞ்சத்தாரநொய்தினானே. (8)

நயயுமவணணமமனமகாமலனறுள தநமனண
நீங்கெறிகுமரனன்னையென்பினைச்சேமமாக்கி
வீங்குநீர்க்கங்கையாற்றின்மேதகவிடுவனென்று
நீங்கரும்பொருள்களியாவுநீத்தருநெறியிற்போனான். (9)

போதருநெறியில்வெப்புநோயுறப்பொறுக்கலாற்றான்
எதிலனொருவனெய்தவிதனைநீகொணர்தியென்று
தீதறுசெம்பொனல்கியவனொடுஞ்செல்லுமாற்றிற்
கோதறுவணிகன்றோன்றுமாவணங்குறுகினானே. (10)

ஆங்கவன்புகுதுமுன்னரரும்பொருளென்றுவேடன்
தாங்கருஞ்சுமையைக்கொண்டுகரந்தனன்றாழாதேகி
ஈங்கிதுகாண்டுமென்னநோக்கலுமென்புகாணா
நீங்கருநெறியினோர்பால்நீத்தனன்பதியிற்போனான். (11)

என்புடைச்சுமையைக்காணானேங்கினனுயிர்த்துவிம்மி
அன்புடைவணிகர்கோமானவனடிச்சுவட்டிற்போகி
மன்பெருஞ்சேரிபுக்கோர்வாயிலினடையவன்னோன்
தன்புனையாடையாங்குக்கிடத்தலுங்கண்டுசார்ந்தான். (12)

சார்ந்தவனுறையுள்வைகுந்தையலைநோக்கியின்னான்
காந்தனெற்பயந்தாளென்னைப்பொருளெனக்கவர்ந்துகொண்டு
போந்தனனளித்தல்வேண்டும்பொருணினக்களிப்பலென்ன
ஓர்ந்தவள்கொழுநன்றன்பாலடைந்திஃதுரைக்குமெல்லை. (13)

நாணொடும்போந்துநாய்கன்றன்னொடுங்கானநண்ணித்
தாண்மிகநோவவுள்ளந்தளர்வெய்தத்தேடியாண்டுங்
காணலனாதலாலவ்வணிகனைக்கானிற்போக்கி
மாணகர்தன்னைநோக்கிப்போயினன்கிராதன்மன்னோ. (14)

கானெலாந்திரிந்துசின்னாள்கழிதலுங்காண்டல்செல்லான்
தேனுலாங்கொன்றைவேய்ந்ததேவுறைகாசியெய்தி
வானீர்க்கடவுட்கங்கைமாநதிபடிந்துபோய்த்தன்
கோநகரதனினாய்கன்குறுகிவீற்றிருந்தானன்றே. (15)

புண்ணியத்திருநீர்க்கங்கைக்கணித்தெனப்புகுந்தவென்பு
நண்ணரிதாகிவாளாபோதலால்நளிர்வெண்டிங்கட்
கண்ணியன்மறிமானேந்துங்கடவுடன்னருளாலன்றி
அண்ணலங்காசிதன்னையமரர்க்குமடையொணாதால். (16)

ஆதலிற்றீமையோர்கட்கடையொணாதசியினோடு
மேதகுவரணையாறும்விழைதகவொழுகுமாற்றால்
மாதவக்கிழமைபூண்டமுனிவரவளங்கொள்காசிக்
கேதமில்நாமம்வாராணசியெனவிசைந்ததாமால். (17)

சிறந்துயர்தெய்வக்கங்கைத்தீம்புனலதனிற்சென்று
பிறந்திறந்தாவிக்கின்றபேதையரேனுமூழ்கின்
மறந்திகழ்கணிச்சியேந்துவானவனுருவுகொண்டு
துறந்துளோர்க்கடையலாகாத்துறக்கவீடடைவர்மாதோ. (18)

மலரின்மேலுறைவோன்மேனாள்வைகுண்டமாதியாய
உலகையுங்கடவுட்காசிநகரையுமொருங்குநோக்கிப்
புலனெடுங்கோலிற்றூக்கவறம்பொருளின்பம்வீடு
நிலவியற்காசிதாழ்ந்ததவைநெடும்விசும்பிற்போன. (19)

அவிர்மதிவனைந்தவேணியண்ணல்கட்டழலின்வாய்ப்பட்
டுவர்நிலத்திட்டவித்தினுறுவிதைதோன்றிடாதாற்
புவியிடைமறஞ்செய்வோரும்நல்லறம்புரிந்துளோருந்
தவமிகுகாசிதன்னில்வீவரேன்முத்திசார்வார். (20)

வரித்தடங்கண்ணிபாகன்மருவியகாசிதன்னில்
அருத்தியினுறைவோரெல்லாமமலனல்லுருவுதாங்கி
இருத்தலாற்புவனகோடியாவதுமோசைபோய
உருத்திரவாசமென்னுமுறுபெயருடைத்துமாதோ. (21)

மரித்திடுமளவில்முத்திவழங்குமென்றுணர்ந்தும்வாளா
இருத்தகுகாசிநீங்கிச்செல்கின்றோர்தோன்றுகாலைக்
கருப்பவேதனையுமாவிகவர்யமதூதர்செய்யும்
உருப்பவெந்துயருமியாதுமுணர்ந்திலர்போலுமன்றே. (22)

மண்பெரும்பூதமெல்லாமொடுங்கலின்மாமசானம்
என்பாவ்வொடுக்கமெவ்வாறென்றிடிற்பூமிநீரின்
ஒன்றிடுமந்நீர்வெய்யகனலிடையொடுங்கும்வெந்தீச்
சென்றிருவளியிற்சேரும்வளியிருவிசும்பிற்சேரும். (23)

உயர்விசும்பாங்காரத்திலொளிக்குமாங்காரந்தூய்தாய்
மயர்வறுபுந்தியென்னுங்கானிடைமருவும்புந்தி
பயில்பிரகிருதிதன்னிலடையுமாங்கதுவும்பார்க்கில்
அயர்வறுபுருடன்றன்னையொளியறமறைக்குமன்றே. (24)

மேயகால்கைகள்சேர்த்திப்பழுகழிநிரைத்துவீக்கிப்
பாய்புனல்மயிர்தோல்வேய்ந்துசுவர்த்தசைநிறீஇயபண்பின்
ஆயதோராக்கையில்வினரும்பெறற்சீவனாகி
ஏயவப்புருடன்றானேயினிதுவீற்றிருக்குமாதோ. (25)

முருகவிழ்கமலத்தோனுமுகுந்தனுமொழியத்தோன்றும்
பிரளயமதற்குநாமம்பிராகிருதமென்பராலப்
புருடனதகத்துட்காலமூர்த்தியாம்புனிதன்வைகி
அருளொடுமிருந்தெஞ்ஞான்றுமினிதளித்தருளுமன்றே. (26)

அருள்புரிகாலமூர்த்தியாகுமப்பிரமந்தன்னைத்
திருவளர்காசிவாழுஞ்சிவனெனவுரைப்பர்மேலோர்
பொருவிலப்பரனேதோன்றுபுருடனைத்தொடர்ந்தெஞ்ஞான்றும்
மருவிநீங்காதமூலமலத்தினைத்துடைப்பனன்றே. (27)

மருவருங்கருணையீசன்வருகையினந்திமேவிப்
பிரளயமதற்குச்சூலநுதியினிற்றாங்கிப்போற்
றாவுநீர்க்காசிதன்னையளித்தலாலொருகாலத்தும்
எருமையேறுகைத்தோன்றன்னாற்கலியினாற்பயமின்றாமால். (28)

தேசொடும்பொலிந்துமுத்தித்திருமகளுறைதறன்னாற்
காசியென்றுரைப்பரென்னாக்கடனிறவண்ணன்கேட்ப
ஈசன்முன்னுரைத்ததெல்லாமென்னமான்னையோடு
பேசலுங்கேட்டதன்பாற்பிறழ்ந்திடாதுரைத்திட்டேனால். (29)

இக்கதைபடித்தோர்கேட்டோரியாவருமுத்திசேர்வார்
மிக்கமாதவத்தோயின்னும்வேண்டுவகேட்டியென்னப்
புக்குயர்வயிரவன்றன்காதைநீபுகறியென்னக்
கக்குவெங்குருதிவைவேலறுமுகக்கடவுள்கூறும். (30)

## முப்பதாவது வாராணசிச் சிறப்புரைத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—806.

## முப்பத்தொன்றாவது
## வயிரவன்றோன்றிய அத்தியாயம்.

---

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தேறலொழுகக்கனிந்தபசுந்தேமாங்கனியைப்பிழிந்துசெழுஞ்
சாறுநுகர்ந்தாலென்னவண்டகோடிபிழிந்து தனிநுகர்ந்து
நீறுபூசியென்பணிந்துசூலந்திரித்துநின்றாடும்
ஈறிலொருவனெனவுளனாங்கவனேயுள்ளத்திருக்குமால். (1)

அன்னகடவுள்மாயைமுழுதுலகமறைப்பவவிர்சுடராய்த்
தன்னையுணராவகையுறைவோனுலகமுழுதுந்தானாக
மன்னியிடினுமன்றோவாக்குக்காயமிவற்றுக்கெட்டாத
முன்னோனயன்மாற்கவனிலைமைகாண்டல்செல்லமுடியாதால். (2)

மேனாட்பசும்பொற்றடவரையில்விண்ணோர்குழுமியழிவில்பொருள்
தானாய்நிற்குந்தத்துவமியாதென்னமொழிந்ததத்துவமிங்
கியானுமென்றேசெழுங்கமலப்புத்தேளிசைப்பவிகலோடும்
கோனாகிப்பசுந்துளவோன்யானுமென்றேதுவன்றனனால். (3)

என்னமுனிவுற்றிருவோருமெழுதாமறைகளெவ்வாறு
சொன்னதுவோபொருளென்னாத்துணிந்துகேட்பமறைநான்கும்
மன்னுமுலகம்படைத்தளிக்கவல்லீரியார்க்குமதனிலைமை
முன்னவரிதானுமக்கெம்மால்மொழியற்பாற்றோவெனமொழியும் (4)

சாற்றுமுலகமெவற்றினுக்குந்தானேயாகியினிதமைத்தல்
போற்றியளித்தல்துடைத்தலென்னப்புகலுமரியமுத்தொழிலும்
ஆற்றுமொருவனெவன்சிவனுமவனேமொழிந்ததத்துவமென்
றேற்றமறைகளொருநான்கின்முதலாம்வேதமிசைத்ததுவே. (5)

புரிதற்கரியவருமகத்தால்யோகமதனாற்புவனமெலாம்
பரவப்படுவானியாவனுளன்யாமுமவனாற்பரிவோடும்
உரைபெற்றுலகினிலைபெறுதுமனையகண்மூன்றுடையோனே
தெரிதற்கரியதத்துவமென்றிரண்டாம்வேதஞ்செப்பியதால். (6)

யாவனுலகமூன்றினையுந்திரிவிப்பவன்மற்றெஞ்ஞான்றும்
யாவன்யோகமுனிவராலேத்தப்படுவோனினிதோங்க
யாவன்றனதுபேரொளியாலெவையும்விளங்குமவ்விறைவன்
மேவவருந்தத்துவமென்றேமூன்றும்வேதம்விளம்பியதால். (7)

கண்ணீர்வாரமயிர்பொடிப்பவுள்ளநெகிழ்ந்துகசிந்துகசிந்
துண்ணீர்மையினெஞ்ஞான்றுந்தன்னையுணருமுணர்வுடையோன்
எண்ணுவழுத்தத்தன்னருளாற்றன்னையறிவிப்பவன்யாத்
தண்ணார்கடுக்கையோனென்னநான்காம்வேதஞ்சாற்றியதால். (8)

என்றுவேதமொருநான்குமருளாதினிதினியம்பிடவும்
மன்றனுறைந்துளவோனுங்கமலப்பொகுட்டில்வானவனும்
நன்றுநன்றுமறைநான்குநவின்றதென்னநகைபுரியாக்
கன்றுமுளத்தினிருடேங்கக்கழறுப்புன்சொற்கத்துவரால். (9)

எற்றினேறிச்சடைதாங்கியீமத்தாடிப்பொடிபூசிக்
காற்றுநகருங்கறைமிடற்றகவைநாவரவக்கச்சமைத்துப்
போற்றுங்கணங்கட்கொருமுதலாய்ப்பூவைபாகம்பிரியாதோன்
தோற்றுதெவர்க்குமுள்ளுயிராய்நின்றவாறென்சொல்வீரால். (10)

என்னவேலாடுமறையினைத்துமீன்றகுடிலைமுன்றோன்றிக்
கொன்னேமொழிந்தீருமதுமுதுக்குறையுமீதோவெனநகைத்து
முன்னேன்பிரியாப்பரையினொடுந்தோய்ந்துந்தோயான்முழுமுதலா
ம், அன்னோனுருவதும்முருப்போலாக்கவமைந்தவுருவன்றே. (11)

ஒன்றாய்ப்பலவாய்முழுமுதலாயுணர்வாய்ப்பொருளாயுணர்வதுவாய்
நின்றானவன்றனுணர்ந்தவுருவம்பரையாநீவிரவன்
பொன்றாழ்கமலத்தாள்போற்றியுய்ம்மினெனவுமிவர்ப்பிணித்துத்
தொன்றாத்தொடர்ந்தமலமுடன்றோன்றாதகச்செருக்குற்றார். (12

அன்னகாலையவர்நாப்பண்மம்மர்க்கிழங்காண்டகழ்ந்தெறிவான்
பொன்னங்கிரியைக்குழைத்தவுணர்புரமூன்றெரித்தபுரிசடையோன்
மின்னுங்கதிர்களொருகோடியெழுந்தாலென்னவெயிலாற்றித்
துன்னுஞ்சோதிப்பிழம்பாகிச்சுடர்விட்டெறிப்பத்தோன்றினனால்.

உயருமண்டச்சுவரனைத்துமுருவிநின்றசுடர்ப்பிழம்பை
அயர்வினொடுமலர்க்கிழவனஞ்சாவதனைநோக்குதலும்
முயலூர்புனிற்றுப்பிறைக்கொழுந்துமூரிச்சடையுமெண்டோளுங்
கயல்சேர்கண்ணியொருபங்குங்கண்ணோர்மூன்றுங்கண்டதுவே.(14)

காண்டலோடுமலர்க்கிழவனுள்ளமதனிற்கனல்கொளுந்தித்
தூண்டுமுனிவுபிடித்துந்தவெனதுபுருவத்துணைகாப்பண்
நீண்டசடையினெடுந்தோன்றும்புதல்வனலையோநீயென்ன
மூண்டவெகுளிவயிரவனைமுக்கட்கனியாண்டளித்ததுவே. (15)

இமையாப்பறவையேற்றெறகினப்பாகனுள்ளச்செருக்கினையுந்
துமியாத்திரைப்பாற்கடற்சேர்ப்பனுள்ளச்செருக்குந்தொலைத்தியெ
ன, அமையாவெகுளிக்கனல்கொளுந்தமலரோனைந்தாந்தலையதனைக்
கமைதீர்காரிதன்னிடக்கையுகிராற்கிள்ளிக்களிப்புற்றான். (16)

அண்டமுகட்டினாசிருக்குமலரோன்சென்னியரிந்திடலுங்
கண்டுவெருவியுலகளிக்குங்காயாவண்ணன்றொழுதேத்தக்
கெண்டைகிடந்துகுழைபுரட்டுமதிவாண்முகத்துக்கிள்ளைமொழி
வண்டுபடுபூங்குழல்பாகன்மலர்த்தாளயனும்வாழ்த்தினனால். (17)

இறவாதென்றுந்தானாகியிருக்கும்பவளத்தாழ்சடையோன்
பறவாப்பூவைவண்ணனுந்தண்கமலத்தோனும்பதைத்தாவி
துறவாவண்ணமினிதளித்திதோன்றலென்னக்குளிர்தூங்கு
பிறைவார்கண்ணிவயிரவனும்பெட்பினொடுமுனிவொழிந்தான். (18)

கங்கைப்பெருக்காறுவட்டெடுக்குங்கமழ்பூங்கொன்றைச்செஞ்சடை
யோன், வெங்கட்கூற்றுந்தலைபனிப்பவெகுளுங்காரியயன்றலையோ,
டங்கைத்தாங்கிப்பன்னீராண்டையமேற்றுமணிச்சுடிகைச்,
செங்கட்பாந்தண்முடிக்கிடந்தவுலகமனைத்துந்திரிதியால். (19)

ற்றைக்கதிர்கால்வெண்ணிலவுக்கண்ணிவேய்ந்தகாரிதனைப்
ற்றிமாதினுருவொருமோர்பாதம்விசும்பின்மேற்சிலம்ப
டற்றோர்பாதம்புவிமிதிப்பவுறைதிபிரமகத்தியென
ற்றித்தனிக்கண்விடைப்பாகன்றருமமோர்ந்துநிகழ்த்தினனால்.20

அவனிபொதிந்தசிற்றுதரத்தண்ணறனக்குமளப்பரிய
புவனமனைத்துந்தனிதுடைக்கும்புராரிநோக்கிவிடைநல்கிப்
பவனங்கனனீர்புவிவெளியாயவற்றுட்டோயாப்பரஞ்சுடராஞ்
சிவனுமன்பரிதயமலர்க்கோயிறோறுஞ்சேர்ந்தனனால். (21)

வடவைகுமட்டிவெதிரெடுத்துவயங்குஞ்சூலப்படைதாங்கிப்
படியில்விசும்பிற்பாதலத்திற்பலியேற்றெங்குந்தனிப்போகி
ஒடிவில்கணங்களடிபோற்றவுலகம்பூத்ததிருவுந்திக்
கடிசேர்பசியதுழாய்மாலைக்கண்ணனுறையுமுலகடைந்தான். (22)

இதுவன்றதுவன்றென்பதல்லான்மறையுமறியாவெம்பெருமான்
எதிர்வந்தெளிதிற்றோன்றுதலுமிதயநெகிழவிழிகளிப்ப
மதுவுண்டறுகால்குடைந்தூதும்வண்டாமரையின்மாதினொடுங்
கதுமென்றெழுந்துமுகின்மேனிக்கண்ணன்காரியடிவீழ்ந்தான். (23)

வீழ்ந்தானெழுந்தான்மலர்தூவிவிரைசேர்கங்கைவேணியனைச்
சூழ்ந்தான்றுதித்தான்றுள்ளினான்சுருதிப்பொருள்கள்பலபாடித்
தாழ்ந்தானுவகைபிடித்துந்தத்தழுங்குஞானப்பெருங்கடலுள்
ஆழ்ந்தானுலகமனைத்தினையுமயின்றோனரவிற்றுயின்றோனே. (24)

முப்பாழ்கழிந்துமனமிறந்துமோனமாகுநிலையதனுக்
கப்பாலாகுந்துரியவுருவடைந்துவருதல்கண்டனனாற்
செப்பார்முலைப்பொற்றிருவேயான்செய்ததவமென்னெனக்கினியார்
ஒப்பார்நீயுந்தனிக்காணவுஞற்றுந்தவமற்றெவன்கொல்லோ. (25)

இன்னேனெனுமகவின்றேருமுருவமெய்தார்யாங்காண
அன்னேனுருவுதாங்கிவருமிறும்பூதுளத்திலடங்குவதோ
தொன்மாமறைகளொருநான்குந்துதிக்குமவனுமைந்தொழிலுந்
தன்னாலியற்றியத்தொழிலிற்சார்வில்லானுமிவனுமால். (26)

பண்ணிற்கனிந்தகுதலைமொழிப்பாவைபங்கன்றனைத்தமது
கண்ணிற்கண்டும்வீடுபெறார்விசும்பினுறையுங்கடவுளர்மற்
றெண்ணிலவர்தங்கதிநன்றேமனிதர்காணிலிருங்கதியின்
நண்ணியிடுவாரவர்கதியேமேம்பாடுடைத்தாநன்னுதலே. (27)

நாட்டங்குளிர்ப்பவுண்ணெகிழ்ப்பழிச்சிப்பழிச்சிநாத்தழும்பக்
கூட்டுண்டறுகால்விழவயரக்குழைக்குங்கண்ணித்துழாய்மார்பன்
மீட்டுஞ்சென்றங்கெயினர்பதிவிழியுந்தனதுவிழிமலருஞ்
சூட்டுந்தெய்வத்தாமரையிற்றொழுதுவிழைவிற்சொல்கின்றான். (28)

பொன்னஞ்சிகரிவிழுதுவிட்டபோலுங்கொன்றைப்புரிசடையோய்
நின்னைக்கனவினினைந்திடுவோரிடத்தும்பாவநின்றிடா
தென்றேநின்னைக்கொடும்பாவந்தொடர்வதிதுவுமுலகனைத்துங்
கொன்னேமருட்டிநீயிழைத்தவிளையாட்டென்றேகுறிக்கின்றேன்.

ஒழியவுலகமுழுதிடந்தகேழற்கோடுமழல்காலும்
விழியுமடங்கலீருரியும்விரைமென்கமலப்பொகுட்டுறைவோன்
கழியுமுடைவெண்டலைதொடுத்தகண்ணித்தொடையும்புனைந்தாடும்
பழியன்றகலவெவ்விரதம்பயின்றதெந்தாய்பகருதியால். (30)

ஈறில்புவனமனைத்தினையுநுதற்கட்டழலினெரியூட்டி
நீறுபூசிப்புறங்காட்டினிணம்வாய்பில்கக்கொடியினமும்
பாறுந்தொடருமுத்தலைவேறிரித்துப்பவுரிகொண்டாடும்
மாறில்பழியைத்துடைத்ததெவ்வாறடியேற்குணரவழங்குதியால்.

முட்டாட்கமலத்தயன்றலையொன்றரிந்தபாவமுடியாதே
மட்டார்துளவோனுலகீன்றமறையோன்றலைகள்மழுப்படையின்
வெட்டாநின்றுபுவியனைத்தும்விளியுமுகாந்தமுடிவுதனில்
வட்டாட்டயர்ந்தகொடும்பழிகள்யாதுகோற்றுமாற்றினையால். (32)

ஆதரன்றலறம்பிறழாதையமேற்குமவர்போலப்
பாதமலர்கள்சிவப்பூரப்போந்ததுனதுபதம்பிழையாத்
தீதிலடியேன்றவப்பயனென்றிறைஞ்சலோடுஞ்செழுங்கமலப்
போதின்மடந்தைமுழுமுதலாம்புராரிமகிழ்ப்பலியளித்தாள். (33)

தண்ணந்துளவோயெப்பொருணீகேட்டியெனினுந்தருகுவனென்
றண்ணலுரைப்பவேதாந்தமறையுநினதுகழலிணையென்
கண்ணினூடுநீங்காமலிருப்பக்கருணைபுரிதியென
வெண்ணெய்க்கமழுங்கனிப்பவளமலர்ந்தீங்கிதனைவிளம்பினனால். (34)

மாசின்றிமைக்குமணிவண்ணன்மலர்ந்தகமலமுகநோக்கி
ஆசில்வரமற்றவர்க்கருளியள்ளற்பழனக்கருஞ்சேற்றின்
மூசுசுரும்புங்களிவண்டுமுட்டாட்கமலத்தடைகிடக்குங்
காசிகாஞ்சென்றடைவானடந்தான்கண்மூன்றுடையோனே. (35)

காரேறுழக்கும்வயற்காசிநகரிற்காரியடைந்திடலும்
வேரோவெருவிப்பிரமகத்திவியன்பாதலத்தினிடையொளிப்ப
ஈராவுழுவையுரிபோர்த்தவெம்மான்கரத்திலெஞ்ஞான்றுந்
தீராக்கபாலந்துயின்றேன்கைப்பொருள்போற்புவியிற்சேர்ந்ததுவே.

உலகமனைத்துமுழிதாலுற்றழலவொழியாக்கொடும்பாவம்
இலகுபிறைக்கீற்றணிமவுலியிறைவன்காசியெய்துதலும்
பிலமுற்றதனுற்பெருமான்கைத்துடியின்முழக்கமுகிலென்னக்
கலவமஞ்ஞைநடம்புரியுங்காசிநகருக்கிணையுண்டோ. (37)

கையிலேலந்துங்கபாலம்விழுமிடத்திற்காரியொருதீர்த்தம்
வையம்புகழவினிதமைத்தாண்டிருந்தானவனைவழுத்தாதார்
வெய்யவினைதீர்காசிதனின்மேவாரவனைவலம்வருவோர்
பொய்யில்கயிலைநெடுவரையிற்புராரிமருங்கில்வீற்றிருப்பார். (38)

வழுவிலிந்தக்கதைமுழுதுங்கேட்போரெழுதிவைத்திடுவோர்
பழுதில்பொருள்களாராய்ந்துபயின்றோர்பத்திசெய்திடுவோர்
கொழுதியினவண்டிசைமுரலுங்கொன்றைப்புனையுஞ்செஞ்சடையோ
ன்,எழுதாமறைசேர்சேவடியினிருப்பாரென்னவினிதிசைத்தான்.39

முப்பத்தொன்றாவது வயிரவன்றோன்றிய
அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—845.

## முப்பத்திரண்டாவது
## தண்டபாணிதோன்றிய அத்தியாயம்.

---

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

வள்ளவாய்க்கமலவெள்ளிமண்டபத்துவாணுதல்கொழுநனின்றேத்
த, ஒள்ளிதின்ஞானப்பொருடெரிந்துரைக்குமுருள்பசுந்தாரிளங்
குமரன், பள்ளநீருவரிகுடங்கையிற்கொண்டுபருகியகுறுமுனிகேட்ப
த், தெள்ளிதிற்றண்டபாணிதன்சரிதையனைத்தையுந்தெளிவுறவு
ரைப்பான். (1)

இலகுவெண்பிறைதோய்கர்தமாதனத்தினிரத்நபத்திரனெனுமியக்
கன், புலவுவேற்றடக்கைமுழவுறழ்தடந்தோள்பூரணபத்திரன்றன்
னை, அலகிலாத்தவஞ்செய்தளித்தனன்பின்னராய்பிழிக்குறுந்துளிபி
லிற்றும், மலரவிழ்கொன்றைமௌலியைப்போற்றிமருவருமுயர்கதிய
டைந்தான். (2)

கங்கைநீர்வேணிக்கண்ணுதற்சாமிகழலிணையினிதினிற்போற்றிப்
பொங்குநீர்த்தரங்கக்கடற்புவிபுரக்கும்பூரணபத்திரன்றனக்குச்
செங்கயல்பொருவுமரிமதர்நெடுங்கட்செய்யவாய்க்கனககுண்டலப்
பேர், மங்கைநற்றவஞ்செய்துலகெலாந்தழைப்பவழங்கரிகேசனைப்ப
யந்தாள். (3)

பெறலருஞ்சிறப்பினின்னெழிற்புதல்வன்பிறையெனவளர்தருநாளி
ல், கறைமிடற்றெந்தைபெயரலாலியாதுங்கருதலன்வெண்மணல்கு
வியா, இறைதிருக்கோயிலமைத்துமற்றதனுளிலிங்கமாண்டியற்றிவ
ண்டூது,நறைமலரென்னப்புற்பறித்ததனினாடொறுமருச்சனைபுரியும்

இன்னுயிர்த்தோழர்வருகெனவியம்புபோழ்தினுமெம்பிரானுமந்
தன்னைமற்றிசைப்பதன்றிமற்றோர்பேர்சாற்றலனவன்மலர்ப்பாதம்
முன்னவன்கோயிலல்லதுசூழாவாங்கவன்முளரியந்தடக்கை
பன்னகமசைத்தநாவிடைப்பாகன்பதமலதருச்சனைபுரியா. (5)

பெண்ணொருபாகன்புகழலானுளம்பெட்பொடுஞ்செவிப்புலன்கேளா
கண்ணுதலன்றிநோக்கிடாகண்கள்கடவுளையலதுளங்கருதா
தண்ணறுமமன்றிநாவுரையாதஞ்சிறைத்தும்பிபாட்டயருந்
தண்ணறுங்கமலச்சேவடிக்கன்றியாங்கவன்றலைவணங்கிடாதால். (6)

எத்துணையனுமயன்றிருநிதியமீட்டலையிரவுநன்பகலும்
மத்தமுமறுகும்வளர்பிறைக்கொழுந்துமிலைந்தவனடியினின்மருண்டு
பித்தர்போல்வாளாவன்னவனும்பிதற்றினைபேதுறுகின்ற
சித்தநீயொழிதியென்றுதன்றந்தைசீறலுஞ்சேட்செலவயர்ந்தான்.

ஆறுசெல்போதிலெவ்வழிச்சேறுமெனமனமலைத்திடமருளாத்
தேறினனாகியளியராய்மெலிந்தோர்சேர்விடங்காசியேயன்றி
வேறுளதாங்கொலெனமனத்தெண்ணிவிரைமலர்கறித்துமோட்டெ
ருமை, தாறுதாழ்கதலிப்படுபழங்குதட்டுந்தண்வயற்காசிசென்றடை
ந்தான். (8)

ஐம்புலக்குறும்புமுதலறமுருக்கியணிமலரசோகநன்னிழலிற்
கம்பமற்றிருந்துதவஞ்செயுஞ்சிறுவன்கருத்தினைக்கவுரிகண்டுவந்து
நம்பனைநோக்கியருளெனவீசனரைவிடையிழிந்தரிகேசன்
வெம்பமெய்குளிர்ப்பமுதுகுதைவரலும்வினாவினிலெழுந்தடிபணிந்
தான். (9)

அணங்கரவுரியினுணங்குநூற்கலிங்கமம்பகட்டிளமுலையசைத்த
கணங்குழைமுகத்துக்கன்னியோர்பங்கிலிருத்தியகறைமிடற்றெந்
தை, வணங்கியசிறுவற்களப்பிலாவரங்கண்மனமகிழ்ந்தினிதினிலளி
யாத், துணங்கையிட்டலகைசூழ்வருங்கதையுமளித்திவையருளொடு
ஞ்சொல்வான். (10)

சேட்டிளந்திங்கட்கண்ணியுங்கங்கைத்திரையுமட்டெடுத்தவார்சடை
யும், நாட்டமோர்மூன்றுநான்குதிண்டோளுநஞ்சணிகண்டமும்பனை
த்த, மோட்டிளங்கொங்கைமங்கையோர்பங்குமூரியேறுயரியகொடி
யும், பாட்டளிமுரலுங்கொன்றையுங்காசிப்பதியினிலிறந்தவர்க்களிப்
பாய். (11)

அருந்தவக்கிழவமுன்னநீதொட்டவாவிநீராடியாரேனும்
பெருந்தவமிழைப்போரின்பவீடடைவர்பிழைப்பருஞ்சம்பிரமனையும்
விரிந்தநூற்கேள்வியுற்பிரமனையும்விடாதினிதிருத்தியென்றுரையா
க், கருந்தடநெடுங்கட்கண்ணியோர்பாகன்கயிலைமால்வரைமருங்கடை (12)
ந்தான்.

இன்னநற்காதைகேட்டவர்துறக்கத்தெய்துவரெனவெடுத்தியம்பிக்
கன்னவிற்பழுத்தபணிமொழித்துவர்வாய்க்கதிர்முலைக்குறக்கொடிக
ணவன், தென்னவன்மகிழச்செழுந்தமிழ்க்கவிதைபொழிதருந்தென்
னைமுனிவன், மன்னியஞானவாவியினேற்றங்கேளெனவகுத்தி (13)
னிதுரைப்பான்.

## முப்பத்திரண்டாவது தண்டபாணிதோன்றிய அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் — 858.

## முப்பத்துமூன்றாவது
## காசிப்படங்கண்ட அத்தியாயம்.

---

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மலர்தலையுலகமம்மர்நோயுழப்பவான்பெயல்வறந்திடுகாலை
அலகில்சீர்க்காசிப்பதியிலீசானனருந்தவமியற்றவந்தெய்தி
இலகுவெண்டிங்கட்கண்ணியம்பரனையீர்ம்புனலாட்டுவான்கருதிக்
கொலைபழுத்தொழுகுமுத்தலைப்படையாற்குளிர்புனல்வாவியொன் (1
கழ்ந்தான்.

ஆயிரந்தாரையொழுகுபொற்குடமோராயிரத்தாயிரமேந்திப்,
பாயிருள்பருகிநிலவுகொப்புளிக்கும்பனிமதிக்கண்ணியம்பரனைத்,
தூயதண்புனலிலாட்டலுமனையோன்சுடர்விழிகளிப்புறத்தோன்றி
ஏயநின்மனத்தில்விழைந்தனதருவலுரைத்தியென்றெம்பிரானிசை
த்தான். (2)

மலவிருளிரியநீற்றொளிபூத்தமாணிக்கமலையினைநோக்கி
நிலவினைத்தெளித்துத்தேக்கியதென்னீர்மலிதடத்தினுக்குன்பேர்
உலகினிற்றழைப்பவழங்குதியெனலுமொழுகொளிமதிதொடுகுடுமி
ச்,சிலைவலானதற்குச்சிற்சிவதீர்த்தமெனும்பெயர்தெரிந்துரைத்தன
னல். (3)

மணிதெளித்தனையபுனிதநீரதனின்மகிழ்வொடும்படிந்தவர்விடவாய்
ப், பணவரவசைத்தோயெமதுதொல்லுலகிற்படர்வரொன்றின்னுரை
புகலாய், பிணிமுறுக்கவிழவிதழிதேன்றுளிக்கும்பிறைமுடிப்பிஞ்ஞ
கன்புகன்றான், இணையறுமுனிவவன்றுதொட்டிதனைஞானநீர்வாவி
யென்றிசைப்பார். (4)

இன்னிளந்தென்றற்குழவியும்வயங்குமிளம்பிறைப்பிள்ளையுந்தவழுந்
தென்வரைநறியசந்தனச்சாரன்மருங்குறைசெழுந்தமிழ்முனிவ
பொன்னுலகுறையுமமரரும்விரும்புபுனிதநீர்ஞானவாவியினுக்
குன்னருங்காதையின்னுமொன்றுளதுபேசுவன்கேட்டியென்றுரைத்
தான். (5)

முருந்திளமுறுவற்கடைசியர்குரவைமுழக்கினிலெழுந்தபைங்கயல்
கள், கரும்புறக்குடக்காய்நெட்டிலைப்பேரந்தைக்கவிழ்குலைக்கனியினை
ச்சிதறுந், திருந்துநல்வளங்கூர்காசியின்மறைநகடெரிதருமருச்சுவாமி
ப்பேர், அருந்தவனமுருக்கிணையிலாமுறுவலணங்கினையரிதினிற்பயந்
தான். (6)

## கலிவிருத்தம்.

முருகுவாய்மடுத்துண்டளிமூசிய
அரிவைபூங்குழலாயிருஞ்செங்கதிர்ப்
பருதிவானவற்கஞ்சியிப்பாரிடை
இருளெலாங்குடியேறியபோலுமால். (7)

பொழிகருமலர்ப்பூங்கணைபூட்டுபைங்
கழைகொல்கூனற்கதிரிளந்திங்கள்கொல்
மழைமதர்க்கண்மடவரல்வாண்முகத்
தெழில்குவித்தநுதற்கிணையென்பவே. (8)

கொழுதிவண்டினங்கூட்டுணும்பூங்குழல்
பழுதில்வள்ளைப்பசுங்குழைநீட்டினும்
ஒழுகுநீள்புருவக்கொடியொப்புற
எழுதுமேகொல்மலரயனின்னுமே. (9)

பன்னரூலகிற்பயில்வோருயிர்
கொள்ளைகொண்டுணக்கூற்றெருளியிட்டொரு
வள்ளத்தாமரைமீதுவதிந்ததே
கள்ளுண்கோதைதமுகத்துறைகண்களே. (10)

முல்லைமெல்லரும்பீன்றமுழுநெறி
அல்லிபுல்லியவாம்பலுண்டாமெனில்
வில்லெறிந்துமிளிர்புருவக்கொடி
வல்லிசெங்கனிவாய்க்கிணையாகுமால். (11)

கணிக்குமூன்றுலகத்துமிக்காரிகை
அணிக்குகல்லெழில்செய்யுமழகினுக்
கிணைக்கொணுமெதன்னெழுதியரேகைகொல்
மணிக்கழுத்தின்வரையொருமூன்றுமே. (12)

இழுக்குதேனினிளங்களிவண்டினம்
வழுக்கிவீழுமலர்க்குழல்தோட்கிளை
கழைக்கரும்பையுரைக்குங்கவிகடம்
பழிக்குத்தீர்ச்சிபகர்ந்திடவொண்ணுமோ. (13)

காளைவண்டுஞெயிறுங்களித்துணுந்
தாள தாமரை தாட்குடைந்திட்ட தால்
வாளைவென்றமதர்விழிகைக்கிளை
காளுகாமெடுத்தோதுதனன்றரோ. (14)

பண்ணெறிந்தபனிமொழிக்கோல்வளை
தண்ணிலாவடமேந்துதடமுலை
வண்ணத்தூசின்மறைத்திலரேலுயிர்
உண்ணுமுண்ணுமுலகமனைத்துமே. (15)

அழகுபூத்தவணிமுலையவ்வயிற்
றொழுகுமென்மயிர்க்கோங்கெழில்வேனிலான்
விழைவிறுவிலைமீதுமணிதழைத்
தெழுதுவல்வியலதிணையில்லையால். (16)

தொழுதகுந்திறற்கைவினைத்தூயவர்
எழுதநெஞ்சிடையெண்ணவொண்ணுததாற்
பழுதில்ஞானப்பழம்பொருள்போன்றதே
மழைமதர்க்கண்மடந்தைமருங்குலே. (17)

குருமணிப்பொற்கொடிஞ்சியந்தேர்கொலோ
விரைகொள்பூங்கணைவேந்தன்றன்காணியோ
உருவவோடரிக்கண்ணியொளிர்மணிப்
பருமந்தாங்கியபையரவல்குலே. (18)

பொன்னந்தூசுபுனைந்தகுறங்கினை
மன்னுமோடைமதக்களிற்றின்கரம்
வெந்நிடும்படிகண்டுவிரிதலைக்
கன்னிவாழைகவின்குடிகொண்டவே. (19)

இன்னபேரெழில்வாய்ந்தவிளங்கொடி
பொன்னம்பூஞ்சிலம்பார்த்திடப்பொங்கர்வாய்
அன்னமென்னவொதுங்கியணிமலர்
மன்னுஞானநல்வாவியினாடியும். (20)

தூமமார்ந்ததுகில்புனைகோல்வளை
காமர்வாவிப்படிகள்கழுவியுந்
தாமநாற்றியுந்தண்மலர்தூவியும்
யாமமும்பகலுந்தொழுதேத்துநாள். (21)

சந்தமூழ்குதடமுலைபுல்குவான்
சிந்தைசெல்லச்செழுமறைதேர்ந்துணார்
அந்தணாளிலைங்கணைவேணிகர்
மைந்தர்யாருமகண்மொழிந்தெய்தினார். (22)

காதளந்தகருந்தடங்கண்ணிதன்
தாதைதன்னுழைப்போந்துதனிமணம்
ஆதரித்தவர்க்காங்குமறுத்தனள்
மேதைநெஞ்சம்விதிவழிசெல்லவே. (23)

மஞ்சுதோயுமணிக்கொடியோங்குயர்
இஞ்சிமுற்றியகாசியினின்னெழில்
செஞ்செவேதனிநோக்கித்தன்சேடியில்
விஞ்சைமன்னவன்விண்ணிடைத்தோற்றினான். (24)

மங்குறோயுமணிக்கொடிமாடமுங்
கொங்குலாவுகுளிர்மலர்ச்சோலையும்
எங்குநோக்கியினிதுவந்தெய்தினான்
கங்கைமாநதிசூழ்தருகாசியின். (25)

எய்துவிஞ்சையனின்கனித்தொண்டையும்
ஐயசெங்கழுநீருமலர்ந்ததோர்
செய்யதாமரைபூத்தசெழுங்கொடி
கையின்மென்மலர்கொய்திடக்கண்டனன். (26)

தண்ணார்தாமரைத்தார்க்கணைக்கோலென
எண்ணனெஞ்சயின்றெய்தலரிதெனப்
பெண்ணாருங்கொளுயிர்களைப்பெட்போடும்
உண்ணக்கூற்றமொளியிட்டுறைந்ததே. (27)

என்னுஞ்சீறடியீர்ங்கிலர்தோய்தலாற்
பொன்னெறிந்தபொறிசுணங்காமுலைக்
கன்னிபார்மகனென்னுங்கலக்குறும்
தன்னையும்மறக்கும்முயிர்சாம்புமால். (28)

வன்னவார்குழையோவளர்கொங்கையோ
கன்னம்பூத்தகருநெடுங்கண்களோ
உள்ளமாழ்கியுலையத்தடக்கையால்
அள்ளியள்ளியென்னாருயிருண்டதே. (29)

கள்ளிருட்பிணிவிட்டனகாண்மலர்க்
கள்ளறாதகருங்குழல்கைசெயா
வள்ளவாய்மலர்வாவிபடிந்துயிர்
கொள்ளைகொண்டனனென்றுகுழையுமால். (30)

ஆன்றகேள்வியவ்விஞ்சையனாருயிர்
கான்றுமாழ்கக்கடவுட்புனல்படிந்
தீன்றதாதைதன்னில்வயினெய்தினன்
தோன்றுகின்றசுடர்க்கொடிபோலவே. (31)

அஞ்செஞ்சீறடியேகனுமாற்றலன்
நெஞ்சமாழ்கியக்கேரிழைவைகிய
பஞ்சணைப்புறத்தெய்திப்படுதுயில்
விஞ்சையோதிமிகவும்பெருக்கினன். (32)

துயில்பெருக்கித்துணைமுலைதாங்கிய
மயிலியற்குயிலைக்கொடுவான்றெடும்
எயில்வளைத்தநகர்கடந்தேகினன்
வெயில்செய்பூக்கழல்விஞ்சையர்வேந்தனே. (33)

பொன்னங்கொம்பினைவவ்விப்புயறவழ்
தென்னங்குன்றிடைவிஞ்சையன்சேர்தலும்
மின்னலங்கற்பெயரினன்வேலினன்
மன்னுசீற்றத்தரக்கன்வளைந்திட்டான். (34)

உயிரைநல்குதியோநின்னுயிர்நிகர்
துயிலைநல்குதியோகொடியோவெனச்
செயிரினோடும்விழியழல்சிந்திட
வயிரவாட்படைவள்ளுறைநீக்கினான். (35)

எயிறுதின்றெதிரேற்றவரக்கனைத்
துயில்துறந்துசுடர்க்கொடிகாண்டலும்
அயினெடுங்கணழிபுனல்கான்றிட
உயிர்வெதும்பியுயிர்ப்பொடுமாழ்கினாள். (36)

பஞ்சியூட்டியபங்கயச்சீறடி
அஞ்சலஞ்சலெதிர்ந்தவரக்கனைத்
தஞ்சுமாறுதொலைக்குவல்யானென
விஞ்சைவேந்தன்வெகுண்டெழுந்தானரோ. (37)

உருவவோடரிக்கண்ணியுளங்கவர்
மருமம்போழ்ந்திடவாளினெறிதலும்
வெருவலின்றிவெகுண்டுயர்விஞ்சையன்
இருதன்சென்னிநெரிதாக்குத்தினான். (38)

ஞானவாவிநளிர்புனலாடிய
மானினோக்கியைமாய்வுழிக்கண்டதால்
கனல்விற்கையரக்கன்கொடுஞ்சிலை
வேனில்வேளெனவிண்ணுலகெய்தினான். (39)

ஓவியர்க்குமெழுதவொண்ணாதபொற்
பாவைதன்பெயர்பாதிகிளக்கலும்
மேவுகாதலின்விஞ்சையர்வேந்தனும்
ஆவிகூற்றுக்களித்தனனென்பவே. (40)

மலையின்வீங்கியமல்லலந்தோளிமென்
முலைதிளைத்துமுயங்கவெடுத்தலால்
தலைவனீங்கிவனேயெனத்தார்குழல்
அலம்வந்தேங்கினளாருயிர்நீங்கினாள். (41)

சூதமீன்றவிரைகமழ்தூமலர்த்
தாதளைந்ததளர்நடைத்தென்றலோ
பாதிவெண்மதியோபடர்மாலையோ
கோதையாருயிர்வாரிக்குடித்ததே. (42)

மலையும்வல்வில்மலர்க்கணைவேட்டுவர்
நலியுமாலையினாகிளர்ந்தென்றலம்
புலிவழங்குபொதியப்பொருப்பின்வாய்த்
தலைவற்றீர்ந்ததமியளுமுய்யுமே. (43)

நிலையிலாவுடனீத்தவவ்விஞ்சையன்
மலையகேதுவெனும்பெயர்மன்னவற்
கிலகுமாலியகேதுவெனும்பெயர்
உலகமேத்தவொருமகவாயினான். (44)

தென்வரைக்கண்ணிறந்திடுஞ்சேயிழை
கன்னல்வேலிக்கருநடதேயத்து
மன்னன்மாதவப்பேற்றிற்கலாவதி
என்னுநாமத்திளங்கொடியாயினாள். (45)

பதலையார்ப்பப்பணிலமுழங்கிடப்
பிதிர்சுணங்கணிபேரிளமென்முலைக்
கதிர்செய்முத்தமுறுவற்கலாவதி
வதுவையாற்றினன்மாலியகேதுவே. (46)

பனிமதிக்குடைவேந்தொடும்பல்பகல்
இனியபோகங்களியாவுநுகர்ந்துமென்
கனியிலின்சொற்கலாவதியென்னுமவ்
வனிதைமூன்றுமகவினைநல்கினாள். (47)

ழலைமென்சொன்மகாரொடும்வள்ளையங்
நழைபொருங்கட்குயின்மொழிக்கொம்பொடும்
ழுவெறிந்தவெறுழ்வலித்தோளினன்
ழைவின்ஞாலம்புரந்திடும்வேலையின். (48)

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வைத்தாளலவன்கிளைத்தகுழிகமஞ்சூன்மந்திகவுளெடுத்துச்
வைத்தாங்கெறிந்தநறும்பலவின்சுளைகடூர்க்குங்காசிதனில்
வத்தாலெய்திக்கங்கைநதிபடிந்துமீண்டதனிமறையோர்
வப்பாற்காசிப்படங்கொணர்ந்தாங்குய்த்தாரவனுமுளங்களித்தான். (49)

டங்கிற்பூத்தகொடிக்குவளைகுதட்டிமேதிகிடந்துயிர்க்கும்
டஞ்சூழ்காசிப்படமதனைத்தாமவடிவேலிறைநோக்கி
டந்தாழ்கொம்மைமுலைதேய்த்தமருங்குற்களித்திரெனலோடும்
டந்தாழல்குற்சிலதியர்கள்பணிந்தார்கொணர்ந்தபடமளித்தார். 50

ருளைவகிர்ந்துமுடித்தகுழலிமையாக்கருங்கண்முலைப்பேதை
தருதிவடிவேலிறையளித்தகோதில்காசிப்படமதனை
முருகுவிரிக்குங்காந்தளங்கைமுகிழ்த்துவாங்கிமுகமலர்ந்து
தருளினோக்கிவிழிபனிப்பச்சிந்தைகளிப்பத்தெரிந்தனளால். (51)

முப்பத்துமூன்றுவது காசிப்படங்கண்ட
அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—909.

## முப்பத்து நான்காவது
## கலாவதி பேறுபெற்ற அத்தியாயம்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

கன்னற்கு தலைமொழிப்பேதைஞானவாவிகண்ணுறலும்
முன்னைப்பிறப்பினுணர்வனைத்துந்தோன்றத்தோன்றமுதுக்குறை
வாற், பொன்னஞ்சிகரிநெடுஞ்சிலையெம்புனிதனுறையாலயமுதல,
இன்னதின்னதெனச்சுட்டிப்புத்திமதியோடிசைத்தனளால். (1)

மங்கைமீரிப்படத்தெழுதுஞானவாவிமுற்பவத்தில்
தங்குமருடீர்பேருணர்வுஞ்செய்தியாவுந்தணவாமல்
அங்கைநெல்லிக்கனிபோலவனைத்துந்தோன்றவளித்தெதனிற்
பொங்குகடவுட்புனல்படிந்தோர்பெறும்பேறவர்க்கும்புகலரிதால்.

என்றுகூறிக்காசிநகர்க்கேகுமருத்திபிடித்துந்தப்
பொன்றாழ்மணிமேகலையாற்றப்பொன்னஞ்சிலம்புகிடந்தார்ப்ப
மின்றாழ்மருங்குறுவண்டேங்கவிரைமென்கூந்தல்சுவல்புரளச்
சென்றாள்வேந்தன்பூங்கழல்கள்பணிந்தாளிதனைச்செப்புவாள். (3)

இமைதீர்ந்தொழியவடவையனலெரிகட்பாந்தண்முடிக்கிடந்த
சுமைதீர்ந்தொழியத்தனிதாங்குந்தோளாயுனதுநகருறையும்
அமைவார்தடந்தோள்மடவியரிலளியன்விழைந்தவனைத்திலையுங்
கமையோடளித்தாய்பெரும்போகந்துய்த்துநெடுநாள்களிப்புற்றேன்.

இன்னும்விழைவதொன்றுளதீண்டளிப்பினுரைப்பலெனவோடும்
மன்னன்மகிழ்வுற்றெனதுயிரும்வளரும்பொருளுமிவ்வரசும்
நின்னதாகுநீவேண்டினிலவுக்கதிர்கான்முத்தநகைப்
பொன்னேயளியாப்பொருளுளதோபுகறியெனலும்புகலுவாள். (5)

தமரநெடுநீர்க்கழனிதொறும்வாளைப்பகடுதாவியுயர்
குமரிக்குடக்காய்முடத்தெங்கின்குலைகள்சிதறுங்காசிதனில்
அமருந்திங்கள்வேணியனைப்போற்றற்கேகவருளுகெனக்
கமலமலரினெழில்கவருங்கைகள்கூப்பியுரைசெய்தாள். (6)

அரசவிளங்குஞ்சுடரிலைவேலண்ணலணங்கினுரைகேளாப்
பரிவினோடுமனைக்கிழத்தியில்லாவாழ்க்கைபழுதாகும்
எரிசெய்பூணாய்நின்னொடும்யான்வருவலென்னவினிதியம்பித்
தரையாள்வதற்குத்தன்மகவைத்தனிமாமவுலிசூட்டினனால். (7)

உயிர்மேய்ந்துதிரந்தேக்கெறியுமொளிறுவடிவேல்வயவேந்தன்
செயிர்தீர்புதல்வனினிதளிப்பச்செம்பொன்கோடிபலவாங்கி
மயிலேர்சாயலணங்கினொடுமடற்பூங்கமுகமிடறொடியக்
கயவாய்வாளைப்பகடுழக்குங்காசிநகரஞ்சென்றடைந்தான். (8)

குடச்சூற்கமுகின்மிடறுமிழ்ந்தகுளிர்பூம்பசுங்காய்க்குலைபொதிந்த
மடற்பூந்தேறல்வழிந்தொழுகும்வயல்சூழ்காசிவளநகரில்
தொடைப்பூங்கோதைகணவனொடும்ஞானவாவிதொழுதாடிக்
கடிப்பூங்கொன்றைவேணியன்பொற்கமலமலர்த்தாளினிதேத்தி. (9

ஞானவாவிப்படிமணியானன்கினியற்றிச்சோடசமா
தானமறையோர்தமக்களித்துத்தலைவற்பேணித்தவமாற்றி
ஊனமின்றிக்காசிதனிலுறையுங்காலத்துமைபாகன்
மோனமுனிவனுருக்கொடவர்முன்னரெய்தியிதுபுகல்வான். (10)

அடைந்தங்கவரையருகிருத்தியருட்கண்பரப்பிமெய்தடவி
மடந்தைபாகன்றாரகமாமறையாங்கவர்க்குவழங்குதலும்
படர்ந்தசடையுநுதற்கண்ணும்பால்வெண்ணீற்றுமெய்யொளியுந்
தடந்தோளெட்டுந்தனிதாங்கித்தளராமுத்திவீடடைந்தார். (11)

பெருகுதிரைநீர்ச்சிவதீர்த்தப்பெருமையுரைத்தேதம்தன்பெருமை
உருகிக்கேட்போர்கவின்றிடுவோருலவாக்கதியினடைவரெனத்
திருகுசினத்தவில்வலனைச்செகுத்தகடவுண்முனிகேட்பக்
குருகுபெயர்க்குன்றறவெறிந்தசுடர்வேற்குமரன்கூறினனால். (12)

முப்பத்துநான்காவது கலாவதிபேறுபெற்ற
அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—921.

## முப்பத்தைந்தாவது

# இல்லொழுக்கங்கூறிய அத்தியாயம்.

---

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

விரிந்தபுவனகோடிகளின்விழையுந்தருமம்பொருளின்பம்
பொருந்தவரியவுயர்துறக்கம்பொருந்துநகரம்யாதென்னிற்
குரும்பைதூங்குமுடத்தெங்கின்குலைகள்சிதறியிளங்கமுகின்
கருங்கட்டேறல்முசுவருந்துங்காசியலதுபிறிதுண்டோ. (1)

அரியவிரதந்தவஞானமடங்காப்புலன்களுள்ளடக்கிப்
புரியும்யோகமியற்றியல்லாற்காசிநகரிற்பொருந்தலரி
தரியவிவைகள்கலியுகத்திலுஞற்றலெவர்க்குமொண்ணாதால்
விரியும்புகழோய்நகரையடையுமாறுவிளம்புதியால். (2)

இழுக்கல்செல்லாவருந்தவமுமிழைக்குநோன்புங்கலியுகத்தில்
ஒழுக்கமென்பவொழுக்கத்துநின்றார்பெருமையுரைப்பரிதால்
பழுத்ததடவுச்சினைப்பலவின்பைம்பொற்சுளைவிண்டளிநறவின்
வழுக்கிமேதிக்கன்றுகளும்வயல்சூழ்காசியடைகுவரால். (3)

கானத்துளவினறும்படலைக்கண்ணிவேய்ந்தவுயர்பன்றி
கூனற்கோட்டினேந்தலகிலொழுக்கம்விழுமிதெனக்குறித்த
ஞானப்பொருளேயவ்வொழுக்கம்வழுவாதெனக்குநவில்தியெனப்
பானற்கருங்கட்குறக்கொம்பின்கொழுநனதனைப்பகருமால். (4)

### கலிவிருத்தம்.

ஒழுக்கமேநிதியமெனவுஞற்றும்வேதியர்தனின்
இழுக்கினோரெனினவரையிகழ்ச்சிகூறுவரெவரும்
விழுப்பமாமறநெறியைவிடுத்துளோர்தமதுயிரும்
வழுக்கிநீணரகினிடைமடுப்பராலியமபடர்கள். (5)

உயிர்க்குநன்குணர்வதலதுடற்குணர்ந்திடுநெறியில்
பயிற்சியந்தணர்கள்பதைபதைப்பர்வெங்கொடுநரகின்
வியப்புறும்படியொழுகுமொழுக்கமென்பதுவிதியின்
இயற்றருந்தருமநெறியெவற்றினுந்தலைமையதே. (6)

இயமமன்புறுநியமமெனுமிரண்டினுநியமம்
உயிர்புரந்திடல்பொறைபொய்யொழிதலின்புறுமொழிமெய்
பயில்புலன்றகைதல்மேன்மைபன்னும்வெம்படுகொலைகள்
செயலொழிந்திடல்செலவுடனிவைசிறந்தனதெரியில். (7)

நீதிசானியமமகமோனநீள்புனல்படிதல்
ஓதன்மாதவவிரதமோவருந்துணவொழிதல்
தீதிலாரொடுமினிதுசேர்தல்மேவியசவுசம்
யாதுமீகுதலிவைகளியாவுமாமெனுமறைகள். (8)

தாதைமெய்ப்புதல்வருறு தாயர்மற்றெவருமுடல்
ஏதமற்றுயிரகலிலீமமட்டலதொருவர்
போதாக்கடவதிலர்போம்வழிக்குரியதுணை
ஓதின்மற்றிலையெவரும்விடாதுஞற்றிருவினைகள். (9)

பிறக்குமன்றினுமொருவர்பிரித்துடம்பொழியவுயிர்
இறக்குமன்றினுமொருவரொளிற்றெளிந்தினியெவையும்
மறக்கைதிண்பொருளதெனமனத்துணர்ந்தடைவரிய
துறக்கமிங்குறுநிலைமைசாலத்தகுந்துணிவுடைமை. (10)

தீவினைகள்புரிகொடியபாவமுதல்சினவுபகை
யாவுநிலைதிரியவெழுதாமறைகள்புகலுநெறி
மேவியினிதொழுகுமறைவேதியர்கண்முகிறடவு
காவுசெறிவளமருவுகாசிநகரடைகுவர்கள். (11)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

வைகறையிற்றுயினீங்கியைங்கரனைமணிமுடீற்றுவாதனோடு
மெய்கனிந்தகருக்கூர்தன்மலைமகளைத்திருவினொடுநெடியோன்றன்
னைப், பைகவர்தபாம்பணையான்றிருவுந்திபூத்தவனைப்பனுவன்மானை
மொய்கடந்தகொடுங்குலிசப்படையேந்துபுரந்தரனைமுதலினோரை.

கங்கைமுதற்பேராற்றைக்கனைதிரைப்பாற்கடன்முதலாங்கடலை
வான்றோய், மங்குறவழ்திருச்சயிலமுதலாயமால்வரையைவசிட்ட
னாதி, பொங்குபுகழ்மாதவரையருந்ததியேமுதலாயபுரைதீர்கற்பின்
மங்கையரைக்கவினெழுகுமுருப்பசியேமுதலாயமடநல்லாரை. (13)

காசிமுதன்மாநகரைக்கவுத்துவமாமணிமுதலாமணியைக்காமர்
வாசமலிமந்தாரமுதலானசெழுந்தருவைவரிவண்டார்த்து
மூசுகனைக்கவளயிராவதமுதலாங்கடகளிற்றைமுறைவழாது
தேசுதிகழ்சனகன்முதல்யோகிகளைச்சேடன்முதல்வாளராவை. (14

இருக்குமுதற்பழமறையைப்பிரணவமேமுதலாயவெழுத்தைநீங்காத்
திருக்கிளர்நாரதன்முதலாந்தெய்வமறைமுனிவரைத்தேனுவாதி
உரைக்குமுயர்பசுவையரிச்சந்திரனேமுதலாயவுண்மைவேந்தைக்
குரைக்குநெடுங்கடல்வரைப்பிற்றதீசிமுதல்வரையாதுகொடுத்து
ளோரை. (15)

நவிற்றருங்காயத்திரியேமுதலாயமந்திரத்தைநறுந்தண்போது
துவைத்துவரிவண்டுழலுநந்தனமேமுதலாயசோலைதன்னை
உவப்புடனிந்திரனுகைக்கும்பரிமுதலாம்வாம்பரியையுலகிற்றீர்த்தம்
எவற்றினுக்குமேலாயதந்தைதாய்மலரடியையிதயத்தெண்ணி.

நீணகரின்புறத்தகன்றுநானூறுவிற்கிடைபோய்நிருதிதிக்கின்
கோணிலவுகதிரொழுகுமுப்புரிநூல்வலச்செவியின்வயங்கவேற்றித்
தோண்மிசையுத்தரியமுயர்சென்னிசுற்றிவலத்தினொருதுரும்புசேர்
த்திக், காணவருநற்பகல்வடக்குங்கங்குலிடைத்தென்றிசையுங்கருதி
நோக்கி. (17)

றிவளிமுச்சுடர்களைகொன் றிரங்குபுனற்செழுந் தாங்கமெண் டிக்கா
ன், மறையவர்மற்றிவர் தம்மைநோக்காமலுவர்நிலத்தின்மறுகின்
மன்றின், நெறியதனினிராமலுரைநிகழ்த்தாமலிருமலமுநீக்கிப்பின்
னர்க், குறியதனையிடக்கைகொடுபிடித்தெழுந்துமண்கவர்வான்குறி
த்துச்சென்றே. (18)

பழுதுறைதலெலியகழ்தல்புனலினிடைப்படுதலிவைபோக்கிக்கற்றீர்
பழுதறுமண்ணெடுத்திலிங்கத்தொருகாலேங்காற்குதத்திற்பதின்கா
லாங்குக், கழுவுகரத்தினிலிரண்டுகாத்துமெழுகாலொருகாலொருகா
ற்காலின், மொழியுமிருகரத்தின்முக்கான்மண்ணில்வேதியர்சவுச
முடித்தல்வேண்டும். (19)

மண்ணுறுமண்ணளவைநெல்லிக்கடுத்தான்றி பாதியெனவகுப்பர்தெ
ன்னீர்ப், பண்ணுறுபாத்திரமிலதேலுறுபுனற்கோர்முழமாகப்பயிலு
மெல்லை, கண்ணியிருந்தேசவுசமுடித்திடுகசென்னிதனிலங்கொள்
கண்டத், தொண்ணிறவுத்தரியமணிந்தாசமனத்தொழின்முடிக்க
வொண்ணுதன்றே. (20)

சங்கிவர்மண்ணுறுதொழிலினிரட்டித்தல்பிரமசாரியற்கெஞ்ஞான்று
மோங்குறுவானப்பிரத்தற்கதனிரட்டிய தனிரட்டியுயர்சந்நியாசிக்,
காங்கிவைகள்பகற்பொழுதிற்கிருட்பொழுதுக்கதிற்பாதியதகுற்றே
ற்குக், தீக்குறுநோயாளர்க்கும்படவியர்க்குநான்கிலொன்றுய்ச்செப்
புநூலே. (21)

வெண்ணிறவெவன் புயிருந்தைசாம்பரொழியிடமதனின்மேலிச்சூடு
தண்ணுரையிற்புனல்வாங்கிக்குணக்கேனும்வடக் கேனுநோக்கிமுத்
த், மண்ணுமறையவர்க்கிதையம்வாள்வேந்தர்க்கணிமிடறவ்வணிக
ரானோர்க், கண்ணமடவியரொடுபின்னவர்க்குவாயளவுசலமருந்தல் (22)

இன்னணமுக்காற்புனலுண்டிருவிசும்புதனிபார்த்தங்குட்டமூலந்
தன்னிவிருமுறையிதழ்கடைவந்துநடுவிரன்மூன்றுதம்மான்
மன்னியிடவாய்தொட்டுத்தற்சனியங்குட்டத்தால்வலப்பான்மூக்கிற்

அங்குட்டமனாமிகைசேர்த்தணிவிழி யிலஞ்செவியிலடைவிற்றொட்டுத், தங்குற்றசிறுவிரலோடங்குட்டங்கூட்டியுந்திதன்னிலொற்றிக், கொங்குற்றமலர்த்தடங்கையுரத்தனைத்துவிரலனைத்துங்கூட்டிச்சென்னி, துக்கப்பெற்றோளிவைகண்முறைதொட்டின்னணமீட்டுந்தொடுதல்வேண்டும். (24)

தெருவினிடைப்போயினுந்தும்மினுநீர்படிந்திடினுந்தெண்ணீராதி, பருகினுந்தூசணிந்திடினும்விதிமுறைநற்கருமங்கள்பண்ணும்போதும், புரிதுயினீத்தெழும்போதும்யாதேனுந்தூய்மையில்லாப்பொருள்தொட்டாலும், அரிவையர்தோள்புணர்ந்திடினுமாசமனத்துறைமுடிக்கிற்புனிதராவார். (25)

நவமிபுவாக்கத்தையொடுஞாயிற்றிற்பல்விளக்கினவையுற்றோர்கள் எவருமெழுகுலத்தோடுங்கெடுவார்பன்மாசெறியுஞ்சருகின்றேனுந் தவறுபடுமெனவுரைத்தநாள்களினும்புனிதநறுந்தண்ணீர்வாங்கித் தவமொறிவாயிடைப்பெய்துபன்னிருகாற்கொப்புளிக்கிற்றூய்மையாமால். (26)

நடவுகிலேமாவிருப்பையழிஞ்சில்வன்னிநாயுருவிதண்பூங்கொன்றை, கடுநாந்தங்குமிழ்வாகையீர்ந்துநறுவிலிதுவர்ப்பாய்க்கடுவாய்ப்பாலாய்க் கொடுமுளுடைத்தார்தருவிற்சிறுவிரலின்பருமையதாய்க்கோடலின்றி, வடுவிலதாந்தருவொடித்துவயங்கொளிவெண்பற்கறைகள்மாற்றல்வேண்டும். (27)

மதிக்கடவுணினதிடத்தவைகினன்கோடுயர்மானேவாணாள்சீர்த்தி நிதிக்கிழமைபுதல்வரெழிலாற்றலருள்தூய்மையருணீதிஞானம் முதுக்குறைவேயளித்தெனதுமுகநோக்கென்றருமறைகள்மொழியுந்தீதில், விதிப்படியிலுரைத்துநறுந்தருவொடித்துமணிமுறுவல்விளக்கவேண்டும். (28)

குற்றமில்பன்னிருவிரலினளவையருமறையோர்க்குக்கோடல்வேண்டும், மற்றையொருமூவருக்குமோரொருமெல்விரல்குறைதல்வருத்ததாகுஞ், சொற்றநறுந்தருவினைவிற்போல்வளைத்துநாவழித்துத்தூயனாகிற், கற்றைநிலாக்கதிரெறிக்குங்கடவுள்மதிச்செல்வனுளங்கருணைகூடும். (29)

நம்பையெட்கோமயத்தொடுமண்தனிகொணர்ந்து புனிதமுறுந்தல
நிற்சேர்த்திப், பொருப்புறழ்தோளுத்தரியமருங்கசைத்துச்சிகை
முத்தப்புனலிற்சேரா, முருங்குநவின்றெறிபுனல்தொட்டணிசிரத்
தான்றுந்தியின்மேலிரண்டுமூன்றுங், குறைக்குமுந்திக்கீழிருதாட்
மூன்றுவிதிமுறைமண்ணுமைரத்தல்வேண்டும். (30)

நந்துபுனலெதிராடியெழுந்துடலங்கோமயத்தாற்றைறவர்தாங்கு
முங்குதிரைநீராடமொழிந்தமறையனைத்தினையுமொழிந்துமூழ்கிச்
செழுங்கரத்தாலிமையவர்கள்முனிவரர்தென்புலத்தவர்க்குத்தெண்
நீராங்கு, வழங்கியகன்கரையேறியுத்தரியந்தனைமறித்துப்பிழிந்து
ந்னர். (31)

நசமருங்கினிலசைத்துத்தோளின்மேலுத்தரியந்துலங்கச்சேர்த்தி
ாசறுவெண்பூதியினைமார்பினணிந்துயர்தருப்பைவலக்கைசுற்றிக்
காசறுகாலைக்கடவகடன்கழிக்கவிவ்வண்ணங்கழித்திடானேல்
நேசழிந்துபின்னவனும்மறுமையில்காயாய்ப்பிறந்துதிரிவன்மாதோ.
இன்னணநீர்க்கடன்கழித்துக் குணக்கேனும்வடக்கேனுமினிதுநோ
க்கி, மன்னியமூச்சவித்துமுக்காற்பிரமகாயத்திரியைமனத்திறுதி
ச், சொன்னபிராணுயாமமொருகாற்செய்திடிற்பாவந்தொலைந்துநீங்
கும், பன்னிருகாலஃதியற்றிலளப்பிலநாள்தவம்புரிந்தபலனுண்டா
மால. (33)

அரத்தநிறத்துகிலசைத்துக்கண்டிகைமா லிகைசூடியன்னமூர்ந்தாங்
குரைத்தநறுஞ்செஞ்சாந்துஞ்செய்யபொலன்கலனுமணிந்துறையுமா
நத, விரித்தமறைதொழுங்காயத்திரியணங்கைப்பருவமிருநான்கு
டைய, திருத்தகுநல்லுருவாகநினைத்திராவியெழுமளவுஞ்செவித்தல்
வேண்டும். (34)

இன்னணநின்றுயிரத்தெட்டோதியுவத்தானமுறையினிதினுற்றிப்
பன்னுசிவசங்கற்பமுதலானபழமறைகள்பகர்தல்வேண்டுந்
தென்வரையினறுஞ்சாந்தத்தேய்வையும்வாலரியினொடுசெய்யபூவும்
மன்னுபுன லொடுங்கூட்டி யருக்கியஞ்சேட் டிளங்கதிர்க்குவழங்கல்
வேண்டும். (35)

ஓரிரண்டுமூன்றொன்றாய்வளர் தருப்பை தனைநீக்கி யொன்பானே
சேருடைய தருப்பைநுதி முதலுள தாய்க்கொண்டகில்சந்தெதிர்நீர்சே
ர்த்திச், சீர்கெழுதேவர்க்கொருகால்முனிவருக்கிருகால்நற்றிலமுங்
கூட்டி, ஆர்வமொடுதென்புலத்தோர் தமக்குமுக்காற்பகர்நாளிலளி
த்தல்வேண்டும். (36)

அலங்குகதிர்வரக்கழுந்துதிரள்சுரைக்கா யெண்ணையொடுமோர்ந்தழா
ல், இலங்கொளியவெள்ளுப்புமுன்னைநாளடிசிலெழிலவரைப்பைங்கா
ய், நலங்கெழுநூற்றுறைபடிந்தோரிவைநீக்கியினிதருந்திநன்கினட்ட
பொலன்கொள்முல்லைமுகையடிசில்தன்னில்வயிச்சுவதேவம்புரிகு
வாரே. (37)

கடவுளர்பூசனையாற்றிவெண்ணிலவுக்கதிரெறிக்குங்கலன்கடாங்கி
விடையிவர்ந்துபானிறமென்றுகிலசைத்துநறியமுகைவிரிக்கும்வெ
ள்ளை, மடலவிழ்தாரணிந்தபயவரதமொடுமினிதிருக்குமடந்தைதன்
னை, ஒடிவறுகாயத்திரியையுள்ளுபுநன்பகற்கடன்றீர்த்துவப்பினொ
டும். (38)

ஆதுலர்நல்விஞ்சைகற்பானடைந்துளோரறம்புரிதற்கையமேற்போர்
வேதமுறையினிதுணர்வோர்பிரமசாரியர்துறந்தோர்விருத்தராகப்
போதருவோர்க்குணவளித்துக்கொடிபதிதரிழிந்தோர்நாய்புலம்பு
நோயர்க், கோதியமந்திரமுறைத்துக்கொடிமறுகினிடைப்போதந்து
ய்த்தல்வேண்டும். (39)

மணிமறுகிற்போயைந்தோரான்கறக்கும்போதளவும்வறியோர்த்
தேடித், தணிவருநற்கேளிரொடுந்தையலொடுமக்களொடுந்தனதில்
வைகிக், குணதிசையாயினும்வடபாலாயினும்பார்த்திருந்துபிடிமூன்
றுற்கோதில், அணிபெறுநற்பலியாற்றித்தருப்பையினையணுங்கைவி
லகலாதார்த்து. (40)

அருமறையானீர்வலஞ்செய்தடிசில்தொட்டாபோசனங்கொண்டன்
பினொடும்,உரியபிராணாகுதிசெய்தினியனநெய்யோடுமுதலுண்டுபின்
னர்க், கருணையொடுபொரிப்பனகளுண்டருந்தியான்பால்முக்கனிகள்
கூட்டி, விரைவினொடுபின்னருந்தியுத்தராபோசனமும்விதியிற்கொ
ண்டு. (41)

யிருந்தபுனல்பெருவிரலின்வழிவிடுத்தாவுரவத்தின்மேவினோர்கள்
மகிழ்ந்திடுகவெனப்புகன்றுகைபூசியாசமனமாயினாற்றிப்
புகன்றபாத்திணைநினைந்துகால்கழீஇச்சனிவடவைபுணரிவெய்யோ
ன்,அகந்தனிலோர்ந்தயின்றவைகளாற்றிடுகவெனச்செவித்தங்கடை
க்காய்தின்று. (42)

பொருவரியவிதிகாசபுராணமிவைபயின்றுபகற்பொழுதுபோக்கிப்
பருதியுயரத்தவரைபடுபொழுதிற்கடனதனைப்பயிலுமில்லில்
நிரைபயிலுந்தொழுவினதிய தனிவிரண்டாறடைவுழியினீறுபூசி
மருவுசினகரத்தாற்றிலொன்றினுக்கொன்றனந்தபலன்வழங்குமா
தோ. (43)

நீணிறமென்றுகிலசைத்துநீலநிறப்பொற்கலன்கணிலவத்தாங்கிக்
காரொழுகுகரியமலர்த்தொடைசூடியெழுவலியகலுழனூர்ந்து
ஞானமிகுஞ்சாமமறைவடிவாகுமணிநிறத்தங்கைதன்னை
வானிடைமீனெழுந்துணையுநினைந்துகாயத்திரியைவழுத்தல்வேண்
டும். (44)

முனிசினையசமிதைகளிற்றீக்கருமமுறைமுடித்துமுகமன்கூறி
அளிபெருகவிருந்தினொடுமடிசிலுகர்ந்தாசமனமினிதினாற்றித்
துளவமுகில்குறுமுனிவன்முசுகுந்தன்கபிலனடிதொழுதுநீண்ட
வளியெறியுமிருஞ்சிறையகலுழன்மறைசெவித்தானைவணங்கியேத்
தி. (45)

இருண்மேய்ந்தமணிவிளக்குநிறைகுடமுந்தலைமாட்டினினிறுவைத்
து, முருகார்ந்தநறுந்தூமந்தவழுமலரணைமீசின்முடிவில்கற்பின்
உருவாய்ந்தவோடரிக்கண்மகளிரிருமுலையகலத்தொளிப்பச்செம்
பொற், றருவாய்ந்தபணைப்புயத்திற்றழீஇக்கொண்டுதுயில்புரிதல்
நகைமைத்தாமால். (46)

தானுறையுமுவளகத்திற் கீழ்த்திசையிற்றலைவைக்கக்காதன்மாமன் வானுறைபொன்மணிமாடத்துறைந்திடிற் றென்னிசையதனில்வை க்கச்சென்னி, ஊனமில்வேற்றாருறையிற்குடபாலிற்றலைவைக்கவு த்தரத்திலென்றார், தேன்மருவுநறுங்குஞ்சித்தலைவைத்துத்துயில் புரிதல்செவ்வித்தன்றே. (47)

## முப்பத்தைந்தாவது இல்லொழுக்கங்கூறிய அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—968.

## முப்பத்தாறுவது
## பிரமசரியங்கூறிய அத்தியாயம்.

### கலிநிலைத்துறை.

தரளத்துவலயத்தச்செறுத்தங்குநாட்டோ
ருருவுற்றுநீங்கிச்சுடலைக்கண்ணுறைந்தகாறுந்
தெருளுற்றதெய்வமறையோர்முதற்செப்புமூன்று
வருணத்தவர்க்குக்கருமங்கள்வகுத்துரைப்பாம். (1)

போராடுவேற்கண்மடமங்கையர்பூத்துவீங்கு
ஈராடியநாள்முதலாகநெறியினேதும்
ஈராறுநாளிற்கருவவ்வயிற்றெய்தினன்காஞ்
சீராம்மதியிற்செயத்தக்கனசெய்துபின்னர். (2)

ஆறுமதியிலுயர்சீமந்தமாற்றியெய்தாப்
பேறுமகப்பெற்றிடுங்காலையிற்பெட்பினோடும்
மாறுதகாதன்மகவின்முகநோக்கிநானச்
சேறுடியேற்போர்க்குயர்நீணிதிமாரிசிந்தி. (3)

சுத்தம்மறையின்வழியேசிகைதாங்கவைத்து
முத்தம்மெறிந்தம்முகிழ்மென்னகைமாதரார்க்கும்
இத்தன்மையாயகருமம்மறையின்றியாற்றி
மைத்தங்குகோதைமணமாமறையோடுசெய்க. (4)

தோளாமணியன்னவத்தோன்றலுக்கன்பினோடு
நாளோர்பதினொன்றுபுகுந்தழிநாமநல்கித்
தாளான்மதிநான்கினிற்சந்திமிருத்தபின்னர்க்
கேளோடுமாறுமதியிற்கிளரன்னமூட்டி. (5)

ஆண்டேழிலெட்டின்மறையந்தணர்க்காகுமந்நால்
ஆண்டோர்பதினொன்றினின்மன்னவர்க்காகுமென்ப
வேண்டீர்பருவம்மிருநான்கொடுநான்குசேரிற்
பூண்டாங்குதிண்டோள்வணிகர்க்குப்புனைதல்வேண்டும். (6)

ஐந்தாம்பருவத்தினுமாமறையோர்க்கொராறில்
பைந்தாரரசர்க்குரைப்பார்கற்பருவமெட்டில்
நந்தாதசெல்வமலிநாய்கருக்காருமென்ன
முந்தாரணங்களொருநான்குமொழிந்தவன்றே. (7)

விழுப்பஞ்செய்காயத்திரிநன்கின்விளம்பியேவதம்
பழிப்பின்றிநாளும்பயிற்றித்தம்பண்பினுய
ஒழுக்கம்பயில்வித்தன்பின்னவ்வொழுக்கமாக
வழுக்கின்றிநிற்றறலைமைப்படுமென்பதாயால். (8)

சொன்னமறையினுயர்க்கோர்மனைசோறுமேற்ற
அன்னங்குரவனருள்பெற்றலதார்தலாகா
தென்னல்லமைத்தசெழுஞ்சோறம்மைக்கேதுவேப்பர்
கொன்னேயிரவிதனைநோக்குதல்செய்கையன்றே. (9)

ஆள்வேட்டமாடுநெடுங்கண்மடமாதராம்பொற்
றோள்வேட்டலாகாதமர்கேளொடுநாய்த்தலாகா
கோளேற்றபுல்லர்குழுவுற்றழிக்கூடலாகா
தாள்போற்றிநாளுங்குரவன்றனைத்தாழ்தல்வேண்டும். (10)

காழ்கொண்டசந்தங்கமழ்தாரடைக்காயொடாகா
வாழ்கின்றவாவியெவையேனும்வதைத்தலாகா
ஊழ்கொண்டதண்டமுரிமுஞ்சியொழித்தலாகா
வீழ்கின்றநெஞ்சம்விடயத்தின்விடுத்தலாகா. (11)

மறையோர்கட்காண்டுபதினாறுமறங்கிடக்கும்
எறிவேலரசர்க்கியலாண்டிருபத்திரண்டு
நெறிசேர்வணிகர்க்கறுநான்கிவைநீங்குமென்னின்
முறையன்றுசாந்திபுரிந்தன்றிமுந்நூல்கள்சேர்த்தல். (12)

மறையோர்க்குத்தூயகலைநீடுரிபுள்ளிமான்றோல்
அறைவார்கழற்கால்வயவேந்தர்காட்டுமென்றோல்
முறைசேர்வணிகர்க்கிவைமுப்புரிநூலினோடும்
பொறிதஞ்சமர்ந்தாரகலத்திற்புனைதல்வேண்டும். (13)

ஒளிர்முஞ்சிமென்பழ்சணம்போடுபருத்திநன்னூல்
வளர்நான்மறையோர்முதல்மூவர்மருங்கினார்ப்ப
களிசேர்தருப்பைபுயர்தாதகில்வில்லகார்மற்
றளியோடிவையுமணிந்தாலுமணியலாமால். (14)

ஒன்பானமைந்தவொருமூன்றுபுரியவாய
நன்பாலவெண்ணூல்சணம்பாட்டின்மயிருநன்கி
தென்பார்முறையின்னவர்கட்குயர்தண்டமோதின்
அன்பாமருமாமறையோர்க்குப்பலாசமாகும். (15)

வேந்தர்க்குமேனை வணிகர்க்கும்பலாசம்வில்லம்
ஏந்தப்பணித்தவ்விவைநீளமம்மூவருக்கும்
ஆய்ந்திட்டசென்னிநுதல்மூக்கினளவையென்ப
தோய்ந்துற்றகேள்விமறையின்றுறைபோயதொல்லோர். (16)

ஈன்றாளவளையனையார்மனையையமேற்றுண்
டான்றோர்புகழவொருவேதமமைந்தபின்னர்ச்
சான்றோர்மதிப்பச்சமாவர்த்தனமாற்றிமிக்க
வான்றோய்பிறைவாணுதல்மன்றல்முடித்தல்வேண்டும். (17)

விதியாற்சமாவர்த்தனமாற்றினர்வேட்டிலாரேல்
மதியோரிகழ்வார்வளர்கன்மமியற்றலாகா
முதியோர்சொன்னான்காச்சிரமத்தின்முறைவழாது
வதியாதவரேதுறக்கத்தின்வதிந்திடாதார். (18)

முன்னாச்சிரமிக்குயர்தண்டொடுமுஞ்சிமான்றோல்
மன்மாமகமில்லுறைவார்க்கும்வனத்தினோர்க்கும்
தொன்மாமயிர்வாணகந்தாங்கல்துறந்துளோர்க்குக்
கன்மேயவாடைகழைத்தண்டுடையாளமாமால். (19)

நல்வேதம்வேதப்பொருள்யாவுநவின்றுளோர்கள்
தொல்லாசிரியர்பொருள்கொண்டவைசொல்லுகிற்பார்
ஒல்லாததீங்குத்தபநூறுமுபாத்தியாயர்
எல்லாவினையுமுடிப்போர்குருவென்பரன்றே. (20)

அருண்மேவுதந்தைதனிலன்னையதிகமாகுந்
தெருள்சேர்குரவற்பழிப்போரிடைசேர்தலாகா
மருளோடுமன்னோர்புறங்கூறுநாவைமுள்ளொற்ற
இருண்மாநிரயந்தனில்பற்பகலெய்துவாரே. (21)

நற்றாய்புதல்வியுடன்றோன்றியநங்கையேனும்
உற்றோருழியிற்றனியெய்தியுறைதலாகா
விற்றானைவேந்தன்குருமுன்னவன்மாமன்மேய
அற்பார்மகளிர்பயந்தாளொடுந்தாயரைவர். (22)

ஓராழிவெய்யோனுதயக்குவடுற்றகாறும்
போதுணருற்றுணராதபிரமசாரி
ஆராமலற்றைத்தினநோற்றலமைத்ததாகுஞ்
சீரார்மனைவாழ்குநர்செய்தியுரைத்துமன்றே. (23)

நன்மாண்புடைய மனை வாழ்மனை தன்னை நண்ணில்
தொன்மாண்பனைத்துந் தொகுமாங்கவளெய்திலாளேல்
இன்மாண்புறு தென்றுயர் வேதமிசைத்தவாற்றால்
அன்னோர்வடிவங்குணஞ் செய்தியறையலுற்றேன். (24)

## முப்பத்தாறாவது பிரமசாரியங்கூறிய அத்தியாயம் முற்றிற்று

ஆகத்திருவிருத்தம்—992.

## முப்பத்தேழாவது மகளிரிலக்கணங்கூறிய அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

கண்ணுகோத்திரமொன்றினிலுதித்துளோர்கலிதகுபிணியுற்றோர்
பெண்ணலாதுயர்கன்மகப்பெறுகிலாப்பேதையர்வழிவந்தோர்
மண்ணினின்றவான்பழிபடுமரபினில்வந்துளோரார்வரைப்பாந்தள்
விண்ணின்மீனதிபறவையின்பேருளார்வேட்டிடல்விதியன்றே.

இனியமென்மொழியுடையளாய்த் தன்னினுமிளையளாயெவரோடும்
முனிவிகந்திடுகுணத்தளாய்ப்பொருந்தியமுயற்கறையொழிந்தோங்
கும், பனிசெய்வெண்மதிமுகத்தளாய்மைந்தர்கள்பலரொடும்பிறந்தா
ளாய்த், துனியிலாதகற்கன்னியைவேட்டிடல்தொன்மறைவழக்கா
மால். (2)

இழிந்தபுன்குலத்தாதல் தன்குலத்தினுமியல்புறமேற்பட்டுக்
கழிந்தகன்குலத்தாதல்பொன்னனையவர்கவினுடைவடிவெல்லாம்
மொழிந்தநூல்வழிபிறழ்ந்தமெல்லுருவினர்முகிண்முலைமுயக்குற்று
ல், அழிந்துபோகுநல்லுணர்வழனிரயமுமாங்கவர்க்கணித்தாமால்(3)

ரக்கெறிந்தசெந்தாமரையெனச்சிவந்தரும்பியவெயர்வின்றிப்
பெருத்தலஃகுதலின்றிமெல்லணிச்சமேற்பெயர்ப்பினுங்குழைவாகி
உருத்தவெம்மையோடுள்ளடியமைந்தனுறுவரைகொடிமீனங்
ரித்தசக்கரம்வளைகுடைபோன்மெனிற்றக்கமன்னவர்க்காமால் (4)

நுவமெல்விரலளவுமேனோக்கியோர்வரைகனிகடந்துற்றால்
டையுகற்றிருப்பாந்தள்வெம்பேரெலியாய்மயிர்க்கழுகேபோல்
உடையநீள்வரைகிடந்திடினல்குரவொழிவுறுத்துயர்மேவும்
வடிவமைந்தநற்பெருவிரல்திரண்டெழில்வாய்த்திடிற்றிருவெய்தும்.

அன்னமெல்விரலகன்றிடிற்கைம்மையாநீண்டிடிற்றிருவஃகுஞ்
சொன்னதன்மையினன்றிமற்றேனையதொகுவிரலறநோக்கின்
மன்னுறுத்திருநீளுமேற்பிறனலமகிழ்ந்திடுநெருக்குற்றால்
துன்னலுற்றிடுதாசியாங்குறுகிடிலிறந்திடுஞ்சின்னாளில். (6)

விரல்களொன்றின்மேலொன்றுறிற்காதலன்வீழ்ந்திடுமகன்றானற்
பொருளகன்றிடுங்கடைவிரனிலத்திடைப்பொருந்திடாதெனிற்காத
ல். பெருகுகேள்வரையொறுத்திடும்பெருவிரற்கடுத்தமெல்விரனீளி
ன், அரியநன்மணமாற்றுமுன்பலரொடுமன்புறப்புணர்கிற்பாள். (7)

அறவுமென்மையாயளவினிற்பருத்துவேர்வரும்பொடுநரம்பின்றிச்
றிதுயர்ந்திடினன்றுயர்நரம்பொடுசேர்ந்திடிற்சேட்செல்லும்
உறவளர்ந்திடினிரப்புறுங்கோலெனவுயர்ந்திடிற்சிறப்பின்றாம்
வெறியபன்மயிர்கிளைத்திடிற்சிலதியாயளப்பிறள்மெலிகிற்பாள். (8)

ஒளியுமிழ்ந்தநல்வட்டமாய்ச்சிறிதுசேப்புண்டிடுநகமென்னிற்
களிவிளைத்திடுந்துகளொழுநடந்திடிற்கன்னிதன்குலமூன்றும்
விளிவுகண்டுமற்றயலவர்ப்புணர்ந்திடுமென்பரிட்டியல்கூறின்
களியுறத்தசைந்துயர்நரம்பெழாதுருண்டழகுறினினிதாமால். (9)

ரம்பெழுந்துமென்பாடுயர்ந்திடிற்றிருகண்ணுறுகுதிப்பந்தின்
ரம்புபேரெழில்வாய்ந்திடில்விழுமியநீண்டிடிற்றுயரெய்தும்
வாம்பிகந்தறவுயர்ந்திடினேதிலார்மணத்தினில்மனம்போக்குந்
திருந்தலின்றியேபருத்திடிலளப்பருஞ்செல்வமஃகிடுமன்றே. (10)

மயிரிகந்த மேல்வரவரப்பருத்திணைவாய்ந்தொளியுடைத்தாகி
உயர்நரம்பெழாதுறுகணைக்காலெழிலோங்கின்மன்னவர்க்காகுஞ்
செயிரிலாமுழந்தாளுயர்பாண்டிலாய்த்திரண்டிடிலழகாகும்
பயிலுமென்றசையொழிந்திடின்முலைவிலைபகருமாதரிற்சேரும். 11

குறங்குநீணரம்பொடுமயிரின்றிமற்றொன்றொடொன்றுறக்கூடி
மறங்கொள்யானையின்றடக்கைபோற்றிரண்டுமேல்வரவரப்பருத்
தோங்கிற், சிறந்தவாமயிர்பொடிந்திடிற்கைம்மையாநீங்கிடிற்றுயர்
சேரும், பிறங்கிடாதெனிற்சீர்கெடும்வன்மையாய்ப்பெருத்திடினிரப்
பாமால். (12)

எண்ணுமங்குலமோராறுநான்கதாயெழில்பெறுங்கடிநன்றாம்
வண்ணம்வாய்ந்துறவுயர்நிதம்பத்தொடுஞ்சதுரமாய்வனப்பேறி
நண்ணுறாதறநீண்டுதாழ்ந்துயர்ந்திடினனிமயிரிடைசேரிற்
கண்ணும்வெந்துயர்ப்பிணிபிடித்தலைப்புறக்கைம்மையாய்விடுமன்றே

பருத்துயர்ந்தறமென்மையாய்த்திரண்டிடுஞ்சகனமேற்பரிவோடும்
பொருத்துறுங்கலவிக்குநல்லின்பமேபூத்திடுமாறுகில்
அருத்திசெய்திடாதாரளுர்பயக்குறுமம்பகட்டகலல்குற்
பெருத்தவாய்மையான்முதுகுயர்யானையின்பிடரின்வாய்திடனன்றே

வலமுயர்ந்திடினழகுடைப்பெண்சிறார்வயிறுவாய்த்திடுமென்ப
அலதிடப்புறமுயர்ந்திடின்மைந்தரையளித்திடுங்கமலம்போல்
உலவுமெல்லாசிலையெனமான்குளப்படியெனப்பருத்தோங்கி
எலியின்மென்மயிர்போன்மயிரணிந்திளமணியமைந்திடனன்றே. 15

சங்கின்மென்றுளைபோன்றிடின்மகப்பெருட்டம்புழைவிரிவாகித்
துங்கமாய்மணிசெறிமயிர்பருத்திடிற்றுயருறுமடிப்பாமேற்
பங்கமுற்றிடுசிலதியாமிடப்புறம்பள்ளமாய்ச்சுழியெய்தின்
மங்கலத்தபொன்னிகந்தயர்வொடுமம்மர்நோயுழல்கிற்பாள். (16)

இடுகுநுண்ணிடைவறுமையெய்திடிற்றிருவெய்திடும்பெரிதாகிற்
படருழந்திடுமுந்தியாழ்ந்தகன்றெழில்பயில்வலஞ்சுழியாகில்
அடையுநற்றிருநாம்பொடுமயிரணிந்துயர்ந்திடஞ்சுழியாகில்
உடலம்வன்றுயர்மென்மையாம்வயிறெனின்மகப்பலவுயிர்க்கிற்பாள்.

அவ்வயிற்றெழில் தவளைமெல்வயிறெனவமைந்திடிற்புவிகாக்குஞ்
செவ்விவேந்திளங்குமரரையுயிர்க்குமாலிலையணைச்சிறப்பெய்தி
எவ்விடத்தினுமயிருறாதிருந்திடிலிகழருஞ்சிறப்பெய்தும்
நவ்விநோக்கியர்வயிற்றினிலணிவரைமூன்றுறினலனுமால். (18)

வயிற்றின்மேன்மடிப்புயர்ந்த நீள்சுழிபலவதிந்திடின்மலடாகிச்
செயிர்ப்பினோடுதன்பதியகன்றெங்கணுந்திரிந்தாகாமமுமின்றிப்
பயிர்ப்பில்தாசியாங்குடமெனமுழவெனப்பருத்திடுமெனினுளும்
உயிர்ப்பவிந்துயிருலந்திடுமெனவிரப்புற்றுவெந்துயர்கூரும். (19)

நீறுபூத்துயர்பூசணிக்காயெனநெல்லெனவயிறெய்திற்
சோறளப்பிலதுய்த்திடுமகன்றிடிற்றுயருறாமிகநாலிற்
கூறுமாமனைக்கொழுந்தனைக்கொன்றிடும்விலாப்புடைதசைமேவி
ஊறின்மென்மையாய்நரம்பெழாதழகுறினுலப்பறுதிருவெய்தும். (20

நரம்பெழுந்துறுமயிரொடும்விலாப்புடைநண்ணுமேலவனூலின்
நிரம்பிலக்கணமுடையளாயினுந்திருநீங்குமவ்வயிற்றின்கட்
பொருந்துநன்மயிரொழுக்கறமென்மையாய்ப்பொழிகதிருமிழ்நீலத்
திருந்துகோலெனக்கிடந்திடின்மலருறைதிருவினுஞ்சிறப்பெய்தும்.

மயிரொழுக்கமுள்வளைந்திடிற்கைம்மையாமம்மயிர்சிவப்பேறிற்
செயிருறுங்குணமெய்திடுமிடையிடைசிதைந்திடிற்றிருநீங்கும்
இயல்பொடுஞ்சமமாய்மயிரின்றிநல்லிதயமாழ்ந்திடாதாகில்
உயிரினுஞ்சிறந்தின்னுயிர்க்காதலனுவப்புறச்சிறப்பாமால். (22)

இதயமென்மயிரணிந்திடிற்காதலனிறந்திடுமகலுற்றால்
மதனனைங்கணைவருத்திடப்பலரையுமணந்தளியிலளாகுஞ்
சிதைவிலங்குலமோர்பதினெட்டதாய்ச்சிறிதுயர்ந்திடினன்றாந்
ததையுமென்மயிரணிந்தறப்பருத்திடிற்சார்வருந்துயராகும். (23)

வடங்கொள்வெம்முலைபணைத்தடிகனத்திணைவாய்ந்திடைவெளியி
ன்றிக், கடைந்தசெப்பினிற்புடைபரந்தெழிறவழ்கண்கறுத்திடினன்
றாந், தடங்கண்மங்கைதன்வலமுலையுயர்ந்திடிலாண்பெறுந்தளராது
டம்பழித்துயரிடமுலையுயர்ந்திடிற்பெண்பெறுங்குறியாமால். 24

அடிகனத்துமெல்விரவரகோர்ந்திடிற்சிறிதுகாளழகெய்தும்
உடிவமின்றியே பிரிகைபோற்பதிந்திடில்வசைபடுகுணனுகும்
ஒட்டவில்கண்ணணைபருத்திடினீண்டிடிலுயர்ந்திடினுதியாழிற்
கடினமாயறங்கிடுமூலையெனிற்கனவினுந்தொடலாகா. (25)

கழுத்தடிப்புறத்திதன்பெழாதமைந்திடிற்றிருவுறுங்கவின்யாதும்
ஒழித்துமேலெழுந்துயர்ந்துதாழ்ந்திடிற்றிருவொழிந்திடுமழகார்ந்த
பழிப்பில்தோளிணைகுறுகுதனீளல்மற்றின்றிமென்பணைபோல
விழுப்பமெய்தினன்றுதோண்மயிருறிற்கைம்மையாய் விடுமன்றே.

தோளிலென்புமேலெழுந்திடிற்கைம்மையாமுலர்ந்திடிற்றுயரெய்துந, கோளில்சந்துகடைசந்துதோன்றுவெனிற்குற்றமொன்றிலதாகும், நீள்கைமூலமென்மயிரொடுமுயர்ந்துறப்பருத்திடினெறியாகும், வாள்கொள்செம்மயிராழ்தனீணரம்பொடுவழியும்வேருறிற்றீதாம்.

உலறுபன்மயிரின்றிநீணரம்பொடென்புயர்ந்திடாக்கரகன்றுங்
குலவுபன்மயிரென்பொடுநரம்பெழிற்கொடியவெந்துயரெய்தும்
இலகுதாமரைநனையெனப்பெருவிரலியைந்திடிற்சிறப்பெய்தும்
அலகில்பேரழிலங்கைமென்முயல்வயிறுமெனக்குழைவுற்றே. (28)

அரத்தமூட்டியசெய்யபொற்றமரையகவிதழெனச்சேந்து
பொருத்துமெல்விரலிடைவெளியின்றியே பொருந்தியவரைத்தாகி
இருத்தனன்றுயர்புறங்கையினரம்பொடென்பெழாதுமென்றசைமூடிப், பெருத்துநீண்மயிரொழிந்தெழில்வாய்ந்திடிற்பெட்பொடுந்திருவெய்தும். (29)

அங்கைநீள்வரைபலவுறிற்கைம்மையாமகன்றிடிற்றிருவஃகுந்
தங்குநீணரம்புயர்ந்திடிலிரக்குநீள்புறங்கையிற்றலைப்பெய்து
துங்கமாமயிர்செறிந்திடிற்காதலன்றெறுலவனீணரம்பெய்திற்
பங்கமுற்றுயர்சிரப்புறகாடொறும்படுதுயரிடைவீழும். (20)

இடையறாதுறச்சேர்ந்தறத்தோன்றிடாதெழிறிகழ்வரையாவும்
மிடையுறுதசெஙகயலெனக்கிடந்திடின்விழுமிதுகமலம்போல்
வடிவம்வாய்ந்திடிலாசரிற்கிழத்தியாய்மகப்பெறும்வளையாமை
குடைநிகர்த்திடில்விண்ணவர்க்கன்னையாய்குறைவில்சீர்பெறுமாதோ. (31)

நற்புவாய்ந்திடுஞ்சோத்திகநிகர்த்திடிற்கமழ்மலம்புரிநேரின்
ஒற்றைவெண்குடைமன்னவர்க்குரியளாமுறுஞாலமெனச்சேரின்
மற்றைநாய்கர்தம்மனைவியாநுகத்தொடுசகடமாம்வடிவெய்தில்
அற்பினேடுநல்லுழவர்தம்மனைவியாயறம்வளர்த்திடுமன்றே. (32)

வேழவாம்பரிவெள்விடைவச்சிரம்வீசுசாமரந்தோட்டி
ஆழியொப்புறினரசரிற்கிழத்தியாமாடல்வேல்கதைசூலஞ்
சூழ்சுடர்க்கொலைவாளிவைபோன்றிடிற்றெருகுபொருட்குவையாவும்
வீழுநர்க்கெலாமகிழ்வுறநாடொறும்வேண்டுவநனிநல்கும். (33)

அரவமொட்டகந்தவளைசெந்நாய்கழுகாற்றுவெங்காம்பூனை
நரியுடற்றுதேணிகர்த்திடிலருந்துயர்நண்ணுமங்குட்டத்தின்
வரைகளிட்டிகையளவுறிற்காதலன்மரித்திடுமெழில்வாய்ந்த
விரல்களூழ்முறைநேர்ந்துறுசந்திகண்மிகுந்திடாதெனினன்றாம்.

மயிர்நரம்பெழுந்துயர்ந்தறவண்மையாய்வளைந்துநேர்ந்திடைநீங்கிற்
செயிர்விளைந்திடுங்கூருகிர்நீண்டுறச்சிவந்திடிற்சிறப்பாகும்
பயிலுநல்லொளியின்றியேபொன்மையாய்ப்பள்ளமாய்விளர்ப்புற்றால்
துயருழந்திடும்புள்ளியாய்விளர்ப்புறிற்றேய்ந்திடும்பலரோடும். (35)

முதுகுசேர்ந்திடுமென்புமென்றசையினின்மூடிநீண்மயிரின்றி
விதியினல்லெழில்வாய்ந்திடினன்றுகூன்மேவிவன்மயிர்வேய்ந்துன்
நதையுமென்பொடுநரம்பெழுந்துயர்ந்தறத்தாழ்ந்திடிற்றீதாகும்
பொதிநரம்புகோணின்றிமென்றசையினிற்பொருந்திடிற்சுகநன்றாம்.

சிறுபுறத்தினிரம்பெழில்வன்மயிர்சேரினீண்டிடிற்கோணில்
அறவும்வற்றிடிற்றீதுமென்கழுத்துநாலங்குலத்தளவாகி,
உறவனப்பொடுங்கன்னியங்கமுகெனத்திரண்டொளிர்வரைமூன்று
பெறுதனன்றதுகுறுகிடிற்றூசியாம்பெருந்திடிற்கலன்போக்கும். (37

டன்மயிரொழிலுலப்ப

கலந்துநீண்மடிப்பெய்திடின்மலடியாநாடிநன்கவினெய்தி
நலஞ்சிறந்திரண்டங்குலத்தளவையாய்த்திரண்டிடினன்றாகும்
மலிந்துநீண்டிருகூறதாய்ப்பருத்தவன்மயிருறிற்றீதாமால். (38)

அனுகரம்பநடயிரிவைமொழிந்திடலழகுறும்வளர்ந்தோங்கி
கனியினைத்தறக்குறுகிமென்மயிருறினவைய தாங்கபோலங்கள்
புனியவாய்த்தசைந்தாடியினெழில்கவர்ந்திமைதனன்றெழினுறுங்
கனிவுறுதறப்பள்ளமாய்மயிரொடுங்கடினமாயுறிற்றீதாம். (39)
ஒளிபுமிழ்ந்துகல்வட்டமாமெழிறிகழுவாமதியெனத்தோன்றி
நளினமென்மணம்வீசும்வாண்முகமெனினன்றுகீழிதழ்சேர்ந்து
வளர்செழுந்துகிர்க்கடிகைபோற்றிரண்டிதனடுவணோர்வரைசேரிற்
களிகளுடலகளத்திடுமரசரிற்கிழத்தியாய்க்களிகூரும். (40)
பருத்துகாமனைச்சிறுத்திரண்டிதழெனப்பகர்ந்திடும்வரைமேவில்
திருத்தணப்புறுங்கறுத்தறப்பருத்திடிற்கைம்மையாய்த்துயர்சேரும்
பொருத்துமேலிதழ்கடுச்சிறிதுயர்ந்தெழில்பொருந்திடினன்றாகும்
விரித்துயர்ந்துநீண்மயிரொடுபொருந்திடின்மிக்கவெந்துயர்கூரும்.
முருந்தெறிந்துவெண்ணிலாக்கதிர்விரித்தொளிர்முத்தினைநிரைத்
தென்னத், திருந்துவெண்பலெண்ணன்கெனுந்தொகையவாய்ச்செ
றிந்திடினன்றாகும், பரந்துயர்ந்துநீண்டகன்றுபொன்னிறத்தவாய்ப்
பசுமையாய்த்தெற்றித்துக், கரிந்துசிப்பிபோன்றிருந்திடிற்றுயரொடு
நகையறவுறுமாதோ. (42)
அணரிமேயபல்லுயர்ந்திடிற்றுயரழிந்திடுந்தெற்றுகிற்
கணவன்வீந்திடுநீங்கிடிற்பலரொடுங்கலந்திடுகாச்சேர்ந்து
நுணியின்மென்மையாயிருந்திடினினியனநுகர்ந்திடுந்தழல்வெங்கட்
பணியினுவெனநனிகவர்த்தகன்றிடிற்படுதுயருறுமாதோ. (43)
காவினர்த்திடிற்புனலின்வீழ்ந்திறந்திடுகனிகறுத்திடிற்சீறும்
ஓவறப்பருத்திடினிரப்பெய்திடுமுயர்ந்துநீண்டிடினுறும்
யாவதாயினும்வரைவிகந்தருந்திடுமகன்றிடிலிகல்செய்யும்
மேவுகின்றவுண்ணுச்சிவந்திழுதெனமென்மையாமெனினன்றே. 44
துன்னதன்மையினன்றியுண்ணுவறத்தூற்றிநீண்டெழுந்தோங்கிப்
பொன்மையாமெனிற்புறநகரெங்கணும்போக்கயர்ந்திடுமன்றி
வன்மையாமெனிற்கள்வர்தம்மனைவியாம்விளர்ப்பின்மங்கலநீங்குந்
துன்னருங்கறுப்பெய்திடிற்கொழுநனைப்பிரிந்துவெந்துயர்கூரும். 45

திவருபொற்கொடிமூக்கிமனைபுடை [illegible] தியெலள்ளின்
லரின்வண்ணமாய்நீண்டுதாழ்ந்திராதுமேல்வராவாவுறநேர்ந்து
துவுமென்றுளைசிறுத்திருபுறங்களுநேர்பெறச்சமனுகில்
லகயியாவையுங்கைதொழுதேத்திடுமொண்மலர்த்திருவொப்பாள்.

நுமையாய்நுனிவளைந்திடைபள்ளமாய்க்கவிழ்ந்தறப்பருத்தோங்கி
அருணமாய்நுனிபருத்திடிற்கைம்மையாஞ்சிலதியாமடிப்புற்றால்
உருவுதேய்ந்தறக்குறுகிடிற்கலதியாமுறுகவுள்சுரித்தொண்பல்
தெரிவுறாதுகண்ணிடுக்குறநிளநகைசெய்திடிவினிதாமால். (47)

சொல்லுமாறலதுறுநகைபுரிந்திடிற்றேமுறுந்தும்முங்கான்
மெல்லமெல்லெனவிருமுறைமும்முறைதும்முதல்விதியாகும்
அல்லதீதுகண்மணிகறுத்திமைகறுத்தயலிடம்விளர்ப்பாகிச்
செல்லரிக்கடைசிவந்துபைங்குவளையின்செவ்விவாய்ந்திடினன்றாம்.

கண்ணுயர்ந்திடிலாயுள்போம்வட்டமேற்கலந்திடும்பலரோடும்
அண்ணல்யானையின்கண்ணிகாமைந்திடிலகற்றுதல்குணனுகும்
வண்ணமென்புறாநிறமெனினன்குணம்வாய்ந்திடாதறச்சேப்பின்
உண்ணுங்காதலனுயிரினையாழுமேற்சிலதியாயுழல்கிற்பாள். (49)

ஆன்கணுப்புறிற்கலவியில்விழைவுறுமாடுமேதியின்கண்ணே
போன்றுமாறுகண்ணுகியுமிருந்திடிற்பொலிவிலளிடப்பாலின்
ன்றுநோக்குறிற்சிலதியாம்வலப்புறத்தியைந்திடின்மலடாகும்
நான்றதேனிறமமைந்திடிலிருநிதிகண்ணிவாழ்சிறப்பெய்தும். 5(

இமையின்மென்மயிர்பருத்தறநேர்ந்திடாதெழிலொடுங்கறப்பெய்தி
ன், அமையுநற்றிருப்பொன்மையாய்ப்பருத்திடையிடைவெளியுறில.
கா,சமர்முகத்துவிற்போன்றறமென்மையாய்க்கருமைசார்ந்தெழில
கி, உமிழ்கதிர்க்கொடிப்புருவமற்றென்றொடொன்றுறுதனில்மி.
னன்றாம். (51

புருவமென்மயிர்பருத்துநீண்டிடையிடையகன்றுபொன்னிறமாகி
விரவியொன்றொடொன்றுற்றிடிலருந்துயர்மேவுமஞ்செவிகாப்பண்
உருவநன்சுழியிருந்திடினன்மகவுயிர்த்திடுமுரிப்பின்றி
மருவுபன்மயிர்நாம்பெழுந்துயர்ந்துமேல்வளைந்திடிற்றீதாமால். (5

நெற்றிமூவிரலகலமாய்ச்சின்மயிர்நெறித்திடுநரம்பின்றிக்
குற்றமின்றிவெண்பிறையெனவிருந்திடிற்குலவியதிருவெய்தும்
உற்றசோத்திகரேகைசேர்ந்திடிலவளுரியண்மன்னவர்க்கென்ப
தெற்றிநீணரம்பொடுமயிரணிந்திடிற்சேர்குவள்பலரோடும். (53)

ஒழுகிவார்ந்தொளிர்சீமந்தரேகைநன்குற்றிடிற்சிறப்பெய்தும்
பழுதில்சென்னிமேலுயர்ந்தணிவட்டமாயழகுறிற்பலமெய்துங்
கழியவீங்கிடின்விதவையாநீளுமேற்காமுறும்பலர்பாலும்
எழிலகன்றறவிருந்திடிலியாவருமிகழ்தாநிரப்பாமால். (54)

கரியமையினைநூற்றெனவளர்ந்துமென்கடைகுழன்றறநோக்கி
முருகுவாய்மடுத்தளிநிறம்பூத்தறமுறைமுறைநெறிப்பாகிப்
பெருகனீளுதல்குறுகுதல்வளர்கடைபிளந்திடலிவையின்றிப்
பொருவில்மேன்மையாய்நெறித்திடலணிமலர்ப்பூங்குழலினிதாமால்.

பின்றி
வடிவமின்றிமற்றலறுசென்னிறத்ததாய்வயங்குபொன்னிறமாகிற்
கொடியவெந்துயர்நிரப்புறுநெற்றியிற்கொடிநெடும்புருவத்தின்
இடையின்வாய்ந்தசெம்மறுவுளதாமெனிலெழுகடற்புவிகாக்கும்.

இடப்புறத்தினிற்றழும்புமென்புள்ளிசேப்பெய்தியமறுவுண்டேல்
அடையுநற்றிருவலமுலைதனிற்றழும்பணிமறுவுளதாகிற்
கடற்புவிக்கொருதிலகமாம்புதல்வன்வேற்கண்ணியரொருநால்வர்
வடத்தின்மெல்லிலைநல்லெழில்கவற்றியவயிறுவாய்த்திடுமன்றே.

சேந்தநன்மறுமூக்கினுண்ணுதியிடைச்சேர்ந்திடிலுலகாளும்
வேந்தர்தன்மனைக்கிழத்தியர்க்கல்லதுமேவுறுமுன்சொன்ன
காந்துநன்மறுக்கறுப்பெனிற்றுயரொடுங்கைம்மையாமலதென்னில்
தோய்ந்தகேள்வரைப்பிழைத்தலர்தூற்றிடவேதிலாரொடுந்தோயும்.

இடப்புறத்தவாங்கைதனிற்கழுத்தினிலஞ்செவிதனிலேற்ற
கொடிற்றினன்மறுவுடைத்தெனின்முன்னநற்குமரனைப்பெறுகிற்
பாள்,அடிப்புறத்தின்மேலெழிறிகழுந்தியினளவுமெட்கொசுகேய்ப்ப,
வடுத்தயங்கிடினல்குரவுழந்துபின்வான்றுயர்க்கடல்வீழும். (59)

நுதலின்முத்தலைப்படைநிகர்வரையுறி னுழைநுசுப்பகலல்குன்
மதர்வைநோக்கியராயிரர்வழிபடமலர்மகளெனவைகும்
மதுமலர்க்கையின்மார்பினி லுந்தியில்வலஞ்சுழியுறினன்றும்
மதுகினல்வலஞ்சுழிவலப்புறத் தூறின்மொழிவர்நன்கெனமாதே.
பிற்புறத்தினில்வலஞ்சுழியிரண்டுறிற்பெருகுமாயுளுநாளும்
அற்பின்மீக்குயர்மக்களுங்கோடியால்குலினடிப்பாட்டிற்
பொற்பினல்வலஞ்சுழியுறினாசிரிற்கிழத்தியாம்புகலாங்கண்
உற்றபாண்டிலஞ்சுழியுறினுயுளுமைந்தருமுளவாமால். (61)

கண்ணின்மென்சுழியுடைத்தெனிற்கைம்மையாமன்றெனிற்கற்பே
தும், கண்ணுமூக்கினிற்சுழியுறிற்கற்புறுநலங்கெழுசெவிமீதில்,
வண்ணவார்குழல்வகிர்ச்சியில்வலஞ்சுழிவதியினுயகனுவி
உண்ணுமுச்சியிலொருசுழியிருசுழியுற்றிடிற்கலன்போக்கும். (62)

றிமேல்வலஞ்சுழியுறினவடனைநீக்குதல்குணனுகும்
உற்றமென்சுழிவலமிடமாய்ப்பிடரெய்திடினோராண்டிற்
பெற்றவின்னுயிர்க்கேள்வனையிழந்திடும்பெட்பொடுந்துயில்போது
பற்கறித்திடிற்பலபலவிலக்கணம்பயிலினுங்கொளலாகா. (63)

கடிதுடங்கியேந்தல்குன்மாட்டொருசுழிகிடந்திடிற்கணவன்சேய்
முடிவர்மென்கடிமுதல்வயிற்றளவிறுமொழிந்தநீள்சுழிமேவின்
உடையகாதலனிறந்திடுமாயிடைச்சுழியிரண்டுறுமாயின்
வடிவில்கன்னியங்கற்பழிந்தலர்புனைவம்பலர்க்கிடனுகும். (64)

அரையின்மென்சுழியுடையளேற்கன்னியங்கற்பிறைக்கயலாவாள்
உரைசெய்நூன்முறையிலக்கண மனைத்தையு மொருங்குவாய்ந்தன
னேனும், பொருவினன்குணம்பொருந்துதல்வேண்டுமென்பூங்குழல்
மடவாட்கண், திருவனோர்கடமிலக்கணமுறைத்தனமணவினைதெரி
கிற்பாம். (65)

## முப்பத்தேழாவது மகளிரிலக்கணமுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

# முப்பத்தெட்டாவது
# ஆசாரங்கூறிய அத்தியாயம்.

---

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

பிரமநற்றெய்வமாரிடம்பிரசாபத்தியமாசுரம்பெட்பின்
மருவுகாந்திருவமிராக்கதம்பசாசமெனமணமெட்டுளவவற்றுட்
கருதுமுற்பிரமமொருவனையழைத்துக்கலனொடுங்கன்னியையளித்த
ல்,அருளுமத்தெரிவைபயந்தசேய்மூவேழ்குலமுநற்கதியுறவளிக்கும்.
மகவினைவிதியினூற்றுவித்தோர்க்குமகட்கொடுத்தருளுதல்தெய்வம்
புகலுமாங்கவள்சேயீரேழ்மரபும்பொருவருங்கதியிடைப்புகுத்துந்
தகவினுணிரண்டுபகர்பொருள்பகர்ந்துதன்மகட்கொடுத்தலாரிடமா
முகின்முலைப்புதல்வன்மூவிருகுலனுமுறையினிற்கதியிலுய்த்திடு
மால். (2)

அற்பொடுபிரசாபத்தியங்கேட்டோர்க்கரிவையைப்பொருள்கொளா
தளித்தல், கற்புடையவள்சேய்மூவிருகுலனுங்கருதுநற்கதியிடைப்
போக்குஞ், சொற்றவிந்நான்குமறையவர்க்குரியதொகுபொருள்
விழைவொடுங்கவர்ந்து, பொற்றொடிநெடுங்கட்கன்னியையளித்தலா
சுரமாமெனப்புகல்வார். (3)

கன்னியுங்காதற்குமரனுந்தம்மிற்கலத்தல்காந்திருவம்ராக்கதந்தா
ன், வன்மையிற்பற்றிக்கன்னியைக்கோடல்வகுத்தவிம்மூன்றுமன்ன
வர்க்காம், முன்னருங்களவிற்களிப்பினிற்றுயிலின்முகின்முலைக்கண்
னியைக்கலத்தல், இன்னல்கூர்பசாசமணமிஃதுலகிலிகழ்ந்திடுமண
மெனவிசைப்பார். (4)

மறையவர்முதலநால்வருந்தத்தமரபினிற்கன்னியைமணப்பின்
நிறைமதுதுளிக்குங்காந்தளஞ்செங்கைபற்றுதனெறியதாமறையோர்
அறைகழலரசர்கன்னியைவேட்பினம்புகைபிடிக்கவேதியரும்
இறைவரும்வணிகர்மகளிரைமணப்பினுழவுகோல்பிடித்திடலியல்
பே. (5)

வேதியர்முதலமூவர்வேளாளர்கன்னியைவிதிமுறைறவேட்பின்
மாதர்மென்றுகிலின்மென்றலைபிடித்தல்மறைநெறி வழக்கெனவுரை
ப்பர், நீதியின்வழாதமணத்தினில் வேட்டகேரிளைஞன்மகவுயிர்க்குந்
நீதுறுமணத்தின்வேட்டவடுதாயக்குறாசிறுவனையுயிர்ப்பாள். (6)

பூத்துநீராடுநாள்முதனூலோர்புகன்றநாட்புணர்வதாவிரியாம்
வாய்த்தநற்கருப்பமெய்தியநான்றும்புரந்தரன்மகளிருக்களித்த
ஏத்தரும்வரத்தாற்புணர்தலாமிறந்தோர்க்கிருங்கடன்கழிப்பியநா
ன்று, நீத்தநற்பகலும்பருவமோரைந்தும்புணர்ந்திடினிரயமெய்து
வரால். (7)

விதித்தநாட்களினுந்தம்மனையலதாபிறர்நலம்விழைந்திடலாகா
மதக்குழன்மகளிர்பூத்தநாள்கழிப்பின்மற்றவீராறுநாட்களினும்
உதித்திடும்புதல்வனிரட்டையாநாளினொற்றைநாளிவைகளின்மண
ப்பிற், புதுத்தளிரழகுகவற்றுமாமேனிப்புதல்வியையினிதினிற்பெறு
வார். (8)

மூலமுமகமுமுயங்குதலாகாமொய்க்கதிர்த்திங்களங்கடவுட்
சாலநன்குறுநாட்புருடனுண்மணப்பிற்றகைமைசானன்மகவுயிர்க்கு
ம், வேல்புரைதடங்கட்கன்னியைப்பொருள்கொண்டளித்தவன்மல
ப்புழுவிழுங்கி, ஓலிலாடும்வெருவமறலிதன்றூதருராப்பவெந்நரகிடை
வீழ்ப்பார். (9)

வேட்டகர்தன்னிற்பொருள்கவர்ந்துண்டோர்வீழ்கலாநரகிடைவீழ்
வர், கோட்டமில்குணத்துக்கொழுநனுமுள்ளக் குறிப்புணர்ந்தினிய
னசெய்யும், வாட்டமின்முல்லைமனைவியுமுறையுமில்லினுமினிதுகொ
ல்மகிழ்ந்து, பாட்டளிதுதையும்பசுந்துழாய்மாலைப்பங்கயச்செங்கண்
மாலுலகே. (10)

வாணிகம்புரியின்வாட்படைதாங்கிமன்னர்பாலிருநிதிகவரின்
வேணவாவோடும்விதித்திடாமணத்தில்வருமுலைக்கன்னியைவேட்
பின்,காணநற்பொருள்சேருமறைநபயிலாதல்லசெய்தொழுகிநற்கரு
மங், காணவாப்புரியாதொழிந்திடிற்பதிதராகுவர்கலைமறையவரே.

அரைப்பதாலழலிற் றனங்கொளுவியடுவதாற் றூர்ப்பதாற்குடத்திற்
குரைப்புனலுறுங்கொணர்வதாற்கூன்வாயிரும்பினிற்கறிகுறைப்பத
னால், நிரைத்திடும்பாவமனைத்தையுநீக்கும்பஞ்சமாவெச்சமென்பத
னால், உரைத்தவவ்வேள்விநாடொறும்விதியினொழிவுறாதாற்றுதலி
யல்பே. (12)

சதுமறைபகர்தல்பிரமநன்மகமாந்தருப்பணம்பிதிர்மகமாகும்
விதிமுறையோமமியற்றுதறேவவெச்சமாம்விளம்புநற்பலிகள்
உதவுதல்பூதவெச்சமாமுள்ளமுவந்துதன்பாலினிதடைந்தஅதிதி
யர்க்களித்தன்மானுடவெச்சமாகவைந்தெச்சமென்றறைவார். (13)

பாலினிற்சோற்றிற்கிழங்கின்மென்புனலிற்பழத்தினிற்பண்ணலாஞ்
சிராத்தஞ், சாலுநன்மனையிலதிதிவந்தெய்திற்றயாவினால்முகம
னோடெதிரி, ஏல்வனபூசையவற்களித்திலனேனுளொடுமவனியற்றி
யதோர், சீலநற்கருமம்யாவையுங்கவர்ந்துசெல்குவனெனமறை
தெரிக்கும். (14)

பலியிடையதிதிவரினவற்கடிசிலளித்தலாற்பலியிடலாகா
மெலிவுறுநோயர்சிறுவர்சூன்மகளிர்வேட்டுளான்மனையினின்றெய்து
மலைவுறுகுணத்துத்தன்மகளிவர்கட்கடிசில்முன்வழங்கியபின்னுங்
கலைவலோர்போந்தவதிதியர்க்கடிசிலளிப்பதுவிதியெனக்கரைந்தார்.

தேவர்தென்புலத்தோர்துறந்தவர்க்களித்தசேடநல்லமுதினு மினி
தாம், யாவரேயெனினுமதிதியரிறந்தோரிமையவரீங்கிவர்க்கன்றிக்,
கூவல்போலாழ்ந்தபாழ்வயிறதனிற்கொட்டுதற்கமைத்தவெண்சோ
று, நாவுறைபுழுவாமெனமறையனைத்துநவின்றிடுமென்பர்நன்குணர்
ந்தோர். (16)

அந்தணாரசர்வணிகர்நண்பகலுமந்தியும்வயிச்சுவதேவஞ்
சிந்தைசெய்தியற்றாரெனிலவரொழுக்கந்திறம்பலாற்பின்னவராகி
வெந்துயருழந்துவரும்பிறப்பதனிற்காக்கையாய்மெலிகுவர்விதித்த
இந்தநற்கருமம்வழுவுறாதியற்றினிமையவருலகில்வீற்றிருப்பார். 17

அட்டமியாருந்திதிபதினான்கோடள்ளிருள்பரப்பியவுவாவின்
விட்டிடல்வேண்டுமெண்ணெயும்விநித்தமென்றசைப்புழுக்கலுமி
வற்றின், மட்டவிழ்குஞ்சிமுதலடியீறாய்மயிர்வினைமுடித்திடலாகாத்
தொட்டுமற்றொன்றைக்கிள்ளிவைநூலோர்தோமுறுமெனப்புகன்ற
னரால். (18)

காலையின்மாலைப்போதின்வாளரவங்கவ்வியபோதினீரிடையின்
ஞாலநீடிருள்சீத்தெழுகதிர்பார்க்கினவையுறுந்தன்னிழல்புனலுட்
சால்புறநோக்கல்துகில்புனையாதுதண்புனல்படிதலான்கன்றை
மாலுறக்கடத்தில்பொய்ம்மொழிபகர்தல் மனத்திடைநினைப்பினுந்தீ
தாம். (19)

இலங்குநற்கோயிலந்தணராறந்தோரிருநிலவேந்தர்சொற்கவிஞர்
அலங்குநீர்க்கும்பமையவிதயிர்நெய்யடிசிலான்மரபினிலுயர்ந்தோர்
நலங்கெழுசதுக்கத்துயாமானாசுநன்னெறியெதிர்ப்படினவற்றை
வலங்கொடுபோதனெறியெனமறைநூல்வல்லவர்வகுத்துரைத்தன
ரால். (20)

மனைவியோடடிசிறுய்த்திடலாகாமற்றவளயில்வுழிநோக்கிற்
புனையிழையறனில்மைந்தரையுயிர்க்கும்பூத்தவடனைத்தொடலாகா
கனவினுமாகாவூன்றினல்மகத்தினல்லதையருந்துபொற்கலத்தின்
னியுயர்தவிசின்வதிந்தினிதுண்டனன்கலவெனமறைநவின்ற. (21)

கொந்தழல்வாயினூதுதல்சீறிமன்னுயிர்குறைத்திடல்புனைந்த
வந்துகிலகன்றமகளிரைநோக்கலந்தியுங்காலையுந்துயிறல்
சிந்தையுற்றருந்தறனிவழிச்சேறல்செங்கையாற்புனல்முகந்துண்டல்
இந்திரவில்லைக்காட்டுதல்தனிபோய்மடிமையாயிருந்துயில்புரிதல்.

துயிலிடையெழுப்பல்புன்னுகராவையோட்டுதறூங்கிருட்காலை
தயிர்நறுவெண்ணெயெடுத்தமோர்பருகல்சாலவுந்துய்த்திடல்யாழி
ற், பயிலுநாடகத்தின்மிகமனஞ்செலுத்தல்பகற்பொழுதுறங்குதல்
காலை, வெயிலிடையிருத்தல்நகமயிர்கடித்தல்விரிகுழனடப்புழியுளர்
தல். (23)

அயலவனயின்றகலத்தினிலயிறல்பிறர்மனைமென்றுகிலணிதன்
மயர்வறவேற்றிற்பசுவினிலிவர்தன்மயானவெம்புகைபடச்சேறல்
பயில்புனல்படிந்த பின்னர்மெய்கையாற்றுடைத்தல்பண்பிகந்தவற்
கூடல், துயில்வழியறுவையொழித்திடல்கழகந்துன்னிவெஞ்சூதெறிந்
தாடல். (24)

உடைந்திடுகலத்திலுண்டல்கைசென்னிகாரணமின்றியேயுதறல்
அடைந்தவாசனத்தைக்காலினாலகற்ற லகத்தினைநகத்தினாலுரிஞ்ச
ல், குடங்கையிலடிசில்கொண்டினிருந்தல்குலவியபள்ளிமீதிருந்து,
தடம்புனல்பருகறுய்த்திடல்செவித்தனின்று தண்புனல்குடித்திடல்.

வாயிலில்லாதவழியிடைச்சேறல்வாண்முகமங்கைமென்மலர்த்தாள்
தோய்புனல்புலராதுறங்கல்காலிணையிற்றொடுகழல்கிடப்பவாசமனம்
எய்வுறப்புரிதன்மிச்சிலோடேகலிரவினிற்பாசடகருந்தல், சேயதன்
கைகால்முகத்தினிற்றெண்ணீர்சேர்வுறாதின்னமுதருந்தல். (26)

வைதிகமறையைப் பின்னவர்க்குரைத்தலிருகையால்வன்றலைசொரி
தல், கையினால்மெய்யிலடிக்கடிபுடைத்தல்கண்மயிர்பறித்திடன்மல
நீர்,எய்திமுன்னோக்கல்பிறர்மனைவிழைதல்பகைவர்பாற்சேவைசெய்
திருத்தல், பொய்தவறுரைத்தல்மடிமையோடொழுகறீதெனப்புகன்
றனர்புலவோர். (27)

உருவினிற்குலத்திற்கல்வியிற்றிருவிலுயர்ந்துளோர்தமையிகழ்ந்து
ரைத்தல், பெருகுவெம்பசியாலருந்திடாரிடத்தினருந்தல்பெட்பெ
வற்றினுமுறுதல், திருகுவெஞ்சினத்தாற்குறளைகூறுதலைம்பொறி
யையுமடிக்கடிதீண்டல், பரிவொடுந்தன்னைப்புகழ்தல்மானிடரைப்
பாடுதறீவினைபயக்கும். (28)

அருமறைமறையோர்கடவுளராசானருந்தவர்கற்புடைமகளிர்
பொருவருமவரையெள்ளுதலொருவன்போகுழித்தாள்பணிந்திறை
ஞ்சல், ஒருவர்தங்குற்றமுரைத்திடலாகாவூருணிகுளங்கிணற்றுடி
இருகைமண்வாரியெடுத்திடாதொழியினிவன்றவமகழ்ந்தவர்க்கெய்
தும். (29)

றிணங்குறுவாய்மைமெய்ம்மையேயெனினுமியம்பொணாதியங்குவ
தெனினும், அணங்குநோய்செய்யும்பொய்சொலாதொழிகவறிஞரோ
டுணங்குகநாளுங், குணங்களைமொழிகவுளத்திலெஞ்ஞான்றுநன்மை
யேநுதிக்கொளல்வேண்டும், பிணங்குவெஞ்சூதிற்குறலையிற்றாதிற்
பெறுபொருள்கோடநீங்குறுமால். (30)

அழலையந்தணரைப்பசுவினைமிச்சிலடைந்துளோர்தீண்டிடலாகா,
விழைவொடுஞ்சிரார்த்தம்புரிந்திடுந்தினத்தில்வேற்றவன்சிரார்த்தத்
தினருந்தல், பழிபடுமவனும்புரிந்தவன்றனக்குத்தீவினைபயக்குறுங்
கைகால்,கழுவுதலுண்ணுங்கலத்திலாகாதென்றனர்கலைபலதெரிந்
தோர். (31)

காலமுமிடனுங்கொள்பவன்மாண்புங்கருதிநற்றனமாங்களிப்பிற்
சால்வுறுமளித்தபலனிலனளித்தேதான்றராதலமுழுவதும்பரிக்குஞ்
சீலமோடன்னமளிப்பவனளப்பில்செல்வமுற்றிருக்குநீரளிப்போர்
மாலுறுவிடாயினெய்துறார்வெள்ளிவழங்கினர்வடிவநன்குறுவார். 32

நறுநெய்பெய்தகளிதன்னொடுந்தீபநல்கினோர்சுடர்விழியென்றுங்
குறைபடாதொளிருமாவினையளிப்போர்குறுகிடார்மறலியூர்நாளும்
உறுபொருளளிப்போரிரந்திடாரெள்ளையுதவினோர்நன்மகப்பெறு
வர், மறுவறுமில்லங்கோலிநன்களிப்போர்மதிதவழ்மாடமீதுறை
வார். (33)

கொய்புனைப்புரவி யளித்துளோர்தெய்வவிமானமூர்குவர்செழுங்கோ
ட்டு, வெய்யவாழித்தேர்திருவொடும்பொலிவர்மெல்லணைசிவிகை
நன்களிப்போர், மையரிநெடுங்கண்மகளிரோடுறைவர்வைகலுநெற்
குவையளிப்போர், பையராவுச்சிச்சுடிகையிற்கிடந்தபார்வளமனைத்
தையும்பெறுவார். (34)

அஞ்சலென்றளிப்போருலகெலாமளிப்பாருமறைப்பொருள்பயிற்
றிடுவோர், எஞ்சலில்பிரமனுலகில்வீற்றிருப்பரிரும்பொருள்கொடுத்
துநால்வேத, விஞ்சையைப்பயிலவினிதளித்தோரும்விரிஞ்சனாட்டு
றைகுவர்நிதியம், நெஞ்சுவந்திடுவார்கொடுத்தவையுவப்போர்நிரப்
பெறிசெல்வமெய்துவரால். (35)

தான்புரிதவத்தைக் கொடையினிற் புகழிற் றழைவுறு தஃகுமந்தண
ரை, வான்படருரைக்கில்வாழுநாளுலக்குமாலைசெஞ்சாந்தம்வெண்
டயிர்பால், ஊன்படுதசைநெல்வீடிவைவாளாவுறுமெனிற்கொள்ளுத்
லுரித்தாந், தேன்பழங்கிழங்குவிறகிவையிழிந்தோர்நல்கினும்வாங்
குதறிறனே. (36)

அடைக்கலம்புகுந்தோன்மயிர்வினையாளன்வழிவழியடிமைபுக்கிடு
வோன், குடத்தனசெருத்தலானிரைமேய்ப்போன்கூடியநட்புளானி
வர்கள், விடுக்கருமன்பினளித்தலாலரிசிகோடலாம்விளம்பியவனைத்
தும், வடுப்படாமறையோர்முதலமூவர்க்குநெறியெனமறைமொழிந்
திடுமால். (37)

உருமுமண்மாரியுற்கைவீழ்ந்திடுநாள்சுழல்வளிபற்றுநாளோர்பால்
எரிபடுநாளிலரையிருட்போதிற்பின்னவரிருந்திடுமிடத்தில்
அரசருக்கிடையூறுற்றுழியவர்கட்கசுபம்வந்துற்றிடுநாளின்
மருவியபதினான்கிருவாநந்தையட்டமியோதல்மாண்பன்றே. (38)

பூசைநாய்தவளைபேரொலிகீரிபுயங்கமற்றிடைபுகினோதார்
வேசரியிகலனொட்டகமாற்றின்விளம்பிடார்விரிதிரைப்புனலிற்
பாசிலைத்தருவினூர்தியிலிருந்தும்பயின்றிடாருவர்கருமத்துந்
தேசறநடக்கும்பொழுதினும்வேதம்புகன்றிடார்நூன்மறைதெரிந்
தோர். (39)

இன்னணமொழுக்கம்வழுவுறுதியற்றியீன்றதம்புதல்வர்பானுளும்,
மன்னியகருமமனைத்தையுமிருத்திவளர்பிறைக்கொழுந்தினைப்பவள
ச், சென்னியின்மிலைந்தகடவுளைநினைந்துகானிடைச்செய்தவம்புரிக,
அன்னதுகூடாதெனிலுயர்காசியடைகநன்முத்தியாமன்றே. (40)

முப்பத்தெட்டாவது ஆசாரங்கூறிய
அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—1097.

# முப்பத்தொன்பதாவது
## இல்லொழுக்கங்கூறிய அத்தியாயம்.

---

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

என்னலுமுவந்துபொன்னிணர்க்கடுக்கையீர்ஞ்சடையிறையவன்
காசி, துன்னினரொழுக்கநெறியினின்றோர்கடுயேவீடடைகுவரென்று,
முன்னநீயுரைத்தாயுரைத்தவவ்வொழுக்கமுழுவதுமுரைத்தருளெ
ன்று, தென்வரைமுனிவன்கேட்கவஞ்சிறையசேவலங்கொடியவ
னுரைப்பான். (1)

கரியனவிளர்த்தசெய்யவாய்முள்ளிக்கார்மயிர்ப்பன்றியூர்க்குருவி
விரிசிறையன்னங்குரண்டநேமியம்புட்கிளிகரிக்குருவிமென்றவளை
குரைகடற்படுமீனிரைகவர்பறவைதோலடிப்புள்ளினங்கோழி
மருவியபூவைமீனினமனைத்தும்வாய்மடுத்தருந்துதலாகா. (2)

கரும்பனைத்தேற்றகட்டியினமைத்தகைவலங்கறந்தபாலாடு,
பொருந்துமொட்டகமற்றோர்குளம்பாய விலங்கிலைபொழிந்தபாலிர
வில், திருந்துவெண்டயிர்நண்பகலிடைவெண்ணெய்நீக்குகதெய்வநன்
மகத்தின், அருந்துதலன்றியொழிகவூன்பொறிமான்தேவர்தென்
புலத்தவர்க்காமால். (3)

குறுமுயலுடும்புகமடமுட்பன்றிகோதிலாவழுங்கருந்தினுமாம்
பெறலருந்துறக்கமாயுள்வேட்டவர்கள்பிழைபடுமூன்றினலாகா
றியனவேனும்பழையனவருந்தனன்கலமகத்தினின்மருந்தில்
இறுமுயிருய்யுமிடத்தினிலிறந்தோர்க்கூட்டுழியூன்றினலியல்பாம்.

அருமகத்தன்றியூன்சுவைத்துடலம்வீக்குவோனதற்குடன்படுவோன்
ருவியிற்குறைத்தோன்பகர்ந்துளோன்கொணர்ந்தோன்வியந்து
ளோன்கடிகெனவேவுந், திருவிலியதனையட்டவனிவர்களெண்மருந்
ரகடைவார், பரிவினூன்விடுத்தோர்காடொறும்புரவிமகம்புரி
லன்பெறுகுவரால். (5)

பிறரிடையின்னாவியற்றிடிற்றமக்குப்பிழைப்பறவெய்துமென்பதனை
அறிகுநராதலாலுயிர்களனைத்தையுந்தம்முயிர்போல
நெறியினிற்கருதலினியவாமைந்துபுலனையுநெறியலாவழியிற்
பொறியினிற்செலுத்தாதடக்கனன்குணர்ந்தபுலமையோரொழுக்
கெனப்புகல்வார். (6)

முயன்றுமெய்வருந்தாதரும்பொருளடையாமொழிந்தவப்பொருளினு
லன்றிப், பயின்றநற்கருமம்பொருந்துறாக்கருமமல்லதுபயன்றரூஉந்
தருமம், இயன்றநற்றருமமல்லதையின்பமெய்துறாவின்பமும்மடியில்,
துயின்றிடாதறஞ்செய்தல்லதுகூடாதாதலாற்றுடங்குககருமம். (7)

வருமுலையெழுந்தபின்மகட்கொடுப்பின்மரபழிந்திடுமயிர்தோன்றுந்
தெரிவையையளிப்பின்மணந்தவனிறக்குந்தெருண்டபினளிப்பினுங்
கவலை, அருளியதந்தையிறந்திடுமதனாலாய்பிழிக்குறுந்துளிபிலிற்று.
முருகவிழ்கூந்தலனையவர்முயக்கமுறையலவெனமறைமொழியும் (8)

கன்னியிற்பூத்ததன்மகட்கொடுப்பின்யாவருமறியவிக்கன்னி
முன்னரேபூத்தாளெனவுரைத்தளிப்பிற்றந்தைபாற்பாவமுற்றுறுது
வன்னிபூப்புழியிற்பொருந்துநற்சோமன்மயிரரும்புழியுறமணக்குங்
கின்னரன்முலைதோன்றுழியுறுமதன்முன்மகட்கொடைநன்றெனக்
கிளப்பார். (9)

வெந்தழற்கடவுள்கின்னரன்சோமன்மேவலான்மதிதொறும்பூப்பு
வந்தடைதலினன்மகளிரெஞ்ஞான்றும்புனிதமாகுவர்மலர்மஞ்சஞ்
சுந்தரமகளிர்வாண்முகஞ்சிவிகையாசனந்தருப்பைதொன்மகத்தில்
தந்தபாத்திரங்கள்குதபநற்காலம்புனிதமென்றுரைத்தனர்சான்றோர்

கன்றினிதூட்டிக்கறந்ததீம்பாலுங்கலவியின்மகளிரும்பறவை,
தின்றதீம்பழனும்வேட்டையில்ஞமலிகறித்திடுசெய்யமென்றசையும்
ஒன்றியமிச்சிலெனவிகழ்ந்துரையாருணர்ந்துளோருறுகடன்பொருட்
டு, நன்றுணர்வேள்விவேட்டிடற்பொருட்டுநனிபொருள்வழங்கனன்
றுமால். (11)

பொங்குளைப்புரவியாடிவற்றினுக்குப்புனிதமாமுகம்பசுவினுக்குத்,
தங்குபிற்புறமேபுனிதமந்தணர்க்குத்தாளிணைபுனிதம்வேனெடுங்
கண்,மங்கையர்க்குடலமுழுவதும்புனிதம்வருநதிவெண்கலஞ்செம்பு,
துங்கமாம்பெருக்காற்சாம்பராற்புளியாற்றூய்மையாமென்பர்தூய்து
ணர்ந்தோர். (12)

கொழுநரேதெய்வமென்றதொழுமகளிர்பரையொடுங்கூடிவீற்றிருப்
பார், பழுதறுதந்தைதாய்தமர்துணைவரில்லெனிற்கன்னியர்பரிவால்
விழைவொடுந்தமதுமரபினுக்கேற்றவொருவனை வரித்திடல்விதியாம்
வழுவுறக்கருப்பமழித்தவர்கணவற்செகுத்தவர்த்தணப்பதுமரபே.

வலிதினிலொருவன்கன்னியங்கற்பின்மகளிரைப்புணர்ந்திடினவட்
துப், பொலிவுறமாசுபூத்தவேற்றிழைகளுழைதுகில்புனைகெனவழ
ங்கி, நலிவொடும்வருந்தவடிசிலோர்பிண்டநல்கிநாள்கழித்துழிப்பூப்
பிற், குலநெடுமவளைக்கூட்டுககருப்பங்கொண்டிடினீக்குதல்குண
னே. (14)

பின்னவர்தமதுமரபின்வேட்டிடலாம்வணிகர்பின்னவருழைத்தமது
நன்மரபதனிற்கோடலாமரசர்தம்முழைநாய்கர்தம்மரபின்
மன்னும்வேளாளர்மரபினிற்கொளலாமறையவர்வருணநான்கிடத்
தும், கன்னியைக்கொளலாம்பின்னவன்மறையோர்க்கருமகப்பெறிற்
கதியடையான். (15)

குரவனைத்தாயைத்தந்தையைமனையைக்குற்றமில்புதல்வனைவிருந்
தை, இரவுநண்பகலும்வழிபடுவோனையதிதியையெரியினையீங்கு,
கருதுமொன்பதின்மர்தம்மையுநாளுங்கருணைகூர்ந்தினிதளித்திடாது
மருவுமில்வாழ்க்கைபூண்டுளோன்றன்னைமக்களுட்பதடியென்றுரைப்
பார். (16)

விருந்தினனாகவொருவன்வந்தெதிரின்வியத்தல்நன்மொழியினிது
ரைத்தல்,திருந்துறநோக்கல்வருகெனவுரைத்தலெழுதல்முன்மகிழ்வ
னசெப்பல், பொருந்துமற்றவன்றனருகுறவிருத்தல்போமெனிற்பின்
செலவயர்தல், பரிந்துநன்முகமன்வழங்கலிவ்வொன்பானொழுக்கமும்
வழிபடும்பண்பே. (17)

தவிசுதாள்விளக்கப்புனறமர்க்கியன்றவடிசில்பூந்தண்மலர்ப்பாயல்,
உவகை—
லைகாய், இவைகளொன்பதுந்தன்மனைவயினடைந்தோர்மகிழ்வுறவினி
தினிலளித்தல், நவையறயில்வாழ்வடைந்துளோன்பூண்டகடனென
நான்மறைநவின்ற. (18)

பிறர்மனைவிழைதல்கொலைபிழைத்தொழுகல்பொய்ம்மொழிபிதற்றுதல்
சீற்றம், மறமிகுவயிரங்குறளையேலாதமொழியினைநவிலுதல்மாயை
கிறிபகர்ந்தொழுகலாயவொன்பானுங்கீழ்மையோரொழுக்கமில்வாழ்
வின், உறைகுநரிவற்றைவிடுக்கவென்றினிதினுரைத்தனர்நான்
முறையுணர்ந்தோர். (19)

அலைபுனல்படிதல்சந்திவந்தனைநல்லருமறைசெவித்தல்தீக்கருமம்
மலர்தருசாகைமறையினைநவிறல்மலர்கடயிறைவனைவணங்கல்
இலகொளியழலில்வயிச்சுவதேவமதிதிபூசனையிறந்தோருக்,குலவுநீர்
வழங்கலில்லுறைவோரிவ்வொன்பதுந்தினஞ்செயலுரித்தாம். (20)

மந்திரந்தன்னைப்பிறரவமதித்தல்மகளிரைச்சேர்தல்வஞ்சனைதன்,
நந்தலிலாயட்பிறந்தநாளில்லினண்ணியகுற்றநீணிதியம், முந்தியகற்
பின்மனைவிநன்குணங்கள்மொழிந்தவிவ்வொன்பதுமாவி, சிந்துறவரி
னும்பிறரொடுமொழிதல்தீதெனவுரைத்தனர்தெளிந்தோர். (21)

தகுதிகொள்கடனக்கடன்றனைத்தீர்த்தல்தான்பொருள்கோடல்பி
ன்பகர்தல், மகளிரைக்கொடுத்தல்தன்னுடையொழுக்கமறையினிற்
புரிந்தனபாவம், புகலருமறையோர்நன்குணமென்னப்புகன்றவிவ்
வொன்பதுமெவர்க்கும், இகலறமறையாதுரைத்திடலொழுக்கத்தி
யல்பெனமொழிவர்நன்குணர்ந்தோர். (22)

மெய்ம்மைநற்பொறைவெங்கொலைசெயாதொழுகல்மேவுமெக்கரண
முமடக்கல், செம்மைசேர்தூய்மைவரைவுறுதளித்தல்சீற்றநீங்குதல்
களவின்மை, அம்மவென்றெவருமாற்றுதல்புரியாவருள்செயலாய
வொன்பானும், வம்மெனவமரரெதிர்புகுந்தழைப்பவானிடைவிடுத்த
தூதாமால். (23)

நகனெதிர்ந்தோன்றும்பிரியின்மற்றொன்றுமொழிபவர்விழைவுறுநா
தர்,அகன்றகேள்வியிலாருமருத்துவர்களரும்பொருள்கவருநர்தூர்த்
தர், புகலருந்தீமைபுரிபவர்மல்லர்செருக்கினர்புன்றொழிற்றீயோர்,
இகழ்தருமினையரொன்பதுபெயர்க்குமீந்திடல்பழுதெனவிசைப்பார்.

நாண்புடையாளர்கேண்மையர்தத்தம்வழிமுறையொழுக்கினிலமைந்
தோர், சேண்படுநிரப்பினெய்தினோர்புரப்போர்தீர்ந்தவர்தந்தைதாய்
துறவர், காண்டகுமுதவிபுரிந்துளோரினையரொன்பதின்மருமுளங்
களிப்ப, வேண்டுறுநிதியமளிப்பின்மற்றொன்றேகோடியாமெனமறை
விளம்பும். (25)

தன்மனையவளையடைக்கலப்பொருளைத்தன்னுழையடைந்துளோன்
றன்னை, மன்னுதன்மரபினொழுக்கினைவைப்பைமனையவள்கொணர்ந்
தவான்பொருளை, நன்மகவதனையம்மகவிருக்கநண்ணியபொருளனை
த்தினையும், இன்னுயிர்விடுக்குமெனக்கொடுந்துயரமெய்தினுமீந்திட
லாகா. (26)

முன்னவனிருப்பப்பின்பிறந்தோர்கள்வேட்பினல்லருமகமுடிப்பின்,
இன்னல்கூர்நரகினெய்துவர்முன்னோன்மூங்கையாய்ச்செவிடனாயி
ருப்பின், மன்னியதுறவுபூண்டிடிற்சேட்சென்றறிவுறாதுறையில்மற்
றவன்றன், பின்னவனினையபுரிவதற்குரியோனென்பர்நூன்முறை
தெரிபெரியோர். (27)

துறந்துளோர்மகளிர்புணர்முலைப்போகந்துய்த்திடினளப்பருங்காலம்
இறந்துழிமலத்திற்புழுவதாய்நரகினெய்துவர்பின்னவரிடத்தின்,
அறம்பயில்விஞ்சைகற்றுளோரவர்பாலரும்பொருளேற்றுளோரவர்
பாற், பெறும்பொருளதனால்வேள்வியாற்றுநர்கள்பிழைப்பருநரகி
டைச்சேர்வார். (28)

தெறுவியாலன்றிக்கையினாலடிசிலிடுதலேற்றருந்துதறீதாம்,
முறையிகழ்ந்திருப்புத்தெறுவியாலிடுவோர்மூழ்குவார்கொடியபாழ்
நரகின், நறியவென்றயின்றோர்மதுநுகர்ந்தோர்கள்நகையினைவிரலி
னாற்றேய்த்தோர், வறிதின்வெள்ளுப்போடயின்றவாவின்றசை
யைவாய்மடுத்தவர்போல்வார். (29)

கையினாலளித்தவுப்புநெய்தெண்ணீர்கன்னலிற்கசிந்தபாலடிசில்
ஐயமற்றிவற்றையருந்திலான்றசையையருந்தியபாவம்வந்தடையும்
மையில்வெண்சோறுநுகர்ந்தவர்வாயிற்பெய்தநீருமிழ்கலார்பருகிற்
செய்யதம்முயிரைத்தென்புலத்தோரைத்தேவரைச்செகுத்தவரா
வார். (30)

உண்டவாக்கைவிளக்கியபின்னருத்தாபோசனங்கொண்டால்
மண்டுதீநரகினெய்துவர்பலராய்வழங்கியபோனகநுகரில்
தொண்டையங்கனிவாய்மகளிர்சீமந்தவிழைவினிற்றுய்ப்பினற்பசும்
பொன், கொண்டுநூல்பயிற்றுமவர்மனையருந்திற்சாந்திராயணங்
கொளல்வேண்டும். (31)

தீதுறுகனவுகாணில்வெங்கலரைத்தீண்டினுண்டவையெதிரெடுப்
பின், மாதரைமுயங்கிலபானவாயுவினைவிடுக்கில்வண்புனலிடைப்
படிக, யாதினுந்துறந்தோருமகம்புரிந்தோர்பிரமசாரியரெனுமிவர்
க்குச், சூதகமில்லைபகைவர்பாற்றென்பானோக்கியேதுய்த்திடல்
வேண்டும். (32)

சந்தியில்மானும்பொருள்கவர்ந்தோதுவித்தவன்றன்னையுந்தூய
செந்தழல்வேள்வியூபமுமீமத்தடுக்கியகட்டையுந்தீண்டின்
உந்துதண்புனலிற்றோய்கவான்றொழுவில்யாகசாலையினுயர்முத்தீ
அந்தணரிடத்திற்றேவராலயத்திலருந்துழிக்கழறொடலாகா. (34)

மண்டிலங்கோட்டியுண்கலனதன்மேல்வைத்தினிதயில்கமண்டில
மும், ஒண்டழல்மறையோர்க்குரித்துநாற்கோணமரசருக்குரித்து
முக்கோணம், எண்டருநாய்கர்க்குரித்துயர்வட்டம்பின்னவர்க்கிரும்
புனறெளித்தல், கொண்டுதன்கையில்மடியினிற்கலம்வைத்துண்டறீ
தெனமறைகூறும். (34)

கட்டிவிற்பீடந்தனிலிருந்தருந்தல்கப்பரைதனினுணலாகா, உட்டெ
ளிமறையோரளித்தசோறமிர்தம்வேந்தர்சோறுவந்தபாலடிசில்,
எட்டியரளித்தவடிசில்கல்லடிசில்பின்னவரினிதிடுமூரல், கொட்டிய
குருதியாதலாற்பின்னோரிடத்துணல்குறிப்பினுந்தீதாம். (35)

பொய்யுரைபுகலிற்றீமையாமென்னப்புகன்றனர்புலமைநன்குணர்ந்தோர், துய்யநுண்மருங்குற்செய்யவாய்மகளிர்புலவியிலந்தணராவி, உய்யுமென்புழியிலாவினையளிக்குமிடத்தினிலோடரிநெடுங்கண், ஐயலார்மணத்திற்பொய்ம்மையுமெய்ம்மை தன்னினும்விழுமி தாமன்றே. (36)

சூளுறவுரைப்பின்மறையவர் தமதுசத்தியமினிதுசூளுறுக, வாளினைதடுதோளைமன்னர்சூளுறுகபொன்னினைவணிகர்சூளுறுக, வாளுழற்சூளுக்குரைத்தவையெல்லாஞ்சதுர்த்தர்சூளுறுகவான்றெறுழுவிற், கோளுறத்துயிறல்மறையினைவெளியிற்கூறுதறீமையாமன்றே.(37)

பெருகுதண்புனலினீந்துவோன்றீயில்வெருவுறுதடைபவன்பெட்பின், மானிடையுயர்ந்தகன்மிசையிவர்வோன்மைந்தனைமனைவியைவிற்போன், உரைபெறுமிவர்களறுவருந்தமக்குத்தாமுயர்கதையினைச்சுழற்றி, வெருவாவெதிரும்பிறையெயிற்றழல்வாய்வெந்திறற்கூற்றெனலாவார். (38)

மன்னவர்மன்னர்குமாரரெந்நூலும்வழுவுறாதுணர்ந்தவேதியர்கள் துன்னியகுஞ்சிகுறைப்பதற்கியைந்தவிடத்தினிற்கருமத்திற்பொருத்த, பொன்னினிதளித்துமயிர்வினைபுரியாதொழிதலாம்பூண்கழித்திடாத, கன்னியர்தமக்குமயிர்வினைவேண்டிலிருவிரன்மயிர்க்கடைகளைக. (39)

தன்னுடையொழுக்கந்திறம்பினேன்றன்னைத்தடிந்திடுங்கூற்றெனத்தகுவான், பன்னியசத்தம்பயின்றிடான்முத்திப்பாவையிற்படிந்திடானேனும், மன்னியபுலன்களடக்கிநேருண்மைவழுவுறாதவர்தமையுணர்ந்தோர், நன்னெறியறிந்தோர்மனையறம்பூண்டோரெனுமிவர்வீடுநண்ணுவரால். (40)

முப்பத்தொன்பதாவது இல்லொழுக்கங்கூறிய
அத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—1137.

நாற்பதாவது

# யோகநிலையுரைத்த அத்தியாயம்.

---

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நரைதிரைபுகுந்தமைந்தருமினிதின்மகவுயிர்த்தபின்னரும், மரு
வியமனைவாழ்வொருவியிற்கிழத்திதன்னொடும்வளர்த்தீயோடும்,
அரின்மிடைகானம்புகுதறன்மனையைமைந்தர்பாலிருத்தியாண்டே
கல், உரியமெல்லடைகாய்மூலமார்ந்தைதந்தாமெச்சமுமொழிந்திடா
தாற்றல். (1)

வீழெனக்கிடந்தவிரிசடைமயிர்நீண்மெல்லுகிர்குறைத்திடாதொழு
கல், கேழ்கிளரிரவிபடுந்துணைவனத்திற்றிரிந்துபின்கெழுமிருட்போ
தில், தாழ்மனைபோந்துதுறந்துளோர்பிரமத்தொழுகுவோர்தமக்கு
ணவளித்துச்,சூழ்வரைச்சாரலைவனமாவினழலவித்துகளறவியற்றி.

இனியநுண்டேறல்மென்றசைமுருங்கைக்காய்முதலிகழ்வனவிகழ்ந்
து, முனமினிதமைத்தவைப்பொடுகாட்டில்விளைந்தவைமுழுவது
நீக்கித், தனிகொணர்சாலிபல்லுரலாகத்தடிந்துணலல்லதுகல்லால்,
நனிபடக்குறைத்துமிசைகநெற்கோடனொடாறுங்கொணர்ந்திடல்
வேண்டும். (3)

அன்றெனிற்றிங்களொன்றினுக்கேனுமறுமதிக்கேனுமற்றியலாண்
டொன்றினுக்கேனுமைவனமீட்டிக்கங்குலினருந்துதலொழுக்காம்
இன்றெனிலோர்நாளிடைவிடுத்தேனும்பக்கமொன்றிடையொழித்
தேனும், மன்றவோர்திங்கட்கொருபொழுதேனுமருந்துதலருமறை
வழக்கே. (4)

அல்லதுசாந்திராயணநுகர்கவலதடகருந்துகவன்றேல்
எல்லியும்பகலுநோற்றுடல்வாட்டியிமையவர்தென்புலத்தோர்கள்
நல்லனபுரிதற்கியற்றுககருமத்தழலைநல்லுயிரொடுஞ்சேர்த்திக்
கல்லியல்கானிற்றிரிவதேவானப்பிரத்தர்தங்கடனெனத்தகுமால்(5)

மெய்முக்கடனுந்தீர்த்தலாற்றுறத்தனீதியன்றெனமறைவிளம்பும்
ஆயுளினுங்காங்கூற்றினுங்காமாச்சிரமந்தனியொழுகல்
அவ்வனவாகுமோரிடத்துறையாதெங்கணுந்திரிந்திடல்வேண்டும்
ஒவ்வுறுதியானந்தூய்மையேற்றுண்டறமியனுயுறைதலையுரித்தாம்.

பரிவினனதன்னுஞ்செருக்கெறிந்தியாண்டுமுயர்மரநீழலிலிருக்க
வானுறைபிலிற்றுமதியொருநான்குமருவுமோர்நகர்வயின்வதிக
ஊனுடைப்புழுமென்முளையிவைமிதியாதெதாதுங்கல்மென்னகமயி
ரொழித்தல், கான்வரைத்தண்டுகைவிடாதிருத்தல்முனிதல்செய்யா
துகொள்கடனே. (7)

மண்ணினிற்றருவில்வளர்சுரையோட்டிற்பாத்திரங்கொள்ளுதல்
வயங்கும், ஒண்ணிறக்கற்றோய்துகிலிணைப்புனைதலோர்பகலருந்த
லில்வாழ்க்கை, நண்ணினர்யாதுவழங்கினுங்கோடலன்னவர்நன்ம
னைக்கருமம், பண்ணியபின்னர்ப்பலிகொளன்மிகவுமருந்திடாதொழி
தல்பண்பாமால். (8)

கருவிடையெய்துதுன்பமுநிலத்தின்கண்ணுறிற்கொடியவெந்நோ
யின், மருவுவெந்துயருநரைதிரையெய்திவருந்தியதுன்பமுங்கூற்
றால், உருவினையொருவுந்துன்பமுமீட்டுங்கருக்குழியொன்றுறுதுய
ரும், வெருவரவெண்ணியின்பவீடதனின்மேவநன்குணர்வதே
வேண்டும். (9)

அழிவதிவ்வுடம்புமுதலியவனைத்துமழிவுறாதிருப்பதெஞ்ஞான்றும்
மழுவறுமான்மாவென்பதையுணர்ந்துமுத்தியின்மருவுதற்கினைந்த
விழுமியகருமமியற்றுதல்வேண்டுமாங்கவைவேதமேமுதலாம்
முழுதறுகலைகளனைத்தையுமுணர்தலதன்வழிநின்றிடும்பான்மை.

ன்பெருஞானப்பொருணிலையுணரவேண்டுநர்வழுவறவினிதின்
ன்பவீடளிக்குநூல்பலகேட்டலாங்கவைசிந்தைசெய்திருத்தல்
ன்பொடுமதனைத்தெளிதலட்டாங்கயோகமும்பயிறலவ்வியோகம்
ன்புநெக்குருகப்பலபகற்பயிலினல்லதையெய்துறுதன்றே. (11)

இந்தியம்விடயந்தன்னெறுநிவணல்யோகமென்பார்சிலர்சிலர்தாஞ்
சிந்தனையுயிரோடடைதல்நல்யோகமென்பர் தன்றியுஞ்சிலர்தாம்
உந்தியபிராணனபானனோடடைதலென்பரிம்மொழிந்தவையனைத்
தும்,அந்தமில்யோகமல்லநற்சிவன்பரத்துடனடைவதேயோகம். 12

பயில்புறக்கரணமனைத்தையும்விளங்குமுட்கரணத்திடைப்படுத்தி
மயர்வறுமனனைப்புறக்கலனிடத்திலொடுக்கிமேல்வயங்குசட்பாவந்
இயறருசடுரேமீகோசமோராறுமியைந்திடாப்புறக்கலன்றன்னை, உயர்
வறவுயர்ந்தபரம்பொருளதனிற்கூட்டுதல்யோகமென்றுரைப்பார்.

கருதருமியோகம்பயின்றுகைவந்தோரல்லவர்பரத்தினைக்காணார்
திரிதருவளியையடக்கினல்லாதுசெவ்வனேமனநிலைபெறாதால்
ஒருவருஞ்சடங்கயோகுணர்ந்தல்லாலுண்மையையுணர்வரிததனால்,
விரிதருசடங்கயோகமும்விளங்கவிளம்புவன்கேட்டியென் றுரைக்
கும். (14)

ஆசனம்பிராணாயாமமெஞ்ஞான்றுமழிவறுபிரத்தியாகாரம்
மாசில்தாரணைமெய்த்தியானநற்சமாதிவகுத்தநல்யோகமாமவற்றுட்
பேசுமாசனங்களுரைத்திடிற்பெருகும்பிழைப்பில்சித்தாசனம்
விளங்குந், தேசுறுமியோகசாதனமென்னவிளம்புவர்யோகநூல்
தெளிந்தோர். (15)

வலக்குறங்கதனிலிடப்பதமேற்றிவலப்பதமிடக்குறங்கேற்றல்
சொலத்தருகமலவாசனமதனிற்பின்னமாய்த்துணைக்கரமாறி
நலத்தருதாளிற்பெருவிரல்பிடித்தல்பெத்தபத்மாசனநவிலில்
உலப்பிலாசனங்களுளவவற்றியைந்தவாசனத்திருத்தலேயுரித்தாம்.

எறிபுனல்சாம்பல்கரியும்கொசுகீயென்புதீயெய்திடாமன்றங்
குறுகருங்கானந்தொழுவிவற்றிருந்துயோகினைக்குறித்தலுமாகா
நறுமணங்கமழும்புனிதமாமிடத்திலமர்ந்திடனன்கெனவுரைப்பார்
சிறிதயின்றுறக்கந்திரிதரல்குறைதல்பெருகுதலொழிந்துளோர்
செயலாம். (17)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

செவ்வனிருந்துகளங்கோட்டிச்செவ்வாய்மூடிக்கண்கள்முகிழ்த்
தொவ்வாப்புலன்களுள்ளடக்கியுண்ணாப்புரைநாடியேற்றி
ஐவாவெனயிற்றேடெயிரென்றுதினிதின்வகுத்தவாசனத்தின்
இவ்வாறிருந்துமூவகையபிராணாயாமமியற்றுகவே. (18)

பருவத்திடைநோக்கெத்துணையகாலமிருக்கும்பொருந்துடலின்
மருவும்வாயுவெத்துணைப்போதடங்கியிருக்குமட்பகைஞர்
திரிகைபோலெவ்வளவுமனந்திரியாதிருக்குமத்துணையும்
விரியுங்காலபயமவனைமேவாதென்றுமறைகூறும். (19)

இமைத்தலொருமாத்திரையதனையீராறளவைகொண்டனவே,
அமைத்தவசபைச்செபகாலமாங்கவ்வளவுமூச்சடக்கிச், சமைத்த
பிராணாயாமமுறத்தாழ்ந்ததிடையதிரட்டித்தல், கமைக்கணுறைந்
தோர்மூன்றுகொண்டதுயர்ந்ததென்னக்கழறினரால். (20)

முந்துபிராணாயாமத்தின்வேர்வுதோன்றுமொழிந்ததற்பின்
வந்தபிராணாயாமத்தினடுக்கமெய்துமற்றதன்பின்
சிந்தைதெளிந்தோரினிதியற்றும்பிராணாயாமந்துயர்செய்யும்
அந்திலதனைப்பயிலின்வேர்வரும்புந்துயரமடையாவால். (21)

இனையவாறுமேன்மேலும்பயின்றேன்பனிதோயிருவிசும்பின்
மனனில்விரைந்துகாயமொடுமேருமிதனைவலிதாற்றும்
அனையோன்வெந்நோய்பிடித்துழலுநாடிதூய்மையுறினல்லால்
துனைவிலேகும்வலியடக்கல்கூடாதென்பர்தொன்னூலோர். (22)

மதியிலிருநான்கிரேசித்துவகுத்தவீரெட்டினிதேற்றி
விதியின்வழுவாதெண்ணான்குகும்பித்திலகுவெய்யோனிற்
பதினாறளவையிடவலத்துமிவ்வாறியற்றிப்பகர்முறையிற்
கதிர்கான்மதியின்விடுதலொருபிராணாயாமங்கருதுகவே. (23)

இடையில்விதியாலிரேசித்துப்பூரித்தியல்பிற்கும்பித்து
வடுவில்மதியந்தனையெண்ணிவலத்தால்விடுகவலப்பாலின்
நடையினியல்பாலிரேசித்துப்பூரித்ததனிற்கும்பித்துச்
சுடரோற்கருதிமதியின்விடிற்றூய்தாநாடிமும்மதியில். (24)

இன்னவாற்றானாடிதனைத்தூய்மைசெய்யினெறிவளியைத்
தன்னைச்சிறிதுநீங்காமனிறுத்தலாகுமது தரிப்பின்
வெந்நோயடையாவயின்றனகள்விரைவினறுநான்மறைபுகலும்
மன்னுநாதந்தெளிவெய்தமருளாதென்றுந்தோன்றுமால். (25)

தெளிந்தவிதியிற்பன்னிரண்டுபிராணாயாமஞ்செய்போது
விளம்புபிரத்தியாகாரமதுபன்னிரண்டுசெயும்வேலை
துளங்கல்செய்யாத்தாரணைமற்றதுபன்னிரண்டுசூழ்காலம்
அளந்ததியானமஃதீராறளவைசமாதிசெய்காலம். (26)

இவ்வாறுணர்ந்தோருயிர்க்குயிராயெங்குமாகியொன்றாகிச்
செவ்வாய்நின்றபரம்பொருளைக்காண்பான்செந்நீர்த்தொளிபழுத்த
வெவ்வாய்க்கருவின்வந்தடையார்வினையோரிரண்டுமொருவியுயர்
மைவார்கொடியமாயைகெடச்சுடர்போனின்றுவயங்குவரால். (27)

ஆமைபோலவிந்தியங்களடக்கல்பிரத்தியாகாரம்
சேமனண்ணத்தோமுகமாய்த்துளிக்குமமிழ்தையுந்தியிடைக்
காமர்முகமேனோக்கியமரிரவியருந்துங்கரந்ததனை
எமமுறவேமாறியிடுகாரணம்பயிலாதியையாதால். (28)

சென்னிகீழாத்தாண்மேலாநின்றுசெவ்வாயினைக்காக்கை
மன்னுமூக்கிற்குவித்துநறுஞ்சீதவளியையுறமாந்திற்
கொன்னேவருந்துநரைதிரைகள்கூடாவுண்ணுத்துவாரத்தில்
நன்றேவேற்றியறுதிங்களமுதமருந்தினரைவாரா. (29)

சொன்னவறுதிங்களின்மேலுந்துடர்ந்தைதம்மூன்றுநாளினிதின்
அன்னவமுதமருந்தில்வெலற்கரியமிருத்துவினைக்கடப்பார்
மன்னுநாவினுண்ணுக்கின்றுளையைநெருக்கிமதியாறு
தன்னேரில்லாப்பரையைநினைந்திருப்பிற்கவிதைசார்ந்திடுமால்.(30)

பருவமொருமூன்றிவ்வாறுபயிலினமுதவுருவாகும்
எரிவெம்பகுவாய்க்கறைமிடற்றகாற்கோடகன்றன்னெயிறனைத்
தும், உருவியழுந்தக்கடித்திடினுமொழுகுங்கொடியவிடமேரு,
மருவுஞ்சித்தியீங்கிதுகைவந்தாற்பயில்கதாரணையே. (31)

பூதமைந்தும்வெவ்வேறாய்ப்புகன்றவாற்றினுளத்தமைத்தல்
ஏதமறுதாரணையவற்றிற்பூதாரணைபொன்னிறமாகத்
தீதில்கோணநான்காகிலகரவெழுத்தினொடுஞ்சிவணி
வேதனதிதெய்வதமாகப்புவியையிதயமிசைதரித்தல். (32)

பிறையின்வடிவாய்வெண்ணிறமாய்ப்பேசுமகரவெழுத்துடைத்தாய்
நறியபடலைத்துழாய்மார்பன்கடவுளாககவையின்றி
உறையுமிடற்றிலீங்கிதனையமைத்தல்சலதாரணையென்ன
மறைதேர்முனிவர்மன்னுயிரின்மம்மர்தீரவகுத்தனரால். (33)

கோணமூன்றாயுறச்சேர்ந்துசிகரவெழுத்தினொடுங்கூட்டிப்
பேணுந்தெய்வமுருத்திரனாய்ப்பிறங்குமுண்ணாவதனிடையின்
மாணவினிதிற்றரித்திடுதல்வழங்குமழற்றாரணையென்ன
யாணர்மறைகளொருநான்குமுணர்ந்தமேலோரிசைத்தனரால்.(34)

ஆறுகோணமாய்க்கரிதாய்வகரவெழுத்தினொடுமமைத்தாங்
கீறில்மகேசன்றெய்வதமாயிருக்குந்தூயவெறுவளியைக்
கூறுபுருவத்திடைதரித்தல்குலவும்வாயுதாரணையென்
றூறுஞானக்கடற்படிந்தவுரவோரினிதினுரைத்தனரால். (35)

மானமாவின்வால்தீயினிறமாய்வட்டவடிவாகி
ஊனமில்லாயகரவெழுத்துடைத்தாய்த்தெய்வஞ்சதாசிவனாய்
ஆனபிரமரந்திரத்திற்றரித்தோரைந்துநாழிகையும்
மோனமாகவுயிர்சேர்த்தின்முத்திக்கபாடந்திறக்குமால். (36)

பூதாரணையாற்றிறமெய்தும்புனற்றாரணையான்மனமெய்தும்
ஓதுமழற்றாரணையதனாற்றகணமெய்துமுறுவளியின்
தீதிலுயர்தாரணையதனாற்சீவனழியாதாகாய
மாதாரணையாவையுஞ்சமனப்படுத்துமென்றேவகுத்தனரால். (37)

பொருந்துதியானமெனவுரைத்தல்சிந்தையாகும்புலமிகுதை
வருந்தத்துவத்தையுளத்தெண்ணியலையாதிருத்தல்தியானமிகத்
திருந்துசகுணநிற்குணமென்றிரண்டாஞ்சகுணந்திகழுருவோ
டருந்தவரனைமந்திரத்தாலேத்தியிதயத்திருத்துவதே. (38)

பிரமந்தன்னைமந்திரங்கள்பேசாதுளத்தினினிதமைத்தன்
மருவவரியவிற்குணமாந்தியானந்தன்மாத்திரையைந்தும்
பொருவில்செவியாதியவைந்திற்பொருந்துமளவும்புகாறுமற்
றரியதியானமவைநீக்கிச்சமாதிகாலமென்றறைவார். (39)

கடிகையஞ்சுதாரணையின்காலந்தியானமறுகடிகை
ஒடிவில்நாளோர்பன்னிரண்டுசமாதிகாலமுப்பொடுநீர்
அடைதல்போலமனத்தினொடுமான்மாச்சேர்த்தல்சமாதியென்ப
உடையபிராணன்மனத்தொடுகூட்டுதலுஞ்சமாதியெனவுரைப்பார்.

சீவபரத்தின்சமத்துவமுஞ்சமாதிதன்னைத்தெறுவெம்மை
மேவவரியசுகதுக்கநீங்கியான்மாவல்லதைவே
றியாவுமிலதென்றுயர்பரத்தினைய்திச்சமாதியிருப்போனை
நோவுத்தழனீர்படவினைகள்வருத்தாவென்னநுவன்றனரால். (41)

இனையவாறுசமாதியினிலிருக்கும்யோகிதத்துவத்தைத்
துனைவிற்காணுமாங்கதுவுமனோவாக்கிவற்றாற்றொடர்வரிதாய்த்
தனியோர்பொருளாயிருக்குமதிற்சடங்கயோகங்கைவந்தோர்
கனிசேர்பாலிற்பால்சேர்ந்தபான்மைபோலக்கலந்துறைவார். (42)

எற்றமாமுத்திரையொடுநாபோமுத்திரையுட்டியானமெனச்
சாற்றுமுத்திரையரியசலந்தரமுத்திரைநன்மூலபெந்தம்
ஆற்றலுடையிம்முத்திரைகளறிந்தயோகியாங்கவற்றிற்
போற்றுமாமுத்திரையின்விதியாருந்தெளியப்புகலுவாம். (43)

கூடுமாமுத்திரைவலக்கானீட்டியிடக்கால்குதத்தழுத்தி
நீடுதாளையிருகையாற்பிடித்துநாடிவளைத்துநிரைத்
தோடுபிராணன்றனைமாறிமாறிவிடுதனுவலர்த்தல்
நாடிசோதித்திடல்மதியம்ரவிகூட்டலெனநவில்வார். (44)

நாவைக்கபாலத்தூடேற்றிப்புருவநடுவினோக்கமைத்து
மேவனுபோமுத்திரைவயிற்றினதனுல்நாபியெலாம்
தாவில்வெரிநிற்றுறுதல்பிராணவாயுத்தனைநிறுத்தல்
ஒவிலுயருட்டியானமிதுபயின்றோர்வானத்துலாவுவார். (45)

வாயுவதனால்நரம்புகளால்மிடற்றையிறுக்கிற்கீழ்வதிந்த
தீயின்மதியத்தமுதொழுகாப்பிராணன்வளியுஞ்செல்லாது
மேயவிதனைச்சலந்தராமுத்திரையாமென்னவிளம்பினரால்
ஆயுமறையின்பொருளனைத்துந்தமதாமென்னுமறிவுடையோர். (46)

நதியோரிரண்டில்யோனிதனையிறுக்கிக்குதத்தையுள்வாங்கி
வீதியினபானவாயுவினைமேலேயேற்றிப்பிராணனுக்கும்
எதிருமபானன்றனக்குமிவையெய்துமலநீரெய்தாது
முதிருங்கிழவர்க்கிளமைவருமூலபெந்தமிஃதாமால். (47)

மருவுபிராணன்மேலிழுக்கவபானவாயுகீழிழுக்கப்
பெருகுதுயரின்வருந்தாதுகூடுமவன்பேசரும்யோகி
பொருவில்கரத்தாற்போந்துசகரத்துட்போமசபைதன்னை
இருபத்தோராயிரத்தறுநூற்றுருவேற்றிடுநல்லுயிர்சீவன். (48)

கலைகளனைத்துந்தெளிதலாமகளிர்விழைதல்கணமொன்றில்
உலகமியாவுந்திரிந்திடுதல்சிறுத்தல்பெருத்தலுடலதனில்
இலகுமொளிநன்மனந்தோன்றலெவற்றின்பாடைகளுமறிதல்
அலகில்புவனந்தனிதாங்கல்பரகாயத்திலினிதடைதல். (49)

சேணிற்பொருள்யாவையுங்காண்டல்செகத்துளொலிகளெளிது
ணர்தல், மாணுற்றுயர்யோகியர்க்கிவைகளிடையூறிவற்றின்மனஞ்
செலுத்தா, தியாணர்க்கோங்கின்முகிண்முலையவேழைபாகனிணை
யடியைக், காணுற்றுள்ளங்கசிந்துருகியிருப்போர்முத்திக்கடற்படி
வார். (50)

இனையவாற்றாலியோகங்களியற்றியுடலமிகவருத்தி
நினைதற்கரியதனிமுத்திநெறியினடைகவிதுவன்றித்
துனைவிலுடலம்வருந்தாதுமுத்தியடையத்துணிந்தோர்கள்
கனைநீர்க்கங்கைசூழ்காசியடையவேண்டுமெனக்கரைந்தார். (51)

## நாற்பதாவது யோகநிலையுரைத்த அத்தியாயம் முற்றிற்று

---

ஆகத்திருவிருத்தம்—1188.

## நாற்பத்தோராவது

# காலமறியுமத்தியாயம்.

---

### கலிவிருத்தம்.

கறங்குதிரைப்புனற்கங்கைசூழ்கிடந்தகாசிதனில்
இறந்துபடுநாளணித்தாயெய்துழியாயினுஞ்செல்கென்
றறைந்தனைமற்றவைதெளியுமாறினிதினறைகென்னாச்
சிறந்தமுனிவரன்கேட்பச்சூர்தடிந்தோன்செப்புமால். (1)

ஒழியாதுபிங்கலையினுயிர்ப்பொருணாள்முழுதொழுகின்
அழிவாகுமூவாண்டிலாங்கதனிலிரண்டுநாள்
வழுவாமல்நடந்திடுமேன்மறிந்திடுவனீராண்டிற்
கழிவானுண்டொன்றிலதில்நாள்மூன்றுகடிதோடில். (2)

ஐயிருநாளுபயத்திற்சரமோடிலறுமதியின்
உய்வதிலன்மூக்கொழியவாயினிடைவளியோடின்
மெய்யினுயிர்நாள்மூன்றின்விட்டகலுமெனவுரைத்தார்
மையறுநூற்கடல்கடந்தமாண்புடையமதிவல்லோர். (3)

தென்றிசையிலிரவிதடந்தேர்நடப்பிற்சென்மத்து
மன்றவுயர்திங்களுமேழாமிடத்தில்வான்கதிரும்
ஒன்றுபவுட்டினகாலத்தொளிகறுத்தும்பொற்கென்று
நின்றதோருருக்காணில்நீங்குமுயிர்மூவாண்டில். (4)

மும்மலமுமியல்புதிரிந்தறக்குறையின்முடியுமுயிர்
அம்மவொருபருவத்திலாகாயந்தனிற்கரிய
மைம்மதவாரணந்தோன்றின்மறிந்திடுவன்மதியாறில்
தம்முடலமலையாமல்நிழலலையிற்சாவணித்தாம். (5)

வாயினிடைநீர்பெய்துவான்றுளிசிந்திடவுமிழின்
மேயதனுத்தோன்றாதேல்வீந்திடுவன்மதியாறில்
ஆயுளழுந்திடுங்காலமாறுமதியளவையெனில்
தூயநிறமோரைந்துஞ்சுவையாறுமுறைபிறழும். (6)

அருந்ததிநாதுதி துருவனணிமூக்கினுதிமற்றைப்
பொருந்துமுயர்விண்டுபதம்புருவகடுக்கட்கடைகள்
திருந்தியிடுமாதருமண்டலமாகுமிவைதெரியா
திருந்திடுமேற்சின்னளில்மறலிநகர்க்கெய்துவரால். (7)

இதழ்நாக்குமிடறிவைகளீரமறப்புலர்ந்திடுமேல்
மதியாறினமன்பகட்டின்மணியோசைகேட்பரால்
உதடுநாப்பல்லண்ணமொழுகுதாதுறக்கறுப்பின்
இதைவருயிர்மதியாறிற்றென்புலத்தேதார்விருந்தாய். (8)

ஈர்வாளினுயிர்புறத்தவோர்ந்திதலையிடைவீழில்
நீர்வருயிர்சின்னளிற்றிகழுராங்கைகால்வயிற்றில்
ஈராடிற்றேயாதுநீங்குமேன்மும்மதியிற்
காரார்வெம்பகடுகைக்குமறலியூர்கடிதடைவார். (9)

சேற்றிடையின்மிதித்தவடிச்சுவடுசிதைவுறத்தோன்றின்
ஏற்றெருமைக்கடும்பாகனெய்துமூரணித்தாகும்
ஆற்றுறுநீர்கண்ணடிநேர்நோக்கிற்றலையவற்றில்
தோற்றிடாதெனிலாவியொருமதியிற்றேறற்பால். (10)

இயற்கைமதிபிறழிரவினிந்திரவிற்காணினுயர்
முயற்களங்கமதியிரவியோரிரண்டாய்முன்றோன்றிற்
பயக்குறுநன்பகலினுடுத்தெரிந்திரவுந்தெரியாதேல்
மயக்குநமன்றமரெதிரேவருவிருந்தாய்ச்செல்வரால். (11)

நாற்றிசையுமிந்திரவிற்றோன்றிடினன்பகலிடையில்
தோற்றுறவெம்பேயாடிற்றுறுகல்லினுயர்மானில்
ஏற்றுயர்கந்திருவனகரெதிர்ந்திடிலோர்திங்களினிற்
கூற்றுமவனவிதனைக்குடியாமலொழியுமே. (12)

நடங்கையாற்செவிபுதைப்பிற்குமிறுமொலிகேளாதேல்
உடம்புயமுமுடல்முழுதுந்தடித்துள்ளோர்சாம்புவரேல்
ஒடுங்கியமெய்யினர்மிகவும்பருப்பரேல்மதியொன்றிற்
கடந்திடுவர்வைதரணிநதியினைத்தன்காற்புணையால். (13)

தனதுநிழறென்றிசையிற்றனிதோன்றிலுருமெறியுங்
கனைகுரலவெஞ்சினத்தகதழெரிகாற்செங்கண்ண
பனைவகிர்ந்ததெனப்பணைத்தபடர்கோட்டபகடூர்ந்து
துனைவில்வருகொடுமறலியெறிவலையிற்றுவக்குண்பார். (14)

பேய்பூதம்நரிகழுதையவுணரிராக்கதர்பிறங்கும்
ஆய்தூவிக்கருங்காக்கைபருந்துகுரங்கடுபுலிசெந்
நாயேறவவைதமைத்தின்னக்கனவுநனிகாணின்
மாய்வரோர்பருவத்தின்மறலிகதைக்கிரையாக. (15)

செய்யமலர்வெய்யவரிசெஞ்சாந்தமிவைதமது
மெய்யிலணிந்திடக்காணில்விளம்புமதியிருநான்கில்
உய்வதிலர்புற்றதனில்யூபத்திலுயர்துகளிற்
கையறவோடுயிர்துறப்பரவையேற்கக்கனுக்காணில். (16)

எண்ணைதலைமுழுகமயிரெறிந்திடவெங்கரமிவர
நண்ணருந்தென்புலத்தொருவர்கொடுபோகவுயிர்நடந்தோர்
மண்ணியதம்மேலேறமுளிதருபுற்சுமக்கமற்றைக்
கண்ணருந்தக்கனுக்காணிலோர்மதியிற்கழிவரால். (17)

கரியகுறள்மடந்தைதனைப்புல்லவுயர்கருந்தாதில்
உருவமைந்தகதைதாங்கியொழுகுகருந்துகில்வீக்கி
மருவுகருநிறத்தொருவன்றனைக்காணவருகனவு
தெரிவுறக்கண்டவனுவிதிங்களொன்றிற்கழிந்திடுமால். (18)

குரங்கிவர்ந்துகுணபாலிற்செலவயரக்கொடுங்கனவு
தெரிந்திடக்கண்டிடிலாவிசிதைவர்நாள்மூவைந்தில்
விரும்பியளிக்குநரளியாவிடில்மிகவுமளியாதோர்
பொருந்தவளித்திடிலாவிபொன்றிடுவர்சின்னாளில். (19)

இன்னுமளப்பிலவாவியிறந்துபடுகுறியவற்றில்
மன்னியிடுகுறியோர்ந்துவானதிசூழ்கிடந்தோங்கிப்
பொன்விழுதுவிட்டனையபுரிசடையோனினிதுறையுங்
கன்னியெயில்புனைகாசிகடிதினடைந்திடல்வேண்டும். (20)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

என்றுமலையத்தமிழ்முனிவனினிதுகேட்பக்குருகுபெயர்க்
குன்றமெறிந்தசுடரிலைவேற்குமரனுரைத்தானெனத்தெரிந்து
மன்றமறைகளொருநான்காய்வகுத்தமுனிவர்பணிந்துபுலன்
வென்றருதன்முனிவருளந்தெருளுமாறுவிளம்பினனால். (21)

## நாற்பத்தோராவது காலமறியும் அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—1209.

## காசிகாண்டம்
## முதலாவது பூர்வகாண்டம் முற்றிற்று.



உ

சிவமயம்.

# காசிகாண்டம்

---

## இரண்டாவது உத்தரகாண்டம்.



உ

திருச்சிற்றம்பலம்.

# இரண்டாவது உத்தரகாண்டம்.

---

## நாற்பத்திரண்டாவது
## அவிமுத்தேசன்கதையுரைத்த அத்தியாயம்.

---

### கலிவிருத்தம்.

சீர்கொண்டமலரவனுந்திருமாலுங்காண்பரிய
ஏர்கொண்டபேரொளியையெளியேன்றன்னுள்ளத்தும்
சீர்கொண்டகாசியினுநிலவுபழமறைக்கொழுந்தைக்
கார்கொண்டமணிமிடற்றெங்கண்ணுதலைவழுத்துவாம். (1)

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

தேசுறுஞானமளப்பினுள்யோகஞ்செய்திடினலதுசேர் வரி தாற்
காசியினடையிற்கணத்தினில்முத்தியெய்தலாமெனக்க ரை ந் தனை
யால், மாசிலந்நகரின்விடாதுறைபரமன்கதையினைவழங்கெனமுனி
வன், பேசலுமவுணரிரத்தமுண்டொளிரும்பிறங்குவேற்குமரனுண்
ரைப்பான். (2)

மற்றையதலங்களெவற்றினுந்தவத்தால்யோகினுல்மருவரு மு த் தி
பெற்றிடல்வேண்டுங்காசியில்வாளாவுறைந்திடில்முத்தியா ம் பெ ட்
பின், உற்றவணீங்காதுறைதலேயோகமொண்மலரிடுவதே தானங்,
கற்றையங்கதிர்கால்முத்திமண்டபத்திலிருப்பதேதகருதருந்தியானம்.

அளப்பருங்காலமைந்தழல்நாப்பணருந்தவம்புரிந்தவர்பெறும்பே
றளத்திலின்புற்றுச்சிவலிசியேகாதசியினிலுண்டிநீத்துறையிற்
களிச்சுரும்பாற்றுங்கடுக்கையந்தெரியற்கண்ணுதலளிக்குநின்போல
வளத்தநற்காசியிரிந்திறைவருந்துங்கதையினைக்கேளெனவழங்கும்.

அருமறைக்கிழவன் முன்னமோர்பிரமகற்பத்திற்சுவாயம்புமனுவெனு
ஒருபெருந்திகிரியன்னவனிறப்பவறுபதாண்டுறைபெயலின்றிப்
பருவரலுழந்தாங்குலகெலாங்காடாய்ப்பயின்மகமின்றிநன்னிலை
திரிதலுங்கமலப்பொகுட்டினிதிருக்குமறையவன்சிந்தையினினைந்
தான். (5

ஆழியொன்றுருட்டியுலகெலாம்புரக்குமரசரையின்றியிவ்வுலகந்
தாழ்துயருழந்தெனமனத்தெண்ணித்தவறில்சீர்மனுகுலத்துதித்துப்
பூழிவெம்பருதியினையவேற்றடங்கைரிபுஞ்சயனென்றுலகேத்தும்
பாழியந்தடந்தோள்மன்னவன்காசிப்பதியினிற்றவஞ்செயக்கண்
டான். (6)

காண்டலுமரசன்றவத்தினைவியந்துகதிர்முடிதுளக்கிநான்முகத்
தோன், மாண்டவிவ்வுலகமனைத்தையுநீயேபுரந்திடல்வேண்டுமற்று
னக்குத், தூண்டுதல்செய்யாமணிவிளக்கன்னசுடரிழையணங்குமோகி
னியைச், சேண்படர்பரிதிநிகர்மணிச்சுடிகைப்பஃறலைச்சேடன்வந்
தளிப்பான். (7)

மாயிருஞாலமனுநெறிவழாதுமன்னநீகாத்தலானினக்காங்
காய்மணிக்குப்பைதெய்வமென்சாந்தமைந்தருநறுமலரனைத்துஞ்
சேயுயர்விசும்பினமரர்நல்குதலாலுயர்திவோதானனும்பெயரும்
ஏய்வுறுங்கலைகள்முழுவதுமளித்தேமேம்பலோடிருத்தியென்றி
டலும். (8)

தாமரைத்தவிசிலரசுவீற்றிருக்குஞ்சதுமுகற்றொழுதியான்கேட்ட
காமுறுவரமொன்றளித்தியேலுலகங்காக்குவலென்னவுண்மகிழ்ந்து
யாமது தருதுமென்னலுமமரர்விஞ்சையரியக்கர்கந்திருவர்
தாமவெந்தழற்கண்ணுரகரிங்ககாந்து றந்து தம்பதிபுகவேண்டும். (9)

என்றலும்வழங்கிச்சேட்டிளங்கதிரினெரிகதிர்மணிமுடிசூட்டிக்
குன்றுறழ்திணிதோள்மன்னவனமரர்குழுவினைத்தனித்தனிநோக்
கிச், சென்றுநம்பதியிற்சேர்கெனமுரசமறைதலுஞ்செழுமறைக்
கிழவன், பொன்றிகழ்கடுக்கைப்புரிசடைப்பரமனினிதுறைநகரம்
புகுந்தான். (10)

டுதொழுதேத்தும்விரிஞ்சன்முன்னேன்றியலங்குசீர்க் காசியங்
டவுள், குடுமிவான்றோயுமந்தரமிழைத்தபெருந்தவமாங்கதுகுறுகி,
டவிச்சீர்வரங்களுதவுதல்வேண்டுமொல்லையிலெழுகவென்ன, வி
டவிர்ந்தயன்மாலிந்திரமுதலவிண்ணவர்சூழ்வரவெழுந்தான்.

ண்களுமனனுங்காசியிற்கிடப்பக்கறைமிடற்றெந்தையாண்டேக
ண்புகுகுடுமிமந்தரந்தாழ்ந்துமென்மலர்தூய்ப்பணிந்தேத்திப்
ண்கனிந்தொழுதமென்மொழிபாகன்விழைந்தனபகர்தி யென்றி
டலும், ஒண்சுடராகியாவதுமுணருமுனக்கியானுரைப்ப தமுண்
டே. (12)

கங்கையம்புனல்சூழ்காசியம்பதியிலுறைவதுபோற்குசத்தீவில், தங்கு
மென்னிடத்துமுறைந்திடல்வேண்டும்யானுமத்தனிநகர் போலப்,
பொங்குசீரோடும்பொலிந்திடல்வேண்டுமென்றலும் பொழிகதிர்
நிலவு, திங்களங்கண்ணிப்புரிசடைமறையோன்சிந்தைகூர்ந்திருந்
திடுமெல்லை. (13)

மலரயன்வணங்கிமதிவகிர்புனைந்தவாதநின்னருளினலரியன்
உலகெலாமமைத்தேன்காக்குநரின்றியுறைபெயல்வறந்தனவதனால்
நிலகுவெற்றடக்கைநிபுஞ்சயன்காக்கப்பணித்தனனங்கவனி
மையோர், அலைபுனற்காசியொரீஇத்தமபதியிலடைந்திடலளிப்ப
னென்றுரைத்தான். (14)

அவ்வரமளித்தல்வேண்டுமென்றிறைஞ்சமந்தரவரையினுக்களிப்பா
ன், இவ்விடத்தடைந்தேதம்யாமுமாங்குறையுமிமையவர்தத்தமபதி
யிற்,செவ்வனேயேகப்பணித்தனமென்னச்செங்கனிப்பவளவாய்மலர்
ந்து, நவ்விமென்றோக்கிபங்கன்மால்வரைக்குநல்வரமளித்தினிதிருந்
தான். (15)

அன்றுதொட்டோங்குமந்தரவரையுமுத்திமால்வரையெனவமர்ந்த
தின்றளிர்கவற்றுமேந்தெழின்மேனியேழையோர்பாகனுங்காசி
ஒன்றிநீங்குறாமலியாவருமுணராவிலிங்கமொன்றமைத் தவனுற
லாற், பொன்றவழ்குடுமிப்புரிசைசூழ்காசிக்கவிமுத்தமெனப்பெயர்
புனைந்தார். (16)

விளங்குமவ்விலிங்கமமைத்ததன்பின்னர்விரிஞ்சனேமுதலி யோர்
யாருந், துளங்கொளியிலிங்கம்பற்பலவமைத்தார்சொன்னவவ்விலிங்
கத்தினுமம், உளங்குழைந்துரைத்தோர்கருதினேரியாண்டுசென்று
தம்முயிரிறந்திடினுங், களங்கனியனையகண்டன்வாழ்காசியிறந்தவர்
பெறுங்கதியடைவார். (17)

நாற்பத்திரண்டாவது அவிமுத்தேசன் கதையுரைத்த
அத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—1226.

## நாற்பத்துமூன்றுவது
## திவோதாசனுட்டிற்படுத்த அத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அண்ணலங்காசிதனிற்றிவோதாசனரசுபூண்டளிக்குநாளதனிற்
கண்ணுதல்முதலோராவணரசுரிமைகடிந்துவான்றொடுமதிற்காசி
நண்ணியதுரைத்தியெனமுனிகேட்பநாமவேற்பண்ணவனுரைப்
பான். (1)

நாகிளந்திங்கணகைநிலாமுகிழ்க்குநளிர்சடையானவன்முதலோர்
போகியபின்னரிருநிலமுழுதும்பொதுவறவொருகுடைநிழற்றி
வேகவெஞ்சிலைக்கைமருவலர்க்கடந்துவிரைவளந்தருமலர்ச்சோலை
மாகமூடறுக்குங்கொடிநெடுவீதிமாநகர்க்காசியினிருந்தான். (2)

செயிருடைச்சீற்றப்பகைவர்தம் விழிக்குந்தீமைகூரிதயமென்மலர்
க்கும், வெயில்பொழிந்திமைக்கும்வெங்கதிர்ப்பருதிவேந்தனை
போன்றுமெஞ்ஞான்றும், உயிரெனவியந்துதன்னுழையடைந்தோர்க்
குயர்விசும்பகடுகிண்டெழுந்த, முயலடைகிடக்குமுழுநிலாத்திங்கள்
முதல்வனைபோன்றும்வீற்றிருந்தான். (3)

குனிசிலைக்குடுமிகுழையநாண்பிணித்துக்குருதிநீராட்டுவெம்பகழி
முனிவினிற்றுங்கிக்கவைநெடுங்கோட்டுமூரிவெங்கடாக்களிறுகைத்
த, தனிவிசும்பளிக்கும்வானவனென்பர்தரியலருயிர்செகுப்பதனாற்,
கனைகுரற்புரிகோட்டெருமையேறுகைக்குங்கதழ்சினமறலியென்று
ரைப்பார். (4)

எற்றெதிர்கொடியபகைநெடுங்கானிற்கெரிசுடர்வழங்குதீக்கடவுள்
ஆற்றுவெம்பாசத்தொன்னலர்கடந்தவென்றியாலாழ்கடற்கிறை
வன், போற்றுமிவ்வுலகிலுயிரெலாமுயிரிற்புரப்பவனரும்பொருளை
யும், மாற்றிடாதெவர்க்குமுதவலாலளகைமன்னவனென்னவீற்
றிருந்தான். (5)

வாட்படையுழவர்கூற்றெனத்தெழிக்குஞாட்பினுட்பார்க்கரும்
வலத்தாற், கோட்புலிப்போத்தினீருரிபுனைந்தகூன்பிறைக்கண்ணி
யஞ்செல்வன், சேட்டிளம்பருதியோட்டறவிந்ததிரள்வரைப்புயவ
லியதனாற், பாட்டளிதுதையும்பசுந்துழாய்ப்படலைப்பங்கயச்செங்கண்
மாலனையான். (6)

எண்ணிருகலையாலுள்ளமேமாப்பவிருவிசும்பியங்கியமதிபோல்,
நண்ணருமெண்ணெண்கலையொடுநிறைந்தவிவர்க்கிணைநாகர்கந்திரு
வர், பண்ணவனுருவுகரந்துவந்தன்னோன்பணித்தனபுரிகுவரென்
றால், அண்ணறன்சீர்த்தியாயிரம்பகுவாய்ச்சேடனையன்றியாருரைப்
பார். (7)

ணர்தலையுலகமொருகுடைநிழற்றுநாளின்மேற்கிளையந்தீஞ்
சொற், கனிந்தழகொழுகும்பச்சிளங்கழைத்தோட்கருங்கயல்மருட்
வாட்டடங்கண், மணங்கவருருவச்செழுங்கொடிப்புருவவாளரக்
ட்டிதழ்க்கனிவாய், அனங்கமோகினியைப்பஃறலைச்செஞ்சூட்டணி
கெழுசேடன்வந்தளித்தான். (8)

ஆங்கவடனைவேட்டிளமுலைப்போகமருந்திமற்றிவணிகர்வனப்பிற் பூங்குழன்மாதர்பலரொடுமுயங்கிப்பொற்பொடும்புதல்வரைப்பயந்து வாங்கிருஞ்சிலைத்தோட்புரவலன்புரப்பமறைவளஞ்சுரக்குநன்னாட்டின், நீங்கரும்பெருமைதன்னையீங்கெவர்க்குமிற்றெனநிகழ்த்துமாறரிதே. (9)

கிள்ளையங்குதலைமொழியினுங்கனிந்தகேழ்கிளரமுதுறழ்தீஞ்சொல் ஒள்ளிழையவரிலருந்ததிக்கற்பின்வழீஇயினொருவருமில்லை, வெள்ளிவெண்புரிநூல்விளங்குபொற்றடந்தோள்வேதியர்தம்மி லெஞ்ஞான்றுந், தெள்ளிதினுணர்ந்துமறைவழியொழுகுஞ்செய்தியிற்றிறம்பினோரில்லை. (10)

அழன்முகம்பழுத்தவாடகப்பசும்பொனாரம்வீற்றிருந்துவெங்கதிர்கால்; ஒழுகொளித்தடந்தோள்வேந்தரிற்பணைத்தபுயவலியொழிந்துளோரில்லை, முழுதுணர்கேள்வியுடைப்பெருங்கேண்மைவணிகரில் மூவுலகனைத்தும், விழைதகவுடையபொருணனியீட்டும்விநயம்விட்டுறைகுநரில்லை. (11)

கண்ணழற்சீற்றத்துளையெயிற்றழல்வாய்க்கட்செவிப்பணமுடிகிடந்த, மண்மகள்பயந்தபின்னவர்தம்மிற்றந்நிலைவழீஇயினோரில்லை, எண்ணுநால்வருணத்தவருமற்றவரினிழிந்துளோர்களுந்தமதியல்பின், நண்ணுநரன்றியல்லனபுரிந்துதீநெறிநடக்குநரில்லை. (12)

கொடைக்கடனிருக்குந்தடக்கைவேளுழவனளிக்குநாடெவற்றினுங் குறையா, உடைப்பெருஞ்செல்வரல்லதுவறுமையுழந்துளோரொருவருமில்லை, விடற்கருங்கற்பிற்றம்மனையலதுபிறர்மனைவிழைகுநரில்லை, இடர்க்கடற்புணையாய்ப்பிறவிவேரறுக்குமகவிலாதுறைகுநரில்லை. (13)

குழைமுகந்தூங்குசெம்மணிப்பசும்பொற்குண்டலவேதியர்நாளும் அழன்முகத்தாற்றுமருமகத்தன்றிச்செந்தசையருந்துநரில்லை, விழைவொடும்பயந்தோர்ப்பழிச்சிடாரில்லைவெங்கவறுருட்டுநரில்லை, கழிபெருங்குணத்துக்குரவரைப்பிழைப்போரரும்பொருள்கவருநரில்லை. (14)

மழைமுகில்வறப்பநிலமிசைப்பைங்கூழ்வாடினவில்லையெஞ்ஞான்றுங்
கழிபெருநோயின்வருந்துநரில்லைக்கனியினுமினியமென்மழலைக்
குழவியம்பருவத்திறக்குநரில்லைக்குற்றமிலொழுக்கமேயன்றிப்
பழிபடுகருமமென்பதுமறந்தும்பயில்குநரில்லையப்பதியின். (15)

ஆறறிபுலவர்தவத்துறைபோயவந்தணர்தொழுவர்மற்றவரும்
ஊறொளியோசைநாற்றமென்சுவையினொழுகிடாத்தொழுவர் மற்ற
வரும்,ஈறிலாஞானப்பெருங்கடற்படிந்தோர்ப்பணிகுவரிசைத்தமற்ற
வரும், நீறுபூத்தலர்ந்தநெடுநிலாநெற்றிநிகரொறிமுனிவரைத்தொழு
வார். (16)

விழுதுவிட்டொழுகுவெண்ணிலாமுத்தம்விளிம்பெறிந்தெரிமணி
குயின்ற,மழகதிர்ப்பசும்பொனெடுமுடிபுனைந்துவலம்படுதிகிரியொன்
றுருட்டி, எழுகடல்வரைப்புமின்னணம்வழாமலெண்பதினாயிரம்பரு
வங்,கழிபெருங்காதன்மண்மகளுவப்பக்களைகணாயினிதளித்தனரால்·

நீவிடங்கடைவாய்மடையுடைத்தொழுகுசெம்மணிச்சூட்டரா முடி
யின், மேவலர்க்கடந்தகனைகடலாடைவியனிலமுழுவதுமு வப் பக்,
கோவியல்வழாதுபகைபுறங்கண்டகுருதிவேன்மன்னவன் காப் பப்,
பூவியல்பொதும்பர்க்கற்பகநீழல்விண்ணவர்புத்தியினோர்ந்தார். (18)

பூம்பொழிச்செங்கட்சுரும்புவாய்நெகிழ்ந்தபுதுமலர்த்தாது மேய்ந்
துறங்குந், தேம்படுநறியதருமலர்ச்சோலைப்பணியிருவிசும்புறைதே
வர், மேம்படுமிவன்றனிருநிலக்கிழமைவிலக்குவமெனக்கரகமலங்,
கம்பநாத்தழும்புபழமறைவடித்ததங்குலக்குரவனுக்குரைத்தார்.

ரிதலைத்தெங்கினெட்டிலைப்போந்தைகுடக்கனிவீழுமுப்புடைக்காய்
ருவிவீழ்ந்தென்னப்புனலறாதொழுகுமகன்பணைக்காசியினுறையுந்,
ருவநீண்மார்பன்றவத்துறைசிறிதுந்திறம்பலனவனுலகளிக்கும்,
பொருவருசெங்கோலிழுக்கறவியற்றலென்னெனப்புந்தியினோர்ந்
தான். (20)

பண்ணவர்மவுலிவெயிற்கதிருரிஞ்சிப்பழுந்தழும்பிருந்தசேவடிய
அண்ணலங்குரவனாழற்கடவுளின்றெனிலருமகமுதல
எண்ணருங்கருமமியற்றுமாறறியவெரிக்குழாமுழுவதுமீண்டு
நண்ணுமாறியற்றிலன்னவன்புரியுநல்லறனிழுக்குமென்றுரைத் (21)
தான்.

ஆயிரஞ்சுடிகைமணிவிளக்கேந்துமழல்விழிப்பாந்தண்மேற்கிடந்த
மாயிருஞாலத்தெரியெலாமழைத்தியென்றுவண்டேறல்கொப்புளிக்
குமீயுயர்பசும்பொற்கற்பகநீழல்வேந்தெடுத்துரைத்தலும்விரைவிற்
காயெரிக்கடவுளிருநிலத்தெரிகள்யாவையுந்தன்னுழைக்கரந்தான்.

கடற்பெரும்புவியிலெரியெலாஞ்செந்தீக்கடவுடன்னுழைக்கரந்த
னாற்,கொடைக்கடன்பூண்டதாழிருந்தடக்கைக்கொற்றவேன்மன்ன
வற்குறுகி, மடைத்தொழில்வல்லோரழலிலாமையினால்வான்படர்
வெய்யவன்கதிரில், அடப்படுவனகளமைத்தனமென்னவரசனுஞ்சிந் (23)
தையுற்றிருந்தான்.

நம்முடைநகரினாழலன்றுநளிகடற்பாரழலெவையும்
அம்மவோரமரர்புணர்ப்பினாற்கரந்ததாமெனவெண்ணுறுமேல்லைச்
சும்மைநீர்வேலியுலகினின்மாந்தர்யாவருந்தொழுதகையினராய்த்
தெம்முனைகடந்தசினவுவேற்கரனைச்செழுமணிவாயிலினடைந்தார்.

சுடுபொறிசிதறுமெரிமுகக்கடவுளின்மையாற்றொடுகடல்வளாகத்
தடையுநற்கருமமுதலவேள்விகளுமாற்றுதலொழிந்தனவென்னக்
கடையளந்தறியாவிடுதிறைகிடக்குங்கற்றையஞ்சுடர்மணிப்பருஉத்
தாட், கொடிநெடுவாயில்காவலர்க்குரைத்துக்கொற்றவன்றன்னு (25)
ழைவிடுத்தார்.

நாக்கடைபுரட்டித்தீப்படவிளங்குநகுமணிச்சுடிகைவாளரவின்
மேக்குறக்கிடந்தவுலகமோரேழும்விரிகதிராழியொன்றுருட்டிக்
காக்குநின்கோயிற்கடைப்புறத்திறுத்தனலகெனவாயிலோர்கழறத்
தீக்கடையொழுகுசிறுகண்மாலியானைச்செம்மலுங்கொணர்கென (26
வுரைத்தான்.

வெயிலுடன்முளைத்துக்கிளைத்தபொற்கழற்கால்வேந்தர் கோன்ப ணித்தனன்வருகென், றுயர்மணிக்கொடிதோய்வாயிலோருரைப்ப வொல்லையின்வேத்தவைப்புகுந்து, செயிரறுகமலமலரடிதொழலுஞ் சிந்தையுற்றவர்முகநோக்கி, வயிரவாட்டடங்கைபுடைத்துவெண் டாளவாணகைகோட்டியீதுரைப்பான். (27)

ஈங்குநீர்போந்ததடுதழலின்றியென்பதையுணர்ந்தனன்செந்தீ நீங்கிலென்வருணன்வளியகன்றிடிலென்னீள்கதிர்மதிமறைந்திடி லென், ஆங்கவருருவமனைத்தும்யானுகியளிக்குவல்வெருவனீரென் ன,வீங்குநீர்வேலியுலகெலாம்புரக்கும்வேந்தர்கோன்விடைகொடுத்த னனல். (28)

வெண்ணிலாக்கற்றைறவினிம்புவிட்டெறிந்துவிளங்குபூண்டுயல்வரு தடந்தோள், அண்ணலாங்ககன்றவமரர்தம்முருவமனைத்துமாயருந் தவப்பயத்தாற், கண்ணகன்ஞாலமுழுவதுந்தானேகளைகணுயளித் தனனென்னில், மண்ணருந்தவத்தினின்றுளோர்பெருமையாவரே யிசைப்பரென்றறைந்தான். (29)

நாற்பத்துமூன்ருவது திவோதானனுட்டிறப்படுத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—1255.



## நாற்பத்து நான்காவது
# காசியின் சிறப்புரைத்த அத்தியாயம்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

கொண்டல்தவழுமுகம்புலராமதிதோய்குடுமிமந்தரத்தில்
அண்டர்பெருமானடைந்ததற்பினுற்றவாறுமவ்வரையின்
தண்டாவளனுமுரைத்தியெனத்தமிழ்சேர்முனிவன்சாற்றிடலும்
புண்டோய்குருதிநெட்டிலைவேற்புத்தேள்முறுவல்பூத்துரைக்கும்.

குன்றிற்செங்கட்கருங்கேழல்கோட்டினகழ்ந்தசிறுகுழியை
மன்றற்பொலம்பூஞ்சினைவேங்கைத்தாதுதூர்க்கும்வாலுளைய
கன்றுசினவெங்கொலைமடங்கல்களிற்றின்மருப்பின்குருத்துடைத்து
மென்றுகமஞ்சூற்பிணவினொடும்பெருவான்முழையின்விழிதுயிலும்.

அறைவாய்க்குழித்தகவிழ்தலையவருவிதூங்குதடஞ்சாரல்
கறவாமுலைப்பால்கன்றருத்திக்கயவாய்மேதிகண்படுக்கும்
பிறைவார்கோட்டினிருவிழிந்துபெய்யுநறவப்பேரியாற்றின்
துறைவாய்ப்படிந்துபிடியினொடுங்களிநல்யானைதுளைந்தாடும். (3)

சேந்தழல்கட்டெழிலுளையவரிமான்கொன்றசினக்களிற்றின்
ஏந்துபிறைக்கோட்டுகுமுத்தமலங்குதுலையவெரிபுரைசெங்
காந்தண்மலர்மேற்கிடந்திமைத்தல்காமர்குலமால்வரைமடந்தை
வாய்ந்தசெழுமென்மலர்க்கரத்தால்கழங்காட்டயரும்வனப்பாமால்.

அங்கண்வானத்தினிதுறையுமமரர்குழுவுமரம்பையரும்
மங்குறவழ்பொற்குவட்டிழிந்துமன்றற்சாரற்பளிக்கறையில்
தங்கிவிளையாட்டயர்தோறும்பரிந்துநீத்த தண்மலர்ப்பூங்
கொங்குகமழுமந்தாரமாலைநறவங்கொழித்திடுமால். (5)

குறுங்காற்குரம்பைக்கொடிச்சியர்பொன்னொழுகுவட்டின்முக
டேறி, நறுந்தேன்பிலிற்றுங்கற்பகத்தினறவுகமழுமலர்கொய்வர்,
பறந்தாழ்கூந்தலரமகளிர்பொன்னந்தருவினறியமலர்
துறந்தாங்கிழிந்துபசந்தேறல்லூற்றுஞ்செழுந்தண்மலர்கொய்வார்.

வேட்டம்படரு முடங்குளைமான் புனிற்றுக் குருளை விழிதுயில
மோட்டுமுது நீர்ப்பஃறலைய வருவி தூங்குமுகி றவழ்பொற்
கோட்டிற்றெருடுத் தவிரு லுமுயிர் குளிர்மாமதியுமினி துணர்வான்
காட்டுகென்னக் குறமகளிர் தத்தங்கணவர்க்கை தொழுவார். (7)

சோலைக்கழைக்கண் டிறந்துகுத்தசுடர்நித்திலமு நெடுஞ்சுடிகை
ஆலக்கொடுந்தீயொழுகுதுளையெயிற்றரவின் பணுமணியுங்
கோலச்செங்கட்கரும்போத்தின் கோட்டுமுத்தும் வான்றிநுரை
மாலைப்பெருக்காயிரமுகத்தவருவி கொழிக்குமருங்கெல்லாம். (8)

ஈனைப்பூவேங்கை தொடுத்தவிரல்சிதையப்புனிற்றுப்பிறைக்கொழுந்
தின், பனிக்கோடுழக்கவிழுந்தருவிப்பசுந்தேன்குதிப்பவெருக்கொ
ண்டு, கனற்கண்சுழற்றும்பகட்டாளிப்பிணவுகுருளைவாய்கவ்விச்,
சினைக்கட்குவளைக்கண்பரப்புந்துறுகன்முழையினொளித்திடுமால்.

கலைவெண்டிங்களிருநிதியங்கணைக்காற்கமலத்திருமடந்தை
மலர்மென்சினைப்பூங்கற்பகமான்வயங்குகடவுண்மணியமிர்தம்
இலவச்செவ்வாயரமகளிர்யாவுமெறிநீர்த்திரைசுருட்டும்
புலவுக்கடலைமதித்தளித்த தென்றலிதன்சீர்புகல்வற்றே. (10)

## கலிவிருத்தம்

திருந்துபைங்கொடிக்கவண்முத்தஞ்சேர்த்திமென்
கருந்தினைப்பசுங்கிளிகடியுமங்கையர்
மருந்துறழ்நகைமுழுநிலவென்றும்பல்மெல்
அரும்பினஞ்சுனைதொறுமலர்ந்துகாட்டுமால். (11)

மடிசெவிநெட்டுடற்றறுகண்வாரணம்
படர்சினைக்கற்பகத்தொடித்தபைந்தழை
துடியடிக்கயமுனியோடுஞ்சூலிளம்
பிடியினமருந்துறப்பெட்பினல்குமால். (12)

மைத்திருநேர்ந்துவான்முழையின்வாளராப்
பைத்தலைகிடந்தொளிர்மணியைப்பைப்பைய
கைத்தலத்தேந்தலுங்கனலென்றஞ்சியே
துய்த்தலைச்செம்முகமந்திசோருமால். (13)

களிக்கயல்மருட்டியகருங்கண்மங்கையர்
பளிக்கறைமுன்றிலினுணங்கும்பைந்தினை
கிளிக்கவராதுரைகிளக்குமோதையால்
தளிர்த்திடுமுளிசினைத்தருக்கள்யாவுமே. (14)

அகின்முருடுருட்டிவீழருவிச்சாரலின்
முகிலினந்தவழ்தலுமுரிவேழமென்
றிகலொடுந்துடர்ந்துசென்றேந்துகோட்டுவெம்
புகர்முகக்களிற்றினம்போரினேற்குமால். (15)

குளிகரைச்சுற்றியகுறமடந்தையர்
இளமுலைச்சாந்திடையிழுகியேறிய
தளர்நடைக்குழவியந்தென்றல்தாழ்சினைத்
துளிமதுக்கற்பகக்காவிற்றுஞ்சுமால். (16)

பூங்கழைமிடறுசாய்ந்தாற்றல்பொற்புடை
ஓங்குயர்சாரலினுறையுங்கின்னரர்
நீங்கருங்காதலினீணரம்புளர்
தூங்கிசைவீணையஞ்சுருதிபோன்றதே. (17)

ஒருபுடைவெண்முகிலுறையவான்றுளிக்
கருமுகிலொருபுடைகிடக்குங்காட்சியால்
மரகதக்கொடியினைவாமம்வைத்தொளிர்
புரிசடைவானவன்போலும்பொற்பிற்றே. (18)

நீனிறமுகிறவழ்சாரனெற்றியின்
மானிளம்புனிற்றுமென்மறிகள்வைகிய
பானிறக்கதிர்விரிபளிக்குப்பாறைகள்
ஆங்கிலாமதிபலதோன்றல்போலுமால். (19)

முகிறவழ்சாரலின்முத்தந்தெள்ளிநீ
டகில்சுமந்ததிரிசையருவிபாய்வன
இகலுடையிராவணற்கிடைந்ததென்னெனத்
திகழொளிக்கயிலையைச்சிரித்தல்போலுமால். (20)

தாழ்வரைக்கிடந்தொளிதயங்குபன்மணி
சூழ்சுடர்விண்ணின்மேற்றோன்றுபொற்பினால்
வீழ்கதிரோவியம்விசும்பிற்பூத்ததென்
றியாழ்மொழியரம்பையர்வியந்துரைப்பரால். (21)

இரவிகாந்தத்தழலிடையினண்பகல்
மருவியுமொளிர்மதிகாந்தவான்றிரைக்
குரைபுனல்கங்குலிற்குளித்துநிற்றலாற்
பொருவருமருந்தவம்புரிதல்போன்றதே. (22)

பாய்திரையருவிகண்படுக்குஞ்சாரலிற்
சேயொளிவிரிகதிர்ச்செல்வன்சேறலால்
மீயுயர்குடச்சுனைமலர்கள்மேற்புறத்
தாய்கதிர்க்கரங்களாலலர்த்துகாட்டுமால். (23)

குடவரைநெற்றியிற்குருதிவெய்யவன்
படுதலுமுதயமால்வரையிற்பாயொளிச்
சுடர்மதிவரவிடைத்தோன்றுபொற்பினாற்
புடைமணிவிசித்தமால்களிறுபோலுமால். (24)

சினைமலர்க்கோட்டிடைத்தொடுத்ததேனிறால்
வினைபுரிவயிரவாட்புனிதன்மேற்செலக்
கனைதிரையருவிசூழ்விலங்கல்காவலன்
புனைதருகேடகமிருத்தல்போன்றதே. (25)

இனையமால்வரைதனிலிருவிசும்புறை
கனைகதிர்ப்பூங்கழலமரர்கைதொழத்
தனிமுதலுறைந்துநீர்த்தடங்கொள்காசியை
நினைதலுமுறுதுயர்நிகழ்த்தலாவதே. (26)

காசியைப்பிரிதலாற்கனற்றும்வெம்மையாற்
பூசியசாந்தமேற்பொரிந்ததன்றுகொல்
மாசறுமிளமதிக்கண்ணிவார்சடை
ஈசன்மேல்நீறெனவின்னுஞ்சேர்வதே. (27)

கரைபொருகங்கைசூழ்காசிமாநகர்ப்
பிரிவெனுமழல்சுடப்பெய்தசேயிதழ்
மருமலர்த்தாமரைவலையெம்பிரான்
அரவெனநினைதலாலரவமாயதே. (28)

நீற்றொளிமேனியன்காசிநீங்கிய
மாற்றருந்துயர்க்கனல்மாற்றற்கன்றுகொல்
ஊற்றிளந்திங்களைக்கிளருந்தெண்டிரை
ஆற்றினைச்சடையிலின்றளவும்வைத்ததே. (29)

எரியுருவாகியவெந்தைதமேனியும்
உருகிநெஞ்சழிவுறவுடன்றுசுட்டதால்
விரிபுனற்காசியைவிடுப்பின்யாவரே
பிரிவெனுந்தழலிடைப்பிழைக்கவல்லரே. (30)

ஊழிவெங்கனலினையொளித்திடுந்திரை
யாழ்கடல்விடத்தினைத்தரித்தவண்ணலும்
வீழ்புனற்காசியைவிடுத்தவாற்றினால்
ஆழ்துயர்க்கனலையென்றரித்திடாததே. (31)

மலர்தலைபுலகுளோர்மருட்சிநீக்கிய
தலைவனுங்காசியைத்தணந்தவாற்றினால்
நிலைபெறுநெஞ்சகமருண்டுநின்றனன்
அலர்பசுந்தெரியலையரவமென்னவே. (32)

மறைபயில்தக்கனன்மகளைத்தீர்துயர்
பெறலரும்வரைமகட்பெற்றுநீங்கினேன்
அறைபுனற்காசியையகன்றவெந்துயர்
உறையுமங்கைகரலதொழிக்குமோவெனும். (33)

இன்னலுற்றயர்வுறுங்காசிகாசியென்
றுன்னுமக்காசியினுலவுதென்றல்வந்
தென்னுடைமேனியிலிழுகியேகுமேல்
மன்னுயிர்தழைத்திடுமென்றுமாழ்குமால். (34)

விருப்பொடுவெறுப்பிலாவிமலர்சிந்தையுந்
திருப்பதிங்கென்னையென்றிமயப்பூங்கொடி
திருப்பவளக்கனிமலரச்சேண்டொடு
பொருப்புவிலந்தணன்புகறல்மேயினான். (35)

காசியைப்பிரிந்தவெந்துயரங்காழ்கொள
மாசறுமதிநுதல்வருந்தினேனென
ஈசனுங்குரைத்தலுங்காசிகாசியென்
றூசலாடினள்வரைமகளுமுள்ளமே. (36)

கவிழ்குலைகெட்டிலைக்கதலிக்காட்டிடைத்
தவழ்குடவயிற்றசூற்சங்கமீன்றமுத்
தவளொளிபரப்பியவந்தண்காசியின்
உவகையினுறைவதற்குநற்றென்றோதினாள். (37)

தாரணிதொழுந்திவோதானன்றண்கடற்
பார்முழுதளிக்கெனப்பணித்தஞான்றவன்
சீர்கெழுமமரர்பாற்சேரொணாதென
ஓர்வரங்கேட்டனனுவந்துநல்கினேம். (38)

அன்றுதொட்டின்றளவவனியாவையும்
மன்றநல்லறநெறிவழாமலோம்பினான்
பொன்றுறுதவறவன்புரியினல்லதை
ஒன்றுமேயாசியவொழிக்கும்வண்ணமே. (39)

என்றுயர்மால்வரையினிதினீன்றருள்
பொன்றவழிளமுலைக்கோதிப்பூங்குழல்
ஒன்றியயோகினிச்சக்கரத்துடன்
கொன்றையம்புரிசடைக்குழகன்கூறுவான். (40)

அறந்திறம்பாதுலகளிக்குமன்னவன்
சிறந்தநன்மனுநெறிதிறம்பிக்காசியைத்
துறந்திடவியற்றுமிதென்னத்தொக்கவர்
கறங்குநீர்க்கங்கைசூழ்காசிமேயபதினார். (41)

## நாற்பத்து நான்காவது காசியின் சிறப்புரைத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—1296.

## நாற்பத்து ஐந்தாவது
## யோகினிகள் காசியையடைந்த அத்தியாயம்.

கலிவிருத்தம்.

கன்னியெயில்சூழும்வளர்காசியைவியப்புற்
றுன்னலருமாயைபுரியோகினிகள்யாரும்
முன்னையுருமாறியுயர்மோகம்விளைவிக்கும்
மன்னுபலநல்லுருவுகொண்டினிதுவந்தார். (1)

விண்ணவர்தமாருயிரும்வேலொடுபிடுங்குங்
கண்வலையெறிந்திளைஞர்மேயகடைதோறும்
பண்ணெடுசெழுங்கனிபழுத்தனையவின்சொல்
வண்ணமகளாகியொருவாணுதனடந்தாள். (2)

காலனையமர்க்குவருகென்றுகடன்ஞாலத்
தோலைவிடுமைக்கணுயிரோவியநிகர்ப்பாள்
கூலமறுகிற்குமரர்கொள்கெனநறுந்தண்
மாலைபகர்மாதரிதெருத்திதனிவந்தாள். (3)

றுறத்திடுகநெற்குறிமொழிந்திடுவனின்னே
பெறற்கருமகப்பெறுவைபெட்பினுடன்முற்றுஞ்
சிறப்புடன்மயிர்த்தொகைசிலிர்த்ததெனவோதிக்
குறக்கொடியெனத்தனியொருத்திகுறுகுற்றாள். (4)

வேதியர்தமுன்னணுகிமென்மெலநடந்தே
தமறுகற்புடையரேனுமவர்நம்மேற்
காதலுறுமென்மொழிகரைந்திடுவனென்போல்
தூதியரிலென்றொருசுடர்த்தொடிபுகுந்தாள். (5)

அந்தமறுவிஞ்சையறவோரொடுபயின்றேன்
வந்தியர்மகப்பெறமருந்துளதுமக்குத்
தந்திடுவலென்றுரைகள்சாற்றிமனைதோறும்
பைந்தொடியொருத்திவிழைவோடுபடர்குற்றாள். (6)

தையலொருபாகனுறையுங்கயிலைதன்னை
ஐயமறவெள்ளிவரையாக்கினன்முனென்று
வையகமனைத்தையுமருட்டிடாதவாதஞ்
செய்யுமவளென்னவொருசேயிழைபுகுந்தாள். (7)

அங்கிபுனல்மாருதமடக்குவன்விசும்பில்
தங்கிடுவன்மீள்வனொரிமைப்பொழுதுதன்னிற்
கங்குல்பகல்செய்துகதிர்மாறிவருவிப்பன்
பைங்கொடியினீரெனவோர்பாசிழைநடந்தாள். (8)

விண்ணவர்மணத்தினைவிழைந்திடுவரென்னும்
மண்ணுலகின்வந்தவர்மணந்திடவருத்தும்
எண்ணரியவிஞ்சைகளியற்றிடுவனென்றுக்
கண்மலர்குளிர்ப்பவொருகாரிகைபுகுந்தாள். (9)

பாறுதொடர்வேலரசர்வந்துபடைவிட்டான்
மாறழியும்வண்ணநவில்விஞ்சைபலவல்லேன்
தறுநால்லாவிவைதெளிந்திலர்தமக்குக்
றுகிலனென்றொருகுலக்கொடிபுகுந்தாள். (10)

கட்புலனுறு தடல்காப்பவென்றிமைப்பின்
விட்புலமடந்தையரைமண்ணிடைவிடுப்பன்
நட்பவனுவாவன்மலையாவனெனகொய்திற்
பெட்புரைபயிற்றியொருபெண்கொடிபுகுந்தாள். (11)

எஞ்சலினிலத்திடைபுதைத்தபொருள்யாவுங்
கஞ்சமலரங்கையினமைத்தகனிபோல
அஞ்சனம்வரைந்துதெரிவிப்பனஃதென்றே
விஞ்சையெனவோதியொருமெல்லியலணைந்தாள். (12)

வள்ளைபொருகாதிடைமலர்ந்தகுவளைக்கண்
அள்ளியமதாருயிரையுண்ணுமகல்வீரன்
றுள்ளிழையுநூபுரமுமொல்லெனவொலிப்பத்
தெள்ளமிர்தமென்னவொருசேயிழைநடந்தாள். (13)

கண்டவர்வியப்பவணிநீற்றொளிகனிந்த
புண்டாநுதற்கிடைபுனைந்தினியகற்றோய்
நுண்டுகிலசைத்துமிகநோற்றுடலம்வாட்டும்
ஒண்டொடிகொலாமெனவொருத்திபுகுகின்றாள். (14)

இறந்தனநிகழ்ந்தனவெதிர்ந்திடுவதெல்லாம்
அறைந்திடுவன்யானெனவொருத்தியகன்மாடஞ்
செறிந்திடுமடந்தையர்குழற்றெரியநீந்தேன்
குறுந்துளிபிலிற்றுமுயர்கோமறுகடைந்தாள். (15)

மாதர்களில்மைந்தர்களில்வல்லவர்களுண்டேல்
சூதுபொரவம்மினெனமெல்லுரைகள்சொல்லிக்
கோதையொடுவண்டினமலம்புகுழறுழ
வீதியிடைமின்னெனவொர்மெல்லியல்புகுந்தாள். (16)

மல்லன்மறுகிற்குலமறைக்கிழவர்பாலிற்
கல்லுமுருகும்படிகனிந்தமுதுகுக்கும்
நல்லிசையமென்புரிநரம்புளரவல்ல
மெல்லியலெனுவொருவிளங்கிழைபுகுந்தாள். (17)

நீடுயர்மதிற்குடுமிநீண்மறுகுதோறும்
மாடகமுறுக்கிமணிவீணைகையினேந்தி
ஓடரியமைக்குவளைபோலுமலருண்கட்
பாடன்மகளென்னவொருபைந்தொடிபுகுந்தாள். (18)

### வஞ்சிவிருத்தம்

உருவமின்னனகொண்டுடன்
பருவமொன்றுபடுக்கவும்
மருவுகாசியின்வைகினோர்
தருமநீதிதணந்திலார். (19)

வடுக்கண்மங்கையொர்பங்கினன்
விடுத்தவேவல்வியப்பினல்
முடித்திலேமவன்முன்னர்யாம்
அடுப்பதென்னெனவஞ்சினர். (20)

அங்கண்யோகினியங்கலார்
மங்கைபாகனைவாழ்த்துறக்
கங்கைசூழ்தருகாசியில்
தங்கிமிக்கதவஞ்செய்தார். (21)

இனையரிங்ஙனமெய்தலும்
அனையர்நாமமருந்தவன்
வினவவேலாடுவிளங்கவெஞ்
சினவுவேலிறைசெப்பினன். (22)

இன்னநாமமியம்பினேர்
அன்னபூசனையாற்றினோர்
நன்மகாரொடுநாடொறும்
மன்னிவாழ்வுறவைகுவார். (23)

அரசரித்தவமாற்றிடிற்
செருவில்வெற்றிதிறம்பிலார்
உருவமைந்தரோடொன்றியே
பொருவில்வாழ்வுபொருந்துவார். (24)

## நாற்பத்தைந்தாவது
## யோகினிகள் காசியையடைந்த அத்தியாயம்
## முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—1320.

## நாற்பத்தாறுவது
## உலோதாதித்தன்கதையுரைத்த அத்தியாயம்.

கலிநிலைத்துறை.

மன்னுதீம்புனல்வளங்கெழுகாசியின்வேந்தன்
தன்னெழுக்கினைத்தவிர்கெனவிடுத்தயோகினிகள்
இன்னும்வந்திலரென்கொலென்றிறையுளத்தெண்ணி
மின்னுசெங்கதிர்க்கடவுளைநோக்கினன்விளம்பும். (1)

காசிமாநகர்க்கேகியக்கடிநகர்புரக்கும்
மாசில்மன்னவன்றன்னெறிவழுக்குறப்புரிகென்
றீசனேவலுமடிமலர்கைதொழுதேத்தித்
தேசுலாங்கதிர்ப்பரிதியஞ்செல்வனுஞ்சென்றான். (2)

அறனிழுக்குறுமன்னவன்காசியிலடைந்து
பெறலரும்பொருள்யாதெனப்பெட்பொடுமோர்ந்து
வறியரிற்றுயருழந்துயர்மணிக்கடைதோறும்
குறையிரக்குமாங்கதுபெறினெடுங்குறையும். (3)

நட்டுவன்பொருள்யாவையும்யாவருமுவந்து
கட்டுணும்படியளிக்குவமென்பதுகுறித்து
வேட்டகொள்கெனவிடுக்குமவ்விழைபொருளெவருங்
கேட்டுவாங்குநரின்மையாற்சென்னிகீழ்ப்படுக்கும். (4)

தூம்புடைப்பிறையெயிற்றவெம்பணமுடிச்சுடிகைப்
பாம்பெடுத்தகன்விஞ்சைவல்லேனெனப்பகருந்
தேம்புவாரினின்றலம்வரும்செஞ்சடைதாங்கி
மேம்படுந்தவப்பள்ளிசேர்முனிவரின்மேவும். (5)

அருள்சுரந்துயர்தருமநூன்முறைபுகன்றதனல்
வருபயன்றனைத்தெருளுறக்காட்டுநான்மறையின்
பொருடெரிந்தமெய்ஞ்ஞானியிற்புகுதரும்பொருவில்
இரதவாதியென்றியாரையுமருட்டுவானெய்தும். (6)

மறைவடித்துணாத்தழும்புறுமுனிவரின்மருவும்
பிறையெயிற்றின நிலவுகொப்புளித்திடும்பேழ்வாய்ப்
பொறியனற்பெரும்பாந்தண்மேற்கிடந்தபார்புரக்கும்
அறைகழற்கொழுங்குருதிவேலாசரினுறையும். (7)

அரும்பெறற்குலவணிகரினுவந்தினிதமரும்
விரும்புவேட்கையின்மணமகள்புதல்வரின்மேவுந்
திருந்துநான்மறைபயின்மறைச்சிறுவரிற்சேரும்
பொருந்துமில்லறந்திறம்பிஞோர்மாந்தர்போன்றிருக்கும். (8)

பைங்கறிக்கொடிபடர்நெடுஞ்சாரல்சூழ்கானில்
தங்கிநற்றவம்புரிகுநர்போன்மெனச்சாரும்
பொங்கிருட்பிழம்பெறிசுடர்விரிபகற்போதுங்
கங்குலுந்திரிந்தாற்றுநற்றவருருக்காட்டும். (9)

சேண்டொடுங்கொடிப்புரிசைசூழ்காசியிற்றிரிந்தும்
ஆண்டுமூன்றளவந்நெறிதிறம்புதல்சிறிதுங்
காண்டல்செல்கிலனுதலிற்கருதினனிருந்தான். (10)

மூவிலைச்சுடர்முாட்படையேந்தியமுதல்வன்
ஏவல்மற்றதுமுடித்திலன்காசிவிட்டினியான்
போவதெங்ஙனம்புரிசடைவானவன்முனியின்
வேவதல்லதையாவரேகாக்குநர்விளம்பின். (11)

ஒருவனேவலிற்றிரிகுனர்க்கரும்புகழுறுதால்
திருகுசீற்றவெம்புலியதளாடையஞ்செல்வன்
அருள்பெறுக்கொடும்பாவமிக்காசியினமரின்
வெருவியேகுமென்றிருந்தனன்கனகதிர்வேந்தன். (12)

சேட்டிளங்கதிரிருள்படச்செங்கதிர்பாப்பும்
மோட்டுநன்மணிமுன்னுறவிடுத்தறச்சிதர்ந்த
ஓட்டையங்கையிற்கோடலேபோலுமொண்முத்தி
வேட்டுளோருயர்காசிவிட்டயலிடம்விரும்பல். (13)

நல்லுலோலனுத்தானியற்சாம்பனற்றுருவன்
எல்லொளிக்கதிர்க்கடோற்கனேடருணனேர்விருத்தன்
புல்லுகேசவன்விமலன்வானதிநமனென்னச்
சொல்லுநாமமோர்பன்னிரண்டாயினன்சுடரோன். (14)

மதிவடிம்பிடறுங்கொடிமாடநீண்மறுகிற்
கதிர்மணிக்குலஞ்சேட்டிளம்பருதியிற்காட்டும்
அதிர்தடம்புனற்காசியினடைவதெலன்றுசை
இதயமெய்தலால்விளங்குலோதாதவனென்பார். (15)

நாற்பத்தாறுவது உலோதாதித்தன் கதையுரைத்த
அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—1335.

## நாற்பத்தேழாவது

## உத்தராதித்தன் கதையுரைத்த அத்தியாயம்.

---

### கலிநிலைத்துறை.

மிடறுவீக்குபைங்காய்க்குலைவிரிதலைக்கமுகின்
மடலுடைத்திடவாளைபாய்காசியின்வடபால்
கடவுணன்மணிதெளித்தனவாவியங்கரையின்
அடையுமுத்தராதித்தனன்கதையினையறைவாம். (1)

உலகெலாமகிழ்விரதனென்றுளனொருமறையோன்
கலபமாமயினிகர்சுபவிரதையைக்கலந்து
நிலவுமூலத்தினாள்முதற்காறனினிகரில்
இலகுபேரொழிற்சுலக்கணைதனையினிதீன்றான். (2)

குங்குமச்செழுங்கனிமெழுக்கெறிந்தமென்கோங்கில்
தங்குபூண்முலைபிறையெனவளருநாடன்னில்
வெங்கொடும்பிணிநலிதலிற்றந்தைவிண்புகுத
அங்கவன்றிருமனைவியுமழலின்வீழ்ந்தவிந்தாள். (3)

மழலைமென்மொழிமைந்தரின்மையின்மறிந்தோர்க்கு
விழுமநற்கடன்யாவையும்விதிமுறையாற்றித்
தழுவுதற்கடங்காதுயர்தடமுலைக்கோதை
ஒழுகொளிக்கதிருத்தராதபனுழையெய்தி. (4)

அலங்குதெண்டிரையாமையின்கூன்புறத்தமைந்த
நிலங்களேழினுநிகரில்சீருந்தவமாற்றுங்
கலன்சுமந்தபூங்கற்பகக்கொம்பனாடன்னை
வலஞ்செயுந்தினம்பார்க்குமோர்தகரிளமறியே. (5)

கற்றையங்குளிர்வெண்ணிலாக்கதிர்பரந்தெறிக்கும்
ஒற்றையங்குழையந்தணனுமையொடும்போந்து
பொற்றசும்புழற்முலையினாள்விழைவொடும்புரியும்
நற்றவத்தினைநோக்கினனன்றெனவியந்தான். (6)

அலங்குபேரொளியிளவெயில்வயிறுவாய்த்தன்ன
கலன்கிடக்கொளிர்கதிரிளவனமுலைக்கவுரி
துலங்குபேரெழிற்கன்னியைத்தோழியாவெனக்கின்
றிலங்குசாமரையிரட்டுவான்றருகெனவிசைத்தாள். (7)

புரியுநற்றவமொழிதிநீபுகன்றநல்வரங்கள்
விரைவினல்குவனெனவிடைப்பாகனுண்டுரைப்பத்
தருதிநல்வரமென்னிலித்தகரிளமறிக்கும்
அரியயற்கரிதாய்வரந்தருகெனவறைந்தாள். (8)

மாசில்பூண்முலைக்கவுரிதன்றோழியாய்வருகென்
றூசில்நற்றவப்பூங்கொடிக்கவ்வரமளித்துக்
காசிமன்னவன்புதல்வியாய்க்கயிலையில்வருகென்
றீசனம்மறிக்கெய்துறுநல்வரமீந்தான். (9)

இனையநல்வரமளித்துமாலயன்றெழுதேத்துங்
கனைபொலங்கழற்கடவுளுங்கயிலையினகன்றான்
வினையொழிக்குமிக்காதையைவிழைவொடுங்கேட்டோர்
றுனைவில்யாவரும்பெறலருந்துறக்கவீடடைவார். (10)

நாற்பத்தேழாவது உத்தராதித்தன் கதையுரைத்த
அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—1345.



## நாற்பத்தெட்டாவது

## சாம்பாதித்தன் கதையுரைத்த அத்தியாயம்.

---

ண்மகடன்பொறையாற்றித்திரைக்கடலினறி துயில்கூர்நெடிய மா
யன், கண்ணனெனமுழுதுலகுந்தேவகிதன்வயிற்றுதித்துக்காக்கு
நாளில், அண்ணலந்தாமரைத்தவிசினாசிருக்குமறைக்கிழவனருளி
னீன்ற, பண்ணமையாழிசைபயிலுமுனிவனுயர்துவாரகையிற்பரி
விற்போந்தான். (1)

இருள்பருகிவெயில்கான்றகடவுண்மணிகிடந்திமைக்குமிலங்குதிண்
டோள், திருமறுமார்பினன்புதல்வர்யாவருமம்முனிவனடிசென்னி
சேர்ப்ப, உருவின்மிகவேமாந்துசாம்பன்முனிவனைப்பணியாதுறை
தலோடும், புரிநரம்பினிசைபயிலுமுனிவன்மணிவண்ணனுழைப்
போயினனே. (2)

போந்தமுனிவரனுவப்பவருக்கியபாத்தியமுதலபூசைநல்கி
ஏந்தெழிலாசனமளிப்பவாங்கதனின்மலரோனினிதுவைகிக்
காந்துமணிச்சூட்டரவின்கண்பிதுங்கநடம்பயிலுங்கண்ணனோடும்
ஆய்ந்தசெழுமறைக்கிழவன்வேறிருந்தாங்கொருமாற்றமறைத
லுற்றான். (3)

தாயாயினுமவ்விழைவிற்றன்னுடனேயொருவயிற்றிற்சார்ந்தா
ரேனும், மைந்தராயினுமிகவும்வனப்புடையரெனிலவர்மேல்மடநல்
லார்தஞ்சிந்தைநடந்திடுமதனாற்சாம்பன்மலர்க்கணைவேளிற்செவ்வி
வாய்ந்தோன், பைந்தொடியாரினிதுறையுமுவளகத்திற்றனிவருதல்
பான்மையன்றே. (4)

என்றுமொழிந்தனனேகிச்சின்னாளின்மீட்டுமவணெய்திமாயக்
கன்றுகொடுகனியெறிந்தகாயாம்பூமலர்வண்ணன்கமலவாழ்க்கைப்
பொன்றவழுமுலைமாதர்பலரோடுந்தனித்துறையும்போது நோக்கிச்
சென்றெம்வரவுரைத்தியெனச்சாம்பனொடும்யாழ்முனிவன் செப்பி
னனே. (5)

சேறலருமமையத்திற்சென்றிடினம்மிறைமுனியுஞ்சென்றிசே
மேற், கூறலரும்வெகுளியொடுங்குலமனைத்தும்வைதுமுனிகொல்லு
மென்னப், பாறுதொடர்நெட்டிலைவேற்சாம்பன்மணிவண்ணனுறை
பள்ளிமுன்னர், ஆறுவில்லினளவையெனச்சேறலுமம்முனிவனு
மாண்டடைந்தானன்றே. (6)

பாண்கிடந்துதேன்பிலிற்றுமகதியாழ்முனிவரவுபார்த்தலோடும்
நாண்சுமக்கலாகாதுவளைந்ததெனமுகங்கோட்டிநகைவெண்டிங்கட்
பூண்கிடந்தமுலைமீதிற்போர்வையசைத்தலரமளிப்புறத்துநீங்கிச்
சேண்படருநுழைமின்னன்மடநல்லார்பொற்றாணஞ்சேர்ந்துநின்
றார். (7)

அண்டமுகட்டாரசிருக்குமயனெடும்பார்திருவுந்தியலர்ந்தமாயன்,
பண்டருந்தீந்தொடைமகதியாழ்முனிவவருகவெனப்பரிந்துவெண்
ணெய், உண்டகனிவாய்மலரவினிதளித்தவாசனத்திலுறைதலோ
டும், வண்டுபடுகடாயானைச்சாம்பனுந்தன்றாதையடிவழுத்திப்போ
னான். (8)

எழிலுடையோர்முகநோக்கினழன்முகத்தினிழுதென்னமாதருள்
ளங், குழையுமெனயானுரைத்தல்குறிக்கொண்டாயிலைபோலுங்குவ
வுத்திண்டோள், மழவிடையினிலைகடந்தசாம்பனைக்காண்டலும்
ளையமடவார்நெஞ்சின், விழைவுகனிந்தொழுகியபோல்வேர்வொழு
கல்காண்டியெனவிளம்பிப்போனான். (9)

மட்டுலவுபசுந்துளவோன்றனித்துறையுமமைதிதனில்வந்தவாற்றுக்
குட்டநோய்க்கடலகத்துக்குளித்தியெனச்சாம்பனுடன்கூறவன்
னோன், இட்டதழற்கொடுஞ்சாபமகன்றிடுமாறினிதருள்பூத்திடுதி
யென்ன, விட்டொளிர்பொற்கலைகழற்றுள்பணிதலுந்தன்னுளத்தி
தனை விரைவினோர்ந்தான். (10)

இழைத்திடுதீங்கனைத்துமிசையாழ்முனிவன்புணர்ப்பென்னவுளத்தி
னெண்ணிக், கழைக்கரும்புகண்ணுடைக்குந்தேறல்வழிந்தொழுகு
வயற்காசிநண்ணித், தொழத்தகுசெங்கதிரோனைவழிபடிலிந்நோ
யனைத்துந்தொலையுமென்று, தழைத்தகருணையினுரைப்பவாங்கவனு
முத்திநகர்சென்றுசார்ந்தான். (11)

மருவலராருயிர்மாந்திப்பச்சிரத்தங்கொப்புளிக்கும்வைவேற்காளை
இருள்விழுங்கிவெயிலுமிழுமிரவிபதமலர்க்கமலமிறைஞ்சலோடும்
பெருகியநோயகன்றதவன்வழிபடலாலன்றுமுதல்பிறங்கும்வெய்
யோற், கருள்புரியுங்கனைகதிர்ச்சாம்பாதித்தனெனும்பேர் வந்த
டைந்ததன்றே. (12)

பொருவறுமிக்கதையனைத்தும்விழைவினொடுகேட்டோரும்புகன்று
ளோருந், திருமருவுபெருஞ்செல்வத்தளகேசனெனவுலகிற்சிறந்து
வாழ்வர், விரிதருகூரிருள்பருகுபயிற்சியாலன்பருளமேவுகின்ற,
இருள்பருகுதருபதாதித்தனியற்சரிதைதனையியம்பல்செய்வாம்.

நாற்பத்தெட்டாவது சாம்பாதித்தன் கதையுரைத்த
அத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—1358.

## நாற்பத்தொன்பதாவது
## துருபாததித்தன் கதையுரைத்த அத்தியாயம்.

ஒக்குழவிப்பிறையலங்கலெம்மானருளாற்குந்திவயிற்
ரனுச்செல்வந்தழைத்தோங்கவைவர்பிறந்தாராங்கவர்க்குத்
ாரேனர்மனையாய்ப்பாஞ்சாலன்புதல்வியாகித்தழன்மகத்தின்
ீனர்தடங்கட்டுரோபதையுமின்னுக்கொடிபோல்வந்துதித்தாள்.

மலாசனத்திலரசிருக்குங்கடவுளோடுமுலகீன்ற
)மையாப்பறவைக்கரும்பாகனுலககலியுமிகலரசர்
மதாருயிர்வெங்களைகடியத்தருமன்முதலோர்க்குறுதுணையா
ுமையார்தடந்தோட்டேவகிதன்வயிற்றிலினிதினவதரித்தான்.

சுடுபொன்பழுக்குஞ்சுளைப்பலவின்கனிவாய்குதட்டித்துய்த்தலையக்
கடுவன்முதுகுவிளமந்திக்கருத்துங்கழனிசூழ்கிடந்த
ஒடிவில்வளங்கூர்பாஞ்சாலத்திறைவனீன்றவொண்ணுதலைக்
கொடுவெஞ்சினத்தசுழல்பன்றியைவர்விழைவிற்கொண்டனரால்,

நிலவுபொழிதண்மதிக்கவிகைநிழற்றியரசர்திறையளப்ப
உலகமுழுதும்புகழ்தருமனொருகோலோச்சிவருநாளில்
அலகில்புணர்ப்பாற்சுயோதனன்சூதாடியவனிகவர்ந்திடலும்
இலகுமவுலிதுறந்துசடைதாங்கிக்கானத்தெய்தினரால். (4)

உடும்புமுகத்தகூன்கொழுவினுழுதசாலினிடைத்தவழ்ந்து
குடக்கூன்சங்கமுத்துயிர்க்கும்வளங்கூர்காசிக்கோநகரில்
வடிக்கட்குவளைகுழைதடவுமயிலஞ்சாயற்கரும்பெறிந்த
தொடித்தோட்கனிவாய்ப்பாஞ்சாலியையவரோடுந்துன்னினளால்.(5)

வடிவேல்நெடுங்கட்பாஞ்சாலிவயங்குகதிரோன்றனைநோக்கி
ஒடியாத்தவமாண்டியற்றுதலுமுவந்தாங்கவள்துய்த்திடுமளவுங்
கடல்சூழ்கிடந்தவுலகனைத்துங்கனற்றும்பசியால்வருந்திடினும்
அடிசிலுலவாப்பொற்குழிசிமகிழ்வினோடுமளித்தனனால். (6)

அதனாற்றுருபவாதித்தனெனும்பேர்கதிரோற்காகியதிக்
கதையார்தினமுநவில்வாரவர்கனற்றும்பசியினுடல்வருந்தார்
மதினூற்கடலின்றுறைப்படிந்தோய்மயூகாதித்தன்கதையதனைப்
புதிதாயமிழ்தநுகர்வதுபோற்கேட்டியென்னப்புகன்றிடுவான். (7)

## நாற்பத்தொன்பதாவது துருபாதித்தன் கதையுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—1365.

## ஐம்பதாவது

# மயூகாதித்தன் கதையுரைத்த அத்தியாயம்.

---

### கலிவிருத்தம்.

இருள்சீத்தொளிரேழ்பரிவெங்கதிரோன்
பரிவாலுயர்பஞ்சநதிக்கரைவாய்
அருளாலொரிலிங்கமமைத்திதயந்
தெருளாலுயர்பூசனைசெய்தனனால். (1)

ஆறேறியசெஞ்சடையந்தணனை
நூறாயிரம்யாண்டோர்நொடிப்பொழுதாய்
மாறாதுயர்வான்றவமாற்றுதலும்
வீறார்கதிரெங்கும்விரிந்ததுவே. (2)

அரிதாயதவம்புரியாதவன்மேல்
விரிவெங்கதிரண்டம்விழுங்குதலால்
தருநீழலில்வானவர்தானவர்வான்
திரியாதுடல்வெந்துதிகைத்தனரால். (3)

மதிதாழ்தருசெஞ்சடைவானவன்வெங்
கதிரோன்முன்னடைந்துறுகாதலினால்
எதுநீதருகென்னவிசைப்பினுமற்
றதுநல்குவனென்னவறைந்திடலும். (4)

விடயங்களில்நெஞ்சம்விடாமலியாம்
தொடிகின்றதறிந்திலனென்மையனென்
றடைகின்றபரம்பொருளாதபனைத்
தடவந்தணன்மேனிதளிர்ப்புறவே. (5)

செய்யுந்தவம்விட்டொளிசீத்தொளிரும்
மொய்வெங்கதிர்வானவன்முன்னணுகி
மெய்யங்கையினீவவிழித்தருளால்
மையுண்டொளிர்கண்டனைவாழ்த்தினனால். (6)

விண்ணோருமகிழ்ந்துவியப்பவெனைப்
பண்ணார்மொழியோடுபழிச்சலினென்
கண்ணாகவிருத்தியெனக்கழறா
எண்ணார்புரமட்டவனேகினனால். (7)

கலிநிலைத்துறை.

இலகுபேரொளிகிளைத்தலாலெறிபுனலுடுத்த
உலகின்மேல்மயூகாதபனெனும்பெயருற்ற
தலகில்கேள்வியோயுயர்கடோற்காதபன்கதையை
நிலவுமாறுரைக்குவலதுகேளெனநிகழ்த்தும். (8)

## ஐம்பதாவது மயூகாதித்தன் கதையுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—1373.

## ஐம்பத்தொன்றுவது கடோற்காதித்தன் கதையும், கருடேசன் கதையுமுரைத்த அத்தியாயம்.

கலிநிலைத்துறை.

அருமகம்புரிந்தாற்றல்சால்தக்கனுக்கருளால்
பொருவில்பேரெழில்வினதைகத்துருவெனப்புகலும்
இருவர்நன்குலப்புதல்வியருளரியைந்தவரை
விரியுநான்மறைப்பொருடெரிகாசிபன்வேட்டான். (1)

உலைமுகம்பழுத்துடைந்தறவொழுகியபசும்பொற்
கலனணிந்தபூங்கொம்பனாரிருவருங்காவின்
இலகுநாண்மலர்கொய்தலுங்கத்துருவென்பாள்
விலகிவில்லுமிழ்பூண்முலைவிநதையோடுரைப்பாள். (2)

தேவர்கோனிவர்புரவியிங்கிறமெனத்தெரிப்பின்
ஏவனின்னுழைச்செய்குவல்யானஃதியம்பில்
காவியுங்குழையுங்கடந்தெறியும்வாட்டடங்கட்
பூவையென்னுழையேவல்நீசெய்கெனப்புகன்றாள். (3)

அண்ணல்வானவர்க்கிறைவனூரடுதிறற்புரவி
வெண்ணிறத்ததென்றனளணிவினைதேர்ந்துரைப்பப்
பண்ணுலாங்கனிமென்மொழிக்கதிர்முலைப்பாவாய்
எண்ணின்மற்றதுகரிதெனக்கத்துருவிசைத்தாள். (4)

ஈதுகாண்டுமென்றற்றைநாளில்வயினெய்தி
மாதர்வாணுதற்கத்துருவானவர்க்கிறைவன்
காதல்கூர்தருபுரவியைக்கருமைசெய்திவணீர்
போதுகென்றுதானுயிர்த்தவாளரவொடுபுகன்றாள். (5)

மரகதப்பருமணிச்சுடருடுத்தொளிர்வளைத்தோள்
தெரிவைசாற்றியவெம்மொழிசெவிப்படலோடும்
வெருவுகின்றதெம்முள்ளநீவிளம்பியதெம்மாற்
புரிவதன்றெனப்புகன்றனகறையணற்புயங்கம். (5)

ஆயகாலையிற்கத்துருவழலெழநோக்கிப்
பாயசெம்மணிச்சூட்டுவெம்பஃறலைத்துத்திக்
காய்சினத்தவாளரவெலாங்கலுழனுக்கிரையாய்ப்
போய்மறிந்திடுகென்னவெந்தீமொழிபுகன்றாள். (7)

வைதபின்சிலவாளெயிற்றரவுபாதலத்தின்
எய்தலுற்றனசிலகறுவொடுவிரைந்தேகிக்
கைதவத்தினாலொழுகுதீவிடத்தினாற்கருமை
செய்தவிண்ணவர்தலைவனூர்புரவியைச்சினவி. (8)

மன்றல்வார்குழலிருவரும்வைகறைகழிந்த
பின்றைவானிடைச்சேறலுங்கத்துருப்பிறங்கித்
துன்றுவெங்கதிர்க்குழாம்வெரீஇத்துணிவொடுங்கடோற்கம்
என்றதாற்கடோற்காதபனென்னவீற்றிருந்தான். (9)

ஆண்டுநின்றுபோமளவையினமரர்கோன்செருவில்
தூண்டுவெம்பரியெதிர்தலுநீனிறந்தோன்றக்
காண்டலோடுநீவென்றனைகத்துருநினக்கு
வேண்டுமேவல்செய்குவலெனவினதைசெப்பினளால். (10)

நெய்கனிந்திருள்விழுங்குசெங்குருதிவேனெடுங்கண்
தையலின்னுயிர்ச்சிலதியாயுறையுநாடன்னில்
ஐயநுண்ணிடைத்தேமொழிவினதைபாலடைந்து
வெய்யவண்ணலம்புள்ளரசினையனவிளம்பும். (11)

வயிறலைத்தெறிவிரிசிறைச்சூட்டுவாரணங்கூய்த்
துயிலெழுப்பியகாலையிற்பெயர்திவெஞ்சுடர்கால்
வெயிலவன்றிரைக்குடகடற்குளித்திடின்மீள்தி
அயர்தியேற்பயந்துறுதுயரொன்னெனவறைவான். (12)

மாதர்யாழிசைமருட்டுமென்மழலையந்தீஞ்சொற்
பேதைகத்துருவென்றளென்னுரைபிழைத்த
தாதலாலவட்கடிமைபூண்டழுங்கினனென்றுக்
காதல்கூர்ந்தினிதுயிர்த்தவெங்கலுழனுக்குரைத்தாள். (13)

பூவையன்னவளினிதருள்புதல்வர்பாலடைந்து
தேவரும்பெறற்கரும்பொருளாயினுந்தெரிந்தும்
ஏவல்யான்செயாதொழித்திடற்றருகுவலென்ன
ஆவியன்னவென்னன்னைபோயுரைத்தியென்றறைந்தான். (14)

கலுழனல்லுரைகேட்டலுங்கதுமெனப்போகி
இலகுவாளெயிற்றரவுகட்கியம்பலுமிமையோர்
உலகிலின்னமிர்தளித்திடல்விடுதுமென்றுரைப்ப
மலர்பெய்வார்குழல்வினதைதன்மைந்தனுக்குரைத்தாள். (15)

அகல்விசும்புறையமிழ்துகொல்கொணர்வதற்கரிய
திகலும்வெம்பசிதணிப்பதற்கருளுதியென்னத்
தகர்மருப்பினிற்றிருந்தும்வீழ்தாடிவில்வேடர்
துகிர்படுந்திரைத்தொடுகடற்கரையினிற்றெருக்கார். (16)

அனையாருயிரருந்திவெங்கனற்பசியாற்றித்
தனைவிலேகுதியவருழைச்சுருதிநூன்முனிவன்
தனைவிழுங்கலைவிழுங்கினின்மிடற்றிடைத்தழல்போற்
கனலுமற்றவன்றனையுமிழ்ந்தேகுதிகடிதின். (17)

என்றுகூறியவன்னைதனியிணையடிவணங்கிக்
குன்றம்யாவையுஞ்சிறைதருவளியிடைக்கொட்ப
மன்றநீடுயர்பொன்வரைவான்சிறைபரப்பிச்
சென்றதாமெனச்சென்றனனெறுழ்வலிக்கலுழன். (18)

விரித்தவாயினைவிண்டொடர்வரைமுழையென்ன
உருத்தவெஞ்சினவேடராங்கொருங்கடைந்திடலுங்
கருத்தினான்மறைகிடந்தவன்புகுதலுங்கனற்ற
அருத்தியோடவன்றனையுமிழ்ந்தெயினரையயின்றான். (19)

ஏழ்தடங்கிரியேழ்கடலேழ்நிலவரைப்பும்
பாழியஞ்சிறைக்காற்றினிற்பருவரலெய்த
ஊழிவெங்கனல்சிறையொடும்புகுந்ததென்றமரர்
மாழ்கிநெஞ்சழிந்தலம்வரவானகத்தடைந்தான். (20)

அடைந்தவான்சிறைக்கலுழனையடர்த்துமென்றெண்ணி
மிடைந்தவானவர்சூழ்வரவிண்ணவர்க்கிறைவன்
தொடர்ந்துவண்டினம்படுகவுள்சூழிமாமுகத்த
கடங்கொள்சீற்றவெங்கனல்விழிக்களிற்றின்மேற்போந்தான். (21)

விண்ணவர்க்கிறைநடவியவெஞ்சினக்கடாத்த
அண்ணலங்கரிமுதலியவூர்தியவனைத்தும்
உண்ணடுங்கிமெய்பதைபதைத்தொழிந்திடக்கலுழன்
கண்ணகன்சிறைக்காற்றினாற்களத்திடைக்கவிழ்ந்த. (22)

ஈறில்வானவர்நடவியவூர்திகள்யாவுஞ்
கூறைநீள்வளிப்பட்டமென்சருகெனச்சுழன்று
வேறுவேறுபோய்விழுதலும்விரிசிறைக்கலுழன்
ஊறுதீஞ்சுவைத்தெள்ளமிர்துறையுளினாற்றான். (23)

தணிவருஞ்சினத்தழல்விழித்தாழ்சிறைக்கலுழன்
நுணுகுமெல்லணுப்புகுதினுநூறுநூறாகத்
துணிசெயும்படிசுழல்வரமயன்முனமமைத்த
மணிநெடுஞ்சுடராழியைநோக்கினன்மருண்டான். (24)

அருந்துமாறமிர்தெடுத்திடற்கடைந்தனனல்லன்
பொருந்துகற்புடைமகளிரைப்பொருவில்தந்தையினை
வருந்தியீன்றநல்லன்னையைமகிழ்ந்தினிதளிப்பான்
புரிந்தபாவமும்பூத்திடாதீதெனவெண்ணி. (25)

புனிற்றுவெண்பிறைக்கண்ணியன்பூங்கழலன்றி
மனத்தின்மற்றொருகடவுளைவழிபடனெய்தின்
நினைப்பதற்கருமுருவொடுநிகழ்ந்திடல்வேண்டும்
எனக்கருத்திடையெண்ணலுமவ்வுருவியைந்தான். (26)

அணுவுமால்வரைபோன்மெனுநண்ணுருவதனாற்
பணிசெய்நேமியுட்புகுந்தியந்திரப்பொறிபறித்துத்
தணிவருஞ்சுவைத்தெள்ளமுதட்டியதசும்பைத்
துணிவொடுங்கவர்ந்தேகினன்வானவர்துயர. (27)

அவிரொளிப்பசும்பொன்னிலத்தமரர்கள்யாருந்
துவர்படுந்திரைப்பாற்கடலமளியிற்றுயில்வோன்
குவலையம்பொதிகுரைகழற்செய்யதாமரையை
உவகையிற்றொழுதடிகள்கேட்டருள்கவென்றுரைப்பார். (28)

இமிழ்தடங்கடல்கடைந்துநீயெமக்குமுன்னீந்த
அமிழ்தியாவையுங்கவர்ந்தனனெம்மையுமடர்த்தான்
கமலைகேள்வவென்றுரைத்தலுங்கைம்மலர்கவியா
உமிழ்செழுங்கதிராழியோனஞ்சலென்றுரைத்தான். (29)

அலகில்சூட்சியால்வெல்குவதன்றிமற்றவனை
விலகிவில்லுமிழ்படையினால்வெலற்கரிதென்ன
உலகெலாம்வயிற்றொருபுடைகிடத்தியவுரவோன்
கலுழன்முன்னர்வந்தெய்திமற்றினையனகழறும். (30)

வயிரவாட்படையுழவனைவென்றுவாளமரிற்
செயிரிலின்னமுதெடுத்தனைபோகியதிறலாற்
பயில்கொடுஞ்சிறைக்கலுழயாமுவந்தனம்பகர்தி
இயையுமோர்வரந்தருதுமென்றிசைத்தனனெடியோன். (31)

மருவுயிர்த்தபூந்துளவினோய்வரமிரண்டுனக்குத்
தருவனீதால்வேண்டுவதென்னெனச்சாற்றுந்
திருகுசீற்றவெங்கலுழனைச்செங்கண்மானோக்கி
விரைவினவ்வரந்தருகெனவியப்பொடுமுரைத்தான். (32)

கேட்டநல்வரமளிப்பல்யான்கிளத்தெனவென்னைத்
தோட்டடத்தினிற்சுமப்பதோர்வரமமிழ்தாவிற்
கூட்டிடாதவையொழிப்பதோர்வரமெனமுகுந்தன்
வேட்டிரத்தலுமளித்தனன்வெஞ்சினக்கலுழன். (33)

மாயவன்கொளவரமிரண்டினிதினின்வழங்கிக்
காய்சினத்தவாளராவொடுங்கத்துருவுவப்பத்
தூயதீஞ்சுவையமிழ்தினைத்துனைவினிற்கொடுபோய்த்
தாயின்வெஞ்சிறைவிடுத்தனன்றடஞ்சிறைக்கலுழன். (34)

இனியதெள்ளமுதாவினமுணத்தருகெனலும்
புனிதமுள்ளவர்க்கல்லதுபொருந்துறாதென்னத்
துனைவில்வாளராத்தூயநீராடுவானகல
அனையபொற்குடந்தருப்பைமேல்வைத்தனனகன்றான். (35)

அண்ணலஞ்சிறைப்புள்ளரசேகலுமமுதைத்
தண்ணந்தாமரைத்தாக்கணங்கிளமுலைச்சாந்தம்
மண்ணுநீள்புயத்தண்ணறன்கையினொல்வவ்வி
விண்ணவற்கிறைமகிழ்ந்திடவிரைவினிலளித்தான். (36)

ரியமேனியன்செய்யதாமரைத்தடங்கண்ணன்
விரைவினின்னமிர்தெடுத்துவிண்போகியதுணரா
ரவம்யாவையுமவ்வழியடைந்துதெள்ளமிர்தம்
ருகநேடலுங்காண்கலாதாருயிர்பதைத்த. (37)

உருத்துநெஞ்சழன்றுண்ணுமின்சுவையமுதிருந்த
தருப்பைபன்முறைநக்கலாற்றழல்விழிப்பாம்பின்
விரித்தநாக்கடைபிளந்திரண்டாயினவினைதை
அருத்திகூர்ந்துபுள்ளரசொடுங்காசியினடைந்தாள். (38)

அடைந்துநற்கடோற்காதபன்றனைவழிபடலால்
மடந்தைநாமம்வெங்கதிரவற்காயதுவலத்தாற்
படங்கொள்சேடனைப்பறித்துமேலணிந்தவெங்கலுழன்
துடர்ந்தவன்பினுவிலிங்கமொன்றமைத்தடிதொழுதான். (39)

கலுழனுற்றியகாமருதவத்தினைவியந்து
நிலவுதூங்கிளம்பிறையணிநீள்சடைக்கடவுள்
அலகில்நல்வரமளித்துநம்மடியரிற்சிறந்தோன்
உலகுபூத்தசெந்தாமரையுந்தியங்கடவுள். (40)

ஆங்கவற்குநீயூர்தியாயடைதியென்றறைந்து
நீங்கினல்வரமுவந்தனனுஞ்செல்கெனக்கலுழன்
வீங்கினன்றடம்புயமுளங்குளிர்ப்புறவிழிநீர்
தூங்கமெய்ம்மயிர்சிலிர்ப்புறத்தொழுதிவைசொல்வான். (41)

ஐயநின்னுடையடியர்தம்மடியர்பூங்கமலச்
செய்யசேவடிசென்னியிற்சூட்டுதலடியற்
கெய்திநின்றதோர்கடனெனவிருகரங்கூப்பி
மையில்பாற்கடற்றுயின்றவன்மருங்குசென்றடைந்தான். (42)

## ஐம்பத்தொன்றுவது கடோற்காதபன் கதையுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—1415.

குறிப்பு:- ஆதீனக் காகிதப்பிரதியில் 49-50வது அத்தியாயங்கள் 49 என ஒன்றுகச் சேர்க்கப்பட்டுளது. செய்யுள் தொகை $(7+8)=15$. அச்சிட்ட பிரதியில் தனித்தனி அத்தியாயமாக வைத்துக் கணக்கிடப் பட்டுளது. பின்பு 'ஐம்பத்திரண்டாவது' என இரண்டு அத்தியாயங்கள் அச்சிடப்பட்டுள. (A அருணைசித்தர்முதலாதித்தர் கதையுரைத்த அத்தியாயம், B பிரமாவேள்விசெய்த அத்தியாயம்) தனித் தனி கணக்கிட்டால் நூறு அத்தியாயங்கள் என்பது 101 அத்தியாயம் என ஆகும்: ஆதலின் A B என ஐம்பத்திரண்டாவது அத்தியாயம் இங்கே குறிப்பிடப்பட்டுள்ளது.

# ஐம்பத்திரண்டாவது

# A

# அருணாதித்தன்முதலாதித்தர்கதையுரைத்த அத்தியாயம்.

---

கலிநிலைத்துறை.

கல்லெனார்ப்புடைக்கருங்கடல்குடங்கையிற்கவரா
வில்வலன்றனைச்சினவியவிருந்தவமுனிவ
மல்குசீரருணதபன்கதையினைவகுத்துச்
சொல்வல்கேளெனக்குருதிவேற்பண்ணவன்சொல்லும். (1)

காமர்பேரெழிற்கத்துருகாசிபனருளால்
நாமமைந்தரோர்நூற்றுவர்ப்பயந்தனணலங்கொள்
வாமமேகலைவினதையுமம்முனிவரத்தால்
ஏமநல்லெழிற்புதல்வரோர்மூவரையீன்றாள். (2)

அறையுமக்களோர்மூவரிற்கூகைமூத்ததனாற்
பறைவேந்தெனவைத்தலும்பறவைகள்குழீஇ
உறவாற்றலாலுறுபகற்கண்டெரிவிலதால்
இறைமைபூண்பதுதகாதிதற்கெனவிலக்கினவே. (3)

முன்னளித்தகூகையையிழந்தனமுனிவால்
ன்னுமாயிரம்வருடமுஞ்செல்லுமுன்வலிதிற்
பின்னளித்ததன்முட்டையையுடைத்தனள்பிறங்கித்
ன்னுமென்குறங்கொழிந்திடத்தோன்றினனருணன். (4)

ற்றமீக்கொளவருணனுங்கன்னையைச்சினவி
ாற்றவட்குநீசிலதியாய்வைகெனச்சாபம்
ற்றல்தீர்குவதென்றெனமற்றையிம்முட்டை
தாற்றுமைந்தனின்றுயரொழித்திடுமெனச்சொன்னான். (5)

இனையகூறிநற்காசியின்விரைவினிலெய்திக்
கனகதிர்ச்சுடர்ப்பழிச்சலுங்கதிரவன்றேன்றி
எனதுதேர்விடும்பாகனீயாருதியென்ன
அனையவாற்றினுலாதவற்கவன்பெயரறைந்தார். (6)

அருணவெங்கதிர்க்கதையினைத்தெருளுறவறைந்தேதங்
கருணையால்விருத்தாதபன்கதையினைக்கேளென்
றுருவவாணகைக்குறமகள்முலைமுகடுழக்குந்
தெரியல்தாழ்புயன்குறுமுனிக்கினையனசெப்பும். (7)

கன்னியம்பெடைவண்டொடுஞிமிறுகண்படுக்கும்
புன்னையம்பொழில்சூழ்தருகாசியிற்பொருவில்
பன்னுகேள்வியினன்மறைக்கடலிடைப்படிந்தோன்
மன்னுகாமமும்விருத்தனென்றுளனொருமறையோன். (8)

தமரவெண்டிரைக்கங்கையந்தடங்கரைதன்னிற்
குமரிவண்டினங்கூட்டுணுங்கமலநாயகனை
அமரநெஞ்சகத்திருத்திமெய்த்தவம்புரிந்ததனல்
திமிரமேய்ந்தொளிர்செங்கதிர்ச்செல்வன்வந்தடைந்தான். (9)

தாளதாமரைநாயகன்றுளிணைவணங்கிக்
காளையம்பருவந்தருகென்றலுங்கடிதின்
வேளினல்லுருவளித்தனன்வியந்தவன்றெழலால்
நாளுநல்விருத்தாதபனெனப்பெயர்நவின்றூர். (10)

ஆசில்நல்விருத்தாதபன்கதையினையறைந்தேதங்
கேசவாதபன்கதையினைக்கிளக்குவலென்னத்
தேசுபூத்தொளிர்செந்தமிழ்முனிவரன்கேட்ப
வாசவன்சிறைவிடுத்தவேற்பண்ணவன்வழங்கும். (11)

காம்பினுனிரைகுவித்தசெந்தாமரைக்கண்ணன்
பூம்புனற்றிரைக்கங்கைசூழ்காசியிற்போந்து
கூம்புகையினன்குழைந்திடுமனத்தினனுகி
ஏம்பல்மீக்கொளப்பழிச்சிமெய்த்தவம்புரிந்திருந்தான். (12)

சவுயர்த்தவன்சேவடிசிந்தைசெய்திருந்த
வைமேனியனருந்தவம்பொலிவொடுநோக்கி
ரவுமேழ்பரிநிறுவிவான்செலவயர்பருதி
விலன்பொடுமிருநிலத்தவனுழையுற்றான். (13)

பூலமுண்டமைக்கண்டனையகத்தினுளிருத்திச்
ரலமெய்த்தவம்புரிந்திடுதாமரைக்கண்ணன்
ல்லைநோக்கிவந்திறைஞ்சியவிரவியைக்காணா
நாலநீடிருள்சீப்பவனடைந்ததென்னென்றான். (14)

புலகிலாமுதுமறைபயிலந்தணனோடும்
லகம்யாவையும்பூத்தருளுந்தியங்கடவுள்
இலகுபேரொளிப்பிரமநீநினக்கெவரிறைவர்
புலனவித்தருந்தவமெவன்புரிகுவதென்றான். (15)

டலகினீடிருள்யாவையுமொழிக்குநின்மேனி
துலகில்பேரொளியகத்திருளகன்றிலைபோலும்
மலர்செழுங்கதிர்வானவமாய்ந்துமாய்ந்துதிக்கும்
நிலையில்யாக்கையெம்பிரமமென்றெங்ஙனநினைந்தாய். (16)

அண்டம்யாவையும்படைத்தளித்தாங்கவைதுடைக்கும்
பண்டைநான்மறைமுடிவுறைபசுபதியவன்றன்
தொண்டர்நாமெலாமவனடிதொழுதவரன்றோ
உண்டபேதைமையொழிந்துயர்பவக்கடலுறாதார். (17)

பொருவருஞ்சிவபூசனைபுரிந்துளோர்தாளின்
மருவுநுண்டுகள்வளியினால்வந்துமேற்படினும்
வெருவும்வெவ்வினையவன்பெயர்விளம்பினானன்றோ
கருவடைந்துபோந்தன்னையர்கதிர்முலையுணாதார். (18)

ஆதலாலிவணிலிங்கமொன்றமைத்துயான்பாற்
போதுதூய்வழிபடுகெனமாதவன்புகலக்
காதல்கூர்ந்துவெங்கதிரவனிலிங்கமொன்றமைத்துத்
தாதுலாநறுந்தண்மலர்தூய்வணங்கினனால். (19)

கேசவன்புகன்றிடுதலாற்கேசவாதபனென்
றாசில்நாமமொன்றடைந்ததக்கதிரவன்றன்னை
வாசநாண்மதுமலர்கடூய்த்தினம்வழுத்திடுவோர்
பேசருங்கொடுவினையகன்றுயர்கதிபெறுவார். (20)

இன்னவாறுரைகேசவாதபன்கதையிசைத்தேம்
பன்னுசீர்விமலாதவன்கதையினிப்பகர்வேம்
முன்னருந்தவமாற்றியமுனிவகேளென்ன
மின்னுநக்கவேற்புங்கவன்றெருளுறவிளம்பும். (21)

விமலனென்றுளனொருவன்மற்றவன்முனம்விளைந்து
தமனியச்சுளைபழுத்தமென்குடக்கனிதகர்ந்தாங்
குமிழ்நறைப்பசுந்தேறல்வான்றிரையலைத்தொழுகுங்
கமழுறுந்துறைக்கங்கைசூழ்காசியினடைந்தான். (22)

கொய்யுளைப்பசும்புரவியூரிரவிமெய்குளிர்ப்பச்
செய்யநாண்மலர்தூய்வழிபடுதலுஞ்செங்கேழ்
வெய்யவன்றொழுதேத்தியவிமலன்முன்றோன்றி
உய்யுமாறுநீவேண்டியகேளெனவுரைத்தான். (23)

விட்டிலங்கொளிவெங்கதிர்ச்செல்வவெம்மரபிற்
குட்டநோயுறுதருளெனவிரத்தலுங்குழைந்து
மட்டுலாஞ்செழுந்தாமரைநாயகன்வழங்க
முட்டில்செல்வமோடேகினன்முழுதுணர்விமலன். (24)

விமலனேத்தலினுயர்விமலாதபனெனும்பேர்
திமிரமேய்கதிர்ச்செல்வனுக்கியைந்ததென்றுரைப்ப
அமலமேயகங்காதபன்கதையறைகெனவேற்
குமரன்மாதவக்கிழமைசால்முனியொடுங்கூறும். (25)

நெய்யுறைத்துவாய்காய்ந்தவெங்குருதிநெட்டிலைய
செய்யவேலுடைப்பகீரதன்சிறந்தவானதியை
வையகத்திடைக்கொணரவன்றேத்துவான்வந்த
வெய்யவன்றனக்கப்பெயர்மிகவிளம்பினரால். (26)

ஈதுசொற்றனம்யமாதபன்கதையினியிசைப்பேம்
மாதவத்துறைபோகியபழமறைக்கிழவ
காதன்மீக்கொளக்கேண்மதியென்றுபூங்கடப்பந்
தாதுமொய்த்தபூந்தெரியல்சூழ்தடம்புயன்சாற்றும். (27)

தெறுசினத்தவெங்கூற்றமோர்செஞ்சுடர்க்கதிரை
அறைபுனற்றிரைக்கங்கைசூழ்காசியினமைத்துப்
பெறலருந்தவம்புரிந்துவேண்டியவரம்பெறலான்
மறைதுதித்திடும்யமாதபனெனப்பெயர்வகுத்தார். (28)

இன்னவாறுபன்னிருசுடர்க்காதையுமிசைத்தேதம்
மன்னுமிக்கதையுரைத்துளோர்மகிழ்வுறக்கேட்டோர்
பன்னகத்தின்வெம்பஃறலைப்பணாடவிகவிப்பப்
பொன்னிறைப்பசுங்கற்பகநீழலிற்பொலிவார். (29)

**ஐம்பத்திரண்டாவது A-அருணாதித்தன்முதலாதித்தர் கதையுரைத்த அத்தியாயம் முற்றிற்று.**

ஆகத்திருவிருத்தம்—A – 1444.

## ஐம்பத்திரண்டாவது
## B
## பிரமாவேள்விசெய்த அத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

பவளத்தாற்றுக்குலைக்கமுகம்படப்பைதோறுமீற்றுளைந்து
தவளமுதுசூற்குடவயிற்றுப்பணிலமுழங்குங்காசிதனிற்
குவளைநெடுங்கட்செங்கனிவாய்மகளிர்பலரைக்கூறிருள்சீய்த்
தவிர்செங்கதிரைவிடுத்தனமீங்கன்னாரின்னுமடைந்திலரால். (1)

இன்னுமெவரைவிடுப்பதெனவெண்ணியெண்ணிநிவந்தோங்கு
பொன்னங்குடுமிவரைகுழைத்துப்புரமூன்றெரித்தபுரிசடையோன்
கன்னித்துளவோன்றிருவுந்திக்கடவுட்கமலமினிதுயிர்த்த
பன்னுமறைநான்முகத்தொருவன்றன்னைநோக்கிப்பகர்ந்திடுவான்.

புள்ளுஞ்சுரும்புங்கலித்தமலர்ப்பொதும்பர்தோறும்பூங்கமுகின்
வெள்ளிப்பாளைமடல்பொதிந்தமிடறுதிறந்துதேன்குதிப்பத்
துள்ளிக்கயல்பாய்ந்துழக்குமகன்பணைசூழ்காசித்தொன்னகர்விட்
டுள்ளத்துயரமீதூரவெவ்வாறிங்கணுறைகுவமால். (3)

வேந்துவிழுங்கிவாய்சிவந்தவெள்வேலோடுமுழுதுலகும்
ஏந்துதடந்தோட்டிவோதாதன்செங்கோல்கோடவியற்றுகென
வாய்ந்தவுவகைமீதூரமங்கைபாகன்கழல்பணிந்த
பூந்தண்கமலப்பொகுட்டுறையும்புத்தேள்காசிநகரடைந்தான். (4)

அரியமறைதேர்நரைக்குடுமியந்தணாளனிவனெனுமோர், உருவுதாங்கி
யுலைமுகத்தினெழுகுபசும்பொற்கலன்கிடந்து, பருதிகோடியெழுந்த
பெரும்பான்மைபோலக்கதிரெறிக்கும், வரைகொண்மார்பிற்றிவோ
தாதனென்போனிருக்கைமருங்கடைந்தான். (5)

முரசுமுழங்குகடைத்தலைவாய்முன்றிற்புறத்திவிடுதிறைகொண்
டரசுகிடந்துழூச்செறியுமம்பொற்கோயில்மருங்கெய்திப்
புரசையானைமன்னவன்பாற்போகியுலகமுழுதீன்ற
வரைசெய்கமலப்பொகுட்டுறையும்புத்தேளரசுவிளம்பினனால். (6)

கழிந்தமூப்பினரைக்குடுமிமறையோன்றன்னைக்கண்ணுறலும்,
எழுந்துதொழுதாசனம்வழங்கியெந்நாடெவ்வூரெப்பேரென், றழுந்
துமன்பினுடனரசனினிதுவினவுமனைத்தினையும். மொழிந்துவிதியிற்
புரவிமகமுடிப்பான்புகுந்தேனெனவுரைத்தான். (7)

புலவுசீவாப்புதுப்போர்வையந்தணாளன்மகிழ்பூப்பக்
கலினவயவெம்புரவிமகங்கடிதினீரைந்தாற்றுவித்தான்
அலகினிதியமிடுதிறைகொண்டரசுவழங்குநெடுமுன்றில்
உலகமேத்துந்தனித்திகிரியுரவோனரசர்பெருமானே. (8)

கடவுட்கமலவட்டவணைக்கடவுள்புரவிமகமீரைந், தடைவினாற்
றியுருத்திரப்பேர்மடுவினாடியதன்கரையில், ஒடிவில்பிரமேச்சுர
னெனுமோரிலிங்கமமைத்தாங்கொண்மலர்தூய்ச், சுடர்வேலரசன்
முறைதிறம்பல்னோக்கியானைத்தொழுதிருந்தான். (9)

கொழுதியிசைவண்டினமுரலுங்குமரிக்கமலத்துறையுமறைக்
கிழவனரசின்கோல்கோடவியற்றுதழல்கட்கிளர்பொறிய
உழுவையசைத்தோன்முனமெவ்வாறுறுவதென்னவுளம்வெருவி
வழுவில்காசிவளநகரின்றென்பாலினிதுவதிந்தனனால். (10)

## ஐம்பத்திரண்டாவது B-பிரமாவேள்விசெய்த அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—B - 1454.

## ஐம்பத்துமூன்றாவது
## சிவகணங்கள் காசியையடைந்த அத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அன்னமூர்ந்தமறைக்கிழவன்வாராதொழிந்தானாதலினால்
இன்னுமறிதுமெனக்கடவுளேற்றையுயர்த்தவெம்பெருமான்
மின்னுநகுவேற்பிரசங்குகன்னனந்திசோமன்விறற்
கன்னனந்திசேனன்மகோதரன்பிங்கலன்குக்குடன்காளன். (1)

குண்டோதரன்பஞ்சாக்கனியல்வாணன்மயூகன்கோகன்னன்
தண்டாவிழுச்சீர்த்திலகன்னன்றாலகன்னன்சுகன்சாகன்
புண்டோய்கதிர்வேல்வீரபத்திரன்வீராதன்பார்பூதிவரி
வண்டார்தெரியற்கபர்த்திசதுமுகனாசாடிவளர்சுமுகன். (2)

கேமமாலிகாலசிங்கன் றருமன்கிராதனெனவுரைக்கும்
நாமவடிவேற்கணநாதர் தம்மைவிடுப்பநறுங்கூந்தல்
தேமென்கிளவியொருபாகன்மலர்த்தாள்போற்றிச்சிறந்தேதாங்கும்
காமர்கடவுட்புனற்கங்கைசூழுங்காசிகடிதடைந்தார். (3)

மாயவுருவிற்புகுந்தாசர்மகுடகோடியுழுதுதழும்
பாயகழற்கால்வேந்தன்முறைதிறம்பல்காணாாதலினற்
காயுஞ்சினவெவ்விடங்களிந்தகரியமிடற்றெங்கண்ணுதன்முன்
போயென்னுரைப்பதெனமாழ்கிமெலிந்தார்புந்திதனிலோர்ந்தார்.

உடனும்வேண்டுமுருவெடுத்துமடிகள்பணித்தவோர்வினையம்
முடியேமடைந்தகொடும்பாவம்யாதில்நீங்குமெனமுன்னிப்
படவாளரவகங்கணத்தேதான்படிவமமைத்துப்பரிவினெடுங்
கடிமாமலர்தூய்வணங்கினுறுகொடியவினையுங்கட்டறுமால். (5)

யாவரேனுஞ்சிவபூசைசெய்வாராகிலவரிழைத்த
மேவவரியகொடுவினைகளனைத்துநீங்கிவீடடைவர்
ஓவில்விரதந்தவம்வேள்வியாற்றுவோரிலொண்மலர்தூய்ப்
பூவைபாகன்றனைப்பணியுமவர்மேலன்புபுரிந்திடுமால். (6)

பனிவெண்டிங்கட்கண்ணிபுனைபரனையாட்டும்புனனுகர்ந்தேதான்
வினையினீங்குமப்புனலிற்படிந்தேதான்வீங்குதிரைக்கங்கைப்
புனலினுடும்பலன்கடிதினடையுமெனத்தம்பெயர்புனைந்து
தனிவேறிலிங்கமுறையமைத்துப்பூசைபுரிந்துதாமிருந்தார். (7)

கருணைகூர்ந்துசிவகணத்தின்காதையுரைத்தேதமாங்கவரில்
அருளின்விளங்குகவர்த்தீசன்பெருமைவிளங்கவறைந்திடுதும்
பெருமாதவத்தின்றுறைபோயமுனிவகேட்டியெனப்பிறங்கு
குருதிநெடுவேற்கருந்தடங்கட்குறமான்கொழுநன்கூறிடுமால். (8)

ஐம்பத்துமூன்றுவது சிவகணங்கள் காசியையடைந்த
அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—1462.

# ஐம்பத்து நான்காவது
# அலகைதேவனாய அத்தியாயம்.

---

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

சுவர்த்தியென்னுங்கணநாதனொருவனுளனுங்கவனரிய
தவத்தின்மிக்கோன்பத்திரேசன்றனக்குவடபாலொழிவரிய
பவத்தின்றுயர்வேராறுத்திடுமோரிலிங்கமமைத்துப்பசுந்தேனிற்
சுவைத்தண்புனல்வாவியுமகழ்ந்துதொடங்கற்கரிய தவம்புரிந்தான்.

அன்னவிமலோதகவாவிக்கரையிலிரண்டாம்யுகமதனிற்
பன்னுமறைதேர்கவர்த்தீசன்பாதம்வணங்கிவான்மீகி
என்னுமறையோனாற்றரிய தவங்களாற்றியிருந்திடலும்
முன்னமழல்கட்பிறையெயிற்றமுராட்பேயொன்றுதோன்றியதால்.

ஒட்டியுலர்ந்தகொடிறுமடிப்புற்றழுங்குநீள்கழுத்தும்
விட்டுநெறித்தகுஞ்சியுமேல்விரிந்தவுதடுங்குழிந்துபுழை
பட்டசெவியுமென்பொடுதோல்பயின்றவுடலும்பசுங்குருதி
கொட்டுபகுவாய்முழங்குமிடிக்குரலுமாகக்குறுகியதால். (3)

அலகைநின்றநிலைகண்டுயாரைநீயிங்கடைந்ததெவன்
மெலிவுசெயுமிவ்வுருவியைந்ததெவ்வாறிவைநீவிளம்புகெனக்
குலநான்மறையோன்வினவுதலுங்கோதாவிரியின்றீரத்தின்
உலவுபிரதிட்டானமெனுந்தொல்லைநகரமொன்றுளதால். (4)

அன்னநகரினுவந்துறையுமந்தணாளன்புண்ணியநீர்
மன்னியாடுமவருழைச்சென்றில்லென்றிரந்தவாறதனால்
இன்னவுருவமெய்தியதுநெடுநாளுணவற்றுடற்றுபசி
வெந்நோய்வருத்தநீர்வறந்தநிலத்திலிருந்துமெலிந்தேனால். (5)

தெறுவெங்கதிராற்பொழிபுயலாற்றேம்பியாடைசிறிதுமின்றி
உறையுநாளிற்புனிதமில்லானுறுநீர்படியான்கடன்கழியான்
மறையோனொருவன்வரநோக்கியிவன்பாலுறையின்மகிழ்ந்துணவு
பெறலாமென்னும்வேட்கையுளம்பிணிப்பவவனுட்புகுந்தனனால்.

என்னையொழித்தோர் வணிகனெனுமீட்டும்பொருட்குக்காசிநகர்
தன்னில்மறையோன்செலவயரச்சார் தல்செல்லா தவனிழைத்த
முன்னைவினையினெனும்புறத்துநின்றேனன்றுமுதலாகப்
பன்னுமறையோன்வரும்வருமென்றுங்குவழிபார்த்துறைந்தேனல்.

முனிபுறக்களுலும்வெங்கானில்முதிர்வெம்பசித்தீமிக்ககனல், அனி
யன்றுயராலனுமெய்தியிருக்குமேல்லையருங்கங்கைத், தெளிதண்பு
னற்காவடிகொணர்ந்தோர் தீதின்மறையோனெதிர்ப்படலுங், கனி
றுங்குள்ளத்தொடுமவனைத்தின்பான்கடிதின்மருங்கடைந்தேன்.(8)

அடைந்தபோழ்திற்சிவசிவவென்றந்தணனறைந்திடலுந்
தொடர்ந்தகொடியவினையனைத்துந்துறந்தேன்றூயனுனதற்பின்
மடந்தைபாகன்காசிதனில்வந்தேனின்னைக்கண்ணுற்றேன்
படர்ந்தமறையோயிவ்வுருவமொழித்தியென்னப்பணிந்ததுவே. (9)

எரிகால்சுழல்கட்பேயிதனையியம்பலோடும்வான்மீகி
அருள்கூர்ந்திந்தவுருவகல்வான்விமலோதகத்தினுடுகெனத்
தெருள்சேர்முனிவபுனல்முதலதீண்டிற்பேயினுடல்நடுங்க
ஒருவாதுடற்றும்வயிரவன்றனுணையெனத்தாழ்ந்துரைத்ததுவே.

கூறுமலகையுரைகேட்டமுனிவன்கூற்றுமுளம்வெருவு
நீறுநல்கவடிதொழுதுநிலவவுடலெங்கணும்பூசித்
தேறுபுனலினுடுதலுந்தெய்வவுருவாய்விமானத்தே
ஏறிமுனிவன்றனைப்பழிச்சியிமையோருலகத்தெய்தியதே. (11)

அலகையுருவமொழித்ததனல தன்பேர்வாவிக்கடைந்ததிந்த
நிலவுகதையைநவின்றோர்கள்கேட்டோர்நெஞ்சம்வெருக்கொள்ள
உலகிலலகைநலியாதுவிடுத்தோர்மீளாதுறைதவினல்
இலகுகணிச்சியைங்கரனைவிடுத்தகாதையியம்புவாம். (12)

ஐம்பத்துநான்காவது அலகைதேவனுய அத்தியாயம்
முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—1474

# ஐம்பத்தைந்தாவது

## கணபதி காசியையடைந்த அத்தியாயம்.

---

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

விடுத்தகருமமுடியாதேதெவ்வாறடைதுமெனவெருவி
அடுத்துமுனம்யாம்விடுத்தோர்கள்மீளாதுறைந்தாரவ்வுழிபோய்த்
தொடுத்தகருமம்வழுவாதுமுடித்தியென்னவிருடேங்கு
கடுத்தாழ்கண்டனைங்கரனையினிதிறைஞ்சிக்கட்டுரைத்தான். (1)

கதிர்காலொற்றைக்குழைக்கிழவன்கழறுமாற்றந்தலைக்கொண்டு
மதநீர்க்கலுழிப்பேர்யாறுவழங்குங்கோட்டுவரையெழுந்து
பொதிவாயவிழ்க்கும்பசும்பாளைபொதிந்ததேறல்வழிந்தொழுக
முதுநீர்க்கங்கைபெருக்கெடுத்துமுழங்குங்காசியடைந்ததுவே. (2)

எண்ணமுரைக்குமறையோனிற்பகற்போதெல்லாமெவர்கடையும்
நண்ணியுரைக்குமிரவெல்லாங்கனவுகாட்டுநனிகதிரால்
தண்ணங்கமலமலர்போதிற்றனிவந்திரவுகண்டகனா
வண்ணமீதென்றவரவர்தமுள்ளம்வியப்பவகுத்துரைக்கும். (3)

கோழிகூவித்துயிலெழுப்புங்காலைச்சேற்றிற்குளித்தெழவும்
ஆழ்தண்புனலின்மூழ்கிடவுங்கனவுகண்டோராங்கதனாற்
பாழிநெடுந்தோண்மன்னவராலிடியாற்பயம்வந்தெய்துமெனக்
காழ்கொண்டிளகாமனத்தினருங்குழையச்சிலர்பாற்கட்டுரைக்கும்.

கற்றேய்கலிங்கமசைத்துமயிர்குறைத்தோனொருவன் கங்குலி
ன்வாய், உற்றாங்கெதிரக்கனவுகண்டவாற்குற்றுன்பமுறுதியென,
மற்றாங்கொருவன்பாற்போகிவழங்குஞ்சிலர்பாற்போயிரவு, பொற்
பாற்கதிரைக்கண்டதனாற்றுயர்வந்தடையுமெனப்புகலும். (5)

கடவுண்மதியைச்சுடர்வெய்யோன்வீழ்த்தக்கனவுகண்டதனால்
அடையுந்துயரமிந்நகரொன்றறையுஞ்சிலர்பாற்பல்விழவுங்
கொடியோனொருவன்மயிர்பற்றிக்கொடுபோகவுங்கண்டதனால்
ஒடிவில்கிளைஞரொடுமுடிவீரொன்றுசிலரோடுரைத்திடுமால். (6)

கொண்டல்விளையாட்டயர்மாடக்குடுமிதொடுத்தகொடிவீழக்
கண்டகனவாலிந்நகரந்துறந்துபோதல்கடனென்னும்
மண்டுதிரைநீர்க்கடலிவ்வூர்வளையக்கண்டவாற்றலொன்
றுண்டோர்மதியிலிந்நகரமுறைவோர்துன்பமுழப்பதெனும். (7)

அந்நுண்கலிங்கமருங்கசையாதறன்மென்கூந்தல்சுவல்புரளக்
கன்னற்குதலையந்தீஞ்சொலொருத்திகலுழக்கண்டகனா
என்னேகடவுட்காசியைவிட்டகல்துமென்னவிருந்தேங்கிப்
பொன்னங்கமலமயிலழுததென்னாச்சிலர்பால்புகுந்துரைக்கும். (8)

செக்கர்மாலைப்பிறைக்குழவிநிலவுதாங்குசெஞ்சடையெம், முக்
கட்பெருமான்சினகரத்தின்முடியொன்றுடையக்கங்குலின் வாய்ப்,
புக்ககனவுகண்டனிராற்சின்னாளையிலிப்புனைநகர்வாழ், மக்கள்யார்க்
கும்வெருவெய்துமென்றுசிலர்பால்வகுத்துரைக்கும். (9)

என்றுகொடுந்தீவினைக்கனவுகாட்டிப்பின்னுமியன்றிடுகோள்
நின்றநிலைகூறுவலென்னாச்சிலரைநோக்கிநிகழ்பாவம்
ஒன்றுகிரகமனைத்துமோரிராசியதனிலுறைந்தவற்றாற்
சென்றுபடுமிந்நகரிலுயிர்யாவுமென்னச்செப்பிடுமால். (10)

ஒடியாத்தவஞ்செயிருடிகளோரெழுவருறைமண்டலம்போழ்ந்து
குடபாற்போகியொழுகொளியதூமகேதுகுறுகியதாற்
கடல்சூழுலகங்கொளக்குறியாவளங்கூர்காசிநகர்புரக்கும்
அடல்வேலரசற்குறுதுயருண்டென்றுசிலரோடறைந்திடுமால். (11)

நெடுநீர்ப்பரவையுடுத்தவகன்ஞாலநடுக்கநிகழ்ந்ததனாற், கடை
தூங்கொளிர்பொற்கதிர்மணிநாக்கறங்காதுறங்குமணிக்கோயிற்,
சுடர்கால்பசும்பொன்மணிமுகடுவேய்ந்ததொடித்தோட்புரவலற்கீங்,
கடையாத்துயர்வந்தடையுமெனச்சிலர்பாற்போகியினிதறையும்.

கடல்வாய்மடுத்துநிமிர்ந்தெழுந்தகமஞ்சூற்கொண்டல்துளிதூங்கு
நெடுவான்பூத்தவுற்கமொன்றுமன்றில்தடவுநிலைத்தருவில்
வடபானின்றுந்தென்பாலாய்வீழ்ந்தவாற்றால்மன்பதைகள்
படர்கூர்ந்திடுமோர்புதுமையிஃதென்றுசிலர்பாற்பரிந்துரைக்கும்.

இரவுக்குறும்புதலைபெயரவிருண்மேய்ந்தெழுவெங்கதிர்ப்பருதி, புரவுத்திரைநீர்க்கடன்முகட்டினுதித்தபின்னர்முளிசினைவான், தருவிற்சுழல்கட்கொடுங்கூகைசார்ந்தகுணபால்நோக்கியுளம், வெருவத்தழறிற்றிஃதென்றேவிளைக்குமென்னச்சிலர்க்குரைக்கும். (14)

## ஐம்பத்தைந்தாவது கணபதி காசியையடைந்த அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—1448.

## ஐம்பத்தாறுவது
## கணபதி திவோதாஸனைக்கண்ட அத்தியாயம்.

---

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

இன்னவாறுமன்பதைகளுள்ளம்வெருவவெடுத்தியம்ப
அன்னநகர்ந்துறந்துசிலர்போகவியற்றியவர்போய
பின்னர்முதுமூப்புடையமறைக்கிழவனாகிப்பிறங்குகதிர்ப்
பொன்னங்கழற்கால்வயவேந்தனுறையுமனையிற்புகுந்துரைக்கும்.(1)

கதிர்முத்துரிஞ்சுமுலைக்கருங்கட்காமர்கன்னிநீபயந்த
புதல்வரொருநூற்றுவருளராங்கவரில்மூத்தோன்போரினிலேற்
றெதிருமுரவோன்கலினவயப்புரவியிவர்ந்துவீழ்ந்தனனென்
மதியினுரைத்தேனுளதோவென்றொருத்தியோடுமகிழ்ந்துரைக்கும்.

வள்ளற்பசுந்தார்மதிக்கவிகைச்செங்கோல் வேந்தன்மார்பணிந்த, வெள்ளிக்கதிர்காலிப்பியின்வாய்வெடித்தபருமுத்தணிதொடையின், உள்ளத்துவகைமீதூரநெருநலளித்தானுளது கொலென், றள்ளிக்கொளலாமிருட்கூந்தலொருத்திபாற்சென்றறைந்தேகும்.

தழுவவடங்காத்தடங்கொங்கைகமஞ்சூற்கொண்டருழ்குழல
ய், மழலைத்தீஞ்சொன்மகப்பெறுவையென்னவொருத்தியுடன்வழங்
குங், கழுமமுடித்தகருங்கூந்தலொருத்தியோடுகாவலன்றன், விழை
வுநோக்கிலெஞ்ஞான்றுநின்மேலாகுமெனவிளம்பும். (4

என்றிவ்வாறு தனிக்கவிகைவேந்தற்குரியவேழையர்பாற்
சென்றுபிழையாதுண்மையினிதுரைப்பமகிழ்ந்துசின்னாளிற்
பொன்றுழ்தி தலைப்பொம்மன்முலைலீலாவதியென்றுலகுபுகழ்
மன்றற்கோதைதவேல்வேந்தற்கந்தணனன்வரவுரைத்தான். (5)

பீர்பூத்தலர்ந்தபொம்மன்முலைப்பேதைமறையோற்கொணர்
தியெனப், போர்வேட்டுறங்காக்களிற்றுழவன்புகலமறையோன்புகுந்
திடலுங், கார்வாய்த்துளிவேட்டினிதுவளர்பைங்கூழென்னக்கலை
கண்ணு, யார்மாட்டினுமங்கவரவர்தம்முயிர்போலென்றுமளித்தே
னல். (6)

பன்னுமறையோர்விளையாடுஞ்செந்நாமுனிவர்பதமலரை
இன்னும்வழிபாடியற்றுவதையல்லாற்பிறிதொன்றுற்றிலேன்
அன்னவெனக்கிந்நிலக்கிழமையகல்வானுள்ளமமைந்ததிது
முன்னியுணர்த்துகெனமறையின்பொருடேர்வாழ்க்கைமுனிகூறும்.

மதியினமரர்குலக்குரவனருளால்வானின்மதிக்கடவுள்
உதவுகொடையிலளகையர்கோனொளியாற்செங்கேழ்ச்சுடர்ப்பருதி
எதிருமமரிற்கொடுங்கூற்றம்பொறையில்ஞாலமிரங்குதிரை
முதுநீராடைப்புவிபுரக்குமுறையிற்சிறந்தமனுவாமால். (8)

மும்மைத்தொழிலுமியற்றுதலான்மூவரொன்பர்முழுதுலகும்
அம்மாதாகமாற்றுதலாற்புயலென்றிசைப்பரார்வமொடுங்
கைம்மாமலரிற்றிருவுறைந்தாள்முகத்திற்கலைநாமகளிருந்தாள்
வெம்மைவிடரின்முனிவுமொழியமிழ்தநினைப்போர்வேறுளரால். (9)

ஆதலாலிவ்வுலகமுழுதாளுந்திகிரியுரவோய்நின்
நீதியுளத்தினிடைக்கிடந்தசெய்தியுணர்ந்தேனின்றுமுதல்
ஓதுநாளோரிருநான்கிற்குணபானின்றுமொருமறையோன்
போதுமவனுன்றிறமெல்லாம்விளங்கவருளாற்புகன்றிடுமால். (10)

கன்னல்செய்யாதவன்மாற்றங்கோடியென்னவினிதியம்பி
அன்னற்பழனவயற்காசிநகரினுறைறவோரடல்வேந்தின்
உள்ளத்துயிரிற்பிரியாதமகளிருவப்பமுனமுறைந்த
வள்ளற்றுணைத்தான்மாவைவேண்டும்வண்ணமமைத்திருந்தான் (11)

## ஐம்பத்தாருவது கணபதி திவோதானனைக்கண்ட அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—1499.

## ஐம்பத்தேழாவது
## விட்டுணு காசியையடைந்த அத்தியாயம்.

---

*எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.*

கரையெறிந்தொழுகிக்கருந்திரைபுரட்டுங்காளிந்தியெனக்கடாக்கவிழ்க்கும், பொருசினத்தறுகட்கரிமுகனின்னும்போந்திலனெனமனந்திகையா, மருதிடைத்தவழ்ந்துகோவியராடைகவர்ந்துவான்குருந்தின்மேலிவர்ந்த, திருமறுமார்பன்வாண்முகநோக்கித்திங்களங்கண்ணியோனுரைக்கும். (1)

முன்னம்யாம்விடுத்தகணங்கள்போல்நீயுமுளரியந்தவிசின்மென்பெடையோ, டன்னம்வீற்றிருக்கும்வளவயற்காசிநகர்வயினமர்ந்திடாதாங்கு, மன்னியவேந்தின்மனுமுறைதிறம்பும்வண்ணநீபுரிதியேற்போதி, என்னலும்வணங்கியிருகாங்கூப்பியெந்தையைப்போற்றியீதுரைப்பான். (2)

அண்ணலின்கமலச்சேவடிப்போதிலன்புபூண் டொழுகுநருளத்தின், எண்ணியகருமமுடிவதுசாதமெம்பிரான்முகமலர்ந்தேவ, நண்ணுசிற்றடியனியற்றுதற்கரிதொன்றுளதுகொலெனவுரைநவின்று, புண்ணியத்துளவந்துயல்வருதடந்தோட்புங்கவன்போகுதற்கெழுந்தான். (3)

வள்ளிதழ்க்கமலப்பொகுட்டில்வீற்றிருக்குமணங்கொடுவடவைரபொருவும், புள்ளரசோடும்பூவைபோல்மேனிப்புங்கவனருளோடும்போகி, அள்ளலஞ்சேற்றிலாமைகண்படுப்பவஞ்சிறைத்தும்பு தாலாட்டும், வெள்ளநீர்ப்பழனம்விளிம்புடுத்தோங்குகாசியின்விரைவின்வந்தடைந்தான். (4)

மணிதெளித்தனையவான்புனற்றடத்தின்மாதவன் றூள்விளக்குதலால், அணிகிளர்வாவிக்கன்றுதொட்டுயர்பாதோதகமென்ப வெவ்வழற்கட்,பணியரவுச்சிநடித்தவன்றனதுபடிவமொன்றமைத்ததனன்கரையில், தணிவருமாதிகேசவனெனும்பேர்சாற்றினன்பூசனைபுரிந்தான். (5)

தண்மலர்களுலும்பாற்கடல்நேமி தாமரையணங்குசெங்கமலம், புண்ணியநாராயணநாசிங்கமாம்பெயரோடுடன்புணர்ந்த, அண்ணலந்தீர்த்தமளப்பிலாக்காசியணிநகரெங்கணுநோக்கில், எண்ணிடுமளவும்வெற்றிடமின்றியெங்கணுந்தீர்த்தமாயியையும். (6)

ஆதிகேசவனென்றமைத்தவவ்வுருவிலமர்ந்திருந்தவற்றிலோர்கூற்றால், ஏதமில்புத்தவுருவொடுநாமம்புண்ணியகீர்த்தியென்றிசைப்பக், காதல்மீதூரக்கலுழனும்வினையகீர்த்தியாம்பெயரொடுங்கடிதிற், போதரக்கமலமயிலும்பிஞ்ஞுகவங்கவுந்தியாம் பெ ரொடும் போத. (7)

காசியம்பதியினெய்தியந்நகரிற்கண்ணிலார்க்கிழந்தகண்கொடுத்தும், தேசுடைப்புதல்வரில்லவர்தமக்குத்தேமொழிமைந்தரையளித்தும், மாசுடைமூப்பின்வருந்தினர்க்கிளமைவழங்கியுமாழ்கடல்வளைப்பின், ஆசறுகுரவர்திலகனென்றெவருமறைந்திடமதிமருட்டினனல். (8)

ஆக்குநரில்லைச்செகமெலாமறுதியரும்பெற்றபூத்மோர்நான்கும், நீக்கமற்றியையினுருவமாமடைக்காய்நீற்றெறுடுபொருந்திலாங்கவற்றற், சேக்குமாபோலவறிவுறுமலதுசீவனென்றுரைப்பதொன்றில்லைத், தாக்கணங்கனையார்பூந்துகில்நெகிழ்த்துத்தழுவலேதவறில்பேரின்பம், (9)

கலைவலீரொருவற்களித்தவின்னடிசில்மறுமையில்வருமெனக் கணர்ந்தீர், மலமதாய்க்கழிந்ததெவ்வணநுமக்குவருங்கொல்மற்றுத வாலளித்தல், நிலவியதருமமன்றதுவிடுத்தல்நெறியதாநுமதுடல் வருந்த, அலகில்நோன்பியற்றல்கொலைத்தொழில்போலுமாதலின வைவிடுத்திடுமின். (10)

துன்புழந்துடலம்வருந்தல்பாழ்நரகந்தோகையரொடுமருஞ்செல் வத், தின்புறல்துறக்கமென்பர்நன்குணர்ந்தோர்மாலயன்முதலெறு ம்பீறாய், நன்குறுமுயிர்கள்தோன்றுதலொழிதல்நடந்ததோராருயிர் செகுத்துப், புன்புலாலருந்தியருமகம்புரியும்புலவிர்காள்பூத்திடா தருமம். (11)

உயிரெலாந்தனதுள்ளுயிரெனவோம்பாதொன்றினதுயிரினைக் குறைத்துச், செயிராறுவேள்வியாற்றுதல்தீதாமென்றிவைபோல் வனசெப்பிப், புயருருடுகுடுமிப்புரிசைசூழ்காசியுறையுநர்புந்தியை மருட்டி, மயர்வறுபுத்தரிழிதருமொழுக்கின்மனஞ்செலவயர்த்திடப் புணர்த்தான். (12)

அற்புடன்கவுந்தியுருவொடுமலர்மேலரசவீற்றிருக்கு மாரணங் குங், கற்புடைமகளிர்மனைதொறுநுழைந்துகாதலன்வரும்வருமென் ன, எற்பெழுந்தியங்கநோற்பதென்னென்றுமிளமைநில்லாதுவேட் டவர்பாற், பொற்புறநலத்தையளித்திடாரன்றேபுவிக்கொருபார மாய்ப்புகுந்தார். (13)

நறைமலர்ப்புத்தேளருளொடுமீன்றோரிருவரில்மரீசிநன் குயிர் த்த,பெறலருந்தவத்துக்காசிபன்றக்கன்பெற்றகன்னியர்முலைப்போ கம், நெறியினிலருந்தியமரரையளித்தாரென்றிடினீவிர்தோய்வு றாத, முறைபலபிதற்றிமுதுக்குறைவிலாதுமுகிண்முலைமுயக்கம் விட்டொழிந்தீர். (14)

முருகுவாய்மடுத்துமூசிவண்டாற்றுமுள்ளரியந் தவிசினிலிருந் தோன், திருமுகந்தடந்தோள்குறங்குதாளிவற்றிற்செனித்தவர்த ம்மைவெவ்வேறு, வருணமென்றுரைப்பதென்னையாரிடத்துமருவு தலாமெனமருட்டிக், கருநெடுந்தடங்கண்மடந்தையர்கன்னிக்கற் பினைத்துடைத்தனள்கமலை. (15)

மன்னவர்காக்குமுலகநற் றருமம்வழுவலான் மன்னவன் றவமுந்
துன்னரும்போகத்தொகுதியுமன்னோன் துலைவருமாயுளுந் தொலைந்
த, முன்னமோர்மறையோனுவிருநாளின் முதுமறையவன் வருமென்
னச், சொன்னவையுளத்தினினைத்தலுமவன்முன்றோன்றினன்
சுருதிநூல்மறையோன். (16)

## ஐம்பத்தேழாவது விஷ்ணுகாசியையடைந்த அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—1515.

# ஐம்பத்தெட்டாவது
# திவோதானன்முத்திபெற்ற அத்தியாயம்.

---

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தோன்றியமறையோன்சேவடிக்கமலந்தொழுதுமுத்தொழில்
புரிவதற்குச், சான்றுமாயுயிர்களனைத்துமாயிருந்ததாமரைக்கண்ண
னீயென்ன, ஆன்றவென்னறிவாலுணர்ந்தனனமரர்ப்புணர்த்தது
மறிந்தனனலங், கான்றவாளரவிற்கிடந்தபாரனைத்துங்களைகணுயின்
றளவளித்தேன். (1)

அட்டமாயோகம்பயின்றவையனைத்துமாணவப்பயிரினைவளர்ப்
ப, இட்டதோரருவினையைந்தனவிமையோர்யாரையுமிகந்தவெம்
பாவம், விட்டகன்றிடவுன்சேவடிக்கமலம்வெளிற்றறிவுடையவென்
றலைமேல், மட்டவிழ்படலைப்பசுந்துழாய்முகுந்தவைத்திடல்வேண்
டுமென்றிரந்தான். (2)

மாவலிதநீசிவாணன்முப்புரத்தோர்தக்கன்மாதவம்பலவிழைத்தும், தேவரையிகழ்ந்தவாற்றினாற்றுயரஞ்சேர்ந்தனர்யானுமாங்கவர்போல், தாவருவிசும்பினமரரையிகழ்ந்தபிழையினாலென்னுழைச்சார்ந்த, பாவம்விட்டகற்றுந்தத்துவமெனக்குப்பணித்தியென்றடிமலர்பரவி. (3)

இலகொளிமணிச்சூட்டரவின்மேலுலகத்தெண்பதினாயிரம்வருடந், தொலைவில்பேரின்பந்துய்த்தனன்மீட்டுந்துய்த்ததேதுய்ப்பதையல்லாற், கலைவலாயொன்றுங்காண்கிலன்பிறவிக்கருங்கடல்கடப்பதற்கின்னே, மலர்தலைஞானப்பெரும்புணையருளால்வழங்குகவெனவழுத்திடலும். (4)

அறநெறிபிழையாதிருநிலம்புரந்தவலங்கல்வேலரசனுக்கின்று மறைநெறிபிறழ்ந்தநெறியினையுரைத்தல்தகாதெனவண்டுழாய்முகுந்தன், நிறைபரஞ்சுடராயசலமாயொன்றாய்நிமலமாயுயிர்க்குயிராகி, உறைதருபொருளினுண்மையைவேந்தனுளங்கொளவிரித்துரைத்தனனால். (5)

கங்கையங்கரையினிலிங்கமொன்றமைத்துவழிபடிற்கறைமிடறணிந்த, மங்கையோர்பங்கனருளினாலின்றுமுதலவேழ்நாளினில்வயங்கு, பொங்கொளிவிமானங்கணங்கள்கொண்டுன்பாற்போந்திடுமெனவுரைபகர்ந்து, கொங்கலர்துளவத்தெரியன்மால்பஞ்சநதக்கரைகுறுகினனிருந்தான். (6)

கலைபயில்கேள்வியமைச்சரைக்கூவிக்கனைகடற்கருந்துகிலசைத்த, மலர்தலையுலகமனைத்தையும்விழைவால்வளர்சயனருளொடுங்காக்க, இலகொளிமவுலிகவித்துமென்றெண்ணியீர்ம்புனற்கங்கைநீராட்டி, விலைவரம்பறியாவெயில்மணியிமைக்கும்விழுத்தகுகதிர்முடிபுனைந்தான். (7)

மைந்தனைமவுலிசூட்டியபின்னர்வளர்புனற்கங்கையின்வடபால், இந்திரதிருவினிளம்பிறைக்கண்ணியிறைவனுக்காலயமியற்றிச், சிந்தையினுவந்துதன்பெயராலோர்சிவலிங்கமாயிடையமைத்துக், கொந்தலர்மலர்தூயொன்னலர்க்கடந்தகொற்றவன்வழிபடுமெல்லை. (8)

ஆழிவெண்டிரையினறிதுயிலமருமைம்படைக்கடவுள் முன்னுரைத்த, ஏழுநற்றினமுங்கழிந்தபின்முக்கணிறையவன் றன்னருளுதனற், பாழியந்தடக்தோட்கணங்கள்செங்கதிர்கால்பரிதியோர்கோடிசேர்ந்தென்னச், சூழ்சுடரிமைக்குமொழுகொளிவிமானந்துங்கவேன்மன்னன்முன்கொணர்ந்த. (9)

நெற்றியங்கண்ணுநிலவுவெண்பிறைதாழ்வேணியுநீலமென்மிடறும், ஒற்றைவெண்குழையும்புனிற்றிளமறிமானேந்தியவொண்மலர்க்கரமுங், கற்றையங்கதிர்கால்மழுப்படைதாங்குகரமுமாய்ச்சிவனுருவமைந்து, வெற்றிவேல்மன்னன்கதிர்மணியிமைக்கும்விமானமேல்மகிழ்ச்சியோடிவர்ந்தான். (10)

அரம்பையர்கவரிக்குழாம்புடையிரட்டவயனெடுமுனிவர்வாழ்த்தெடுப்பப், புரந்தரன்முதலோர்பூமழைபொழியப்பொறிவரிவண்டினமுரலும், நாந்தைநாறைம்பாற்றிலோத்தமைமுதலகூத்தியர்தனித்தனிநடிப்பக், கருந்தடங்கண்ணிபங்கன்வீற்றிருக்குங்கயிலையினைடைந்தினிதிருந்தான். (11)

இன்னநற்காதையுரைத்துளோர்கேட்டோரினிதெனவுவந்திடுவோரும், ஒன்னலர்க்கடந்துகடல்விளிம்புடுத்தவுலகெலாமொருகுடைநிழற்றப், பொன்னெடுந்திகிரிதிசைதிசையுருட்டிப்புவியதனைசைத்தவனுறையும், மின்னவிர்குடுமிக்கயிலைமால்வரையில்விண்ணவரேத்தவீற்றிருப்பார். (12)

## ஐம்பத்தெட்டாவது திவோதானன்முத்தியடைந்த அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—1527.

## ஐம்பத்தொன்பதாவது

# பஞ்சநதத்தின் வரலாறுரைத்த அத்தியாயம்.

### எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

அரிமதர்நெடுங்கணவிர்குழைதடவுமாய்ச்சியர்பிணித்ததாம்போ டு மருதிடைத்தவழ்ந்தமாயவன்பஞ்சநதத்திடைவைகியவாறும், பெருகுநீர்வாவிக்கப்பெயர்புணர்ந்தபெற்றியுமினிதுகேளென்னக், குருகுபேர்க்குன்றமெறிந்தவேலுழவன்குறுமுனிமகிழ்வுறவுரைப் பான். (1)

அருமறைதெளிந்தபிருகுவின்மருமானருமறைச்சிரசெனும் பெயரோன், உருவமூரேழைசாற்றமோடிரதமுற்றிடாதுளத்தினை யடக்கி, வெருவரனோற்குமமைதியின்மதியில்வேல்கிடந்தனையவோ ரிக்கட், டெரிவைவிண்ணகத்திற்சசியெனவுரைக்குஞ்சேயிழையவ் வுழியடைந்தாள். (2)

முத்தரிச்சிலம்புதவளைவாய்ச்சதங்கைமுறைமுறைபூசலிட் டோங்கப், பைத்தபாம்பல்குன்மேகலையிரங்கப்பாணிகர்வண்டினந்து தைந்து, மைத்தவழ்குழலின்முரலமுன்போந்தவாணுதல்மதிமுக நோக்கிப், பித்தரின்மயங்கியருமறைமுனிவன்பேதுறலுற்றுமாழ்கின னால். (3)

வடுவகிர்நெடுங்கட்பேதையம்முனிவன்மயங்குதல்நோக்கியுள் வெருவிச், கொடிநடுக்குற்றதெனவுடனடுங்கக்கோடல்மென்மலர்க்கரங் கூப்பி, அடியனேனடிகள்தவம்புரியிடத்தினடைந்தவிப்பிழைபொறு க்கெனலும், விடயமோரைந்துமடக்கியமுனிவன்விளங்கிழைமகிழ் வுறவுரைப்பான். (4)

தண்ணறுங்கமலத்தாசுவீற்றிருக்குந்தாக்கணங்கனையபூங்குழ லாய், வெண்ணெய்செந்தழல்வாய்ப்பெய்திடினுருகும்விழைவொடு மாந்தர்தம்முள்ளம், ஒண்ணுதல்மகளிர்மதிமுகஞ்சிறிதுகாண்கினு மொள்ளிழையவரை, எண்ணினுமவர்சொற்கேட்பினுமுருகுமென் றிடிலுரைக்குமாறெவனே. (5)

ஆதலாலுள்ளம்வெருவலைநீயீண்டடைதலானிலையினின்றிழிந்த, தாதுவைத்தரித்தியென்றலுமதனைத்தரித்தெழில்முழுவதுமமைந்த, போதரிநெடுங்கட்புதல்வியையீன்றமுனிவரன்பொருந்துசாலையினில், நீதறவிருத்திமின்னிவர்ந்தென்னச்சேணுயர்விசும்பிடைச்சென்றான். (6)

ஆங்கவளேகத்தனிக்கிடந்தழுதபுதல்வியையங்கையினெடுத்துத், தீங்கெறிமுனிவன்மான்முலையூட்டித்தீதறவளர்த்தலுமவட்கு, நீங்கரும்பருவமெட்டிறந்ததனால்நிரைவளைமுன்கைவாட்டடங்கட், பூங்கொடிவதுவையாற்றிடுகாலம்போந்ததுபகரியென்றிடலும். (7)

அளப்பருங்குணங்கட்கொருவனாய்த்தருமமனைத்தையுமுணர்ந்தவனுளனேல், தளக்கறவளித்தியென்றவனுரைப்பத்தூயநற்றவம்புரிந்தல்லால், உளத்திடைநினைத்தகொழுநனைப்பெறுதலரிதெனமுனிவரனுரைப்ப, விளக்கொளியென்னச்சுடர்விடுமேனிவிளங்கிழைதவம்புரிந்தனளால். (8)

கனிபடுகிளவியருந்தவநோக்கிக்கமலமென்பொகுட்டில் வீற்றிருக்கும், முனிவரனெய்தியாதுநீவேட்டதளிக்குவல்மொழிகெனச்சிறந்து, புனிதமாம்பொருள்களெவற்றினும்யானேபுனிதமாம்படியருள்கென்ன, அனையநல்வரமாங்களித்துயர்விசும்பினருமறைவானவனகன்றான். (9)

எரிமணிப்பசும்பொற்கலன்கிடந்திமைக்குமிளமுலையருந்தவமாற்றி, முருகுவாய்மடுத்தூசிவண்டாற்றுமொய்மலர்க்காவினெய்துதலும், உருவவாணுதலுமொளிர்மதிமுகமுமோடரிநெடுங்கணுந்தாங்கி, மருவுமோர்கொடியொன்றடைந்துநற்றருமமாயநோயுழந்துமாழ்கியதே. (10)

அனிச்சமென்மலரின்மிதிப்பினுஞ்சேக்குமாந்தளிர்ச்சீறடிநோவக், கனிப்பொறைசுமந்தகற்பகக்கொடியிக்காவிடைப்புகுந்ததென்றவத்தின், தனிப்பலனாகுமிருதடந்தோளிற்றழுவுதியெனவிரந்தெய்த, முனிக்குரைத்தவன்றனருளினாலன்றிமுயங்குதல்புரிகலேனென்றாள். (11)

மாழையுண்கண்ணிமறுத்தனளாகமதிமருண்டணங்கி னைநோக்
கி, யாழிநேர்புணர்ப்பின்மேவுதல்தருமத்திழுக்குறுதெனவினிதி
சைப்பத், தாழ்குழலதற்குமறுத்தலுமேங்கித்தழுவுதற்கடங்குறு
தெழுந்த, கேழ்கிளர்பொம்மலிளமுலைவலிதிற்புல்லினன்கெடலருந்
தருமன். (12)

வலிதினீயென்னைத்தழுவியவாற்றால்வால்வளைநித்தி லங்கொ
ழிக்கும், ஒலிதிரைநதியாயொழுகெனச்சாபமுரைத்தலுந்தருமன்
மெய்புழுங்கி, அலர்முலைநின்னையிரக்கவுநெஞ்சங்குழைந்திடா வாற்
றினலகன்ற, சிலையெனக்கிடத்தியெனவுளம்வெருவிச்சேயிழைதந்
தைபாலடைந்தாள். (13)

வந்தவையனைத்துந்தவத்தினாலுணர்ந்துமறைமுனிமகள் முக
நோக்கிச், சந்திரகாந்தச்சிலையதாய்மதியின்கதிர்களாற்றண்புனல்
பெருகி, உந்துதெண்டிரைநீரொழுகியதூதபாவையென்றுரைக்குமா
நதியாய்ச், சிந்துநீர்த்தரங்கத்தருமமாநதத்திற்சிறப்பொடுஞ்சென்று
சேர்குதியால். (14)

நின்னுடைமுனிவாலந்தமெய்யொழுகுதருமனுநீயும்வேண்டு ழி
யின், என்னுடைத்தவத்தால்முன்னுருவெய்தியிகையவென்றினிதரு
ருள்புரியக், கன்னலிற்கனிந்தகுதலையந்தீஞ்சொற்கன்னியுநதியுரு
வெடுத்து, மன்னியதருமநதத்தொடுமுள்ளமகிழ்வுறவந்துகூடின
ளால். (15)

பரிதியஞ்செல்வன்றவம்புரிந்திடலும்பாய்கதிரொடு ம் வெ ய ர்
வழிந்து, கிரணைமாநதியாயொழுகியதுயர்ந்ததருமமாநதங்கிளர்
கங்கை, அருள்புரிதூதபாவைவான்கிரணையமுனையென்றைந்துமா
நதியும், ஒருவழிப்படலாற்பஞ்சமாநதமென்றுறுபெயராயதிவ்வுல
கில். (16)

விரிபுனற்றருமந்தவமுயர்தூதபாவைசொல்விந்துநற்றீர்த்தம், மருவியபஞ்சநதமெனமுன்னையுகமுதல்வான்முறைறவழங்கும், பொருவறுநாமமிந்நதமதனிற்படிந்துளோர்பூதமோரைந்தின், உருவுடையாக்கையெடுத்திடரெய்தாமுத்திவீட்டுறைந்தினிதிருப்பார். (17)

## ஐம்பத்தொன்பதாவது பஞ்சநதத்தின்வரலாறுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—1544.

## அறுபதாவது
## விந்துமாதவன்தோன்றிய அத்தியாயம்.

---

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தாற்றிளங்கமுகின்வாளைபாய்ந்துழக்கத்தமனியப்பாளைவாய்கீறி, ஊற்றிருந்தொழுகும்பச்சிளந்தேறலுயர்வரையருவியிற்றூங்கு, மாற்றெறிகாசிவளநகர்பஞ்சமாநதக்கரையில்வெண்டிரைய, பாற்கடலதனிலுளமகிழ்சிறப்பப்பசுந்துழாய்முகுந்தன்வீற்றிருந்தான். (1)

முக்குறும்பதனைவேரொடும்பிடுங்கிமூச்சவித்தருந்தவம்புரியும், அக்கினிவிந்துவெனும்பெயர்மறையோனுயிரகோடியாதபரிற், கக்குசெங்கதிர்கால்கவுத்துவமணிந்தகண்ணனைநோக்கிமண்பொதிந்த, செக்கர்மென்கமலச்சேவடிப்போதுசென்னியிற்சூட்டினனிருந்தான். (2)

இளங்களிச்சுரும்புஞிமிறுவண்டாற்றுமீர்ந்துழாய்நறுமலர்தூவி, உளங்கசிந்துருகவிருகணீர்வாரவொழிவறுமுவகைமீதூரக், களங்கனியனையகண்ணகோவிந்தவென்றுகைகூப்பினானன்றே, வளங்கனிந்தொழுகும்பொன்னுலகளிக்கும்வானவராவரென்றிசைத்தான்.

இனையநற்றுதிகள்பலவெடுத்தோதியிதயநெக்குருகிநின்றேத்தும், முனிவனைநோக்கிவிழைந்தனதருவலென்றலுமுனிவனுவந்து, புனையுநின்னாமம்விந்துமாதவனென்றிவ்வுழிப்பொருந்துதியென்ன, அனையநல்வரமாங்களித்திருந்தவத்தோனகமகிழ்ந்திடவிவையுரைப்பான். (4)

கார்த்திகைமதியிலிருட்குறும்பெறியுங்கடவுடேர் தோன்றியதென்னப், பூத்தலைச்சேவல்கூய்த்துயிலெழுப்புபுலரியிற்பஞ்சமாநதத்தை, ஏத்தினர்படிந்தோர்கொடியவெஞ்சினத்தவெருமையேயறுகைத்திடுமறலி, ஆர்த்திடுபாசத்திடைச்சிமிழ்ப்பெய்தியனுருறானமறையறைந்த. (5)

உரைத்தகார்த்திகையில்யாவையுமுண்ணாதொழிந்திடலுறாதெனிற்கனிவாய், அருந்தியினருந்தலன்றெனிலொருபோதருந்திடலாகும்வெண்கலத்தில், இருத்தியவடிசினுகர்ந்திடல்தீதாமெண்ணைபைந்தேனிவையருந்தா, திருத்தல்நன்றாகுமம்மதிமுழுதுமிலைதனிலருந்துதலியல்பாம். (6)

அன்னதோர்திங்களளவையும்புலால்நீத்தருளொடுமவுனமாயருந்திற், பன்னிருமதியுமருந்திடாதொழிந்தபலனுறுமாங்கவையருந்தின், மன்னியமீனாய்மலத்துறுபுழுவாய்வருபிறப்பதனில்வந்துதிப்பர், கொன்னுனைவைவேலரசருமந்தமதியிலூன்குறைத்துணல்விரும்பார். (7)

வெண்கலமதனில்நறுநெய்பெய்தளிப்பின்வேதியர்க்கின்னமுதூட்டின், எண்பதக்கோடுபொன்னினிதருளினெழிறிகழ்நீறுபூத்தொளிருங், கண்கவர்வனப்பிற்பூசணிக்காய்நல்லுழுந்திவைகருணையின்வழங்கின், வண்சிலைப்புருவவரம்பையர்கொம்மைவனமுலைதிளைப்பவீற்றிருப்பார். (8)

கடவுளாலயத்தினறுநெய்பெய்தகளிக்கணைசுடர்விளக்கமாட்டினரச், சுடர்புனைவிளக்கமனத்திருள்கடிந்தநூமறைவேதியர்க்களித்தோர், உடல்சினத்தறுகட்படர்மருப்பெருமையூர்ந்தவெம்மறலியூரடையார், விடுசுடர்பரப்புஞ்ஞானமெய்ச்சுடர்சேர்வெறுவெளியதனில்வீற்றிருப்பார். (9)

சிறந்தவம்மதியிற்பொருந்தியவேகாதசியினிற்கண்படையுறு மல், நிறைந்தநெய்விளக்கமேற்றியைம்புலனுநெறிபிறழாதுளத்த டக்கிக், கறந்ததீம்பால்கொண்டுளமகிழ்ந்தாட்டிக்கடிமலர்தூயெனை த்தொழுவோர், நறுந்திரைபுரட்டும்பாற்கடலதனில்நான்முகனுயுள் வீற்றிருப்பார். (10)

பொருவருமாதியுகமுதல்நான்குமாதிமாதவன்புகலனந்தன், மருவியதிருமாதவனுயர்விந்துமாதவனெனும்பெயர்வழங்கும், அரு மறைமுனிவவெம்முடையடியரெனுமனச்செருக்கினாலரனைப், பாவி டாதிகழ்ந்தோருலப்பிலாக்கொடியபாழ்நரகிடைக்குடியிருப்பார் (11)

## அறுபதாவது விந்துமாதவன் தோன்றிய அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—1555.

## அறுபத்தொன்றாவது

## விந்துமாதவன் அக்கினிவிந்துவுக்குத் தீர்த்தமகிமையுரைத்த அத்தியாயம்.

---

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

பொருதிரைப்பாதோதகக்கரையதனிற்பொருந்தியசங்கமேச்சு ரனை, அருளொடும்வழிபட்டாதிகேசவனென்றமர்ந்தனனவ்வுருமுத லாய்ப், பெரிதுணர்வுடையோர்வழிபடும்பிரயாகைமாதவனீறதாய்ப் பிறங்கும், இருபதின்மேலுமூன்றுமாதவனாயெய்திகல்லுருவெடுத்தி ருப்பேம். (1)

வளமலிகங்காகேசவன்முதலாவயங்கரிச்சந்திரகம்பம், அள
வையுமணிகன்னிகையெனவுரைப்பரவ்வுழியான்றவம்புரிய, உள
மகிழ்ந்தீசனளப்பருஞ்செல்வமுதவினனந்தகற்றடமே, தளவவெ
ண்மூரற்பேதையாய்ப்போந்தவுருவுசாற்றுவலெனச்சாற்றும். (2)

மாதுளங்கனியொன்றிடக்கையிற்றாங்கிவலக்கையினுற்பலந்த
ரித்துத், தீதறவிளங்குமிருகரங்கூப்பித்திருநுதற்கண்ணொடும்வெ
ள்ளைப், போதுலாங்கமலமுகத்துவெண்டூசுபுனைந்தியற்பன்னிருபரு
வப், பேதையாமணங்கைவழுத்தினரன்றேபிறவிவேரறுத்திடும்
பெரியோர். (3)

அன்னகல்லுருவம்பொன்னினிலியற்றியருச்சனைபண்ணுனர
ணங்கின், இன்னருள்பூத்தமூலமந்திரமூன்றிலக்கமோதினர்மலமொ
ருவித், தன்னிலையுணர்ந்துபெறலருமுத்திசார்குவர்சக்கரத்தடத்
தின், முன்னர்யாமமைத்தலிங்கபூசனைசெய்துறைந்துளோர்முத்
தியிற்சேர்வார். (4)

மடல்வயிறுடையவண்டினந்துவைக்கும்வளமணிகன்னிகைத்
தடத்தின், குடபுலமதனிலுளதுபாசுபதக்குண்டுநீர்த்தடமதிலா
டிப், படவரவரையிலசைத்துநின்றாடும்பசுபதீசனைப்பணிந்திடுவோர்,
அடைவதற்கரிதாய்விளங்குபாசுபதயோகத்தைவெளிதினிலடை
வார். (5)

உரைத்ததன்வடபாலுருத்திரவாசமெனுந்தடமுளத்தினிற்
படிந்தோர், திருத்தகவுலகில்விளங்குவர்முத்தித்தீர்த்தமொன்றாங்
குளமதனில், அருத்தியினொடுமுத்திவானவனைப்பணிந்திடினரும்பெ
றல்வீட்டின், இருத்திடுமதன்மேற்குள்ளதோர்தீர்த்தமதன்பெயரவி
முத்தமென்பார். (6)

ஆங்கதன்புனலிற்படிந்தவிமுத்தவாதியைமலர்கடூய்த்தொழு
வோர், நீங்கருமின்பந்துய்ப்பரத்தலையினீடொளித்தாரகப்பெயரின்,
ஓங்குயர்தீர்த்தமுள்ளதத்தலையினுவப்பொடுந்தாரகைக்கடவுள், பூங்
குழல்வணங்கிற்றாரகப்பிரமமறையினைப்புங்கவன்புகலும். (7)

அவ்வுழிக்கந்தவாவியொன்றுளதாலதன்புன லாடிவாட்டடக்கட், கொவ்வையங்கனிவாய்க்குறமகள்கொழுநற்றொழுதவர்கொடுந்துயர்ப்பிறவிப், பவ்வம்விட்டொழிவர்துண்டிவாவியினிற்படிந்துயர்துண்டியைங்கரன்றன், தெய்வமென்கமலச்சேவடிபணிவோர்சிந்தையின்விழைந்தனபெறுவார். (8)

அன்னதன்றென்பால்விளங்குறுபவானிதீர்த்தமொன்றுளததின்மூழ்கிப், பொன்விழுதோடிக்கிடந்தெனப்படர்ந்தபுரிசடைப்பவானியைவணங்கின், முன்னரும்பிறவிதொலையுமோர்ஞானவாவியொன்றுளததின்மூழ்கி, மன்னுஞானேசற்பணிந்திடில்மரணகாலையின்ஞானம்வந்தடையும். (9)

பொருகடல்குடித்துங்குடித்தெதிரெடுத்தும்புயல்கிடந்துறங்குதண்சோலை, விரைவளந்தருநீர்க்கங்கைசூழ்காசிவிண்ணவனுறையுளின்றென்பால், மருவியதெறிநீர்மாதவதீர்த்தமதுபடிந்தென்னையும்வணங்கின், அருளின்வைகுண்டத்தினிதுவீற்றிருப்பாதன்பவனுரைக்குமாறரிதால். (10)

அத்தலைச்சிறந்தபிதாமகதீர்த்தமொன்றுளதலங்குநீராடிப்
பைத்தலைத்துத்திவாளரவணிந்தபிதாமகேசனைவழிபடுவோர்
முத்தியினடைவார்பகீரததீர்த்தமொன்றுளதாங்கதின்மூழ்கி
மைத்தவழ்மிடற்றுப்பகீரதக்கடவுட்பணிந்தவர்வானவராவார். (11)

மறைமுழுதுணர்ந்தோர்பரவுமார்க்கண்டதீர்த்தமொன்றங்குளததனில், நிறைபுனலாடிக்கறைமிடற்றணிந்தமார்க்கண்டநிருமலன்றுளில், நறுமலர்தூவிவிழைவுடன்றொழுவோர்நாகிளவெருமையேறுகைக்குந், தெறுசினத்தறுகண்மறலிவெவ்வலையிற்சிமிழ்ப்புறுதலகில்வீற்றிருப்பார். (12)

இன்னனகடவுட்டீர்த்தமுற்றுறைப்பிற்பலவுளவிவையெலாமோங்கி, மன்னியமணிகன்னிகைதனைத்தினமும்வணங்கும்வைகுண்டமாதவன்பூங், கன்னியம்படலைப்பசுந்துழாய்வீரமாதவன்காலமாதவன்மற், றன்னருந்தசாவதாரமூர்த்திகளுங்காசியெங்கணுமினிதுறைவார். (13)

நாரணனைஞ்ஞூற்றுவர்கள்முப்பதின்மராமையினுருவு நண் ணி
னர்கள், ஓரிருபதின்மர்மீனுருவமைந்தோருயர்ந்தகோபாலர்நூற்
றெண்மர், ஆருயிர்குறையாவருந்தவத்தமணராயிரர்சிறந்தமுப்ப
தின்மர், ஏர்பெறுபரசிராமர்நூற்றெருருவரிராமரோர்துளவணிபெரு
மான். (14)

நீயுமிழ்குருதிகெட்டிலைச்சூலமேந்தியசிவகணமறுநூ
றயிரமிவர்கள்காசிமாநகரமளிக்குநரைம்படைக்கடவுள்
மாயவன்காவற்கணங்களுமறுநூறாயிரம்வான்பெருங்கதையும்
பாயிருட்பிழம்புபருகுவெஞ்சுடர்கால்நேமியுந்தாங்குபுபரிக்கும். (15)

கனைகதிர்த்திகிரிக்கேசவன்முதலாய்க்கண்ணனீறுவறு நான்
கும், புனைதுழாயலங்கல்மாதவருளராங்கவர்திறம்யாவரேபுகல்வார்,
எனவெடுத்தியம்புகாலையினிறைவன்வரவுபார்த்திடமுனம்விடுத்த,
கனிநெடும்பணைத்தோட்கொடுஞ்சிறைக்கலுழன்போந்தடி பணிந் தி
வைசாற்றும். (16)

ஆயிரங்கோடிபருதிவான்பூத்ததாமெனவலர்கதிர்பரப்பி, மீயுய
ரேற்றுக்கொடிமணிச்சுடரவிளங்கொளிவிமானமேற்பொலிந்து, பா
யிருவிசும்பினமரரேத்தெடுப்பப்பல்லியந்துவைத்திடவாதி, நாயகன்
வருதல்காண்டியென்றுரைப்பநோக்கினனுகனைத்துயின்றோன்.

அறுபத்தொன்றுவது விந்துமாதவன்
அக்கினிவிந்துவுக்குத் தீர்த்தமகிமையுரைத்த அத்தியாயம்
முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—1572.

## அறுபத்திரண்டாவது
## விசுவநாதர் காசியையடைந்த அத்தியாயம்.

---

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நெய்ம்முகங்கமழுஞ்செம்முகத்திகிரிநீனிறவண்ணனின்றேத்த, மைம்முகிலகடுகிழித்தெழுந்தோங்குமணிமதிற்காசிமாநகரிற், செம்மணிச்சுடிகைவாளராவசைத்ததெய்வநாயகனடைந்திடலும், அம்மவாங்குற்றசெய்திகளனைத்துமறைறகொனமுருகவேளறையும். (1)

இருதடங்கிடந்தவொருதனிமுளரியீர்ந்துழாய்முகுந்த னுமொருகோட், டருவிவீழ்ந்தென்னநிறைகடாங்கவிழ்க்குமைங்கரக்கடவுளுமுவந்து, பருதியஞ்செல்வனருமறைக்கிழவன்கணங்கள்யோகினியிவர்பலரும், விரவினர்சூழமுரட்படைச்சூலவிண்ணவன்றன்னுழையெதிர்ந்தார். (2)

களிற்றுரிப்போர்வையந்தணன்வருதல்காண்டொறுங்காண்டொறுந்தத்தம், உளத்திடையுவகைமீக்கொளவணங்கிநிற்றலுமொருதனிக்கடவுள், தளிர்த்தபோன்பினைங்கான்றன்னைத்தழீஇயினனுச்சிமோந்திருப்பத், தெளித்தநான்மறையோன்வலத்துமாலிடத்துஞ் செம்மலையேத்தினரிருந்தார். (3)

மற்றுமாங்குறைந்தசிவகணமுதலவானவரியாரும்வெங்கதிர்கால், ஒற்றையங்குழையோனினிதருட்கடைக்கணேக்கமுற்றுவந்தனரிருப்ப, முற்றுணர்கேள்விமறைகொணன்முகத்துமுப்புரிநூலணிமுனிவன், கற்றையஞ்சடிலத்தண்ணல்மென்மலர்ப்பூங்கழலிணைபணிந்திவைகழறும். (4)

நெஞ்சகம்வெருவக்கரமலர்கூம்பநிருமலனருண்முகநோக்கிக், கஞ்சமாமலரினாசுவீற்றிருக்குமுனிவரன்கருணையங்கடலே, வெஞ்சுடர்வடிவேல்விறற்றிவோதானன்விழுமியன்றவநிறைத்திலனல், அஞ்சினனவன்றனாசுகோல்கோடவியற்றுரூதாங்கிருந்தனனல். (5)

அடிகணுமேவல்முடித்திடாத்தீமையகன்றிடப்பாம்பின்மேற் கிடந்த, படிமுழுதேத்துமிலிங்கமொன்றமைத்துப்பழிச்சினனென வுரைபகர்ந்து, கடிகமழ்செய்யநறுமலர்தூவிவணங்கலுங்கறைமிடற் றொந்தை, ஒடிவினின்பூசையுவந்தனம்வெருவாதுறைதியென்றரு ளொடுமுரைத்தான். (6)

எண்ணருங்கணங்களாதபன்முதலயாரையுந்தனித்தனிநோக் கிப், புண்ணெடுபழகிவெண்ணிணநோய்ந்தபொருதிறற்கணிச்சி யெம்பெருமான், அண்ணலங்காசிநகரினிலிலிங்கமமைத்தினிதிருத்த லினுவந்தேம், உண்ணடுக்கெய்திவெருவலென்றருளாலுரைத்துமா தவனையுமுவந்தான். (7)

இன்னணமிருக்குமமைதியிலெவருமேத்துகோலோகம்விட் டிழிந்து, மன்னியசுனந்தைதசுமனைசுசீலைசுரபிபத்திரையெனவயங் கும், பன்னருஞ்சீர்த்தித்தேனுவேவாரைந்தும்புகுந்துதீம்பான்மழை பொழியாப், பொன்மலர்களுலும்வாவிகளனைத்தும்பொலிவுறப்பெரு க்கியவன்றே. (8)

ஆங்கதுநோக்கியிதன்பெயர்கபிலதீர்த்தமென்றழல்மழுப்படை யோன், நீங்கறவுரைப்பவிண்ணவராடித்தற்பணஞ்செய்தலுஞ்சிற ப்பின், ஓங்கியகருணையக்கினிச்சுவத்தர்பஞ்சதமொழிவிலாய்ச்சியர் கள், பாங்குறுமரபிற்சோமபாரென்னும்பண்ணவர்பிதிர்க்கள்வந்த டைந்தார். (9)

பண்ணவர்பிதிர்க்கள்திங்களங்கண்ணிப்பரமனை நோக்கியிப்புன லின், மண்ணியாடுநர்தந்தொடருறுபிதிர்க்கள்வான்கதியதனிலெஞ் ஞான்றும், நண்ணுதல்வேண்டுமெனவரங்கேட்பவளித்திடுமெல்லை யின்றி, விண்ணுயர்குடுமிக்கொடுஞ்சியந்தடந்தேர்விரைவினிற் புகுந்ததென்றுரைத்தான். (10)

உலகெலாம்பூத்தவுந்தியங்கடவுளொளிர்மணிமலர்க்கரந்தாங்க மலர்செழுங்கமலப்பொருட்டுறைபிரமன்வாசவன்சாமரையிரட்ட அலகில்பல்கணங்கள்வணங்கியேத்தெடுப்பவந்தரதுந்துமிமுழங்க இலகொளிக்குடுமிக்கொடுஞ்சியந்தேரினெம்பிரான் விரைவினி லிவர்ந்தான். (11)

ஓரெழுகோடியைங்கார்கோடிவயிரவரொன்பதுகோடி, சீர்கெழுமெண்டோணிலிக்ள்மயின்மேற்செல்லும்வே லுழவரெண் கோடி, ஏர்பெறுமியக்கரொன் றரைக்கோடியிசைகவில்கின்னரர்கோடி, கூர்துதிப்பிறைப்பற்புயங்கமோர்மூன் றுகோடிதானவரிருகோடி. (12)

முப்பதுகோடிமேலுமுக்கோடி வானவ ர்முனிவரெண்பான்மேல், வைப்புறுமாறுயிரர்மனைவாழுமுனிவருமத்துணைவகுத்துச், செப்புறுகணமோர்கோடிமேலிருபானுயிரந்திவவியாழ்வல்லோர், ஒப்பிலெண்பதினுயிராறுபதினுயிரவர்வானிறைந்தகூத்தியரே. (13)

ஏயநற்சேடியுறையும்விஞ்சையர்களிரண்டுநூ று யி ர த்தொரு பான், ஆயிரர்காமதேனுவெட்டிலக்கங்காருடமகளிராறிலக்கம், மீயுயர்வரையெண்ணுயிரஞ்சிறந்தவான்பதிவிளம்புமுந்நூறு, பாய்திரைக் கடலேழெண்டிசைக்கரியைம்பத்துமூவாயிரநதிகள். (14)

யாவருஞ்சூழ்ந்துவணங்கினர்போத வென்னையா ளுடையவெம்பெருமான், பாவடிக்களிறுமாய்கதிர்ச்செந்நெற்கழனியிற்ப கட் டிள வாளை, தாவமுட்குடக்கூன்சங்கினம்வெருவித்தடந்தொறுமருவிமுத்துயிர்க்கும், காவுடுத்தோங்குகங்கைநீர்வேலிக்காசிமாநகரில்வந்தடைந்தான். (15)

இனையநற்காதைகேட்டுளோர்நவின்றேரொழுதிறேரினிதெனவியந்தோர், பனைவகிர்ந்தன்னபடர்மருப்பெருமையூர்திதன்பதியினிற்புகாது, கனைகடல்வயிறுகுழையமத்தெறிந்துகடவுளர்க்கின்னமுதீந்த, புனைதுழாயலங்கற்பண்ணவன்காணுப்பூங்கழல்நீழல்வீற்றிருப்பார். (16)

## அறுபத்திரண்டாவது விசுவநாதர் காசியையடைந்த அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—1588.

## அறுபத்துமூன்றாவது
## விசுவநாதர் முனிவனையழைத்த அத்தியாயம்.

---

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

கூந்தலம்பிடிசூழ்களிறுமாய்கழனிக்குரைபுனற்காசிமாநகர்விட்,
டேந்தெழிற்குடுமிமந்தரத்தெய்துநாள்முதலிற்றைநாள்காறுங்,
காந்துமுத்தழல்செய்கைசிடமுனிவன்கருதரும்யோகினிலமர்ந்தா
ன், ஆய்ந்தநூற்கேள்விநந்தியீண்டவனைத்தருதியென்றமலனுங்
கறைந்தான். (1)

நந்தியாண்டெய்தியோகினிலுறங்குநான்மறைக்கிழவன்மெய்
குளிர்ப்பக், கொந்துலாங்கமலப்போதினிற்றடவிக்கொன்றையந்
தொடையலெம்பெருமான், வந்திடப்பணித்தானெனலுமம்முனிவன்
வல்விசைவளியின்வந்தெய்திச், சந்தணிந்தோங்குதடமுலைக்கவுரித
ன்னொடுமிறைவனைத்துதித்தான். (2)

தாமரைத்தெரியனுன்மறைக்கிழவன்றவத்தினைவியந்துநீவே
ட்ட, காமருவரமின்றளிப்பலென்றெறிநீர்க்கங்கையந்திரையலைபுரட்
டுஞ், தேமலர்ச்சடையோனுரைப்பநின்கமலச்சேவடிப்போதிலெஞ்
ஞான்றும், எழுறுமிதயத்தும்பிரீங்காமலிருந்திடவேண்டுமென்றி
சைத்தான். (3)

இருள்புறந்துரக்குமிளநிலாத்திங்களீர்ஞ்சடையந்தணனுவந்
து, பொருவருந்தவத்தோயெற்றொழுதன்றிநுகர்கிலேனெனநெறி
நீண்ட, பரிசினல்வேட்டவாமுனக்களித்தேம்மதுதாள்பணிந்து
மகேத்த, மருவருமுத்திபெறுகுவையோகாசாரியனென்னவும்
வாழ்த்தி. (4)

நின்னுடைப்பெயராற்போற்றுமிவ்விலிங்கநீடுகவருட மூன்றித னை, முன்னினர்பணிந்தோர்யோகமெய்திடுவருலகெலாமுத்தியெய் துவதற், கன்னநல்லிலிங்கத்துறைதம்யாமென்னவரம்பலவருந்தவ ற்களித்துக், கன்னன்மென்றனையகுதலையந்தீஞ்சொற்கவுரியோர்பங் கன்வீற்றிருந்தான். (5)

## அறுபத்துமூன்றுவது விசுவநாதர் முனிவனையழைத்த அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—1593.

## அறுபத்துநான்காவது காசியின் சிறப்பை விசுவநாதர் முனிவர்க்குரைத்த அத்தியாயம்.

---

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

எறிதிரைசுருட்டும்பூம்புனலசியும்வரணையுமியைந்துழிமுதலாய்க், கறைமிடறணிந்தசங்கமேச்சுரமீருகியகடவுணற்றீர்த்தத், துறை யுநாரகியருந்தவமியற்றியுணர்வரும்யோகினிலமர்ந்த, மறைபயில் வாழ்க்கைமுனிவரர்யாருமணிமிடற்றெறந்தைபாலடைந்தார். (1)

அருட்கடன்பூண்டவறுதொழிற்செல்வரடைதலுமவர்முகநோ க்கிப், பொருப்புவிற்குனித்த புரிசடைப் பெருமானினிதினி னருந்த வம்புரிந்தீண், டிருத்திரோவெனலும்வானவர்மகுடகோடிகளிறை ஞ்சிடுபொலந்தாள், திருத்தருகமலஞ்சென்னியிற்சூட்டிச்சிந்தைதளை ந்தேத்தினர்புகல்வார். (2)

வேத்தராமகுடத்துச்சியிற்பரிக்கும்விரிகடல்மாநிலமுழுதும்,
த்துநல்வளங்கூர்காசிமாநகரினுண்டுகளெறிவளிபுடைப்பச், சேய்த்
துளார்மேற்சென்றுறினுமுவிலேவேற்செல்வாயுறைவரிந்நகரில்,
ந்திடாதுறைவார்க்கின்பமேயலதுநிகழ்வதொன்றுளதுகொலெ
ர்ரூர். (3)

தீங்கரும்பெருத்திற்றூங்குதேனிருலிற்சிவேனவாற்கன்றுபாய்ந்
தழக்கும், பூங்கதிர்க்கழனிவிளிம்புடுத்தோங்குபூம்புனற்காசிமாந
கரின், நீங்கருமன்புற்றருந்தவமாற்றிநீவிரிங்கிருத்தலால்வேட்ட,
யாங்கடிதளித்துமெனநிலாக்கொழிக்குமிளமதிக்கண்ணியோனிசை
த்தான். (4)

பண்ணுலாங்கிளவிபங்கனுன்பொதிந்தபழிபடும்யாக்கைபோம
ளவும், அண்ணலங்காசியுறைந்திடல்வேண்டுமன்றியும்யாங்களீண்ட
மைத்த, ஒண்ணிறவிலிங்கத்துறைந்திடல்வேண்டுமெனவிருகரங்
குவித்திறைஞ்சி, எண்ணுறுதவத்துமறைபயில்முனிவர்யாவருந்
தனித்தனியிசைத்தார். (5)

தீயுமிழ்தறுகட்படவராவசைத்தசெம்மலுமுவந்தொருபதினெ
ண், ணாயிரத்தறுநூற்றெண்பதின்மேலுமைந்துடையந்தணர்தமக்
குப், பாயிருவிசும்பினமாருமறியாப்பதத்தொடுமவ்வரமளித்து,
மீயுயர்குடுமியிமயமீன்றெடுத்தவிளங்கிழைதன்னொடுமறைந்தான்.

வருபெருந்தவத்துநான்மறைக்கிழவர்யாவருமுளமகிழ்பூப்ப,
அருளொடுமமைத்தவிலிங்கபூசனைசெய்தன்பொடுமினிதுவீற்றிருந்
தார், பொருவிலிக்காதையுரைத்துளோர்கேட்டோரெழுதினோருள
மகிழ்பூத்தோர், விரிகடலுலகமுழுவதுமேத்தவெளிதினில்வீடுபெற்
றுறைவார். (7)

**அறுபத்துநான்காவது காசியின் சிறப்பை விசுவநாதர் முனிவர்க்குரைத்த அத்தியாயம் முற்றிற்று.**

---

ஆகத்திருவிருத்தம்—1600.

# அறுபத்தைந்தாவது
# பராசரஇலிங்க முதலான இலிங்கத்தின் கதையுரைத்த அத்தியாயம்.

---

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பிருகுநாரணர்மார்க்கண்டர்மாண்டவியர்பராசரர்பெருந்தவ மதங்கர், அருணர்காபாலிமருத்துவர்குலாலர்காலவர்வச்சாரீதர், பொருவிலம்முனிவர்முதலியோரமைத்தவிலிங்கமையாயிரம்புடை சூழ், மருமலரிதழிபுனைந்தசேட்டேசன்கதையினைக்கேளெனவழங்கும். (1)

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மைம்மலர்க்கூந்தறாழவால்வளைவாய்விட்டார்ப்ப
அம்மவோமருங்குனோமென்றடிச்சிலம்பலறியேங்கப்
பொம்மல்வெம்முலையிற்றாழ்ந்தநுண்டுகிற்போர்வைசோர
எம்மையாளுடையவன்னையெழில்செய்பந்தாடினாளே. (2)

கந்துகம்படைத்தமுத்திக்கரும்பினைவியந்துநோக்கிச்
சிந்தைமாழாந்துதீயவிகுவனுற்பலனென்றோதும்
வெந்திறலசுரர்நெஞ்சின்விழைவினாலுருவமாறி
எந்தைதன்கணங்கள்போலவிறைவிமுன்னெய்தினாரே. (3)

ஆங்கவர்போந்தமாயமறிந்திலள்நிலவுகாலும்
பூங்கதிர்த்திங்கள்வேணிப்புங்கவன்கண்ணிற்காட்டத்
தீங்குறுமசுரராவிசென்றிடவாரந்தாழ்ந்த
கோங்கிளமுலையாள்செங்கைப்பந்தினாலெறிந்துகொன்றாள். (4)

வெந்திறலசுரராவிவீட்டியபொன்னம்பந்து
கந்துகேச்சுரனென்றோதுமிலிங்கமாகியதிக்காதை
சிந்தையினுணர்ந்தோர்கேட்டோர்பவக்கடல்சேராரென்னில்
அந்தநல்லிலிங்கங்கண்டோர்பேற்றினையறையொணாதால். (5)

அவ்வுழிநிகழ்ந்தகாதையொன்றுளதறைவல்கேட்டி
தெவ்வடுபிரகலாதன்மாமன்வெஞ்சினவுவைவேல்
எவ்வமிலோசைபோயதுந்துமிநிருதனென்போன்
அவ்வியமவித்தநெஞ்சத்தமரருக்கமரினாற்றான். (6)

விண்ணவர்வலியுஞ்சீரும்விளைவதெவ்வாறென்றுள்ளத்
தெண்ணினனாகிநாளுமெரியினையூட்டியுண்ணும்
மண்ணுறைதேவர்தம்மால்வந்ததம்மறையோர்ச்செற்றால்
நண்ணருமாற்றலெல்லாம்நடந்திடுமென்னவோர்ந்தான். (7)

மாசறுதவத்தின்மிக்கமறைபயில்முனிவர்யாரும்
ஆசினிவருக்கைபோழ்ந்துகவிழ்தலையரம்பைசெற்றுப்
பாசிலைப்பதுமத்தோட்டிற்பகட்டிளவாளைதுஞ்சுங்
காசியினுறைவோரென்னத்தன்னுருக்கரந்துபுக்கான். (8)

நீரிடைக்கரந்துவேதமுனிவரைக்கொல்லுநீலக்
கார்தவழ்காவினெய்திக்கண்ணுறுமவரைக்காயும்
ஊர்வயினதிதிபோலவுறைந்தவருயிரையுண்ணும்
போர்கெழுதறுகட்சீயப்போத்தெனத்தகையநீரான். (9)

இன்னணந்திரியுநாளிற்சிவநிசியெய்தலோடும்
பொன்னவிர்கடுக்கைவேணிப்புனிதனைப்போற்றிசெய்யும்
பன்னருமறையோர்முன்னர்ப்பாய்சினக்குருதிப்பேழ்வாய்க்
கொன்னுனையெயிற்றவெங்கட்கோளரியென்னச்சென்றான். (10)

கொல்லியவெதிர்ந்தகூற்றிற்குறுகியவசுரர்வேந்தை
எல்லொளியிலிங்கநாப்பணீர்ஞ்சடையெண்டோள்முக்கட்
டொல்லைமாமறையோன்றோன்றிச்சுடர்மணிக்கரங்கடம்மால்
மல்லலந்தடந்தோள்பற்றியாருயிர்மாய்த்திட்டானே. (11)

அறுதொழில்முனிவர்யாருமடல்கெழுமவுணர்ச்செற்ற
பிறைமுடிப்பெருமான்றாளிற்பெய்ம்மலர்மாரிசிந்தி
இறைவவீண்டுறைதல்வேண்டுமென்னலுமதற்குநேர்ந்தான்
கறையணற்புயங்கம்வீக்குகனைகழற்புனிதன்றானே. (12)

அன்றுதொட்டுலகஞ்சேட்டேச்சுரன்றனையன்பினோடும்
மின்றிகழெயிற்றுப்பேழ்வாய்வியாக்கிரேச்சுரனென்றோதும்
மன்றவிக்கதைகேட்டோர்பயின்றுளோரெவரும்வான்றோய்
பொன்றிகழ்குடுமிச்செம்பொற்பொருப்பில்வீற்றிருப்பாரன்றே. (13)

அறுபத்தைந்தாவது பராசரஇலிங்கமுதலான இலிங்கத்தின் கதையுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—1613.

## அறுபத்தாறுவது
## சயிலேசச்சுரன் முதலான ஈச்சுரர் கதையுரைத்த அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

கரும்பனமொழியாள்பங்கிற்கடவுள்சேட்டேசன்றென்பால்
அரம்பையர்போற்றும்லிங்கமொன்றுளததனின்பாங்கர்ப்
பெரும்புனல்வாவியொன்றுண்டதனிடைப்படியப்பெற்றோர்
விரும்பியயாவுமெய்திவீட்டுலகடைவரன்றே. (1)

வாசுகீச்சுரன்கபாலிவயிரவன்பிதாமகேசன்
ஏசில்காற்கோடகேசனிடபேசன்கவுமாரீசன்
ஆசில்கங்காதரேசன்கந்தருவேசனாதி
ஓசைபோமிலிங்கமாங்குப்பற்பலவுண்டுமாதோ. (2)

மண்டுநீம்புனலறாதவரணையங்கரையில்வைகிக்
கொண்டல்கண்படுக்குஞ்சோலைக்குளிர்புனற்காசிதன்னை
முண்டனங்குண்டனேசமெனுமிரண்டிலிங்கமுற்றும்
அண்டரேத்தெடுப்பகாளுமருள்புரிந்தளிக்குமன்றே. (3)

அத்தலைநிகழ்ந்தகாதையொன்றுளதறைவல்கேண்மோ
மைத்திருநேங்குஞ்சாரல்வான்றொடுகுடுமிநெற்றி
வித்தகவிமயவேந்தைவேட்கைமீதூரநோக்கித்
தத்தரிநெடுங்கட்செவ்வாய்முகிழ்முலைமேனைசாற்றும். (4)

ஓட்டினிலையமேற்றுண்டோர்பெயரின்றியீமக்
காட்டிடைவதிந்துசாம்பரணிந்துவெங்கரித்தோல்போர்த்த
நாட்டமூன்றுடையபித்தற்களித்தநம்நங்கைசெய்தி
கேட்டிலமெங்கணென்றுணர்ந்ததுகிளத்துகென்றாள். (5)

சேட்டிளம்பரிதியன்னசெழுமணிக்குப்பைசெம்பொன்
மோட்டிளங்குரும்பையன்னமுகிண்முலைமகளிர்வெள்ளம்
ஊட்டரக்குண்டபொற்றூசலப்பிலகொண்டுதெண்ணீர்
வாட்டமில்வரணைசார்ந்தான்வளங்கெழுமிமயவேந்தே. (6)

கன்னியம்புரிசைசூழ்ந்தகாசியிலிறந்துளோர்கள்
பொன்னவிர்கடுக்கைவேணிபுனைந்திளமறிமானேந்தி
இன்னமுதுகுக்குந்தூயவிளநிலாக்கண்ணிவேய்ந்து
மின்னவிர்விமானமூர்ந்துமிடைந்தனர்போகக்கண்டான். (7)

ஊடலிற்பிரித்தவோர்காழ்முத்தமுமுயிரையன்னார்
கூடலிற்பரிந்துசிந்துங்குரூஉச்சுடர்மணியுந்துற்றி
நீடொளிபரப்புவானமீனெனநிலவுகான்று
சேடமைமறுகுதோறுங்கிடப்பனதெரியக்கண்டான். (8)

நறைமலர்த்தருக்களெல்லாங்கற்பகநதியினாட
உறைதருமடவார்யாருமுருப்பசிமுதலமாதர்
சிறைபடுபுனல்களெல்லாங்கங்கைநீர்திகழுமுன்றிற்
கறவைகள்யாவுந்தேனுவெனவுளங்களிப்பக்கண்டான். (9)

சிறந்தொளிர்குடிகளியாவுஞ்சிவகணமாவிநீங்கி
இறந்துளோர்திங்கள்வேணியெம்பிரானுருவுகொள்வர்
மறந்துமிந்நகர்க்குவேதனெப்புமைவருக்குமேயென்
றறங்கிடந்தொழுகுசிந்தையலமரநோக்கிநின்றான். (10)

பாவடிப்பருமயானைப்பகட்டெழின்மார்பன்முன்னர்
மாவடுநோக்கிபங்கன்வளநகர்க்கங்கையாடிக்
காவடிகொணர்வோன்றன்னைக்கண்ணிணைகளிப்பநோக்கி
ஓவறுதவத்தோயிந்நாட்டரசெவனுரைத்தியென்றான். (11)

அமைவருமுலகமெல்லாமமைத்தளித்தழிக்குமேலோன்
இமயமென்கொடியினோடுமீண்டரசமைக்குஞ்செய்தி
கமையுடையிமயவேந்தகருதிலைபோலுமென்னத்
தமரவெண்டிரையினோங்குமுவகையங்கடலுட்டாழ்ந்தான். (12)

பன்னகப்பள்ளிமேயபாற்கடல்துயின்றுளோற்கும்
அன்னமூர்ந்தவற்குமற்றையமரர்க்குமறியொணாத
முன்னவனாகியங்கண்முழுதுலகளிக்குமூர்த்திக்
கென்னையாமளிப்பதென்னநாணொடுமுள்ளத்தெண்ணி. (13)

நிதியறைதிறந்ததென்னநெடுநிலைமாடமோங்கி
மதிவடிம்பிடறுங்காசிமாநகர்தன்னில்வெய்யோன்
புதையிருட்குப்பைசீத்துப்புகுமுனிப்பொருளினாலோர்
சிதைவறுகடவுட்பைம்பொற்சினகரமியற்றுகென்றான். (14)

இலைத்தொழிற்பூண்செய்திண்டோளிமயவேந்துரைக்குமாற்றந்
தலைக்கொடுகடவுட்டச்சனியற்றியகோயில்தன்னில்
நிலைத்தலைவிளங்குபாவசயிலமென்றிசையினீங்கா
துலப்பறுதிருவின்மிக்கவிலிங்கமொன்றமைத்துவப்பால். (15)

மங்குல்வாய்துடைக்குஞ்சோதிமண்டபமொன்றுதூய
திங்கள்வெண்மணியிற்செய்துதன்பெயரதனிற்றீட்டி
அங்கதிரெழுதன்முன்னம்பஞ்சமாநதத்தினாடித்
தங்கியகோயில்முன்னர்மணியெலாங்குவித்துத்தாழா. (16)

துளிமுகில்கடல்வாய்க்கொண்டுசூலுளைந்தலறுஞ்சாரற்
குளிர்பனிதூங்குஞ்செம்பொற்குடுமிதாழிமயவேந்தன்
இளநிலாக்கொழிக்குந்திங்களீர்ஞ்சடைப்பெருமான்பங்கில்
வளரிளமுலையையீன்றமன்னவன்போயினானே. (17)

எண்டிசைப்பரப்புமேயவிருண்முகங்கிழிக்கும்வெய்யோன்
கண்டுயிலெழுப்பத்தோன்றுங்காலையிலிமயவேந்தன்
அண்டரும்வியப்பச்செய்தவாலயநோக்கிக்குண்டன்
முண்டனனென்போர்செங்கைமுகிழ்த்தனரிறைஞ்சிப்போனார். (18)

பாட்டளிதுவைப்பவிண்டுபருமுகைவெடித்தமன்றற்
சேட்டிளங்கொன்றையோடுதிங்களங்கண்ணிவேய்ந்த
நாட்டமூன்றுடையபெம்மான்வரணைமாநதியின்வெய்யோன்
ஓட்டறவிவந்தசெம்பொற்சினகரம்புதிதொன்றுண்டால். (19)

யாதெனவறிதறேற்றேறமென்றுபூந்துணர்மந்தாரப்
போதரித்தொழுகுநீத்தப்பொருதிரைக்கங்கைசூழும்
மேதகுகாசிகாப்போர்மேருவிற்குனித்தமேலோன்
பாதமென்கமலஞ்சென்னிசூட்டினர்பணிந்துசொன்னார். (20)

மூதலகனைத்துந்தானுமுன்னவனறியான்போன்று
மாதொடுவிரைவினெய்திவான்றொடுகுடுமிநெற்றி
மீதுயர்பசும்பொற்றிண்டேரினிதிழிந்திமயவேந்தன்
கோதறவினிதுசெய்தமணிமதிற்கோயில்புக்கான். (21)

புகுதலுநிலவுத்திங்கள்மணியினாலமைத்தபொற்பார்
திகழொளியிலிங்கநோக்கிச்சிதாரிமழைக்கட்கூந்தன்
முகிண்முலையமைத்தார்யாரேமொழிகெனவதனிற்றீட்டும்
நிகரில்வாசகத்தைச்சுட்டிநின்னுடைத்தாதையென்றான். (22)

என்னலுமகிழ்ச்சிபொங்கியிறைவனீங்கிருத்தியார்க்கும்
முன்னரிதாயமுத்தியளித்துநாமென்னமுன்னோன்
அன்னநல்விலிங்கந்தன்னிலமர்ந்தனனியம்புகாதை
தன்னையார்பயின்றோர்கேட்டோர்யாவருமுத்திசார்வார். (23)

**அறுபத்தாறாவது சயிலேச்சுரன் முதலான ஈச்சுரர் கதையுரைத்த அத்தியாயம் முற்றிற்று.**

---

ஆகத்திருவிருத்தம்—1636.

## அறுபத்தேழாவது
## இரத்தினேசன் கதையுரைத்த அத்தியாயம்.

---

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வார்மதுதுளிக்குங்கொன்றைமலர்புனையிரத்தினேசன்
சீர்கெழுகாதைதன்னைத்தெளிவுறப்புகல்வனென்னக்
கார்வயிறுடையநீண்டவரைபகக்கதிர்வேல்தொட்ட
போர்கெழுகுமரன்கும்பமுனிமகிழ்பூப்பச்சொல்வான். (1)

பணவரவசைத்தவேணிப்பரமனையுமையாணோக்கி
மணியினாலமைத்தவின்னவிலிங்கத்தின்வரலாறெல்லாந்
துணிவுறவுரைத்தியென்றுதொழுதலுமியம்பலுற்றான்
பிணிமுறுக்கவிழ்ந்துதீந்தேன்பெய்மலர்க்கொன்றையோனே. (2)

கடைக்குழையெறிந்துமீண்டுகயலெனமிளிரும்வேற்கண்
மடக்கொடிநினக்குநுந்தைவழங்குவான்கொணர்ந்தசெங்கேழ்ச்
சுடர்க்கதிர்மணிகளியாவுமிவ்வுழிச்சொரிந்தானன்னோன்
தடுப்பருந்தவத்தாலீண்டோரிலிங்கமாச்சமைந்ததாமால். (3)

உன்னுடைத்தந்தையுய்த்தபொன்னினாலுலகமீன்றோய்
இன்னநல்லிலிங்கம்வைகச்சினகரமியற்றுகென்ன
அன்னைதன்னருட்கணோக்கமடைந்துயர்தெய்வத்தச்சன்
பொன்னவிர்குடுமிநெற்றிச்சினகரம்புனைந்தானன்றே. (4)

கன்னலிற்கனிந்ததீஞ்சொற்கன்னியிவ்விலிங்கநோக்கில்
முன்னரேயுளதாமுந்தைதருமணிமொய்த்தவாற்றால்
அன்னநன்மணியினாமமடைந்ததித்தலைநிகழ்ந்த
பன்னருங்காதையொன்றுகேளெனப்பகரலுற்றான். (5)

கவின்குழைத்தெழுதுமேனிக்கலாவதியெனுமோர்கூத்தி
பவங்கெடவளிக்குமரத்தினேசுரன்முனம்பரிவினோடும்
உவந்துளங்களிப்பத்தூயசிவநிசியுற்றகாலைச்
சிவந்தடிமலர்கள்நோவச்சீர்வழாதாடினாளே. (6)

தேவகிதன்னிலெம்முனுடையதிறத்தால்மற்றப்
பவமதுதனிலிரத்தினாவல்லியாம்பழிப்பில்போய்க்
கவிரிதழ்முத்தமூரற்கலாவதியென்னுங்கூத்தி
நவையில்கந்திருவவேந்தனன்மகளாயினாளே. (7)

ஆயதினையநல்லவணிகிளர்நரம்புவீக்குந்
தூயமென்றிவவுநல்யாழ்விஞ்சையின்றுறைகள்போகி
மீயுயர்விசும்புமண்ணும்வனப்பினைவியந்துபோற்றச்
சேயரிநெடுங்கட்செவ்வாய்த்திருந்திழைவளருநாளில். (8)

தாமரைத்தடங்கட்செவ்வாய்ச்சந்திரலேகைதீஞ்சொல்
தேமலரனங்கலேகைசித்திரலேகையென்னுங்
காமர்தோழியர்களோடுங்கலைமகள்பாதம்போற்றி
நாமநல்விஞ்சையாவுநலனுறவுணர்ந்தாளன்றே. (9)

பொற்பினுக்கிணைமற்றில்லாப்பொம்மல்வெம்முலையினுடன்
முற்பவத்தியல்புதோன்றத்தோழியர்மூவரோடும்
அற்பினிற்றினமுங்காசியடைந்தெதமைவழிபட்டல்லால்
விற்கொடும்புருவவாட்கண்விளங்கிழைநுகர்தல்செய்யாள். (10)

இன்னணஞ்செல்லுநாளோர்கங்குலினெறிவேலுண்கட்
பொன்னவிர்கோதைபாடவுளமகிழ்பூத்துநின்பேர்
மன்னவவொருவனின்னைக்கனவினில்மணக்குமன்றோ
நன்னுடைக்கொழுநனென்றொருவரமளித்திட்டேமால். (11)

அவ்வரம்பெற்றதன்மைதோழியர்க்கிசைப்பவன்னோர்
எவ்வமில்தவத்தாற்பெற்றாயிவ்வரமென்னவோதிக்
கொவ்வைவாய்முகிழ்மென்கொங்கைக்கொழுமணிவல்லியோடுந்
தெய்வநாண்மலர்க்கொம்பன்னார்தம்முறைச்சேர்ந்தாரன்றே. (12)

ஆயிரங்கதிர்கள்வீசியலைகடன்முகட்டிற்றோன்றிப்
பாயிருட்பிழம்புசீக்கும்விரிகதிர்ப்பரிதிவேந்தன்
மீயுயர்குடபால்வெற்பின்வீழ்தலும்வேலைசூழ்ந்த
மாயிருஞாலமுண்ணவந்ததுமாலைக்கூற்றம். (13)

பானிலாச்சொரியுமந்தண்பச்சிளங்குழவித்திங்கள்
வானுலாய்த்திரிதனோக்கிக்காதன்மீதூரமாழ்கி
வேனிலான்பகழிபாயமெல்லணைப்புறத்துவீழ்ந்து
கானுலாமலர்மென்கூந்தல்கண்படைபொருந்தினாளே. (14)

சூழ்சுடர்க்கற்றைநகாலுந்துளங்கொளியிரத்தினசூடன்
காழிருட்கங்குன்மேயகனவினிலழகுவாய்ந்த
பாழியந்தடந்தோள்வெற்பிற்பணைமுலைசெருமுங்கப்புல்லி
யாழினோர்புணர்ப்பினின்பக்கடலகத்தழுந்தினாளே. (15)

கனவெனக்கருதாதின்பக்கடலிடைத்திளைத்துநாணி
நனவெனவிழித்தலோடும்நல்லிருட்பிழம்புநீங்கிப்
பனியிருவிசும்பிற்செங்கேழ்ப்பரிதியஞ்செல்வன்றோன்றப்
புனைசெய்மேகலையாள்காமம்பொறுக்கிலள்புழுங்கினைந்தாள். (16)

## கலிவிருத்தம்.

தோளாமணியனையதூமுறுவற்செங்கனிவாய்த்
தாளார்கமலமலர்த்தாக்கணங்குகண்டகளுக்
கேளாதவர்பாற்கிளப்பதற்குநாணிமிக
வாளாவவரோடுங்காசிநகர்வந்தடைந்தாள். (17)

திங்கள்வடிம்பிடறுந்தெய்வச்சினகரத்தின்
மங்கையர்சென்னெறியின்மணிபீசன்றாள்போற்றிக்
கங்கைநதிக்கரையிற்கார்வண்டிசைபாடிக்
கொங்குலவும்பூந்தேறல்கூட்டுண்ணுங்காவுறைந்தாள். (18)

திங்கள்மணியின்விளிம்படுத்ததீரத்துக்
கொங்குலவுவாவியிடைக்கூந்தற்பிடியாட
வெங்கட்கடாங்கவிழ்க்கும்வேழம்புழைக்கரத்தாற்
கங்கைப்புனல்வாரியாட்டுவதுகண்ணுற்றாள். (19)

கண்டாள்நெருநற்கனவு தனைநினைந்தாள்
விண்டாளுள்ளாவிவெதும்பினாள்வெய்துயிர்த்தாள்
வண்டார்குழல்சோரவாட்டடங்கண்ணீர்வாரத்
தண்டாதுதூற்றுந்தளிரணைமேற்சாம்பினாள். (20)

கள்ளநோய்செய்யுங்கருந்தடங்கட்காரிகைதன்
உள்ளநோய்தோராருறுதுயரமென்கொலென
வள்ளவாய்த்தாமரையின்மாமயிலைத்தோழியர்கள்
மெள்ளவேதாங்கிவிழிகலுழ்ந்தீதோதுவார். (21)

ஐயோகமலத்தணங்கன்னாய்நிற்பிரிந்தும்
உய்யோமெனவோகிடந்தாயெனவோதிக்
கையோடுகைந்நெரித்துக்காவிநெடுங்கண்ணினீர்
மையோடொழுகவயிறலைத்துமாழ்கினார். (22)

தென்னம்பொதியிற்செழுஞ்சந்தனத்தேய்வை
இன்னிளம்பூந்தென்றலின்முகமேற்பூசுதலுந்
தன்னைமறந்துதழல்போலவெய்துயிர்க்குங்
கன்னிமுலைமேற்கனல்பிழிந்தாலொத்ததே. (23)

ஆறணிந்தசென்னியமலன்றனைத்தொழுத
பேறிதுவோவென்றுபெருந்தடங்கணீர்வார
நீறுபுனைந்துநிமலன்றனையாட்டும்
தேறுகுளிர்வாசநறுந்தெண்ணீர்தெளித்திட்டார். (24)

தெய்வநறுந்தெண்ணீர்ச்சிறுதிவலைமேற்படலும்
மையொழுகுவேற்கண்மதர்நீங்கிவார்காந்தட்
கையின்முகவேர்துடைத்துக்கையற்றநாணினொடுந்
தொய்யின்முலைமூடித்துயிலெழுந்தாள்போலெழுந்தாள். (25)

மின்னேர்மருங்குல்விளைந்ததுயர்க்கடப்பா
டென்னேமறையாதியம்புகெனவிரப்பத்
தன்னேரிலாததளிரியல்நாண்மீதூரப்
புன்மூரல்கோட்டிக்கனவின்றிறம்புகல்வாள். (26)

கங்குலிடைநின்பாற்கனவிற்கலக்குமவன்
கொங்குண்குழலாய்கொழுநனெனக்காகுமெனத்
திங்கள்மவுலியுரைத்ததிறநினைந்து
தங்குமலர்ப்பூவணைமேற்சார்ந்துதுயில்கூர்ந்தேன். (27)

பூங்கணைவேளன்றொருவன்பொதியவிழ்ந்து
தேங்கமழும்வாசமலர்ச்சேக்கைதனிவந்தெய்திப்
பாங்கிமீரென்றோள்நலனுண்டுபைப்பையவே
நீங்கினன்போலேயென்னெஞ்சுபுக்கொளித்தான். (28)

மின்னேரிடையீர்நனவென்றுகண்விழித்தேன்
என்னுயகனையெனதுயிரைக்கண்மணியைப்
பொன்னாரமளிப்புறந்தேடிக்காணமற்
கொன்னேதளர்ந்துகொடுந்துயரங்கூர்ந்தனனால். (29)

சந்தாடுகொம்மைத்தடமுலையீர்கூரிருள்வாய்
வந்தாவிகூட்டுண்டமால்யானைச்சேவகன்றன்
செந்தாமரையாள்திளைக்குமணிமார்பம்
அந்தோயானின்னுமணையப்பெறுவேனோ. (30)

எண்ணார்கடந்தவெறுழ்வலிப்பொற்றிண்டோளுந்
தண்ணார்மதிமுகமும்வாளாவொருதமியேன்
உண்ணீர்மைகொண்டவொளிர்தாளவாணகையுங்
கண்ணாரவின்னமும்யான்காணப்பெறுவேனோ. (31)

நந்தாவிளக்கனையநன்னுதலீரித்துயரந்
தந்தாவிகொண்டவருனேக்கந்தான்கிடக்கக்
கந்தாடுகோபக்கடாயானைமன்னவன்றன்
அந்தாரகலமறக்கவறியேனால். (32)

உள்ளங்கவர்ந்தென்னுளத்தூடுபுக்கொளித்த
கள்வன்றனையெனக்குக்காட்டாதொழிவீரேல்
துள்ளுங்கயல்போற்றுணைவிழியீரிவ்வுலகம்
எள்ளும்படியானிறந்துபாடெய்துவனால். (33)

எவ்வுலகத்துள்ளாரெனினுமிமைப்பளவிற்
செவ்விமதிமுகத்துச்செம்மல்தனைக்காட்டிரேல்
நவ்விவிழியீர்நடக்குமெனதாவியென
மெய்வெதும்பிமாழ்கிவிளிகுற்றாள்போல்விழுந்தாள். (34)

(வேறு) கலிவிருத்தம்.

சந்திரலேகையென்றுரைக்குந்தையலும்
அந்தமில்வனப்புடையனங்கலேகையுஞ்
செந்திருநிகரெழிற்சித்திரலேகையும்
பைந்தவள்பிழைக்குமாறுள்ளத்தெண்ணினார். (35)

மனையுமூன்றுலகினுள்மன்னர்யாரையும்
புனையுமென்படத்திடைப்பொறித்துகாட்டினாற்
கனவிடைவந்துயிர்கவர்ந்துபோயினான்
இனையனென்றியம்புமென்றெழுதல்மேயினார். (36)

இந்திரன்முதலியவமரர்யாரையும்
புந்தியாற்படமிசைப்பொறித்துக்காட்டினள்
மந்தரவரையெனவளர்ந்துவீங்கிய
சந்தணிபூண்முலைச்சந்திரலேகையே. (37)

மலர்தலையுலகுறைமன்னர்யாரையும்
இலகொளிப்படத்திடையெழுதிக்காட்டினள்
விலகிவில்லுமிழ்வடமணிந்துவீங்கிய
அலர்முலைத்திருநுதலனங்கலேகையே. (38)

அவிரொளிப்பாதலத்தரசர்யாரையும்
இவர்வுறப்படத்திடையெழுதிக்காட்டினள்
கவரிதழ்ப்பணைமுலைக்காமர்வேல்விழித்
திவவுயாழ்மருட்டுசொற்சித்திரலேகையே. (39)

பழுதறுசந்திரலேகைபண்பினால்
எழுதியபடமிசையமரர்யாரையுந்
தொழுதனள்மனநிலைதுணிந்திலாளென
அழுதனளுயிர்த்தனளன்றியென்செய்வாள். (40)

அண்ணலம்பொலங்கொடியனங்கலேகைதான்
நுண்ணிதிற்றீட்டியபடத்தைநோக்கிஞள்
மண்ணுறைவேந்தரென்றறிவுமாழ்கிஞள்
எண்ணம்வேறுற்றபின்னியைதல்யாவதே. (41)

நீதருசித்திரலேகைதீட்டிய
பாதலத்துறைதருபாந்தள்வேந்தருள்
ஏதமிலழகுடையிரத்தினசூடனைக்
காதலால்விழிமலர்களிப்பநோக்கிஞள். (42)

அருத்தியிற்கண்ணிஞலனங்கலேகைக்குத்
திருத்தகுபூண்முலைச்சித்திரலேகைதான்
வரைத்தவிப்படத்திடைமன்னன்மேலிவள்
கருத்தெனச்சந்திரலேகைகாட்டிஞள். (43)

மாணிழைமனநிலையுணரமங்கையர்
காண்வருபடத்தினைக்கையினீக்கலும்
வேணவாவொடுமுளம்விரகமீக்கொள
நாணினள்முனிந்தனள்நகைத்துமாழ்கிஞள். (44)

கனவிடைக்கண்டவன்வடிவங்கண்டியாம்
இனையனென்றறிவுறவியற்றுந்தெய்வமே
வினைகுழல்நின்னிடைக்கூட்டுமையலால்
நினைவழியேயெலனநிகழ்த்திஞரரோ. (45)

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இன்னகூறிமடமாதர்காசியினகன்றுதம்பதியினேகலும், மின்னுநக்கபிறைவாளெயிற்றனழல்விட்டுயிர்த்தமுழைவாயினன், கொன்னுனைப்பகழிகாலும்வெஞ்சிலைகுனித்தகையனெதிர்தோன்றிஞன், துன்னுபோரிலிமையோரைவென்றுயர்சுவாவெனும்பெயர்படைத்துளான், (46)

மென்றுவாளெயிறு தின்றுகண்ணினிடைவெவ்வழற்சிகை கொளுந்தவோர், குன்றுகால்கொடுநடந்ததென்னவருகொற்றவாளசுரேறனான், கன்றுநெஞ்சினிடைகாமவெங்கனல்கனற்றவண்டுகறிகற்றிடும், மன்றனாறுகுழல்மாதர்நால்வரையும்வவ்விவானினிடையேகினான். (47)

அன்னகாலையிலலக்கணெய்திநனியஞ்சிவஞ்சிநிகரங்நலார், மின்னுடங்குவதுபோனடுங்கியுளம்விம்மிவிம்மிவிழி நீருகப், பொன்னெடுஞ்சிகரிகால்வளைத்துயர்புரங்கனற்றுமணியீசனே, கன்னன்மென்குதலைபங்கின்மேவிவளர்களைகணேயெனவரற்றினார். (48)

தஞ்சமின்றிமணியீசவென்றுரைசெய்தையலார்குதலைமெல்லவே, அஞ்செவிப்படலுமஞ்சலஞ்சலென்றிரத்னசூடனவணெய்துரு, வெஞ்சமர்த்தொழிலின்வல்லையேலமர்விளைத்தியென்றுமனமெதிர்ந்து, உஞ்சுபோவதரிதென்றுவெற்றிவளையூதிவாளமருடற்றினான்.

உருத்தவெஞ்சமரினெய்தினோருயிரருந்திமென்றசையொழிந்திடா, தரத்தமுண்டொளிறுவெஞ்சினக்கதையழன்றுதானவன்விடுத்தலுந், தரித்தசெங்கைவடிவாள்விதிர்த்தமரர்தலைபனிப்பவுருமேறுபோற், சிரத்தின்மீதுவருகதையைநூறுதுணிசெய்துபோரிடைசெருக்கினான். (50)

எறிந்தவெங்கதைசிதைந்துவீழ்தலுமிலங்குவாளெயிறு தின்றுதன், மறங்கனிந்தவரிவிற்குனித்துமழைபோலவெங்கணைவழங்கலும், அறங்கொள்சிந்தைபெறுரத்னசூடனழலம்பினாலவையறுத்துமேல், பிறங்குகின்றபிறைவாய்நெடும்பகழிபெய்தவன்றனுயிர்வவ்வினான். (51)

சுவாவெனுங்கொடியதானவன்றலைதுணிந்துமண்ணினிடைவீழ்தலும், உவாமதித்திருமுகத்தினீருமதுபேருமூருமுறையாடுமின், அவாமிகுந்தவுணனும்மைவவ்வியதவன்கொலன்பின்மணியீசனுந், தவாதபேரொளியினாமமோதியிடுதன்மையெங்ஙனெனவோதினான்.

கனவில்வந்துறமணந்தெனுருயிர்கவர்ந்தகள்வனுமிவன்கொ
லாம், கனவில்வந்தெதமையெடுத்தவல்லசுரனுமறப்பொருதுகருணை
யால், துனைவில்நம்முயிரளித்தகோனுமிவனென்றுதோழியருணர்ந்
திட, வனைகருங்குழல் மடந்தைகண்கொடு விளம்பமற்றவர் விளம்பு
வார். (53)

மென்கருப்புவரிவில்லுமைங்கணையும்விட்டுவந்தவெழில்வேனி
லாய், மன்பெருங்கருணையாழிதேரில்வசுபூதியென்றுரைசெய்மன்
னவன், இன்புறும்புதல்வியிவடனுமமுமிரத்தினவல்லியிவளுக்கியாம்,
அன்பினேவல்புரிதோழிமாரெனவனங்கலேகையுரையாடினள்.(54)

தந்தையேவல்கொடுகாசியீசனடிதாழுநாளிலொருநாளிவட்,
கெந்தையுன்கனவில்நின்பெயர்க்குரிசிலெய்துமற்றையவனின்புறுஞ்,
சிந்தைகூர்கொழுநனுருமென்றுயர்திருந்துநல்வரமளித்ததும், வந்து
கங்குலின்மணந்தவாறுமிவள்மம்மர்நோய்மிகவுழந்ததும். (55)

மணணிலவிணணிலவிரபாதலததிலுறைம
ரைந்துயாங், கண்வழுக்குபடமன்பினோடுமெதிர்காட்டநாகருலகத்தி
ல்வாழ், அண்ணல்மேல்மனம்விழைந்ததும்பதியினடையுமேல்வைத
னிலசுரர்கோன், உண்ணடுக்குறவெடுத்தவாறுமொளிர்சித்திரலே
கையுரையாடினள். (56)

செயிர்விளைத்தவசுரேசனுருயிர்செகுத்தலக்கணுறுமெங்கடம்
உயிரளித்ததிறன்மன்னநின்குலமுமூருநின்பெயருமோதென
வயிர்படைத்தமதன்வாளியாலுளமயங்கிமத்தினெறிபட்டவெண்
தயிரெனச்சுழலுநெஞ்சினோடுமுயர்சந்திரலேகையுரையாடினள்(57)

## சந்தக்கலிவிருத்தம்

பின்னோதுவன்மைக்கண்கவர்பிறைவாணுதல்மடவீர்
பன்மாமலர்களுலுந்தடமிதனிற்படிகுற்றால்
முன்னோதியரத்னேசனுமுன்றோன்றுவனென்ன
நன்மாமணியனையாருமந்நளிர்வாவிபடிந்தார். (58)

வண்டோலிடுகுழல்மங்கையர்வாவிப்புனல்மூழ்கித்
தண்டாமரையுறைவாளெனவெழுபோழ்துயர் தடனும்
வண்டோளுடைரத்னேசனிலங்குஞ்சினகரமுங்
கண்டார்துளிமுகில்கண்ணுறுமயிலாமெனக்களித்தார். (59)

எங்குற்றனமெங்கெய்தினமென்றென்றுவியப்புற்
றங்கட்டிருவன்ஞரினிதுறையும்மமைதியினில்
திங்கட்டிருநுதலாருறுசெயஞர தனைறைய
வங்கக்கடனிகர்கேள்வியன்வசுபூதியடைந்தான். (60)

வந்தெய்திய தன்றூதைமலர்ப்பாதம்வணங்கி
அந்தாமரைமயிலன்னவளடிநோக்கினணிற்பக்
கொந்தார்சடையிரத்னேசனினருளாலலர்கோதாய்
பைந்தாய்கொலெனக்கைகொடுபுறநீவியுவந்தான். (61)

மடமானுயிர்நிகர்தோழியர்வசுபூதிமுன்னெய்தி
அடல்கூர்விடைரத்னேசனின்னருளாலிருள்கங்குற்
கிடைசேர்கனவினில்வந்ததுமசுரேசனையெறிவெம்
படையாலுயிர்கவர்குற்றதுமிவணுமெனப்பகர்ந்தார். (62)

பேராண்மையுமழகுஞ்சிலைவேள்பெண்மையவாவுந்
தாரார்திணிதோளுந்திகழ்தடமார்பமுநோக்கி
யாராமிவனெனுமாசைகொடன்றேனுழையெய்தி
ஊர்பேர்குலமுறைசொல்கெனவசுபூதியுரைத்தான். (63)

கின்னுமநிகர்க்கும்பெயர்நிலவுப்பிறைநுதலோர்
மின்னுள்வருமொருதானவனவளைக்கொடுவிரைவில்
தன்மாநகர்புகுமற்றவன்மடியத்தலைதுணியாப்
பொன்னாணிபிதிர்சிந்திளமுலையாவிபுரப்பாய். (64)

அவணின்குலமனையாமெனவவிர்செஞ்சடைமுக்கட்
குவிமென்முலைபங்கன்பகர்கனவின்பொருள்குறியா
இவர்வெள்விடைரத்னேசனைநாடோறுமிறைஞ்சுந்
தவமெய்ப்பயனெய்திற்றெனவன்போடிவைசாற்றும். (65)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மணியறைதிறந்தன்னபாதலநகரில்வைகும்
பணியரவரசிற்சங்கசூடனும்பழிப்பில்வேந்தற்
கிளையறுகுமரன்யான்மற்றென்பெயரித்னசூடன்
அணிகொள்கந்தருவதேயத்தடல்கெழுமாசவென்றான். (66)

அணங்காவணிகொள்பூங்கச்சைதைத்தரத்னேசன்முன்னர்
மணங்கமழ்குழலிரத்னவல்லியைமகிழ்வினோடு
நிணங்கொள்வேலிரத்னசூடற்குதகமோடளித்தானேரார்
உணங்கிநின்றிரங்குமுன்றிலுயர்வசுபூதிதானே. (67)

முருகுவாய்மடுத்துண்டாடிமூசுவண்டாற்றும்பைந்தார்
மருகனைப்புதல்வியோடும்வான்றொடுகுடுமிநெற்றிப்
பருமணிக்கதிர்கள்கான்றுபாயிருட்பிழம்புசீக்குந்
திருவநீண்மாடமோங்குதன்னகர்க்கொண்டுசேர்ந்தான் (68)

குளிர்மதிபொருவுசங்கசூடவயிறலறியார்ப்ப
நளிகடலனையகேள்விக்கணிதர்நன்கமைத்தநாளில்
அளிபடுமலர்க்கோதைக்குநம்பிக்குமழல்சான்றாகக்
களிமகிழ்தூங்கவின்பக்கடிமணம்புரிவித்தானே. (69)

திருநுதலனங்கலேகைசித்திரலேகையோரேழ்
தரைபுகழ்வனப்பின்மிக்கசந்திரலேகையென்னும்
அரிவையர்தந்தைமார்தம்மருளினால்ரத்னசூடற்
குரியவிற்கிழமைபூண்டாங்குயிரெனவொழுகுநாளில். (70)

மீயுயர்வெள்ளிவெற்பின்விஞ்சையர்வேந்தன்செங்கேழ்ப்
பாயொளிப்பரிதிமார்பின்மருகற்குப்பரிவினோடுங்
காய்சினக்களிறுதிண்டேர்கலினவாம்புரவிவெள்ளம்
ஆயிரகோடிசெம்பொன்கொள்கெனவருளினானே. (71)

கந்தடுபுழைக்கைநால்வாய்க்காய்சினக்களிறுபோல்வான்
சிந்தூரத்திலதநெற்றித்தெரிவையர்நால்வரோடும்
அந்திநன்பகலென்றோராதாய்கதிர்க்கற்றைநாலும்
இந்திரபவனமன்னதன்னகர்க்கேகினானே. (72)

ர்குடியிருந்தமாதரிளமுலைப்போகமாந்தி
ஊர்வமோடளப்பில்காலமளப்பரும்போகந்துய்த்து
ாரநிமிர்ந்துவீங்கும்வனமுலைமகளிரோடுங்
கார்மிடற்றெந்தைசெம்பொற்கழலிணையெய்தினனே. (73)

திவள்மதிக்குழவிவேந்தன்சென்னிரத்னேசன்காதை
துவரிதழ்வளைக்கைநல்லாய்சொற்றனநீயுமுன்னைப்
பவமதிற்றுக்கணீயவ்விலிங்கமொன்றமைத்தாய்பாங்கின்
துவிரொளியம்பிகேசனம்பிகையாயினைமால். (74)

வரைமுகம்புழுங்கவைவேல்மாட்டியவயிரத்திண்டோள்
முருகனுங்குளனிக்காதைமுறையினிற்பயின்றோர்கேட்டோர்
உரைபகர்ந்திடுவோரன்பினெழுதினோருவப்போர்யாரும்
ரவிநன்மகனூறுற்றும்புங்கவன்போல்வரென்றான். (75)

அறுபத்தேழாவது இரத்தினேசன் கதையுரைத்த
அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—1711.

## அறுபத்தெட்டாவது
## கிருத்திவாதேசன்றோன்றிய அத்தியாயம்.

---

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சிறையளிகுடைந்துபாடும்பூங்குழற்செல்வியோடும்
இறைவன்வார்கங்கைவேணியிலங்குரத்னேசன்காதை
அறைதருமமைதிதன்னிலரியயன்முதலதேவர்
முறையிடுமோதைகேட்டுமுழுமுதல்மூரல்பூத்தான். (1)

அண்டநீள்சுவரினெல்லையளந்துணரளவுகோலிற்
கொண்டலினகடுபோழுங்கூர்நுதிமருப்பிற்றாகி
மண்டமரழுவநீந்துந்திறன்மயிடாசுரன்றன்
திண்டிறற்புதல்வனாகுங்கயாசுரன்சீற்றவேலான். (2)

மாசறுமவன்றன்மேனியளவினைவகுத்துநோக்கி
யோசனைபுகலினொன்பானாயிரமுளதாமன்னோன்
வீசியகரத்தினாற்றவிசைநெடுங்காற்றின்மொத்துண்
டாசையங்கிரிகள்மெல்லென்சருகெனப்பறக்குமன்றே. (3)

அன்றவனுயிர்ப்புத்தாக்கவன்றுகொல்கடல்களேழும்
இன்றளவொழியாதோங்கியாற்றுவதிருள்கால்சீத்து
மின்றிகழ்மவுலிதாக்கவிளங்குறுதிங்கள்முன்னங்
கன்றியதன்றோவின்னுங்களங்கமாயிருந்ததம்மா. (4)

ஆடகச்செம்பொற்குன்றமங்கையினள்ளியேந்திப்
பீடுறுவதுகொலீசன்வில்லெனப்பிடித்ததென்னும்
ஓடைமால்கரிகளெட்டுமொருகையிற்பற்றிவீசுஞ்
சேடனைப்பறித்துக்கச்சிற்பாரைமேற்சிக்கவார்க்கும். (5)

மடிசெவிப்புழைக்கைநால்வாய்க்கயாசுரன்வாங்குதெண்ணீர்
உடைதிரைக்கடல்களேழுங்குளப்படியென்னவுன்னும்
அடியினைப்பெயர்க்குந்தோறுமாழியங்குன்றஞ்சூழ்ந்த
படிமுதுகுளுக்கித்தாழ்ந்துபாதலத்தொளிக்குமன்றே. (6)

கருநிறச்செங்கட்பேழ்வாய்க்கயாசுரனமரினேற்ப
வருவதெத்திசையிற்கொல்லோவெனமலர்ப்பொகுட்டின்மேலோன்
ஒருமுகமதனால்நான்குதிசைகளுமொருங்குநோக்கற்
கரிதெனவெண்ணியன்றோநான்முகமாயினானே. (7)

அண்ணலங்கமலப்புத்தேளாழியோன்வெருவியோடக்
கண்ணழல்கதுவிச்செந்தீவடவையிற்கனன்றுகால
விண்ணுருமேருகோடிவீழ்ந்தெனவாறிமுக்கட்
பண்ணவனுமையினோடுமிருந்துழிப்படர்ந்திட்டானே. (8)

வெருவலிரிமையோரொன்றுவிடைக்கொடியுயர்த்தவெந்தை
கருவரைநடந்ததென்னக்கயாசுரன்வருதல்நோக்கி
ளியுமிழ்ந்தூன்வாய்பில்கியிலகுமுத்தலையவேலிற்
தருதியார்கலியிற்பொங்கக்குத்திமேலேந்தினானே. (9)

கடையுகமுடிவினின்றுகளிநடம்புரியுமெந்தை
விடமுமிழ்சூலமீதுவேலைசூழ்ஞாலம்போர்க்குங்
துடையெனக்கிடந்தவீரனெஞ்சகங்குழைந்துதீய
அடையலர்புரந்தீயூட்டுமண்ணலையேத்தினானே. (10)

ாண்டபோன்பாலெம்மைவழுத்தலின்மகிழ்ச்சிகூர்ந்தேதம்
வண்டுவகேட்டியென்னவிளம்பலுமவுணர்கோமான்
ண்டகையெனதுபுன்றோல்மணத்தொடுமென்மைத்தாய
ண்டகுபோர்வையாகக்கருணையிற்புனைதல்வேண்டும். (11)

ன்னுடைமெய்யுமீங்கோரிலிங்கமாயமர்தல்வேண்டும்
ன்னவவெனலுமீசன்முகமலர்ந்தளித்தல்செய்தான்
னகமணிச்செஞ்சூட்டிற்கிடந்தபார்பாவியேத்த
ன்னதுகிருத்திவாசேச்சுரமெனவமர்ந்ததாமால். (12)

லவேலசுரன்மெய்யிற்கழிந்துமண்கீண்டவாற்றாற்
பாடனமென்றோதுந்தீர்த்தமுந்தோன்றிற்றன்று
லைவெள்ளருவிதாழுமலைமகள்மகிழ்ந்துகேட்ப
வெங்கரித்தோல்போர்த்தநிருமலனிகழ்த்தினானே. (13)

பூத்திளவெண்டிங்கள்நிலாக்கதிர்பரப்புநெற்றி
லாதேதாங்குமுக்கட்கிருத்திவாசேசற்கன்பிற்
றயர்காலையேற்றுமடிசிலுண்பதற்குச்சார்ந்த
றவெங்கழுகுகாக்கைமுதலியபறவைதாமே. (14)

ழ்வலிப்பறவைகாக்கையாவையுமிரியச்சீற
கியுண்ணடுங்கியந்தவாவியில்வீழ்தலோடும்
றதருபனிவெண்டிங்கணெடுநிலவுதறுதூய
றயுடைப்பவளச்செங்காலன்னமாய்த்திரிந்தவன்றே. (15)

அன்றுதொட்டன்னவாவியாகியததனைச்சூழக்
குன்றவிற்காத்திகாயனேச்சுராமுதலாய்க்கூறும்
பொன்றிகழ்கடுக்கைமாலைபுனைபவனேசமீறும்
ஒன்றியவிலிங்கமோதிலயுதமாயுரைப்பர்மாதோ. (16)

அறுபத்தெட்டாவது கிருத்திவாதேசன் கதையுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—1727.

## அறுபத்தொன்பதாவது
## துர்க்கன்அரசாட்சி அத்தியாயம்.

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அரம்பையர்காந்தட்செழுமலர்க்கரத்தினலங்குசாமரைபொதியவிழ்ப்ப, விரும்பினராகியரியயன்முதலவிண்ணவரினிதினேத்தெடுப்பக், கருந்தடங்கண்ணிதன்னொடுமமலன்கருணைகூருருத்திரவாசத், திருந்திடுமேல்வைச்சிலாதரன்புதல்வன்கைதொழுதீங்கிவையுரைப்பான். (1)

மூவகையுலகின்முத்திகூரிலிங்கமுழுவதுங்கொணர்ந்தனனென்றுச், சேவடிதொழலுமொன்பதுகோடிதுர்க்கையுங்கொணர்கெனச்செப்பத், தாவிலன்போடுங்கொணர்ந்தனனென்றுதண்டமிழ்முனிவரன்கேட்ப, மாவடுமருட்டுமதர்வைமென்னோக்கின்வள்ளிகாதலன்மகிழ்ந்துரைப்பான். (2)

பாற்குடந்தூங்குமடியினமேதிபாசடைத்தாமரைகுதட்டித், தாற்றிளங்கதலிப்படப்பைசாய்த்துறங்குந்தண்வயற்காசிமாநகரம், போற்றிமூவுலகுந்தழைத்திடவினிதுபுரந்தருள்சொற்பனேச்சுரிக்கு, மேற்றிசைவதிந்ததுர்க்கைதன்காதைவிளம்பெனவேலிறைவிளம்பும். (3)

ஊன்படுதிகிரிதிசைதிசையுருட்டியுறுவலிச்சுரிகழுத் தாமை,
கூன்புறத்தமர்ந்தவுலகமோர்மூன்றுந்தன்கொடுங்கோல்நனிசெலுத்
தி, வான்படுசெல்வமுழுவதும்வவ்விவானவர்க்கிறையவன்முதல,
தேன்படு தெரியலெண்டிசைப்பாலர் திருவெலாந் தனித்தனிகவர்
வான். (4)

அண்டநீண்முகட்டிலரசுவீற்றிருக்குமருமறைவடித்தவந்தண
னும், வண்டுவீழ்ந்தாற்றுந்தண்டுழாய்முகிலுமணிநெடுவாயிலோர்க்கு
றுகித், திண்டிறலவுணர்க்கிறையொடெம்வரவுசெப்பெனமுகமனன்
னியம்பித், தண்டளிர்க்குடங்கைதலையணையாகத்தமனியமுன்றி
லிற்றுயில்வார். (5)

அலங்குளையரிமானனையவாளவுணனணையங்கொடுந்தழற்கஞ்சி,
இலங்கொளிமழுங்கிப்பரிதியங்கடவுளீர்ங்கதிர்மதியெனத் திரியும்,
விலங்கிவில்லுமிழுங்கோணிலைதிரிந்தனோன்றினுமவுணர் கோன்வி
ளம்பிற், கலங்குதெண்டிரைநீர்மொண்டுகொண்டெழுந்துகரியமைம்
முகிறுளிதூற்றும். (6)

அறந்தலைவணங்கவந்தணராற்றுமருமகமுழுவதுமொளிப்ப,
மறந்தலையெடுப்பவஞ்சமும்பொய்யுநாடொறுநாடொறும்வளர,
இறந்தனமென்னமெய்ம்மைநின்றேங்கவீகையுஞ்ஞானமுமிறப்பக்,
கறங்குதெண்டிரைசூழுலகமோரேழுங்கலியுளங்களிப்புறக்காத்
தான் (7)

விண்ணவரியக்கரவுணர்கந்திருவர்விஞ்சையர்நாகர்வல்லரக்கர்,
மண்ணுறைவேந்தருடற்றுவாளமரிலாருயிர்மாய்ந்திடாவண்ணங்,
கண்ணுதலளித்தவரத்தினன்செருவிற்கருதலர்க்கசனியேயறனைய,
அண்ணலஞ் சுடர்வே லவுணர்கோ னுலக மறங்கெட வளிக்குநா
ளதனில். (8)

அள்ளிதழ்க்கமலவெள்ளிமண்டபத்திலரும்பெறலரசுவீற்றிரு
க்கும், ஒள்ளிழைகேள்வற்குரைத்தும்யாமென்னவோடையம்புகர்
முகப்பரூஉத்தாள், வெள்ளைமால்யானைப்பாகனேமுதலவிண்ணவர்
யாரும்வந்தெய்திக், கள்ளயர்வுயிர்க்குந்நறுமலர்தூவிக்காமலர்குவித்
திவைபுகல்வார். (9)

உடல்சினத்தறுகட்டுற்கனென்றுரைக்குமொருவனின் றேற்ற
மருடற்றும்,அடலினுக்காற்றாதடைந்தனமெம்மையஞ்சலென்றளித்
தருளெனலும், மடலவிழ்கமலப்பொகுட்டுநான்முகத்தோன்வண்டு
ழாய்முகுந்தனோடேகிக், கடகளிற்றுரிவைகாண்டகவணிந்தகண்ணு
தல்கடைப்புறத்தடைந்தார். (10)

கந்தடுகளிற்றினீருரிபோர்த்தகண்ணுதல்முன்னரெம் வரவு,
நந்திபோயுரைத்தியெனவடிதொழலுநளிநிலாப்பூங்கதிரெறிக்குஞ்,
சந்திரமவுலிக்குரைத்தலுமீண்டுத்தருகெனவாங்கவன்புகுத, எந்தை
தாள்வணங்கியரியயன்முதலவிண்ணவரேத்தினரிசைப்பார். (11)

கவிழ்தலையரம்பைமுகில்முகடணவுங்கழனிசூழ்காசியெம்பெரு
மான்,அவுணரிற்கொடியதுற்கனால்மிகவும்வருந்தினமளித்தருளென்
ன, உவணமீதுயர்த்தோன்முதலியவமரருரைத்தலும்வெருவல்நீரெ
ன்னப், புவனகோடிகளுமீன்றசிற்றுதாப்பூவையைநோக்கியீதுரை
ப்பான். (12)

குழைமுகந்தடவியையரிபரந்துகுமிண்மிசைமறிந்தருள் கொ
ழிக்கும், மழைமதர்நோக்கிதுற்கனாமவுணன்மடிந்திடவாளமருடற்
றிப், பழமறைக்கிழவன்முதலபுத்தேளிர்பருவரல்துடைத்தருளென
லுங், கழையுறழ்தோளிவிழியருள்பரப்பிக்காளராத்திரியைநோக்கி
னளால். (13)

ஐந்தருநீழல்நிரைபுறையரிமானணைமிசையரசுவீற்றிருக்கும்,
இந்திரன்முதலவமரர்தம்பதங்கள்வவ்வியயாவையும்வழங்கி, உய்ந்து
போகுதலோவாளமரழுவத்துன்கிளைப்பரப்பொடுமாவி, சிந்தியேகு
தலோகருத்தெனவவுணற்குரைத்திவண்சேர்கெனவிடுத்தாள்.(14)

மாந்தளிர்பொருவுமங்கலுழ்மேனிமாதுமையீங்கிவையுரைப்பக்,
காந்தண்மென்முகையின்முகிழ்விரல்குவித்துக்காளராத்திரி யெனும்
பூவை, ஏந்திளங்கொம்மைவனமுலைதாங்கியிடுகிடை வருந்துமென்
றேங்கிப், பூந்தளிர்கவற்றுஞ்சீறடிச்சிலம்புபூசலிட்டரற்றவேகின
ளால். (15)

மழைதவழ்குடுமிப்புரிசையிற்றொடுத்தமணிநெடுங்கொடிகள்வான்முகட்டிற், குழவிவெண்டிங்கட்கூன்புறந்தடவுங்குளிர்புனற்காழியினீங்கி, முழவுகண்டுயிலாவளநகர்க்கேகிமொய்புகைப்படலம்விண்புதைப்ப, அழல்விழிப்பகுவாயவுணர்கோனுறையும்வேத்தவைசென்றணுகினளால். (16)

கண்ணிமைகரியவழல்படவிழிக்குங்காய்சினத்தவுணனை நோக்கி, அண்ணல்மாலியானைப்புரந்தான்முதலாய்மாதிரத்தரசுவீற்றிருக்கும், விண்ணவர்செல்வமளித்தியோவமரின்விளிதியோநின்னுளத்தமைந்த, எண்ணம்யாதென்னவணங்குரைத்திடலுமெழினலநோக்கினனுரைப்பான். (17)

ஆன்றமூவுலகினிவ்வுருவமைந்தவணங்கினைக்கண்டிலன்மேனாள், தோன்றுநற்றவத்தாலீங்கினிதடைந்ததோகையைப்பற்றுமினெனலுங், கான்றுவெவ்விடங்கால்கண்ணர்கஞ்சுகத்தர்கதிர்மணிவேத்திரக்கரத்தர், என்றவட்பற்றிநின்மினென்றவுணர்க்கிறைவனைநோக்கியீதுரைப்பார். (18)

தீதுபூத்தலர்ந்தசிந்தையோய்நீதிலரசர்நற்செய்தொழிலிழுக்கித், தூதியர்க்கவர்தல்செவ்விதோவென்றுத்தூநிலாமணிநகைகோட்டிக், காதலுண்டென்னிலாதிநாயகிபாற்கன்னியர்பலருளர்கவர்வான், போதியேற்போதிமுத்தலைப்படைநின்புலவுவாய்மடுப்பமற்றென்றார். (19)

கற்றிரள்புரையுந்தடம்புயன்வெகுண்டுகதிரிளவனமுலையணங்கைப், பற்றுமினென்னநிலவுகஞ்சுகியர்படர்ந்தனர்துடர்ந்துபற்றுதலும், வெற்றிவேலன்னகுழைபொருதலைக்கும்விழிக்கடைசிறிதுசேப்பூரக், கொற்றவன்விடுத்தவெஞ்சினவவுணர்குலத்தொடுஞ்சாம்பராயினரால். (20)

அவுணர்கோன்விடுத்தசுரேந்திரதபனன்மகப்பகையனுமிருகாக்கன், தவலருந்தேவகம்பன்வாளுரோமன்முதலியதானவர்தலைவர், உவரியங்கடலின்மூன்றரைக்கோடிதானையோடுருத்தனர் வளையக், கவர்முலைத்துவர்வாய்க்காளராத்திரிவெவ்வுயிர்ப்பினுற்றிசைதொறுங்கவிழ்ந்தார். (21)

களத்திடைத்தானைகவிழ்தலுங்காணுக்கட்கனல்வடவையிற்பொங்க, உளத்திடைவெகுளிமீக்கொளமுன்னருலவுகஞ்சுகியரைநோக்கி, அளப்பருஞ்சேனையாவையுமீண்டுத்தருதிரென்றவுணர்கோனறையத், துளக்கறவரையுநெடுநிலவரைப்புந்துளங்குறத்தானைதொக்கதுவே. (22)

அறுபத்தொன்பதாவது
## துர்க்கனரசாட்சி அத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—1749.

எழுபதாவது
## துர்க்கன் படையெழுச்சி அத்தியாயம்.

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஆயிரங்கோடிதானைகாவலர்நூற்றறுபதுகோடிபொற்றடந்தேர், காய்சினக்களிறுங்கலினவாம்பரியுங்கோடியற்புதமெனக்கணிப்பர், மாயிருஞாலம்வளைகடற்பரப்பின்மணலுறையிடற்குமாற்றுதேல், பாய்புலிப் போத்திற் றிறல்கெழு வயவர் வெள்ளத்தின் பரப்பையாருரைப்பார். (1)

இன்னநாற்படையோடவுணர்கோன்முனிவுற்றெழுதலுமெழில்கனிந்தொழுகும், மின்னிளங்கொடிபோல்விசும்பிடைப்படர்ந்துமேவருமுலகெலாமீன்ற, அன்னைமுன்னெய்தித்துர்க்கன்வெம்போரேற்றனைத்தனனெனக்கரங்குவித்தாள், கன்னலிற்கனிந்தமென்மொழித்துவர்வாய்க்காளராத்திரியெனுமணங்கே. (2)

மும்மையவுலகின்மலவிருளிரியமொய்சுடர்ப்பரப்பொளிவிளக்கி, எம்மையாளுடையவன்னைவீற்றிருத்தல்நோக்கியபுன்மொழிலவுணன், அம்மவீங்கிவளைப்புணர்ப்பினலாற்றலமைதியாற்றருதிரேவமரர், தம்முடைச்செல்வமளிப்பல்யானென்னத்தானைகாவலர்க்கினிதுரைத்தான். (3)

என்றனுமவுணர்மந்திரித்தலைவிருகரங்கூப்பினரிசைப்பார், குன்றெடுத்தாயர்கோநிரைகாத்துக்குவலயம்பொதிந்தசேவடியோன், உன்றனியாணைகடக்கலனாகியுலகெலாமினிதுனக்களித்துப், பொன்றினன்போலவிரிதிரைபுரட்டுபொற்கடற்புறத்துறங்கினனால்.

கடவுள்மாமணியுங்கற்பகத்தருவுங்கறவையும்வளர்நிதியும், அடல்கெழுவயிரப்படையினோன்செல்வமனைத்தையுங்கவர்ந்தனமன்றித், தொடுகடற்கிறைவன்நீர்மலிசிவிறிக்குறுந்துளிதூற்றிநின்றுழலும், படர்வளிக்கிறைவன்கால்செய்சாந்தாற்றிப்பற்றினன்பைப்பையத்திரிவான். (5)

ஆழற்கடவுள்மடைத்தொழில்புரியுமரும்பெறலிருநிதிக்கிழவன், சீர்கெழுநிதியமுழுவதுநினக்குத்திறையளந்தகன்கடைத்துயிலும், கூர்மருப்பெருமையேறிவர்கடவுள்குற்றுடைவாள்சுமந்துழலும், காரிருள்சீக்குங்கனைகதிர்ப்பரிதிகடிகையினளவையோர்ந்துரைக்கும். (6)

அரவநல்லணிமெய்ப்பூச்சுவெண்சாம்பராடைதோலையமேயுணவு, நிரைகவர்ந்திடுதுமென்னிலீசானனினிதமர்நெடுநகர்வரைப்பின், நரைமுதிர்கிழவேறொன்றுளதென்றேவிடுத்தனம்நாதநின்னேவல், புரியுநர்க்கரிதொன்றுளதுகொலென்றுபொருகடற்றானையோடெழுந்தார். (7)

உடுக்கணமுதிரத்திசைசெவிடெறியவொற்றைவெண்சங்கநின்றலற, வெடித்துயரண்டகோடிகளிடியவெங்குரல்முரசமார்ப்பெடுப்ப, அடித்தலம்பெயர்க்குந்தொறுமுயர்சேடனாயிரம்பணமுடியுளுக்கிப், படித்தலநெளியப்பரந்தெழுதுகளிற்பரவைதூர்ந்திடவெதிர்படர்ந்தார். (8)

கடையுகமுடிவினுலகமோரேழுங்கரந்திடக்கரைக்குறும்பெறியா, உடைதிரைப்பரவைநடந்தெனப்படருமுயர்பெருந்தானையைநோக்கி, விடைவலனுயர்த்தோனிடமருங்கொளிக்கும்வேற்றடங்கண்ணிதன்மெய்யின், அடல்கெழுசத்திபற்பலகோடிதோற்றுவித்தமர்க்கெதிர்விடுத்தாள். (9)

விடுத்தெதிரேற்றசத்திகளைத்தும்விறல்கெழுதானையங்கடலை, மடுத்துவாய்ப்படுத்துவடவையிற்சுவற்றிவாகையந்தெரியல்வேய்ந்தனவால், எடுத்தபேரண்டமங்கையினள்ளியினியமாங்கனியினிற்பிழிந்து, குடிப்பினுங்குடிக்குமென்னிலித்தானைக்குரைகடல்கடக்குமாறிதே. (10)

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

தன்னுடைப்படையுடைதல்கண்டுறுதறுகண்வெஞ்சினவவுணர்கோன், மின்னுநக்கவொள்வாள்விதிர்த்திணைவிழிபுகைத்தழல்சிந்தவே, கொன்னுனைக்கணைபெய்தவாவம்விசித்துவெஞ்சிலைகொண்டுவான், துன்னுபொற்கொடிகட்டுதேர்மிசைசுடருநாணுறவேறினான்.

ஏறுதேரொலியுருமுநாணுறவெறியுநாணொலிகாய்சினத்
தாறுகாய்கரிபிளிறுபேரொலிதார்வயப்பரியேறிவெம்
பாறுதாழ்படைமன்னரேவியபடைகள்போம்வழிகுருதிநீர்
ஆறுபாயொலிதிரைநெடுங்கடலரவநாணவொலித்தவே. (12)

வேலெழுப்படையசனிதோமரம்விசிகம்வாள்கதைகப்பணஞ்
சூலமாலிபிலிற்றுமாரியொருங்குவிட்டெதிர்தூவலுங்
காலகாலனையுய்யுமாறுகடைக்கணித்தருள்பொழிதரும்
பாலலோசனிவிற்பழுத்துமிழ்பகழியாலவைமாற்றினாள். (13)

பண்ணுலாவியமழலைமென்மொழிபடைகள்யாவுமகற்றவெங்
கண்ணழற்பொறிகதுவநீள்புகைகாலும்வெஞ்சினவவுணர்கோன்
விண்ணுளோருயிர்நாளுநாளும்விழுங்கிவெண்ணிணமுடையரு
அண்ணலஞ்சுடர்வேல்விடுத்தலுமஞ்சிவானவரோடினார். (14)

அஞ்சல்வானவரென்றுசெங்கையமைத்தணங்கரவார்த்திடும்
வஞ்சிநுண்ணிடையவுணர்கோனெறிவேலைவாள்கொடுமாற்றவே
நஞ்சுமிழ்ந்தெறிநேமிதேவர்நடுங்கவஞ்சன்விடுத்தலும்
வெஞ்சினக்கதையொன்றுகொண்டதுவிள்ளியமோதிவிலக்கினாள்.

கொற்பழுத்துயர்நேமி நூறுபடுத்தல்கண்டுசினங்கொளீஇ
மற்பழுத்துயர்தோளினொருவாளிதொட்டிதுகாவென
அற்பழுத்தளிகீண்டுமென்மலராமெலோதிநகைத்துநீள்
விற்பழுத்துமிழ்வெங்கடுங்கணையொன்றுகொண்டுவிலக்கினர்.(16)

ஆலகாலமுயிர்ப்பதேழ்கடலடையவற்றவயின்றெழுங்
காலவெங்கனலோடுபிறந்ததுகழிபுலால்முடைகமழ்வது
கோலும்வெஞ்சமரதனில்வானவர்குருதிவேலைகுடிப்பதாஞ்
சூலமொன்றுவிடுத்தணங்கெதிர்நின்றுதோள்புடைகொட்டினான்.

பாறுசூழ்வரவலகைகோடிபடர்ந்துமுன்செலவெண்ணிணச்
சேறுபூசியதிர்ந்துவானுருமேறுபற்பலசிந்தியே
மாறடர்த்திடுசூலமெய்தலுமங்கைசூலம்விடுத்தவன்
வேறும்யாமெனுமாசையோடெதிர்மேவுசூலம்விலக்கினாள். (18)

விலக்கருங்கதையொன்றுகொண்டுவெகுண்டெதிர்ந்திகலவுண
ர்கோன், அலக்கணெய்தவடிக்கவெங்கதையாயிரந்துகளாதலுஞ்,
சிலைக்கொடும்புருவக்கருங்குயில்செஞ்சிலம்புபுலம்பவோர், மலர்ப்ப
தங்கொடுதைப்பவங்கவன்மண்ணில்வீழ்ந்துமயங்கினான். (19)

வெய்யவாளசுரேசன்வீழ்தலும்வெம்பரித்திரள்வெள்ளமும்
மையல்மாமதயானைவெள்ளமள்ளரெண்ணறுவெள்ளமுங்
கொய்யுளைப்பரிபண்ணமைத்தெதிருலவுதேர்நிரையாவையும்
ஐயையேவியசத்திசென்றோரரைக்கணத்திலறுத்ததே. (20)

எழுபதாவது
துர்க்கன் படையெழுச்சி அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—1769.

## எழுபத்தொன்றாவது
## துர்க்கன்வதை அத்தியாயம்

---

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஐயைசேவடியாலுதைப்பவலக்கணுற்றெழுமவுணர்கோன்
வெய்யசேனைகள்யாவுமின்றிவிளிந்தவாறுமனக்கொளா
மையவார்குழலையையோடமர்மலையுமாறரிதென்னவெம்
பையராவின்வெகுண்டுவிண்ணின்மறைந்துபாய்கணைதூவினான். (1)

ஆலிமாமழைதூவிவானெழுமசனியேறனவதிர்தலும்
வேலையேழும்விழுங்குதீமுகவெய்யவாளியின்மாற்றினான்
காலன்வெந்நிடவமர்முருக்கியகருநிறத்திகலவுணர்கோன்
மால்வரைக்குலநூறுகோடிபிடுங்கிநின்றுவழங்கினான். (2)

விடுத்தமால்வரையாவுநுண்பொடியாகிமண்ணிடைவீழ்தரத்
தொடுத்தபல்கணைகோடிகோடியிமைப்பினின்றெதிர்தூவினான்
மடித்தவாயினனெயிறுதின்றழல்மாரிசிந்தியகண்ணினன்
பிடித்தவில்லினனன்னைமுன்னொருபெய்மதக்களிறாயினான். (3)

பாற்றினம்பலகோடிசூழ்வருபருமயானைமுறச்செவிக்
காற்றினாலுயர்குடுமிமால்வரைகால்கிளர்ந்திடவுமிழ்கடாம்
ஊற்றிருந்துயாருவிபாய்தரவூறிவந்தெதிர்மலைதலுஞ்
சீற்றவாளினெடும்புழைக்கைசிதைந்துவீழ்தரவெட்டினான். (4)

ஓடைமால்கரியுருவுவீழ்தலுமுலகம்யாவும்வெருக்கொள
ஆடகக்கிரியடிபெயர்ந்திடவகன்மருப்பினசைத்துமேல்
நீடுயிர்ப்பினிலெழுகடற்புனல்நிலைபெயர்ந்துயராடைகரைப்
பாடுகொன்றிடமைந்நிறத்தபகட்டின்வெவ்வுருவாயினான். (5)

பகட்டின்வெவ்வுருவொழியமுத் தலைவேல்பணித்தலுமவுணன்வான்
முகட்டெழுந்துகையாயிரங்கதிர்முடிகளாயிரமாகியே
தகட்டிதழ்க்கமலப்பொருட்டுறைசதுர்முகத்திறைதன்னொடும்
அகட்டினேழுலகம்படைத்தருளன்னைமுன்னரடைந்தனன். (6)

ஆயிரம்படையாயிரங்கரமிசையெடுத்தடலவுணர்கோன்
மாயிரும்புவிமறையவீசலும்மங்கைவானிலெழுந்துபோய்க்
காயும்வெங்கதிர்தும்மும்வெய்யகனற்கொடுங்கணையொன்றினால்
தீயனுருயிர்வவ்வினள்மலர்சிந்திவானவர்துள்ளினர். (7)

உலகம்யாவுமொடுக்கிமீளவுதோற்றியோருருவாகிமற்
றலகிலாவுருவெய்திமுக்குணமாகிமுச்சுடராகிநீ
டிலகுபேரொளியாய்நிறைந்தருளிறைவியென்றிருசெய்யதாண்
மலர்வணங்கிமுகுந்தனுதியவமராமற்றிதுகூறுவார். (8)

## எழுபத்தொன்றாவது துர்க்கன்வதை அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—1777.

# எழுபத்திரண்டாவது
# வச்சிரபஞ்சர கவசம் உரைத்த அத்தியாயம்

---

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அங்கையிற்கரகந்தாங்கும்பிரமாணியருளினோடுந்
துங்கமென்சென்னிகாக்கவயிணவிதுகளிலாகம்
எங்கணுங்காக்கசெய்யவேள்செழிலுருத்திராணி
தங்குமெண்டிசையுமன்புதழைத்திடவினிதுகாக்க. (1)

கொன்னுனைச்சூலிசென்னிமயிரினைக்குறித்துக்காக்க
மன்னுவெண்பிறைதாழ்சென்னிவயங்கொளிநெற்றிகாக்க
பன்மயிர்ப்புருவகாளும்பரிவொடுமுமையாள்காக்க
என்னையாள்முக்கணீசனிறைவிகண்ணிணைகள்காக்க. (2)

வயமிகுமிமயவல்லிமூக்கினைமகிழ்ந்துகாக்க
செயையொடும்விசையைமேல்கீழிதழினைச்சிறந்துகாக்க
அயிலுடைச்சுருதிதாயவஞ்செவிகாக்கதண்ணென்
பயின்மலருறையுஞ்செல்விபல்லினையுவந்துகாக்க. (3)

சண்டிமென்கபோலங்காக்கதவளநாண்மலரின்வைகும்
ஒண்டொடிநன்றுக்காக்கவிசையைமங்கலைமற்றெருவ்வாக்
கணகவர்நாடிகாக்ககாத்தியாயினியெஞ்ஞான்றும்
முண்டகமலரிற்றாயமுகத்தினைச்சிறந்துகாக்க. (4)

காளமுண்டிருண்டநீலகண்டிமென்கழுத்துக்காக்க
கோளில்பூதாரசத்திசுவற்புறங்காக்ககூர்மி
நீளொளிச்சந்திகாக்கவயிந்திரிநெறியினோடுந்
தோளிணைகாக்கபத்மைதுணைமலரங்கைகாக்க. (5)

கமலைகைவிரல்கள்காக்கவிரசைகையுகிர்கள்காக்க
திமிரமுண்டொளிரும்வெய்யோன்மண்டலத்துறையுஞ்செல்வி
எமதிருவாகுமூலங்காக்கவானவர்களேத்த
அமிர்தலகரிசைநாளுமகன்மணிமார்பங்காக்க. (6)

தரித்திரியிதயங்காக்கதயித்தியர்ச்செகுப்போள்மிக்க
கருத்தொடுமுலைகள்காக்கசகத்தினிலிறைமைபூண்டோள்
திருத்தகுவயிறுகாக்கதிகழ்தபோகதிதன்னுள்ளத்
தருத்தியினுந்திகாக்கவசைவளர்முதுகுகாக்க. (7)

கருதருவிகடைகாக்கக்கடிதலம்பாமைவாய்ந்த
குருமணிச்சகனங்காக்ககுகாரணிகுய்யங்காக்க
அருள்தரவருமபாயகந்தினியபானங்காக்கத்
தெருளுடைவிபுலையென்றுஞ்சிறப்புடைக்குறங்குகாக்க (8)

லளிதைமென்முழந்தாள்காக்கவியற்செபைகணைக்கால்காக்க
களிதருகோரைவாய்ந்தபரட்டினைக்காக்கமிக்க
அளிகொள்பாதலத்திற்செல்வோளணிகெழுபுறந்தாள்காக்க
ஒளிர்நகம்விரல்கள்சந்திரியுக்கிரியுவந்துகாக்க. (9)

நலத்துறைமடந்தையுள்ளங்காலிணைகாக்கதண்ணென்
மலர்த்திருமனையைக்காக்கவயங்குகேத்திரதையோங்கி
உலப்பில்கேத்திரங்கள்காக்கபிரிகரையொழிவறாது
நலத்தகுமக்கடம்மைநன்குறக்காக்கவன்றே. (10)

உயர்சறுதனியெஞ்ஞான்றுமொழிவறுமாயுள்காக்க
மயர்வறுசீர்த்தியாவுமாதேவிகாக்கமிக்க
செயிரறுதருமம்யாவுந்தனுத்திரிசிறந்துகாக்க
இயல்புடைக்குலத்தைவாய்ந்தகுலதேவியினிதுகாக்க. (11)

சற்கதிபிரதைநல்லோரியைபிணைத்தயாவிற்காக்க
விற்கொடும்போரில்நீரில்வெளியினில்வனத்திற்குதில்
இற்புறமதனிலோகசுசர்வாணிகாக்கவென்றுப்
பொற்றருமலர்கடுவிப்புங்கவரோத்தினாரே. (12)

அந்தளிர்புரையுஞ்செய்யவடிமலரிறைஞ்சியேத்தும்
இந்திரன்முதலினோரையெழுகெனநோக்கிநீவிர்
சிந்தையுற்றுரைத்தவச்சிரபஞ்சரஞ்செபிக்கிலாகம்
வெந்திடக்கனற்றுந்தீயவெப்புநோயொழியுமன்றே. (13)

இனிதினிக்கவசந்தன்னையெட்டுருமுறையினோதிப்
புனிதநீரருந்திலுந்திபொருந்துநோயனைத்துந்தீரும்
கனையிருட்கங்குற்போதிற்கவசநன்கோதியேகில்
தினைவுறுகுறுத்தாட்பூதம்பேயிவைதுடர்ந்திடாவால். (14)

பொறையுயிர்த்திடாதுநோயிற்புலம்புவோர்க்கினிதுநீவிர்
அறையுமிக்கவசந்தன்னையருகிருந்தோதிற்றூய
நறியதண்புனலையோதியளித்திடில்நவையிலாத
சிறுவரைவிரைவின்மிக்கசிறப்பொடுமுயிர்ப்பர்மாதோ. (15)

களிறுவீழ்ஞாட்பிற்கூறுங்கவசமோர்ந்தினிதினோதின்
ஒளிறுவேற்பகைவர்தானையுடைந்துவென்கொடுத்துநீங்கும்
வெளிறிலிக்கவசமோதிமென்புனலளிக்கிற்றீஞ்சொல்
தளர்நடைப்புதல்வர்க்கென்றுமுறுபிணிசார்ந்திடாதால். (16)

இனையநற்கவசந்தன்னையாரெடுத்தியம்புகின்றார்
அனையவர் தமையென்றேனுஞ்சத்திகளளிக்குமென்றைப்
புனையிழையமரர்வேட்டநல்வரமளித்தப்பொங்கு
கனையிருட்பிழம்புசீய்க்குந்தன்னுழைக்கரந்துபோனாள். (17)

நற்கனைக்கொன்றவாற்றால்நற்கையாயினளிம்மானைப்
பொற்பின்மங்கலவாரத்திற்புகல்சதுர்த்தசியின்மிக்க
அற்பொடுங்கன்னித்திங்கணவமியட்டமியிற்போற்றில்
பற்பலதுயருநீங்கிப்பார்முழுதாள்வரன்றே. (18)

ஆயிரங்கண்ணியன்னமுகத்தினளன்னகையள்
பாய்பரியூர்திவெய்யவயோமுகிதானிதைபண்பில்
தீயவெம்பிணத்தின்மேலாள்விச்சுவைகெவுரிசெப்பும்
மேயவொன்பதின்மர்காசிவியனகரளிப்பரன்றே. (19)

வயிரவரெண்மரெண்ணெண்கூளிகள்வரம்பில்பூதஞ்
செயிரில்தேவியர்கள்நால்வர்தம்பொதிநறவமாந்திக்
குயில்குடைந்தாடுஞ்சோலைக்குண்டகழுடுத்தசெம்பொன்
எயில்கிடந்தோங்குகாசிநகரினிதளிப்பரன்றே. (20)

இன்னநற்காதைகேட்போர்பயின்றுளோரெழுதிவைப்போர்
துன்னருந்துன்பநீங்கியளப்பரும்போகந்துய்த்துக்
கன்னலிற்கனிந்தநீஞ்சொலரம்பையர்கவரிநீழற்
பொன்னுலகினிதுகாக்கும்புரந்தரன்போலவாழ்வார். (21)

## எழுபத்திரண்டாவது வச்சிரபஞ்சர கவசம் உரைத்த அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் — 1798.

# எழுபத்துமூன்றாவது
# ஓங்காரஇலிங்கத்தின்வரலாறுஉரைத்த
# அத்தியாயம்.

---

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கூன்பிறைமுடித்தசென்னிக்கூத்தன்வண்டறைந்துபாடுந்
தேன்படுகூந்தல்கேட்பத்திரிலோசனத்துரைத்தகாதை
வான்படுதவத்தின்மிக்கமறைமுனிகேட்டியென்ன
ஊன்சுவைத்தொழுதவைவேற்பண்ணவனுரைக்குமன்றே. (1)

அவ்வுழிவிரசைபீடமொன்றுளததனின்பாங்கர்
செவ்விதின்முத்திநல்குந்திரிலோசனவிலிங்கமுண்டாற்
கவ்வைநீர்க்கங்கைதன்னிற்கருதுபிப்பிலமென்றோதுந்
தெய்வநீர்ப்பெருங்கருததீர்த்தமொன்றுண்டுமாதோ. (2)

அரசாற்சித்தர்தம்மாலரக்காலமைத்தலிங்கம்
உரைசெயிற்பாரார்த்தநூறுமொலிபுனற்கங்கையாற்றில்
தெரிவரிதாகச்சித்தரமைத்தருளிலிங்கஞ்செப்பிற்
குருமணிப்பூண்செய்தோளாய்கோடியாகுமன்றே. (3)

என்னுடையன்பர்தம்மாலியற்றியவிலிங்கம்யாவும்
முன்னியித்துணையென்றோதமுடிவிலவிவற்றின்மாளாப்
பன்னருந்துறக்கநாளும்பணிந்தவர்க்குவந்துநல்குந்
தொன்மையவிலிங்கம்யாவுங்கேட்டியென்றினிதுசொல்வான். (4)

வாய்ந்தவோங்காரலிங்கந்திரிலோசனன்வளர்மாதேவன்
ஏந்தெழிற்கிருத்திவாசனிரத்தினேசனியற்சந்திரேசன்
ஆய்ந்தசீரவிமுத்தேசனருட்டருமேசன்காமற்
காய்ந்தகாமேசன்விச்வகன்மேசன்மணிகன்னேசன். (5)

விளங்குகேதாரம்விசுவநாதன்வீரேசனென்ன
உளங்கனிங்கேதாதிலிங்கமொருபதினான்குண்டாகும்
வளங்கொள்காசியினிவின்னவிலிங்கங்கள்வதிந்தவாற்றால்
அளந்துணர்வரியமுத்திக்கேத்திரமாயதன்றே. (6)

அண்டர்கோன்றொழுஞானேசனமுதேசனிலாங்கலேசன்
தண்டீசன்மகேசன்சொர்க்கத்துவாரேசன்றாரகேசன்
ஒண்டிறல்நந்திகேசனருணேசன்சோதிரூபன்
எண்டிசைபுகழ்விருத்தகாளேசனெழிற்பிரமேசன். (7)

அருள்விருக்கேசன்முத்தித்துவாரேசனெனவமைந்த
ஒருபதினான்கிலிங்கமுறைந்தனவவைகள்செங்கேழ்க்
குருமணிகுயின்றசெம்பொற்கொடிநெடுமாடமோங்கி
இருவிசும்பிடறுங்காசிமாநகர்க்கிதயமென்பார். (8)

சரமகேச்சுரனீசானன்புரோக்கன்வியாக்கிரேசன்சாற்றும்
இரணியகருப்பன்சேட்டனுபசாந்தனுக்கிரேசன்
பரவுசம்புகனிவாசன்சயிலேசன்பயில்நாகேசன்
பொருவில்மத்திமகேசன்சீர்பொருந்துசொல்லீசனென்று. (9)

இலிங்கமோர்பதினான்குண்டாமீங்கிவையனைத்துமோரேழ்
தலம்புகழ்காசிக்கோங்குதத்துவமென்பரென்று
அலங்கிலைச்சூலமேந்துமண்ணல்சாற்றுதலுமன்பின்
விலங்கிவில்லுமிழும்பைம்பொன்விளங்கிழையுரைக்குமன்றே. (10)

கடல்வயிறலறியீன்றநஞ்சமுண்டமரர்க்காத்த
அடல்விடைப்பாகவிவ்வாறறைந்தனையன்றியின்னும்
படரொளியிலிங்கம்யாவுந்தனித்தனிபகர்தியென்ன
மடவாலினிதுகேட்பமழுவலானுரைக்குமன்றே. (11)

காந்தெரிமணியும்பொன்னுமுத்தமுங்கொழித்துக்காமர்
பூந்திரைசுருட்டூஉந்தண்புனல்கெழுகாசிதன்னில்
ஆர்ந்தபேருவகையோடுமமரர்கண்டத்துநின்றும்
போந்தவோங்காரலிங்கமதன்முறைபுகலுமன்றே. (12)

ஈற்றுளைந்தலறிவெள்வாய்வலம்புரியீன்றமுத்தம்
பாற்கதிர்மதியென்றம்பற்பருமுகைவெடிக்குமந்தண்
சேற்றகல்வயல்சூழ்காசித்திருநகரதனின்முன்னம்
ஆற்றருந்தவமொன்றாதியந்தணனாற்றினானே. (13

உகமொருநூறுதீராயோகினிலுறங்குவேதன்
அகமலாதனிலோங்குமலங்கொளியொன்றுதோன்றி
நிகரில்பாதலங்களேழுங்கடந்துதன்னிலையில்மீட்டும்
புகுதலுமுலகம்போர்க்கும்பொங்கொலியெழுந்தவன்றே. (14

பொங்கொலியெழுதல்கேட்டுப்பொறிபுலனடக்கியாற்றுந்
துங்கநல்விரதநீங்கிச்சதுமுகன்றனைவிணோக்கிச்
செங்கண்மாலுருவாயாதிவேதகாரணமாய்ச்சேர்த்தி
தங்குசாத்துவிதமாகுமகாரமுன்சார்தல்கண்டான். (15

இராசதகுணத்திரண்டாம்வேதகாரணமாய்வேதன்
பராவருமுருவமற்றோர்படிவமாயனைத்துமாகி
விராயபேருலகமீன்றவன்னையாய்விளங்குமென்னத்
தராதலமுழுதும்போற்றுமுகாரமுன்சாரக்கண்டான். (16

சாமகாரணமாய்நோற்றமொழிற்குயர்தலைமைத்தாகிக்
காமனையெரித்தமுக்கட்கடவுடன்வடிவுபோன்று
தோமறவிளங்குமிக்கதாமதகுணத்திற்றோன்றும்
நாமநூல்மறையோரோத்துமகாரமுன்னணக்கண்டான். (17)

உலகெலாமோங்குசத்தப்பிரமமாயுவமையின்றி
அலகில்பேரின்பமாகிவாக்கினுக்காதியாகி
இலகொளிவிரிக்குந்தூயவிச்சுவவுருவாயென்றுந்
தொலைவிலானந்தமாகுநாதமுன்றோன்றக்கண்டான். (18)

காரியமனைத்துந்தோன்றுங்காரணமாகியெங்கும்
பூரணமாகியோங்கும்பரமதாய்ப்பொலிந்துநின்றே
ஏர்பெறவிளங்கித்தோன்றும்விந்துவைநோக்கியெங்குஞ்
சீர்கெழுபிரணவத்தைத்தெருளுறவேத்துமன்றே. (19)

உலகெலாமளிக்குமாற்றலோமெனும்பெயராதாயிற்
றலகறுகருமவாரியகன்கரைகடத்தறன்றல்
இலகுதாரகமென்றேதும்பெயரொடுமியைந்தேதன்ன
மலர்தலையுலகம்பூத்தமறையவன்பழிச்சுகின்றன். (20)

ஓங்காரவுருவாயோதுமெழுத்ததாயோங்காரத்தின்
நீங்கருவன்னந்தோன்றுநிலையதாயுயிர்கள்யாவுந்
தாங்கியுமதனுட்டோயாச்சதாசிவமாகிநான்காந்
தீங்கறுமறையாய்நாதவிந்துவாய்ச்சிவமதாகி. (21)

அகரமாயுகரமாகிமகரமாயழிவொன்றின்றிப்
பகர்வருமவராய்த்தூயசுறுவராய்ப்பிரமமாகிப்
புகலருங்குணந்குன்றாகிப்புவனகோடிகளும்பூத்த
நிகாறுதுரியமாகிநிருமலமாகிநின்றோய். (22)

குறுமையாய்நெடுமையாகிக்குணங்குறியுருவமில்லாச்
சிறுமையாய்ப்பருமையாகிச்சித்துருவாகிநான்கு
மறைபுகலிளையராகிவிருத்தராய்வண்ணமைந்தாய்
அறிவருமுதாத்தமிக்கவனுதாத்தஞ்செரிதமாகி. (23)

எடுத்தவேலெடுத்தன்மிக்கநலிதல்மூக்கிதழ்நாப்பல்லோ
டடுத்திடுமண்ணஞ்சார்ந்துபிறந்தவக்கரங்களாகி
நடத்தலோடிருத்தலென்னும்பாவகநண்ணிநண்ணக்
கடுத்திகழ்மிடற்றாகிக்களைகணுயருவமாகி. (24)

இதயமண்டலத்தினீங்காவிறைவனுயகோரமாகிச்
சதியுருவாகித்தானமூவர்தாறைதலைவனுகி
விதியினில்நிருத்தகீதவாச்சியவிஞ்சையோர்க்குக்
கதியினையளிப்போனுகி கருதுபல்கலையுமாகி. (25)

மலரயனுகியாவும்வகுத்துமால்வடிவமாகி
உலகெலாங்காத்துமுக்கணெருவனுயொடுக்கிப்பின்னும்
அலகிலாவுருவமாகியேகமாயனுதியாகி
இலகுபேரொளியேயெந்தாயென்றெடுத்தேத்தல்செய்தான். (26)

வேறு.

உள்ளநெகிழவிழிபனிப்பப்பழிச்சிப்பழிச்சியுவந்தேத்தும், அள்ளற்
கமலப்பொருட்டுறையுமலரோன்முன்னாருள்புரிவான், கொள்ளை
யினவண்டிசைபயிலக்கொழுந்தேன்பிலிற்றுநறுங்கொன்றை, வள்ள
லிலிங்கத்திடையினிதுவந்துதோன்றிமகிழ்ந்துரைப்பான். (27)

விழைந்தகேட்டியெனவிமலன்வினவவேலாடுமலர்க்கிழவன்
றழைந்தவுவகைமீதூரத்தண்டிற்பணிந்துதிருமிழுங்
குழந்தைமதிதாழ்புரிசடையெங்குழகாவினைதுகுற்றடியேன்
பழங்கணகலவிவ்விலிங்கத்திருத்தியென்னப்பகர்ந்தனனால். (28)

அனையநேர்ந்தேனிவ்விலிங்கத்தகலாதடைவலிதனுமம்
வினைகடீர்க்குமோங்காரவிலிங்கமென்னவிளம்பிடுக
வினையுமுலகமுழுதமைக்கும்வரமுமளித்தேம்பிதாமகனென்
றினிதினெவரும்பணிந்தேத்தும்பெருமுனக்கேயீந்தனமால். (29)

ரவுத்திரைநீர்த்தடக்கங்கையோங்காரேசன்றிருமுன்னர்
ருவுபோழ்திலுயர்காசிமச்சோதரியாமவ்வேலைப்
ரவியாடுமவர்பேற்றையாரேபகர்வெனனவோதிக்
ரவமுயிர்க்குநறுங்கூந்தல்கொழுனனிலிங்கத்திடைமறைந்தான்.

டிலைக்கடவுள்காதையினைக்குழைந்துகேட்போர்புறங்காட்டில்
டலைபூசிக்காளியுடனாடும்பரமன்பேரருளாற்
ல்வாய்வெருவத்தனிகடைந்தகாயாவண்ணன்றிருவுந்தித்
மீன்றெடுத்தநான்முகத்தோனுறையுமுலகிற்சார்குவரால். (31)

**எழுபத்துமூன்றாவது ஓங்காரஇலிங்கத்தின் வரலாறு**
**உரைத்த அத்தியாயம் முற்றிற்று.**

---

ஆகத்திருவிருத்தம் — 1829.

# எழுபத்துநான்காவது

## ஓங்காரலிங்கத்தின் சிறப்புரைத்த அத்தியாயம்

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பன்னுமறைகளினிதேத்தும்பரமகற்பத்தினிற்றமனன்
என்னுமறையோனொருவனுளன்வடநூற்கலைகளினிதுணர்ந்து
தன்மாணொழுக்கநெறிகடவாப்பாரத்துவாசன்றரும்புதல்வன்
அன்னோன்காதைகேட்டியெனமுருகன்முனியோடறைந்திடுமால்.

முன்னூல்வினையமுற்றியபின்முனிவன்சிறுவன்முதுக்குறைவால், என்னேமனைவாழ்க்கையிற்புகுதின்முத்தியெய்தாதெய்துதினங், கொன்னேகழிப்பினுயிர்போகுங்காலங்குணித்தலரிதென்னத், தொன்மாமறைதேர்முத்திதனிலடையும்வினையந்தொடங்குறவான். (2)

அருமாமறையோர்தவமியற்றுஞ்சாலையடைந்து மலங்குதிரை, பொருநீர்க்கங்கைநதிபடிந்தும்புவிகளனைத்தும்வலம்வந்தும், தெருளுஞானப்பொருளுண்மையுரைப்போர்ப்பெறுதுதிகைத்துமுன்னர்ப், புரியுந்தவத்தாலிரேவாநதிக்கரையிலினிதுபொருந்தினனால். (3)

அழிவிலமரகண்டமென்னவுரைக்குந்தீர்த்தத்தகன்கரையில்
குழவிமதியின்கோடுழக்குங்கொன்றைநகனவிண்டழிபசுந்தேன்
மழையூற்றிருக்குஞ்சடாமவுலியோங்காரேசன்வளர்கோயில்
விழைவினோக்கியுளங்களிப்பவிரைவினங்குச்சென்றடைந்தான். (4)

மலமோர்மூன்றுமெறிந்ததற்குநெறியினமைத்தவரைபோல, நிலவுதிரிபுண்டரமிலங்கநீறுபூத்தமெய்ம்முழுதும், இலகுமணிகண்டிகையொளிரவியலாகமத்தினுணர்வரிய, அலகிலுண்மைப்பொருள்கேட்போர்க்கறையுங்குரவன்றனைக்கண்டான். (5)

கண்ணுற்றுள்ளமகிழ்வெய்தக்கரகமுனிவன்றொடொழலும்
கண்ணுகின்றநீயாரைநம்பியென்னவிளம்புதலும்
அண்ணல்முனிவன்மறைபயிலுந்தமனானென்போனருஞ்சித்தி
எண்ணியுதகமிகப்புடமிட்டருந்தித்திரிந்துமெய்திலனால். (6)

கூற்றின்பகுவாயெனத்திறந்தமுழைஞ்சுதோறுங்குறுகியிருந்
தாற்றற்கரியயோகனைத்தூம்புரிந்துஞ்சித்தியடைந்திலனால்
தோற்றற்கரியபாசுபதத்தோன்றல்னைது தாளடைந்தேதன்
சாற்றற்கரியசித்தியினிப்பெறுவான்றருதியெனத்தொழுதான். (7)

மாசில்புதல்வவருஞ்சித்தியெளிதின்மருவவேண்டுதியேல்
தேசில்கருமமுளிபுற்கான்றெற நீயாகிப்பவக்கடலின்
வீசுதரங்கப்புனல்சுவற்றும்வடவையாகிமிகவிளங்குங்
காசிநகரமல்லாதுகருதுமிடமற்றொன்றுண்டோ. (8)

பொலந்தாமரையினிதழ்குதட்டிக்கணைக்காற்குவளைப்போதருந்தி, இலஞ்சிமேய்ந்தமோட்டெருமையிறைஞ்சிப்பழுத்தகதிர்ச்செந்நெல், கலங்கற்கருஞ்சேற்றகல்வயலிற்றுயிலுங்காசிதனிலிதழி, அலங்கல்வேணியோங்காரவிலிங்கமினிதினமர்ந்துளதால். (9)

அன்னவீசன்றுள்போற்றியடையாச்சித்தியடைந்தோரை
இன்னரென்னவொருநாவாலியம்பவற்றோவத்தலையின்
முன்னநிகழ்ந்தகாதைமற்றொன்றுளதுமுனிவகேட்டியெனப்
பன்னுமறைநூற்றுறைபடிந்தபாசுபதனுரைத்திடுவான். (10)

தாற்றுக்கமுகின்மிடறிழிந்துதீந்தேனொழுகத்தாவியற்
சேற்றிற்கயவாயினவாளைவிளையாட்டயருஞ்செழுங்காசிக்
கூற்றையுதைத்தகுடிலேசன்கோட்டந்தன்னிலொருதவளை
ஏற்றிக்கழித்தவெண்சோற்றையருந்திவலம்வந்தினிதுறையும்.

திருந்துமதிதாழ்செஞ்சடையோற்கேற்றிக்கழித்தசெழுஞ்சோற்றை, அருந்துங்கொடியதீவினையாலலறுங்கொடியகுறாற்காக்கை, பொருந்துதவளைதனைக்கவர்ந்துபொருவில்காசிப்புறத்தேகிப், பொருந்துபசியிற்கூர்வாயாற்குத்திப்போழ்ந்துதின்றதுவே. (12)

திருமாலியமுன்னருந்திய வெம்பாவத்தாலுநிகரில்முக்கட்
பெருமான்கோயில்வலம்வந்தபேற்றினாலுமுயர்தவளை
விரிநீர்க்கங்கைவிளிம்புடுத்தகாசிநகரிற்குயில்முகமாய்
மருவார்தெரியல்தொடுப்போன்றன்மகளாய்வந்துதோன்றியதால்.

கரும்பிற்கனிந்தசுரமெழுகிராகமூன்றுகற்றுணர்ந்தோர்
விரும்பத்தகுமூற்சனையொருபத்தொன்பான்விளம்புநாற்பதின்மேற்
பொருந்துமொன்பான்றானமுயர்புருடராகமாறவற்றிற்
பிரிந்தோரொன்றிற்கைந்தாம்பெண்டகையாகமுப்பதுவே. (14)

தேசிகற்கும்விசேடத்தாற்சேருமறுபத்தஞ்சுலகில்
பேசுதாளநூற்றென்றத்துணையாகம்பெரிதுணர்ந்தாள்
மாசில்தவத்துமாதவியென்றுலகமேத்தவருமடந்தை
காசிநகரியோங்காரக்கடவுள்வியப்பநடம்புரிவாள். (15)

பொருந்துமிடபஞாயிற்றிற்புரைதீர்பதினான்கினிலுணவொன்
றருந்தலின்றிவிழிதுயிலாதாடியமுதங்கனிந்தொழுகு
நரம்புதடவந்திசையெழுப்பிநாதற்பாடிவைகறையில்
இருந்தயாங்களெல்லோமுங்காணவிலிங்கத்திடைமறைந்தாள். (16)

அனையகுடிலேசனைவணங்கியடைவாமுத்தியாமென்னத்
துனைவின்முனிவன்றமனனொடுந்துகடீர்காசிநகரெய்தி
வினையின்றொடர்ச்சிகட்டறுக்கும்விமலற்பழிச்சியெவ்வுலகுங்
கனைவெங்கதிரிற்சுடரெறிக்குங்கடவுளிலிங்கத்தடைந்தனனால்.

பிணிவாயவிழ்ந்தசெழுங்கமலம்பெய்ததேறல்கூட்டுண்டு
துணிநீர்க்கயத்துக்கருங்கெண்டைதுள்ளுங்காசிவளநகரில்
பணிவார்சடையெங்குடிலேசன்காதைகேட்போர்பயின்றோர்கள்
அணிமாசித்திமுதலாயகைவந்திறைவனடிசேர்வார். (18)

## எழுபத்துநான்காவது ஓங்காரலிங்கத்தின் சிறப்புரைத்த அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—1847.

எழுபத்தைந்தாவது

## திரிலோசன இலிங்கந்தோன்றிய அத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

உரைசால்சிறப்பின்மறைபரவுமோங்காரேசன்றிருமுன்னர்
விரைசார்பீடமொன்றுளதாங்கதற்குவிரிநீர்த்திரைக்கங்கைக்
கரைகொன்றிரங்குபுனல்யமுனைகடவுட்டெண்ணீர்ச்சரச்சுவதியாம்
அரவப்பேரியாறொருமூன்றும்வைகரூறுமாட்டுமால். (1)

ஆங்கணுயர்பிப்பிலதீர்த்தமுளதொன்றதனிலாடிலென்றும்
நீங்கவரியபிரமகத்திசோதிமயகேரிழைக்கங்
கோங்குசுடர்க்கண்மூன்றளித்தவாற்றுலுலகமுவந்தேத்துந்
தேங்கொள்கடுக்கைவேணியற்குத்திரிலோசனப்பேரெய்தியதால்.

ஈசானேசம்வீட்டுமேசந்துரோணேச்சுரம்வான்மீகேசம்
மாசில்புகழ்சேரச்சுவத்தாமேசம்வாலகில்லேசம்
ஆசிலிலிங்கந்தற்சூழவமர்ந்தகுடிலேசுசாத்தினிடைப்
பேசுங்காதையொன்றுளதுமுனிவகேட்டியெனப்பேசும். (3)

எழுபத்தைந்தாவது திரிலோசன இலிங்கந்தோன்றிய
அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—1850.

## எழுபத்தாறுவது

## திரிலோசன இலிங்க அத்தியாயம்.

---

கலி நிலைத்துறை.

உலகமேத்திராசேந்திரகற்பத்திறோங்கி
விலகிவில்லுமிழ்விண்டொடர்சினகரமீதில்
நிலவுசெம்மணிக்கண்ணவொள்ளகிற்புகைநிறத்த
குலவுமென்சிறைப்புறவுதன்பெடையோடுங்குறுகும். (1)

குழைந்தவெண்மதிக்கோடுதேய்த்துயர்சினகரத்தின்
அழுந்துமென்றுகள்சிறகர்மெல்வளிஞலவித்தும்
விழைந்தவன்பொடுபூசனைநோக்கியும்வியப்பால்
தொழுந்தவத்திஞேர்தம்மொடுங்கோயில்சூழ்போந்தும். (2)

உறையுநாளில்மற்றெருருபகலொழுகொளிச்செங்கட்
புறவுபோதரல்காண்டலுமுளமகிழ்பூப்பச்
சிறையுடைப்பருந்தொன்றுவெம்பசிப்பிணிதீர்ப்பான்
பெறுதுமியாமுணவின்றெனப்பெரிதுவந்ததுவே. (3)

படருமஞ்சிறைப்புறவினைநலிந்துயிர்பருகும்
இடனறிந்துவெம்பருந்துமற்றதற்கயலிருப்ப
மடநடைப்பெடைகண்டுதன்புறவொடுமாழாந்
துடனடுக்குறவெய்துயிர்த்துரைத்திடுமன்றே. (4)

வெய்யவான்பகையெறுழ்வலிவிரிசிறைப்பருந்தொன்
றெய்தியாம்வணுறைந்ததுநோக்கியேகியதென்
செய்யுமோவெனவென்ஞுளமலம்வரத்திகைத்த
துய்யுமாறினியுஞற்றுகவெனவுரைத்ததுவே. (5)

படணமண்டிலம்வியாடிகம்பட்டிகங்கரண்டை
தடாதியங்குசங்கிசனிசண்டனமுட்டனம்
விடாவருங்கதிப்பறவைகட்கேட்டுளம்விளம்பின்
அடாததொன்றிலையெனக்கிவைபயின்றினிதறிந்தேன். (6)

யாவதென்முனமெதிர்ந்தமரேற்றுயிர்சுமந்து
போவதென்னுடையாற்றல்நீயுணர்ந்திலைபோலும்
மேவருந்துயருழந்தெதவன்விளம்புவதென்ன
ஆவியன்னதன்பெடையினையாற்றிவைகியதே. (7)

கேட்டுவெங்கதிர்குடகடற்படுதலுஞ்சிறந்த
மோட்டுவெம்பொறிக்கொடுஞ்சிலைறப்பருந்திடமுன்னிப்
பேட்டொடுந்தனிப்புறவுபெருவகையினுறைந்த
கூட்டின்வாய்ப்புறத்தெதிர்ந்தறைகூவியதன்றே. (8)

ஆற்றலுண்டெனில்விரைவினில்வருகெனவறைந்த
பாற்றொடும்புறவேற்றமர்புரிதலும்பருந்து
சீற்றமீக்கொளப்புறவினைக்கவர்ந்துசென்றிடலுங்
காற்புறந்தனிற்காமரும்பேடைகொத்தியதே. (9)

காறுடர்ந்திளமடப்பெடைகொத்தலுங்கலங்கிப்
பாறுவாய்வெரீஇவிடுப்பவீழ்புறவொடும்படர்ந்து
தாறுபாய்கவுட்களிறுசாய்த்திழிமதக்கலுழி
ஆறுபாய்புனலயோத்திமாநகரடைந்ததுவே. (10)

எருத்திறைஞ்சுபைங்காய்க்குலைக்கதலிசாய்த்தீர்ந்தண்
குருத்தாம்பையங்காடெறிந்தணிமலர்குதட்டி
ஒருத்தன்மேதிகண்படுவயலயோத்தியினுறையா
அருத்திகூர்பெடையொடும்புறவாவிநீத்ததுவே. (11)

அண்ணன்மாநகரயோத்தியினாவிநீத்ததனால்
வண்ணவான்சிறைப்புறவுகந்திருவமாநகரில்
நண்ணுசீர்த்திமந்தாரதாமனுக்குநன்மகனாய்
உண்ணயந்துலகேத்திடவுதித்ததையன்றே. (12)

மழலைமென்மொழிச்செய்யவாய்மகன்வளர்நாளில்
விழைவினோடுநல்விஞ்சைகள்முழுவதும்பயின்று
குழவிவெண்பிறைக்கண்ணிதாழ்புரிசடைக்குழகன்
கழல்பணிந்திடல்வேண்டுமென்றுவந்துளங்களித்தான்; (13)

அன்னவன்பெயர்பரிமளாலயனவன்றினமும்
பொன்னிறத்தசெம்புறக்கனிகனிந்துதேன்பொழிபுங்
கன்னிவாழையம்படைப்பைசூழ்காசியினடைந்து
மன்னுசீர்க்குடிலேசனைப்போற்றினன்வருமால். (14)

புல்லுகாதலினிறந்தமென்பேட்டினப்புறவுஞ்
சொல்சினத்தவாளரவுறைகோனகர்புக்கும்
எல்லொளிக்கதிரிரத்தினதீபன்றனக்கிரத்தின
வல்லியென்றுறுபுதல்வியாயுதித்ததுமன்றே. (15)

அஞ்சனக்குழம்பொழுகிவார்ந்தெனத்திகழைம்பால்
வஞ்சியன்னவட்கிருவர்தோழியருளர்மகிழ்ந்து
பிஞ்சுநாண்மதிமுடித்துநின்றாடியபெருமான்
கஞ்சநாண்மலரடிதொழுகருத்தினளாகி. (16)

வேளைவென்றகட்கடைசியர்குரவையின்வெருவி
வாளையம்பகட்டேற்றினம்வால்விசைமுறுக்கிப்
பாளைவாய்க்கமுகுடைந்துதேன்குதித்திடப்பாயும்
கோளில்வான்புனல்வளங்கெழுகாசியிற்குறுகி. (17)

எரிதவழ்ந்தெறிமுரட்படைச்சூலமேவமேலந்துங்
கருணையங்குடிலேசன்மென்கழலிணைபணிந்து
புரிநரம்பிரங்கிசைசெயழீஇப்புகழ்ந்துபொற்கோயில்
இருமெழுக்கெறிந்தொழுகொளிச்செஞ்சுடரேத்தி. (18)

எழினலங்கடந்தேந்திளவனமுலைப்பேதை
ஒழுகுநாள்றோறிடபஞாயிற்றினிலுவந்து
தொழுதகுந்திரிதிகைதனிற்றுயிலுணவொழிந்து
விழுதவீழிருட்போதெலாம்விதந்துபாட்டயர்ந்து. (19)

இருள்புறங்கடிந்தெரிசுடர்ப்பருதியங்கடவுள்
மருவுகாலையின்வானதிபடிந்துநான்மறையோர்க்
குருவநல்லமுதூட்டியின்னமுதுவுந்துண்டு
பொருவில்தோழியர்தம்மொடுங்கண்படைபுரிந்தாள். (20)

அமுதமூற்றிருந்தொழுகியவவிர்மதிச்சடையும்
உமிழ்செழுங்கதிர்நீறுபூத்திலகியவுருவும்
இமயமால்வரைப்பூங்கொடிக்கீந்தவோரிடனுங்
கமழ்நறுந்துணர்க்கொன்றையந்தாரிருட்களனும். (21)

கறையணற்றுளையெயிற்றவெம்புயங்ககங்கணமும்
பொறிவரித்தெறுதழல்விழிப்புலியதளுடையும்
மறியுடைப்பொலந்தாமரைத்தடக்கையும்வயங்க
இறைவனுங்குறையிலிங்கத்தினின்றுதோன்றினனால். (22)

கொல்லும்வெவ்வினைக்குருமணித்தடறமைத்தென்னப்
புல்லுநீளிமைபொருந்திடக்கண்படைபுரியும்
வல்லியன்னவரெழுகெனமழுவலானுரைப்ப
வில்லுமிழ்ந்தவேலுறைகழித்தாலெனவிழித்தார். (23)

அவிழ்ந்தபூங்குழலங்கையிற்றிருத்திமென்றூசு
குவிந்தமென்முலைமுகட்டினிற்குலவுறச்சேர்த்திச்
சிவந்தகண்மதர்நீங்கலுந்திருவுருநோக்கி
உவந்துபாடினராடினருவகையிற்குளித்தார். (24)

ஐயனுமங்களளப்பிலவெடுத்தெடுத்தோதி
மையுண்கண்ணியர்மலரடிதொழுதுவீழ்ந்திடலுஞ்
செய்யதாமரைச்செழுமலர்த்தடங்கையாலெடுத்துப்
பையராவணிவேணியானின்னனபகர்வான். (25)

உருவப்பூண்முலையோடரிபரந்தவேல்விழியீர்
பொருவில்சீர்த்திமந்தாரதாமன்றருபுதல்வன்
பரிமளாலயனெனப்பகர்விஞ்சையர்ப்புணர்ந்தாங்
கிருவிசும்புறையிந்திரதிருவொடுமிருப்பீர். (26)

விஞ்சைவேந்தொடுங்காசிமாநகரிடைமேவி
அஞ்சொலீருயர்முத்தியிலடைதிர்முற்பவத்து
நெஞ்சுவந்தெமைவழிபடுமடியர்நீரென்னப்
பிஞ்சுநாண்மதிமிலைச்சியபிஞ்ஞகனுரைத்தான். (27)

முற்பவத்துநெஞ்செய்தியுமுதல்வனின்மலர்த்தாள்
அற்பினால்வழிபட்டதுமறைதியென்றமிழ்திற்
சொற்பழுத்தபூங்கொடியனார்தொகுத்துரைத்திடலுங்
கொற்பழுத்தவெங்கணிச்சிவானவனிவைகூறும். (28)

நெறிபடுங்குழலிரத்தினவல்லியாம்நீயும்
பறவைசூழ்வருகுருதிவேற்பரிமளாலயனும்
புறவுருக்கொடுகோயிலின்முற்பவம்பொருந்தி
உறைதவத்தினாலயோத்தியினுறைந்துயிருலந்தீர். (29)

திருவநீணகரயோத்தியினாவிதீர்ந்ததனால்
மருவிரத்தினதாமன்றருபுதல்வியாய்வந்தாய்
பொருவில்செல்வமந்தாரதாமன்றருபுதல்வன்
பரிமளாலயனாமெனவுதித்ததுபரிவால். (30)

காமர்பூங்குழற்கலாவதிபிரலாபதியென்னுந்
தாமவார்குழல்நின்னுடைத்தோழியர்தங்கள்
ஏமமுற்றமுற்பவங்களுமியம்புவலென்ன
நாமவெந்திறற்கணிச்சியோன்விழைவுறநவிலும். (31)

முற்பவத்தினின்முதற்பவந்தன்னில்மற்றிவர்கள்
தப்பினன்மறைவிளம்புசாராயணன்றனக்காங்
கொப்பில்பேரெழில்மக்களாயினிதுவந்துதித்தார்
செப்புதம்பெயர்கவுதமைபவானியாய்ச்சிறந்தார். (32)

எழில்குவிந்தனமகளிரைத்தந்தையாங்குவந்து

கழைமிடைந்தவெங்கானிடைச்சேறலுங்கனன்று
புழைகொள்பற்கொடும்பாந்தளாற்பொன்றினனன்றே. (33)

கணவன்வீதலுங்கரும்பெனத்திரண்டதோண்மகளிர்
வணரிருங்குழல்குறைத்துடல்மாசொடும்பழக
அணிதுறந்துநோன்பாற்றுழியருந்துவான்மற்றோர்
பணிவருந்தவப்பள்ளியிற்பரிவொடுமடைந்தார். (34)

ஊன்கழிந்திடநோற்பவர்போகுயாரம்பைக்
கூன்புறங்கனிகாவினிற்கொண்டதீவினையால்
மான்கவற்றியகண்ணியர்மற்றையபிறப்பிற்
கான்படர்ந்திடுசெம்முகக்கருங்குரங்காகி. (35)

அணிதுறந்தனர்நெறிவழாதாற்றுநல்வினையால்
இணையில்காசியிலுதித்தனரிவருடைப்பதியும்
பணியின்வீந்துநற்றாதைதாள்பணிதலிற்புறவாய்
மணிமிடற்றிறைகாசியில்வந்தவதரித்தான். (36)

அனையனாங்கவர்தமக்குமூன்றாம்பவத்தன்பன்
வினைகருங்குழல்தனக்குமுற்பவத்துயர்மணாளன்
இனிதின்மூவர்க்குமிப்பவமதனின்முன்புகன்ற
கலைகருங்குழற்காளையேகாதலனாவான். (37)

ஏதுநிற்கமுன்னுரைத்தனகுரங்குகளெறிநீர்த்
தீதில்காசியில்திரிலோசனன்கோயிலிற்சிறந்து
மீதுயர்ந்தபொற்பழுமரத்திருந்தும்வெண்டிரைய
கோதில்நீரிடைக்குளித்துமக்கோயில்சூழ்போந்தும். (38)

உறையுநாளினிலையமேற்றுண்பவனொருவன்
சிறைசெய்கண்ணியிலவற்றினைச்சிக்கயாத்தேகி
அறைபுனற்செழுங்காசியினாட்டுவித்தயின்று
மறுபுலத்தினிலடைதலுமறிந்தனகவிகள். (39)

காசிமாநகர்க்கடவுள்பொன்முன்றிலிற்கவினும்
பாசிலைப்பழுமரத்திடைப்பயின்றநற்றவத்தால்
ஓசைபோகியவுரகவேந்துளமகிழ்சிறப்ப
ஆசினல்லெழிற்புதல்வியாயினவன்றே. (40)

சுணங்குபூத்தெழிலாசுவீற்றிருந்தணிசுமந்து
வணங்குநுண்ணிடைதேய்த்துயர்வருமுலைப்பேதாய்
அணங்கராவருளமிழ்துறழ்சாயல்வார்வண்டின்
கணங்கொள்வார்குழலனையரிக்கண்ணியராவார். (41)

மருவுதோழியரிருவருநீயும்வான்பிறப்பிற்
பரிமளாலயன்றேணலநுகர்ந்துபல்காலந்
திருவொடும்பொலிக்தெறிபுனற்காசியிற்சேர்ந்து
பொருவிலாதுயர்முத்தியிற்பொருந்துவீரென்று. (42)

வரமளித்துயர்கடவுளவ்விலிங்கத்தின்மறைந்தான்
அரிபரந்தவேற்கண்ணியர்தம்பதியடையா
உரியதந்தைதாய்க்கரனருள்வரமினிதுரைத்துப்
பொருவில்காமநோய்கைம்மிகவைகுறுபோழ்தின். (43)

இடபஞாயிறுங்கெய்தலுமுக்கணெம்பெருமாற்
கொடிவில்நல்விழாவுற்றுழிநோக்குவானூரகர்
முடிவில்நல்லெழிலியக்கர்விஞ்சையர்முதல்யாரும்
அடையுமேல்வைமந்தாரதாமனுமவணடைந்தான். (44)

சுரும்புவீழ்தருமலர்க்கணைதூணியோடகற்றிக்
கரும்புநீத்தவிற்காமனேயனையநின்மகற்கென்
அரும்புமென்முலைமகட்கொடுப்பேனெனவருளாற்
பொருந்துபேரொழிவிரத்தினதீபன்றனிபுகன்றான். (45)

அனையகேட்டமந்தாரதாமனுமுகமலர்ந்து
கனைகருங்கழல்வேந்தொடுங்கருணையினேற்பப்
பணிசெய்வெண்மணிகிடந்ததோட்பரிமளாலயற்குப்
புனைசெய்மேகலைமகளிரைநன்மணம்புணர்ந்தார். (46)

பகழிமாட்டியவரிசிலைப்பரிமளாலயனும்
அகினறும்புகைமுகந்தவிழம்மலர்க்கோதை
மகளிர்மூவரோடடைந்துதன்கோனகர்வைகிப்
புகழினிந்திரதிருவொடும்பொலிந்தினிதிருந்தான். (47)

வில்விளங்கிடவீங்குதோட்பரிமளாலயன்சீர்
மல்லலம்புனற்காசியில்மீண்டும்வந்தெய்தி
எல்லொளிக்கதிர்த்திரிலோசனவிலிங்கத்தையேத்தி
நல்லிசைத்தொடைநரம்புளர்ந்துறைந்திடுநாளில். (48)

நல்லருட்சுடர்முக்கணுயகன்மலர்த்தாளில்
பில்குதேங்குழற்கலாவதிபிரலாவதியிரத்திறு
வல்லியோடும்வேற்பரிமளாலயனனிமறைந்தான்
சொல்லுமிக்கதைகேட்டவர்துறக்கநண்ணுவரால். (49)

எழுபத்தாறுவது திரிலோசனஇலிங்க அத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—1899.

## எழுபத்தேழாவது கேதாரஇலிங்கத்தின்கதையுரைத்த அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இருகோட்டுப்பிறைதவழுமீர்ஞ்சடையெங்கேதாரத்திறைவன் செய்தி, பொருகோட்டுமதமலையினதள்புனைந்துநின் ரூடும்புனிதன் முன்னர், வருகோட்டுமுலையுமையாட்குரைத்தபடிமாதவத்தோய் மகிழ்ந்துகேளென், பெருகோட்டுங்கடாக்களிற்றின்பின்னுதித்த வேற்கடவுளுரைக்குமன்றே. (1)

பாசடைத்தாமரைமலரும்பாவகாமடுவினிடைப்படிந்துபோகி த், தேசுடையகேதாரத்திறைவனிருபாதமலர்சிந்தித்தேத்திப், பூச னைசெய்திடிலோங்குபொலங்குடுமிச்சினகரத்தின்பொலிவு நோக்கி ன், மாசுடையபவக்கடலின்கரைகடந்துமுத்திநெறிமருவுவாரே. (2)

ஆங்குநிகழ்காதையொன்றுண்டறைகுவல்கேண்மதிமேனாளிலமுய்ய, ஓங்குமிராசேந்திரகற்பத்திலிரணியகருப்பனென்ன வேவா துர், நீங்கறுநன்மாதவத்துப்பாசுபதாசிரியனுளனன்னோன்செம்பொ ற், பூங்கழல்கள்வசிட்டன்முதல்மாறுக்கர்பலதினமும்போற்றிவாழ் வார். (3)

ஆறணிந்தசெஞ்சடையோன்சேவடிக்கீழ்த்தொழும்புசெயுமன்
பாகி, நீறணிந்துகண்டிகைமாலிகைபுனைந்துகங்கைநதிநெறியினாடி,
மாறுசெய்முக்குறும்பெறிந்துவளர்சடாமுடிபுனைந்துமவுனமாகி, வே
றடிசில்நுகராமலையமேற்றினிதருந்திமேவலோடும். (4)

ஆங்கவரிற்குரவனடியிருபோதுந்தொழுதேத்தியறம்வழாது,
நீங்கருநன்மாதவத்துவசிட்டமுனிபாவகரத்தெண்ணீராடிப், பூங்க
திர்கான்றொளிபரப்பும்வெண்டிங்கட்பசுங்கண்ணிபுனையுஞ்செவ்வி,
ஓங்கொளியசிவலிங்கமெஞ்ஞான்றுந்தொழுதேத்தியொழுகுநாளில்.

அறங்கெழுநூற்றுறைபோயமாணாக்கர்பலரோடுமருளான்மும்
மைக், குறும்பெறிந்தபாசுபதாசிரியனியற்கேதாரங்குறுகல்வேண்
டிக், கறங்குகுராலுளையரிமான்சிறுகுருளைகவிழ்தலையவருவியோலின்,
உறங்குமுயர்பொலன்குடுமியிமயநெடுஞ்சாரலின்வாயாதுங்கினா
னே. (5)

அருளினிரணியகருப்பமுனிவரன்போயிலிங்கவடிவாகியோங்கு,
திரைபொருதுகரைகடக்குங்கேதாரநதியினருந்தெண்ணீர்மாந்திக்,
கரையினிருத்தலுமாவியொழிந்தனன்வான்குடுமி நெடுங்கயிலைநின்று
ம், பொருவில்கணம்விமானமொடுபோந்தவனையினிதேற்றிப்போய
தன்றே. (7)

அருள்புரியுங்கடவுள்முனியிறந்தெளிதிற்கயிலைவரையடைத
னோக்கித், தெரிவரியசுடரிலிங்கமெவற்றினுமிக்கேதாரஞ்சிறந்த
தென்னா, இருவினைவேரறநோற்றவசிட்டமுனிகேதாரத்திறைவற்
போற்றி, விரிபுனற்காசியினடைந்துயாண்டுதொறும்போய்த்தொழு
துமீளுநாளில். (8)

தல், கொண்டாகந்தளர்ந்துமுயர்கேதாரத்தடைதுமெனக்குறித்தல்
னோக்கித், தண்டாவன்புடைமுனிவர்வரைகடந்துபோதலரிதென
வுந்தாழா, துண்டாலம்பழுத்தமிடற்றிறையருளால்வசிட்டமுனி
யொருப்பட்டானே. (9)

கிழவுபழுத்தனையவுடலருந்தவத்தோன்கேதாரத்திறத்தலெண்ணி, விழைவுறுமன்மனவலியையினிதோர்ந்தனவினிடைவினாவிற்போந்து, பழமறையோயிவ்வழியாம்படர்ந்தனமவ்வழியேகலென்னப் பண்பால், தழைசெவியமதமலேபினீருரிபோர்த்தவனேடுமுனிவன் சாற்றும். (10)

வரமளித்தியெனின்மற்றென்மானுக்கர்யார்க்குமருள்வழங்குகென்னப், பொருதிரைநீர்க்கங்கைபுனைகாபாலியார்க்குமருள்புரியவேண்டிக், கருவிமுகில்கிடந்துறங்குமிமயமால்வரைதுறந்துகாசியெய்திப், பரவுநர்தீவினையெறியும்பாவகரதீர்த்தத்திற்பரிவிற்சேர்ந்தான் (11)

ஆதலாலித்தீர்த்தமாடுகின்றோர்முத்திகரதலடைதல்திண்ணம், காதலாற்றென்புலத்தோர்கடன்கழிப்பிற்பெறலரியகதியிற்சேர்வர், ஈதலாலதன்வடபாலிந்திரத்துய்ம்மினென்னும்வழுதிகண்ட, நீதில்பேரொளியிலிங்கமொன்றுளதாங்கதன்சீர்த்திசெப்பலாமோ. (12)

ஆங்கதன்றென்பாற்சிறந்தநீலகண்டேச்சுரமுளதாங்கதனின் பாங்கர், வாங்குசிலேவிப்பிரவாகெனும்வழுதிதனையீன்றமடமானேக்கின், கோங்கின்முகைகவற்றுமுலேச்சித்திராங்கனையமைத்தகோதில் சீர்த்தித், தீங்ககற்றியருள்கொழிக்குஞ்சித்திராங்கதலிங்கஞ்சிறப்பின்வைகும். (13)

அம்பரிடேச்சுரங்காளாஞ்சனஞ்சயமேச்சுரமிவைகளாங்குவைகும், வம்பவிழ்பூங்கொன்றைபுனைவார்சடையோனிறைவியொடுவழங்குமாறு, கம்பமறுதவமுனிவனுரைத்தனமிக்காதைதனைக்கற்றோர் கேட்டோர், உம்பர்மலர்தூஉய்ப்பழிச்சவொருமூன்றுகண்ணிதுெடுமுறைந்துவாழ்வார். (14)

**எழுபத்தேழாவது கேதாரலிங்கத்தின் கதையுரைத்த அத்தியாயம் முற்றிற்று.**

---

ஆகத்திருவிருத்தம்—1913.

## எழுபத்தெட்டாவது
## தருமேச்சுரவிலிங்கத்தின் கதையுரைத்த
## அத்தியாயம்.

---

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பின்னருமிவ்விலிங்கத்தினுயர்ந்ததெதுவெனவுமையாள் பேச
வெந்தை, முன்னமுரைத்திடுகாதைகேட்டியெனவருந்தவத்து
முனியைநோக்கித், தென்னதெனவெனவண்டுஞ்சுரும்புமிசைபாட்ட
யரத்தேறனல்கும், நன்மலர்ப்பூங்கடப்பந்தார்துயல்வருதோட்குமர
னிவைநவிலுமாதோ. (1)

கனைகுரலேற்றெருமையுடைக்கொடுங்கூற்றமாங்குவந்துக
ருணையோடு, பனிபடர்காலையிற்புனலுட்குளித்துமழைகாலமழைபட
வேநின்று, முனிதருவெந்தெறுகோடைக்கைந்தழலினடுநின்றமு
டிவில்காலம், வினையறுநற்றவமாற்றவாங்கவன்முன்புரிசடையோ
ன்வெளிப்பட்டானே. (2)

மன்பெருநற்றவமாற்றிப்பலகாலுமுணவொழிந்துவருந்திநோ
ற்ற, என்பெழுமியாக்கையைமகிழ்ந்தேமெழுகென்னக்கொடுங்கூ
ற்றமெழுதலோடும், அன்புடையசராசரங்களெவற்றினுக்குமிறைய
வனீயவையெலாநின், தென்புலத்திற்புகுந்திழைத்தவினைவழிநின்ற
ருளொடும்போய்ச்சேர்கவன்றே. (3)

ஒழிவரியகொடும்பாவநெடுங்காலம்புரிந்துமொருபோதுசிந்தை,
விழைவொடுதெண்டிரைபுரட்டுதருமவாவியிற்படிந்துவிதியினின்
பேர், மொழிதருமேச்சுரன்பாதம்பணிந்திடுவோர்பெறலரியமுத்தி
சேர்வர், தொழுதகநீபழிச்சியவித்துதிகேட்டோர்நமதுபதந்துனை
விற்சேர்வார். (4)

அணிகிளர்கார்த்திகைமதியிற்சுக்கிலபக்கத்தினிலட்ட மியின் மேய, உணவொழிந்துவருங்கங்குற்றுயில்துறந்துதருமேசனுயர் பொற்ருளிற், பணிவருபூசனைபுரிந்தோர்கொடியபவக்கடல்கடப்பர் பரிவாலின்னும், இனையில்வரங்கேட்டியெனவீர்ஞ்சடையோன்மெய் நடவந்தியம்பினனே. (5)

## எழுபத்தெட்டாவது தருமேச்சுரலிங்கத்தின் கதையுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—1918.

## எழுபத்தொன்பதாவது கிளியின்கதையுரைத்த அத்தியாயம்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

என்பெழுந்தயாக்கையினைத்தடவாலுங்குளிர்ப்பெய்தியிதய நெக்காங், கன்புகனிந்தூற்றிருப்பமறவிபிருகாங்கூப்பியையகேண் மோ, வன்சிறையபருந்தொன்றிக்கிளிப்பார்ப்பின்றந்தையுயிர்வவ்வி யெருந், துன்பமுயிர்பிடித்துந்தவுயிர்த்தபெடையின்னுயிருந்துறந்த தன்றே. (1)

அன்றுமுதலின்றளவுமெனைநோக்கியமர்ந்தவிவையன்பினேடு ம், உன்றனருள்புரிதியெனக்கொடுமறவியுரைத்திடலுமுவகைபூப்ப, பின்றிரித்தாலெனக்கிடந்தவிரிசடையோன்கிளிப்பார்ப்பைவியந்து பார்ப்பப், பொன்றலரும்வரந்தருதுங்கேண்மினெனப்பார்ப்பினமும் புகலுமாதோ. (2)

புன்மையாமிப்பறவையுருவெடுத்துநினதுபதமெளிதிற்போற்ற, என்னதவமிழைத்தனமற்றதனின்வாம்யாதெனினுமிறைவகேட்டி, மின்னகுவேற்கொடுங்கூற்றமிழைத்ததவநோக்கியதால்மெய்ம்மைகூர, முன்னைவருபவமனைத்தும்விளங்கியவெம்பாலவற்றைமொழிதுமன்றே. (3)

பானிலவுகொப்புளிக்கும்பனிமதிக்கோடுழுதுநறைபாயவண்டு தேனுகர்பூங்கொன்றையணிவேணியோய்நிற்பணிந்ததிறத்தால் முன்னம், வானுறையுமமரர்களாய்க்கடைவளைக்குங்கரும்புருவமதர்வேலுண்கட், கானுலவுநறுங்கூந்தலரம்பையர்தோட்புணர்ந்துசின்னாட்களித்தல்செய்தேம். (4)

மின்பயில்வேற்றுணைவராய்விஞ்சையராயியக்கராயராக்கராகி, மன்பதையில்வேந்தராய்த்தண்புனலிற்கொடுங்கானில்வாழ்வதாகி, அன்பினளிக்குனராகிக்கேடுசூழ்பவராகிமற்றுமாகித், துன்பமுறுமியாக்கைபலவெடுத்தளவில்கோடிபவந்தொலைத்திட்டேமால். (5)

இவ்வாறுபலகோடிபவத்துழன்றுமுண்மையறிவின்றிமற்றொன், றெவ்வாதபேரின்பக்கடற்படியாதருந்துயரமுழன்றேமீங்குச், செவ்வான்வெண்மதிபுனைந்ததருமேசனடிபணிந்தசெய்தியானும், வெவ்வாயகொடுங்கூற்றம்புரிதவநோக்கியதானும்வினைகடீர்ந்தேம்.

மீயுயர்வானவர்க்கிறைவன்விழையுமரும்பெறற்றிருவும்வேண்டேமெங்கட், கேயவுணர்வுடைஞானநெறிகாட்டியடைகரைகொன்றிரங்குதெண்ணீர், பாயுநெடுந்திரைக்கங்கைசூழ்கிடந்தவியற்காசிப்பதியின்வைகித், தீயகொடும்பவக்கடலின்கரைகடப்பானிறப்பவருள்செய்தல்வேண்டும். (7)

மறைமுதலபலகலையின்கரைகடந்துபூம்பொகுட்டுமலரின்மேலோன், அறைபுனல்வான்றுறையுறையுமஞ்சிறையமடவன்னமல்குதெண்ணீர், முறைபடிந்துசெலவயிருமகளிர்கடைக்கழிந்தொதுங்குமுடிவிலின்பம், நிறைதருகாசியினிறத்தல்முத்தியாமெனப்பலகானிகழ்த்தினனே. (8)

நணங்கோடிதுதைந்தாடிவிருந்தயரப்பெருகி வாசக், கள்ளொழுகமுகையவிழ்க்குங்கருங்காவிவளவயல்சூழ்காசி யென்றும்,எள்ளரியபேரின்பத்துறைசெழுநன்முத்திநகரென்னவோ ராத், தெள்ளருநான்மறைப்பொருளும்விரித்தருளும்வியாதமுனி செப்புமன்றே. (9)

முயலரியமாதவத்துரோமசனேமுதலாய முனிவர்யாருஞ், செயிரறுநன்முத்திநகர்காசிமாநகரமெனத்தெளிந்தார்யாமும், புயல் படிந்துகுடித்தகடற்புனல்குமட்டியெதிரெடுத்துப் பொங்கர்தோறுந், துயிலுமியலானந்தகானமுத்திநகரென்னத்துணிந்திட்டேமால்.(10)

தடவுவெண்ணைவாய்மடுத்துப்பொதுவர்மனைவளர்ந்தருளுந் துளவத்தாரோன், கடவுண்மரகதப்புரவித்தேரோற்கவ்வாறுரைத்தா ன்கதிரோன்றானுங்,கெடலருமாதவம்புரியும்யாக்கியவற்கொடுமஃ தேகிளத்திறன்வெள், விடையுயர்த்தோன்காசிமுத்திநகரெனமந் தரத்துமைக்குவிளம்பினனே. (11)

தெரிவரியவுலகமொருமூன்றினுமுக்காலநிகழ்செய்தியாவும், அரியயன்மாதவமுனிவரமலநீபவந்தோறுமறைந்தவாறும், பொரு விலண்டகோளகையினிகழ்வனவுமங்கைநெல்லிநகனியே போலத், தருமலிங்கம்போற்றியதால்தெரிகின்றவுண்மையுணர்தன்மையா னேம். (12)

என்றுபதமலர்வணங்கிக்கிளியினம்பார்ப்பினிதினிசைத்த லோடுங், குன்றவரிச்சிலைகுனித்துமுப்புரத்தீயூட்டியபொற்குழகன் கூறும், மன்றவுலகொருமூன்றிலாசிருக்கைகாசியலால்மற்றுமுண் டோ, பொன்றவழாலயஞ்சிறந்தவானந்தக்கிழங்கின்மூளைபூத்ததா மால். (13)

பழமறைகளுணர்வரியபிரமமெனும்பொருள்யாமேபணிந்தநம் பால், விழைவுறுவோர்க்கருள்புரிவானித்தலத்திலுருவுகொடுமேவி னேமிப், பொழிகதிர்வானுயர்குடுமிச்சினகரத்தின்றென்றிசையிற் பொருவிலாத, தொழுதகுநன்மண்டபமொன்றுளததனிலெஞ்ஞான றந்தன்னிவாழ்வேம். (14)

கலிவிருத்தம்.

மருவுமுத்தின்மண்டபமாதியா
உரைசெய்மண்டபம்யாவினுமோங்கிய
விரைசெய்பீடமுதல்வியன்பீடத்துந்
தருமபீடமுயர்ந்ததுசாற்றுங்கால். (15)

இன்னமென்கிளிப்பிள்ளைகள்யாவையும்
அன்னபீடத்தமர்ந்தபரிசினால்
மன்னுமென்னுலகத்தினில்வாழ்ந்ததற்
பின்னர்முத்திபெறுவது திண்ணமால். (16)

என்றுகூற்றுக்கிறைவனிசைப்புழி
மன்றவீசன்வடிவொடுகிள்ளைகள்
குன்றவில்லுடைக்கூத்தன்கயிலையிற்
பொன்றயங்குவிமானத்துப்போயவால். (17)

எழுபத்தொன்பதாவது கிளியின் கதையுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—1935.

## எண்பதாவது

## மனோரதத்திரிதிகைகதையுரைத்த அத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

கொழுதிவண்டினமுரன்றுபாட்டயர்தருகொன்றைதேத்துளிதூற்ற
விழுதுவிட்டபூந்துகிரெனக்கிடந்தொளிர்விரிசடைப்பெருமானீ
பழுதிலாதுயர்மனோரதத்திரிதிகைநோற்பவைபகரென்னத்
தொழுதுகூறினள்சில்லரியொழுகியதுணைமலர்த்தடங்கண்ணாள்.

பூண்சுமந்தபொற்கொடியெனக்கவினியபுலோமசைவிழைவோடு, மாண்சுமந்தநற்றவம்பலவாற்றியும்விழைந்தனமருவாமல், பாண்கனிந்துதேமழைபொழிந்தாலெனப்பாட்டயர்ந்தனளீசன், கோண்பிறைக்கெழில்கொடுத்தவாணுதலுளங்குறித்ததுபுகலென்றான். (2)

என்றுகூறலுந்திதலைபூத்தழகுவாய்ந்தீர்க்கிடைபுகாதோங்கிக், குன்றிரண்டெனப்பணைத்திறுமாந்தெழுகுவிமுலைக்கொடிபோல்வாள், மன்றநாண்மகமளப்பிலபுரிந்துயர்வானவர்க்கிறையாய, வென்றிமன்னவன்குலமனைக்கிழத்தியாயினிதிருந்திடல்வேண்டும். (3)

பொற்பின்மேவருமெவ்வுருவேண்டினும்பொருந்துதல்தரவேண்டும்
அற்பின்மேவியகாதலனிறந்தழிக்கைம்மையாகுதலின்றிக்
கற்பழிந்திடலொழிந்துநற்கன்னியாய்க்கணவனைப்பெறல்வேண்டும்
கொற்பழுத்தொளிர்கணிச்சியோயெனவவள்கூறலுமிறைகூறும்.

வரதமோர்காமபயமோர்கரஞ்செபவடமொருகரமாகப், பொருவில்மோதகமொருகரத்தமைத்தெழில்பூத்தொளிர்பணைமென்றோள், இருபதாமருட்கவுரியோடழிகவுளொழுழ்வலிக்கடாயானை, உருவமேவுமாசார்விநாயகற்றொழில்விழைந்தனவுறுமென்றான். (5)

அன்னநோன்பினையாற்றுநல்விதியெனக்கறைந்திடுகெனலோடும், மன்னுசித்திரைத்திங்களில்வளர்மதிமருவியபக்கத்தில், முன்னியேத்துமூன்றாந்திதிவருவதன்முன்னைநாளருளன்னை, தன்னையேத்தியக்கங்குல்வாயுணவினைத்தவிர்ந்துவைகறைப்போதில். (6)

துயிலெழுந்துமாக்கடம்புகாயுருவிபேர்ந்துமாதுளைதேமில்
செயலையத்திநீள்கதிரநன்றுவல்வெண்பிச்சியின்றிரள்கொம்பின்
இயைவகொண்டுபற்கறைதீர்த்தெதிர்காலையிற்கடனாற்றிப்
பயிலுமாலையம்பொழுதினிற்புனிதநீர்படிந்துவெண்டுகில்சுற்றி. (7)

செய்யசந்தனங்காழகில்மான்மதமரிசனஞ்செழுஞ்சாந்தக்
தொய்யில்நீண்மரமஞ்சள்பத்மாக்கமெய்த்தேமில்சிந்துரமேற்ற
ஐயதேவதாருவினொடுமுரோசனையிவற்றினல்விருட்போதின்
மையல்யானைமாமுகத்தனைக்கவுரியைவரன்முறைவழாதாட்ட. (8)

இவையலாதிருகூறுகுங்குமமலர்மான்மதமிருகூறு
நவையில்சாந்தமுக்கூறொருகூறொளிர்நறைகமழ்கருப்பூரம்
குவவில்மற்றதனுறுபெயரியக்கர்மென்குழம்பதாமிஃதாட்டின்
உவகைசெய்யுமெக்கடவுளுமென்பதாலுவந்துமற்றினுமாட்டி. (9)

பிண்டிபாதிரிமல்லிகையலரிதேன்பிலிற்றுசண்பகங்கோங்கந்
கண்டல்தாமரைவலம்புரிகுமரிமென்கடிகமழ்செழுநீலம்
வண்டறுமலர்தூவிமென்சருக்கரைவயிற்றுறுமடையேலம்
உண்டழூந்தினால்நெய்யினாலமைத்தவையுவப்பொடுமினிதாட்டி (10)

புகலருக்கியமுதலியயாவையும்புரிந்துபூசனையாற்றி
மகிழ்சிறந்தருமறையவர்க்கியன்றனவழங்கியாங்கவர்க்கேற்ற
துகளறப்பரிந்தட்டனகூழினாலமைத்தவைதான்றுய்த்துத்
திகழுநன்மதிதோறுமிவ்வாறுநோற்றாண்டுசென்றியல்காலை. (11)

முன்னரோதியதிதியினிற்கங்குலின்மறைவழாதருச்சித்து
நன்னிலத்தினில்மெழுக்கெறிந்ததனிடைநவையிறீக்கருமங்கள்
சொன்னசாமவேதத்திருமறையினால்துகளிலெண்முதலாக
மன்னுதானியமெட்டில்நூற்றெட்டெனவழங்குமாகுதிபண்ணி. (12)

பொருவில்விச்சுவைபூசைநின்னருள்பெறுபுதல்வனோடினிதாற்றும்
விரதநற்பலன்வழங்குதல்வேண்டுநல்வேழமாமுகத்தோயீங்
கருள்செய்நின்னுடையன்னையோடிதன்பலமென்னவீழ்ந்தடி போற்
றி, மருவுலாநறுமலர்கடூய்மும்முறைமகிழ்வொடும்வலஞ்செய்து. (13)

விரதமாற்றுவித்தருளியகுரவனைப்பன்னிதன்னொடுமெல்லென்
பொருவில்கட்டிலினிருத்திநல்லணியொடும்பூசனையினிதாற்றிப்
பரிவினன்குடைதொடுகழலாடிநற்பாற்பசுவிவைநல்கி
அருளினோடுபின்சென்றுநற்குரவனைவிடுத்தகன்மனையெய்தி. (14)

அள்ளிருட்கரும்போதகன்றிட்டபிறைப்பிழிமலர்க்கூந்தல்
வள்ளைவார்குழைப்பன்னிருகன்னியர்மைந்தரத்துணையோரை
உள்ளுவப்புறவெண்ணெயினூட்டுவித்தின்னமுதினிதூட்டித்
தள்ளரும்பெருங்கிளையொடுமாரமுதருந்திடல்தகைமைத்தே. (15)

கருங்கட்கன்னியர்நோற்றிடின்விழைவுறுகணவரைப்பெறுகிற்பார்
திருந்துகாளையர்நோற்றிடின்வருமூலத்தெரிவையர் தமைச்சேர்வர்
பொருந்துமங்கலமடந்தையராற்றிடிற்புதல்வரைப்பெறுவார்பூண்
பரிந்தமங்கையர்நோற்றிடின்மறுமையிற்பழிப்பில்காதலற்சேர்வார்.

டன்னுநான்மறைமுனிவராராற்றிடிற்பலகலைத்துறைசெல்வார்
நன்னராற்றுறிவொருகுடைநீழலின்மண்முழுதினிதாள்வார்
பொன்னவாங்குலவணிகராற்றுறினளவறிவருபொருள்செய்வார்
பின்னுளோருமிஃதாற்றிடினுளத்திடைவிழைந்தனபெறுகிற்பார்.

செய்யதாமரைத்திருமகள்நோற்றுமுன்செங்கண்மால் தனைச் சேர்ந்தாள், மையல்வேல்விழியருந்ததிநோற்றுயர்வசிட்டனன்மனையானாள், ஐயநுண்ணிடைக்கொடியனசூயைநோற்றத்திரிதனைப்பெற்றாள், தொய்யில்வெம்முலையிம்முறைநோற்கெனச்சொற்றனன்மழுவல்லான். (18)

அழகுகண்படுவனமுலைசுமந்தறவலகுநுண்ணிடைச்செவ் வாய் எழுதுவாணுதற்புலோமசைநோற்றுளத்தியைந்தயாவை யும் பெற்றாள், விழைவினிக்கதைகேட்டவர்பயின்றவரொழுதினோர்விருப்புற்றோர், தொழுதுவாழ்த்துநர்பேற்றையோர்நாவினாற்சொல்லுதற்கெளிதாமே. (19)

**எண்பதாவது மனோரதத்திரிதிகை கதையுரைத்த அத்தியாயம் முற்றிற்று.**

---

ஆகத்திருவிருத்தம்—1954.

## எண்பத்தொன்றுவது
## தூர்த்தமன்கதையுரைத்த அத்தியாயம்.

கலிநிலைத்துறை.

குரைதிரைக்கடல்குடங்கையினேந்துபுகுடித்த
அருமறைப்பொருடெரிதருமகத்தியமுனிவ
தருமதீர்த்தகன்கதையினைச்சாற்றுவனென்னப்
பொருவில்மாமுதறடிந்தவேற்புங்கவன்புகலும். (1)

எந்துகோட்டயிராவதப்பொருபகடிவர்வோன்
காந்துவெம்படைவிருத்திராசுரனுயிர்கவாச்
சார்ந்தவெவ்வினைதீருமாறுரையெனத்தாழா
ஆய்ந்தகான்மறைக்குரவனையேத்தினனறைந்தான். (2)

கொழுமடற்பிணிநெகிழ்குடச்சூற்கமுகெருத்தின்
உழுநரோதையின்வெருவியவாளைபாய்ந்துழக்கப்
பழையர்சேரியிற்கட்குடமுடைந்தெனப்பசுந்தேன்
பொழியுநீள்வயற்காசியிற்செல்கெனப்புகன்றான். (3)

அளியுழப்பருமுகைவெடித்தலர்ந்தசெங்கமலத்
துளிமதுப்பாந்தொழுகலாற்றேமறவிளைந்த
களிறுமாய்கதிர்ச்செந்நெலங்கழனிசூழ்கிடந்த
வளர்புகழ்ச்செழுங்காசியைவாசவனடைந்தான். (4)

விரிசுடர்ப்பசுங்கதிரொறிந்தவுணரூன்விழுங்கிக்
குருதிகொப்புளித்தழலுமிவ்வயிரவாட்குரிசில்
பொருதடந்திரைக்கங்கையம்புனல்படிந்தாடி
அருள்தருந்தருமேசன்முன்னருந்தவம்புரிந்தான். (5)

புரியுநற்றவமுவந்தனன்புரந்தரனீயித்
தருமவாவியிற்படிகெனத்தழங்குநீராடிப்
பிரமகத்திவிட்டொழிதலும்பிஞ்ஞகற்போற்றிப்
புரசையானைமேலிந்திரன்வானிடைப்புகுந்தான். (6)

முருகுதாழ்குழற்புலோமிசைமுலைமுகடுழக்குக்
தெரியன்மார்பினன்மீட்டுமாதவமொடுங்தேங்கொள்
விரிதலைப்பசுங்கமுககல்விசும்பகடுடைப்பக்
கருவிமாமழைபொழிபுனற்காசியினடைந்தான். (7)

சுடரும்வெண்மதிவனைசடைத்தாரகேச்சுரற்குக்
குடபுலத்தினிற்றன்பெயரான்மகிழ்கூர்ந்து
படர்செழுஞ்சுடரிலிங்கமொன்றமைத்தனன்பரிவால்
அடர்செய்வேல்விழிச்சசியுமாண்டிலிங்கமொன்றமைத்தாள். (8)

அத்திரிப்பெயர்முனிவரனமைத்தருளிலிங்கம்
முத்தவெண்குடையெண்டிசைப்பாலருமுறையின்
வைத்தலிங்கஞானேச்சுரம்வளர்தரணீசந்
தத்துவேச்சுரமிவைமுதல்தணப்பிலாதுறையும். (9)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இன்னுமாங்கொருகாதைநிகழ்ந்ததுகேட்டியெனவியம்புமோங்கு, பொன்னெடுமால்வரையினொடுமுரணியெதிருயர்விந்தப்பொருப்பின்சாரல், செங்நெல்வளர்கரும்பேய்க்குங்கழனிதொறுந்திங்கள்வடிம்பிடறிநீண்ட, கன்னல்கமுகெழில்காட்டுமுயர்கதம்பசிகரமெனுநகரொன்றுண்டால். (10)

அங்ககரந்தனிபுரப்போனுடல்சினத்தினிகலிமங்கவுமரினேற்ற, மன்விழுங்கித்தேக்கெறியுகெட்டிலைவேல்வலனுயர்த்தமதனனென்பான், தன்னுயிர்போற்செயற்கரியதவமாற்றியினிதீன்றதனையன்போரில், ஒன்னலர்வெண்ணிணமருந்தியுறைபுகுவேற்றூர்த்தமனென்றொருவனுண்டால். (11)

தாதுதேய்ந்தினவண்டுதுதைநறுந்தார்த்தூர்த்தமனுந்தாவில்வேந்தன், தீதுபூத்தருள்குவிந்தசிந்தையன்வெங்கொடுங்கோலன்றினமுமிக்க, ஏதிலார்மனைவிழையுமிழுதையருமறையினெறியிகழ்ந்ததீயோன், போதுதாய்ச்சங்கரனைப்புண்டரிகக்கண்ணனைப்போற்றல்செய்யான். (12)

சிற்றினஞ்சேர்ந்திடுவதன்றி விழுமியோர்குழுவினிடைச் சேர்தல்செய்யான், முற்றுமிருங்குடிகூடவப்பொருள்வவ்விமுதுக்குறைவினைத்தனுகிக், கற்றவரைத் தண்டித்துக்கல்லாதபுல்லருரைகளிந்துகேட்குங், கொற்றவனவ்வுலகுதனைதடிப்படுத்திக்கொடுங்கோன்மைபுரியுநாளில். (13)

வேட்டைமேன்மனஞ்செலுத்திவலைஞரொடுமரில்பாந்தவெங்கானெய்திக், கோட்டுவாரணமுதலகுறுமுயலீருயவைவயுங்கொன்றுமற்றோர், காட்டினேகலுமரியகல்லதரினெறிபிழைத்துக்கழற்கால்வேந்தன், நாட்டமூன்றுடையபிரான்காசிநகர்க்கணித்தாக நண்ணினனே. (14)

அகில்முருடுகையரிந்கொண்டொழுகுபுனற்காசிநகரமலன் செய்ய, துகிர்விழுதுவிட்டனையதூச்சடைமேற்கங்கை க ந தி த் து வ லமாந்தி, வகிர்மதியினமுதளவிவருந்தென்றல்தூர்த்தமன்மெய்வருடியேகப், பகர்வரியவெயரிலெனுடுமொழிவரியபாவமும்வேர்பறிந்ததன்றே. (15)

பொரியரையுதேமாவின்பூந்துணர்ப்பைந்தாதாடிப்பொதி வா ய் விண்ட, விரிதலையவெண்டோட்டபொலம்பொகுட்டுத்தாமரையின்விளரிபாடி, வரியளிகண்படுகழனிவிளிம்புடுத்தகாசிவளநகரின்பாங்கர், தருமலிங்கமினிதுறையுஞ்சினகரங்கணடுயர்பரியினிழிந்துதாழ்ந்தான். (16)

வளர்தரு

தளர்விலெனுடுமுன்செய்தகொடுங்கோன்மைதனைநினைந் து த லைவற்போற்றிக், களிமதவாரணங்கூர்தவிளம்பிடிக்குக்கற்பகநாண்மலர்ப்பூங்கொம்பிற், குளகருத்தக்கைநீட்டும்விந்தமால்வரைச்சாரல்குறுகினனே. (17)

பொன்னகரம்வளமனைத்தும்பொறுக்கரிதாய்ப்புவியி னி டைப்போந்தபோலுந், தன்னகரினிடையெய்தித்தனையனையர்நகர்காக்குந்தலைவனுக்கித், தொன்மறையோர்க்களப்பரியநிதிவழங்கிக்கொடியோரைத்தூரந்துபின்னுங், கன்னல்மருள்செழுஞ்சாலிக்கழனிவிளிம்புடுத்தோங்குகாசிசேர்ந்தான். (18)

தருமேசன்றன் வணங்கிச்சின்னாளிற் றூர்த்தமனுமுத்திசார்ந் தான், ஒருவாதுதீவினைகளுலப்பிலவாற்றனரேனுங்காசியெய்திற், கருவாழிபடிகிலரிக்கதைகேட்டோர்பயின்றளோர்க ரு தல் செ ய் தோர், மருவார்பூங்கடுக்கையணியிறைவனடிசேர்வரெனவழங்கின் னே. (19)

## எண்பத்தொன்றாவது தூர்த்தமன்கதையுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—1973.

## எண்பத்திரண்டாவது கங்காளகேது வதையுரைத்த அத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வீரேசன்காதையின்னும்விளம்புகவென் றருந்தவத்தோன்வின வலோடுஞ், சூர்மாளவேல்பணித்ததோகைமயிற்பாகனிவைசொல்லு முன்னம், பாரேழுமதிகெடுவெண்குடைநிழற்றிவெயிலுமிழ்வெம்பரு திபோலும், ஓராழிதனிசெலுத்துமித்திரசித்தெனவுளனோருரவுத் தோளான். (1)

புவனகோடிகளுமொருபுடைகிடத்துஞ்சிற்றுதரப் பூவை வண் ணன், குவலயமேழும்பொதிந்தகுரைகழற்சேவடிக்கமலப்போதை நீங்கா, உவகைவரியளியலர்த்துமிதயமலர்தனிலடர்க்குமுரவோனு னும், பவமொழியவிரைகமழும்பாசிலைத்தண்டுளவோனைப்பணிதல் செய்தான். (2)

அண்ணலளித்திடுமுலகமனைத்துமிருபோதுமுயரன்பினோடும்
கண்ணமாதவமுகுந்தகேசவவச்சுதவென்னக்கழறலன்றி
எண்ணம்வேறிலரோகாதசியெய்திற்றாய்முலையினிரங்குதீம்பால்
உண்ணுறாதான்கன்றுமெனிலறிஞர்செய்தவமென்னுரைக்குமாறே.

இன்னனநீதியினுலகமினிதளிக்குமேல்வையினிலிசைத்தேனூறத், தென்னதெனவெனமுராலுமகதியாழ்பயில்முனிவன்சினவுவைவேல், மன்னன்முனமெய்துதலுமருக்கியபாத்தியமுதலவழங்கியேத்திப், பொன்னடித்தாமரைநோவப்போந்ததெவனெனமுனிவன்புகலுற்றானே. (4)

யாழினோர்குலத்திறைவன்றவப்பேற்றாலினிதீன்றமயிலஞ்சாயல், மாழைமாமருணோக்கினெழின்மலையகந்தினியைக்கபாலகேது, காமுலாமனத்தனருள்கங்காளகேதுவெனுமவுணன்வவ்விப், பாழிவாய்க்கொடும்பாந்தளாசிருக்கும்பாதலத்திற்படர்ந்தானன்றே. (5)

இயக்கர்கோனிதியறையினெழிற்கதவந்திறந்ததெனப்புலவர்யாரும்
வியக்குநீள்வளங்கிடந்தசம்பகாபதியதனில்மேவுபோழ்திற்
பயக்குமோரேழுலகும்படைத்தளிக்குமாடகேசுரனைப்பாடி
நயக்குமாறினிதேத்தியக்கரில்யானுமிகநண்ணினேனால். (6)

எய்துகின்றவெனைநோக்கியெழில்மலையகந்தினியொன்றுரைத்தாளோங்கி, மைதவழுமுயர்குடுமிக்கந்தமாதனத்தின்மகிழ்ந்தாடுமென்னைப், பைதலுறக்கவர்ந்தீங்குப்படர்ந்தனனிப்பதகனடல்பழுத்ததன்கை, வெய்யதழல்வெம்படையினன்றியேதிலர்படையின்விளிதல்செய்யான். (7)

காளைவரிவண்டாற்றுமந்தாரமாலைபுனைகவுரிமுன்னந், தாளின்முழுதுலகளந்தோனன்பனிவனைமணக்குமெனச்சாற்றினளவ், வாளரியன்றொருவனடையிலிவன்படையவன்கையளிப்பலென்னப், பாளைவிரிகமழ்கூந்தற்படர்முலைகூறினளென்னப்பகர்ந்தான்மன்னே. (8)

அங்ககரிநெய்துநெறியுரைத்தியெனமித்திரசித்துரைப்பவோங்
கி, மன்னுகலநெஞன்றிவர்ந்துவாரிதியினிடையேகின்வையமீதேதார்,
ன்னிதருவொடுபோந்துவினைபுரிந்தான்கருமபலன்றுய்க்குமென்
ன, இன்னிசைபாடினளேகுநிறைமதிநாளவ்வழிநீயேகுகென்றான்.

யாழ்பயிலுமறைமுனிவனேகுதலுமுலகனைத்துமெயிற்றினேந்தி,
ழியொருகாத்தமைத்தகுறுங்கழுத்தவெண்பன்றியளிப்பவோங்
, தாழ்திரையகருங்கடலினிடையேகிச்சம்பகாபதியிற்சார, ஏழு
ர்மேனிலைமுகப்பிற்றனித்துறையுமடவாலையினிதுகண்டான் (10)

கலிநிலைத்துறை.

லகமூன்றினுள்நல்லெழிலொருங்கெடுத்தினிதின்
லரின்மேலையோன்மனத்தினல்வகுத்தவோவியங்கொல்
லைகொள்வேனில்வேளினியதெள்ளமுதினிற்றீட்டி
லநிறைத்தபூங்கொடிகொல்மற்றெனவுளநயந்தான். (11)

ருப்புமென்முலைதாங்கியவணிமயிலனையாள்
ருப்புவில்லொளித்தெய்தியகாளையைநோக்கி
ருப்பமீக்கொளப்போந்ததென்வேந்தநிற்காணின்
ருப்பவெஞ்சினத்தவுணர்கோனுயிர்குடித்திடுமால். (12)

பொருவில்தன்கையிற்படையினலலதுயிர்பொன்றுன்
ருவல்நின்கையிலவன்படைதறுகண்வாளவுணன்
ருமுன்னிவ்வயின்மறைந்துறையெனவுரைவழங்க
வருவல்மாதெனப்பகர்ந்தவணுறைந்தனன்வேந்தன். (13)

லரிமண்டிலமத்தமேவுறுதலுமவுணன்
லவுமெய்ந்தரிசூலவேல்திரித்தனன்போந்து
லவமாமயில்கடிமணநாளையென்றியம்பி
லருடுத்தபூந்தவிசின்மேலினிதுகண்வளர்ந்தான். (14)

முயவொழித்தவெண்மதிநிகர்முகத்திறளவுணன்
துயிலைநோக்கிவெஞ்சூலவெம்படையினைத்தாங்கி
அயலுறைந்தவேலுழவனையழைத்தனள்கொடுப்ப
வெயிலுமிழ்ந்திடத்துளக்கினன்விடுகைபுரிந்தான். (15)

## கலிவிருத்தம்.

பாயரியொருத்தல்தனதாருயிர்பதைப்பச்
சீயமுராறிக்கடிதுசேர்குவதெனப்போய்
நீயமர்விளைப்பவெழுவாயெனநிகழ்த்திக்
காய்சினமிகத்தனதுகாலினிலுதைத்தான். (16)

கூர்துயிலொழித்தவுணர்கோமகனகைத்துப்
போர்செயவெனக்குநிகர்நீகொல்பொறியற்றோய்
சேர்கெனவுரைத்துமுடைசேரிதழதுக்கி
வார்கனைகழற்குரிசில்மார்பினிலடித்தான். (17)

கோமகனுருத்தசனிபோலெதிர்கொதித்துக்
காமருதடக்கைகொடுவாய்குருதிகக்கத்
தோமுறுகுணத்தவுணனாருயிர்துடிப்ப
ஏமுறவுரப்பியரியேறெனவடித்தான். (18)

காவலனடிப்பவிழுகாரிருணிறத்தன்
மேவருமயக்கொழியவேறுணர்வுபெற்றே
மூவுலகுகைக்கொளமுன்மாணுருவெடுத்து
மாவலிமுன்னுற்றதிருமாலெனநினைத்தான். (19)

ஆளரிநிகர்க்குமடலோயடுசினத்தின்
வாளமருடற்றிவயவாகைபெறுநர்க்கே
நீளரிமதர்க்கணுரியாளெனநிகழ்த்தித்
தோளிணைபுடைத்தமரர்சோர்வுறவெதிர்த்தான். (20)

மாலுயர் துணைக்கமலவார்கழல்வழுத்தி
வேலைபுடைசுற்றுமெழுமேதினிபுரப்போன்
காலனும்வெருக்கொளவிடாதுதழல்கக்குஞ்
சூலமெதிர்விட்டவுணனுருயிர்தொலைத்தான். (21)

வீறுயர்சினத்தவுணன்வீதலுமிசைத்தேன்
ஊறுமகதித்திவவின்யாழ்முனிவனுற்றே
சீறடிமழைக்கண்வளர்தேமொழிதனக்கு
மாறில்குரிசிற்கும்விதியால்மணமுடித்தான். (22)

மேவுமணமுற்றியபின்யாழ்முனிவிடுத்த
தாவில்வழிபற்றியவர்தாமரைமுகத்தோர்
பாவையொடுமிக்கவெழுபாரினிதளிப்போன்
காவுபடைசுற்றும்வளர்காசிநகருற்றான். (23)

எண்பத்திரண்டாவது கங்காளகேதுவதையுரைத்த
அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—1996.

## எண்பத்துமூன்றாவது
## வீரேசன்சிறப்புரைத்த அத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கோழரையரம்பையீன்றகூன்புறக்கனியிரேனுங்கு
தாழைமுப்புடைக்காய்சிந்துதண்வயற்காசியெய்தி
வாழுநாள்தனிலவீட்டத்திரிதிகைமாபிறைற்றப்
பாழியந்தடந்தோள்வேந்தேபணியெனப்பாவைசொற்றாள். (1)

பொன்னவாஞ்சணங்குபூத்தபுணர்முலைசுமந்தகோதாய்
அன்னனோன்பாற்றுகின்றவிதியினையறைதியென்னக்
கன்னல்மென்றனையதீஞ்சொற்காந்தளஞ்செங்கைகூப்பி
மன்னகேளென்னச்செவ்வாய்மலர்க்கையிற்புதைத்துச்சொல்வாள்.

மார்கழித்திங்கடன்னில்வளர்பிறைறயெய்துகாலைச்
சீர்கெழுமூன்றும்பக்கத்துணவொழித்திலங்குசெம்பொற்
பூரணகும்பம்வைத்துப்புகன்றவாலரிசிபெய்த
ஏர்கெழுசெப்புவள்ளமெழில்பெறவதன்மேற்சேர்த்தி. (3)

விலைவரம்பரியாப்பூம்பட்டதன்மிசைவிளங்கச்சேர்த்தி
அலரிதழ்க்கமலம்வைத்தாங்கதன்மிசைநான்கும்பொன்னால்
முலைசூரந்தொழுகுதீம்பான்முருகனுண்டுறையவைகும்
மலைமகளுருவுசெய்துமற்றதன்மீதுசேர்த்தி. (4)

தென்வரையுயிர்த்தபூங்கேழ்சந்தனத்தேய்வையாட்டிப்
பன்மலர்தூவித்தூபங்கமழ்வித்துப்பரிவிரேடும்
இன்னமுதனையவன்னந்தீங்கனிமுதலவேற்றித்
துன்னிருட்கங்குல்முற்றுங்கண்படைதுறந்துவைகி. (5)

ஓர்முழவகலநீளமுற்றதோர்குண்டந்தன்னிற்
சீர்கெழுநெய்யினுதல்தேனினுதல்தோய்த்த
ஏர்கெழுகமலப்போதோராயிரமினிதினேந்திச்
சார்வருசாமவேதமறைகொடுதழலிற்பெய்து. (6)

புனிற்றிளங்கபிலைநான்குபொன்னினலமைத்தவிம்பம்
கனைத்துவண்டிமிரும்பைம்பொற்கமலமென்பட்டிரேடும்
அனைத்தையுங்குரவற்கீந்தாங்கமலனையுமையைத்தூய
மனத்திடையிருத்திமாசில்புதல்வனைவழங்கென்றேத்தி. (7)

கருணையான்பொழிந்ததீம்பால்கன்னலங்கட்டிகொட்டி
அருமறையந்தணளாயிரர்க்கடிசிலூட்டிப்
பரிவினோடவர்தஞ்சேடம்பாரணமுறையிற்செய்தல்
விரதமென்றுரைப்பவேந்தன்விளங்கிழையோடுநோற்றான். (8)

நோற்றலுமகிழ்ந்துதோன்றுமலைமகள் தன்னைநோக்கித்
தோற்றியஞான்றுதன்னில்துறக்கமுற்றிவண்மீண்டெய்தும்
ஆற்றலின்வனப்பின்மிக்ககாளையாம்பருவமாகி
நீற்றொளிபழுத்தமேனிநிமலனுக்கன்பனாகி. (9)

விளங்குமோர்புதல்வன்றன்னையளித்திடல்வேண்டுமென்ன
உளங்கனிந்தன்னைநல்கியுயரிருவிசும்பிற்போனாள்
இளங்களிவரிவண்டார்க்குமீர்ங்குழல்கருப்பமெய்தி
வளங்கெழுமூலநாளின்மைந்தனையினிதினீன்றாள். (10)

கணிதரிம்மைந்தன்வைகிற்காவலனிறக்குமென்னப்
பிணிமுறுக்குடைந்ததீந்தேன்பெய்ம்மலர்க்கோதைமாழ்கிப்
பணியரவல்குனல்லீர்பஞ்சமுத்திரையாம்பீடத்
தணிகெழுவிகடைகையினிம்மகவளித்திரென்றாள். (11)

மழைமதர்நெடுங்கண்சோரவருமுலைபொழிந்ததீம்பால்
இழைதவழ்புதல்வன்மேனியெங்கணுநனைப்பவீன்ற
குழவியைக்கொடுப்பவாங்கிக்கோதையர்விரைவினேகி
விழைவனையாவுநல்கும்விகடைமுன்வைத்துமீண்டார். (12)

அருள்பொழிவிகடையந்தவரும்பெறற்புதல்வன்றன்னைப்
பரவுயோகினிகள்கையிற்கொடுத்துநீர்பரிவினோடும்
இருவிசும்புறையுமாதரெழுவர்பாலெய்தியன்னார்
உரையினையறிந்துவம்மினென்றலுமுவந்துபோனார். (13)

போயவரெழுவர்கையிற்புதல்வனைக்கொடுத்தலோடும்
மேயவப்புதல்வன்மெய்யிலிலக்கணக்கிடக்கைநோக்கி
மாயிருஞாலங்காக்குமன்னவனாகுநீரிச்
சேயினைமுன்னர்வைகும்பீடிகைச்சேர்த்துகென்றார். (14)

தாளதாமரையின்மேவுந்தாக்கணங்கனையார்மீண்டு
வாளொளிவிரிக்குஞ்செம்பொற்பீடமேல்வைத்தலோடும்
காளையாம்பருவமெய்திக்கன்னல்வில்லொளித்துவந்த
வேளெனவுலகம்யாவுமேத்திடவிளங்கினானே. (15)

ஆலைபாய்துழனி தன்னிலாய்பிழி தூற்று தண்பூஞ்
சோலைவாய்மலரின்வைகுந் தூங்கிசைவண்டுந்தேனும்
மாலைவாயவிழ்ந்தவாம்பன்மலரிடையொளிக்குங்கன்னல்
வேலிசூழ்காசி தன்னில்மெய்த்தவமாற்றினனே. (16)

அருந்தவக்கிழமைநோக்கியண்ணலஞ்சுரும்புந்தேனும்
விருந்தயர்கொன்றைநாறும்விரிசடைப்பெருமானெய்திப்
புரிந்தநின்றவத்தாலன்புபூத்தனம்விழைந்துகேட்ட
வரந்தருகுவமென்றேந்தமைந்தனுமகிழ்ந்துசொல்வான். (17)

புனிற்றிளந்திங்கட்கண்ணிப்புஞ்சடைப்புனிதகேட்டி
தனிச்சுடராயவின்னவிலிங்கத்திற்றழைந்தவன்பாற்
பனிப்பிறைவடந்தாழ்கொம்மைவனமுலைப்பரையினோடும்
அனைத்துலகமுநின்றேத்தவமர்ந்திடல்வேண்டுமென்றான். (18)

அண்ணலிவ்விலிங்கந்தன்னிலமர்வன்யானிதன்பேர்யாரும்
நண்ணும்வீரேசனென்றேநவில்கவிக்காசிதன்னில்
மண்ணுறுதீர்த்தகோடிவயங்கொளிவிரித்துத்தோன்றும்
எண்ணறும்லிங்கம்யாவுமிதற்கிணையிம்பொணுவால். (19)

கொலைபழுத்தழல்வாய்காய்ந்துகுருதிகொப்புளிக்கும்வேலோய்
அலைகடலாடைசுற்றியாயிரம்படத்திற்றுஞ்சும்
மலர்தலையுலகம்யாவும்வரம்பில்நாளளித்துமாயா
இலகொளியாகிநின்றவென்னுழையுறைதியென்றான். (20)

கலிநிலைத்துறை.

போதுலாமலர்க்கொன்றைதாழ்புரிசடைப்புனித
ஆதிகேசவதீர்த்தமேமுதலலைபுரட்டு
நீதில்பூம்புனற்பகீரததீர்த்தமீறாக
ஓதுதீர்த்தமோர்ந்துரையெனவமலனுண்டுரைத்தான். (21)

**எண்பத்துமூன்றாவது வீரேசன்சிறப்புரைத்த அத்தியாயம் முற்றிற்று.**

---

ஆகத்திருவிருத்தம்—2017.

## எண்பத்துநான்காவது
# துருவாசர்வரம்பெற்ற அத்தியாயம்.

கலிவிருத்தம்

சொன்னமறையின்பொருடுணிந்துரைசெய்யென்ன
அன்னமிவர்வேதனையருஞ்சிறையின்வைத்தோன்
தென்வரையின்மீதிலுறைதெய்வமுனியின்புற்
றின்னுமொருகாதைநனிகேளெனவிசைப்பான். (1)

பாசடைமலர்ப்பழனவாளைகுதிபாய
ஆசினிவருக்கையினிழிந்துசுளைவீழும்
காசிநகரின்பெருமைகண்டுளம்வியந்து
மாசடைவனேந்ததுருவாசனவன்வந்தான். (2)

ஈசனுறையாலயமியற்றிமகிழ்வோடும்
ஆசறவிளங்குமொரிலிங்கமுமமைத்துப்
பூசனைபுரிந்தினிதுபோற்றியுலகேத்தத்
தேசுடைமுனிக்கடவுள்செய்தவமிழைத்தான். (3)

ஆயிரநெடும்பகலருந்தவமிழைத்தும்
பாயும்விடைவானவன்வெளிப்படுதல்காணான்
தீயொழுகுவெவ்விழிசிவந்துபுகைமண்டக்
காய்சினமிகுந்துமுனிகாசியைமுனிந்தான். (4)

புகைப்படலம்விண்ணகர்புதைப்பமறமெய்தா
வெருட்சியினெழுந்துரைசெய்மெய்த்தவனைநோக்கி
வகுத்தவன்வணங்கியவிலிங்கமகிழ்கூர
நகைப்பநகையீசனெனநாமநவில்கின்றார். (5)

முத்தியருள்காசியைமுனிந்தமுனியாவி
துய்த்திடுதுமென்றுகணநாதர்நனிதுன்னிக்
கைத்தலமெடுத்தனரெதிர்ந்திடுதல்காணா
மைத்தவழ்மிடற்றிறைவிலக்கினன்வழங்கும். (6)

எண்ணரியமாதவமிழைத்தமுனிகேண்மோ
நண்ணரியகாசியைமுனிந்துவிடல்நம்பால்
கண்ணியவரந்தருதுமென்றுகதிர்முக்கட்
பண்ணவனுரைப்பமுனிவர்க்கிறைபழிச்சி. (7)

காசியைமுனிந்ததனைநாடிமெய்கலங்கி
மாசறுமதிக்குழவிவைத்தசடையெம்மான்
ஏசலுறுதீவினையிழைத்ததுபொறுக்கென்
றாசில்முனிவன்புகலவண்ணலுரைசெய்வான். (8)

நீயினிதமைத்தருளிலிங்கநிகராற்றே
ஏயபெயர்காமநல்லிலிங்கமெனலாக
மேயவடுவன்னபெயர்மேவுகவெனாமுன்
பாயும்விடைமீதிலிவர்பண்ணவன்மறைந்தான். (9)

மிக்கசனிவாரமதில்மேவுபதின்மூன்றாம்
பக்கமுறுகங்குல்முகமென்புனல்படிந்து
முக்கணமலன்சரணமுன்னினர்வணங்கிற்
செக்கமலமென்னவொளிர்செய்யகழல்சேர்வார். (10)

எண்பத்துநான்காவது

துருவாசர் வரம்பெற்ற அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—2027.

# எண்பத்தைந்தாவது
# விச்சுவகன்மேசவிலிங்கம்தோன்றிய அத்தியாயம்.

---

## கலிவிருத்தம்.

உயர்விச்சுவகன்மேசனியற்காதையுரைத்தும்
அயிலொத்திருகுழைமேவியலைக்குங்கயலுண்கண்
முயலற்றொளிர்மதிவாணுதல்முகிண்மென்முலையென்னாக்
கயிலைத்தடவரைமீதுறைகருணைக்கடல்கூறும். (1)

மலரோனிகர்தோட்டாவருள்மகவானிகரெனவே
அலர்கேள்வியன்மறைநூலினனாசானடிபேணிக்
கலையாவையும்வளர்திங்களின்விதியிற்பயில்காலைப்
புலனைந்தையுநெறியுய்த்திடுமாசானிவைபுகல்வான். (2)

புனையுஞ்சுடுமண்ணானனிபுனைவித்தெழிறிகழப்
பணிநீண்மழையணுகாதொளிபழகாதுயர்வாக
வினையின்றிறம்வல்லோர்கள்வியப்புற்றனர்கூற
மனையொன்றுவகுப்பாயெனமறையோனுரைசெய்தான். (3)

துளிதூங்கியகுளிர்காலையில்வெச்சென்றுயர்தருமென்
தளிரீன்றிடுவேனிற்கடைதண்ணென்றமர்குவதாய்க்
களிசேர்ந்திடவனைகஞ்சுகமருள்வாயெனக்கரைந்தாள்
அளிசேர்தரமறைதேர்தருமாசான்றிருமனையாள். (4)

பாரின்மிசைசெல்கின்றதொர்பரிசாமெனவொழுகு
நீரின்மிசைசெலவுஞ்செவிற்சேற்றின்னிலைபெறவும்
வாரின்றியுநெகிழாமரவடிநல்குதியென்றான்
கூர்கேள்வியன்மறைதேர்தருகூரவன்றிருமகனே. (5)

கரமார்வளைமணிமேகலையொருகாழணிமுத்தம்
எரியின்றியுமடுகின்றதொர்பசுமட்கலமெவையும்
ஒருதாருவிலொருகான்மிசையுறையுந்தனிமனையும்
தருகென்றனள்மறைதேர்தவமுனிவன்பெறுதையல். (6)

இவ்வாறவர்மொழிகின்றவையெவையும்பழுதின்றி
அவ்வாறினிதருள்கின்றனனெனவோதினனாகி
வெவ்வாயரவரிமானுறைகானிற்றனிமேவி
ஒவ்வாதவையெவ்வாறருள்வோமென்னவுரைத்தான். (7)

மாசற்றவன்மருளெய்தவொர்மறைமாமுனியெய்தி
ஆசுற்றதென்மதலாயெனவவனுற்றவையறையக்
காசிப்பதிதனில்மேவியகருணைக்கடலாகும்
ஈசற்றொழினல்லாலிவையெய்தப்பெறலாமே. (8)

பாலுக்கழுசிறுவற்குயர்பாலாழியளிக்கும்
சூலப்படைமுதல்வன்கழல்தொழவேகுதியென்னும்
சால்புற்றருமறைநூல்பயில்தவமாமுனியோடுங்
காலப்புயல்வரவானுயர்காசிப்பதியுற்றான். (9)

கரைகொன்றெறிதிரைசிந்தியகங்கைப்புனலாடி
அரிநான்முகனிமையோர்தொழுசிவலிங்கமமைத்து
நரைசேர்விடையிவர்வேதியனுமங்கணவிற்றி
விரைநாண்மலர்தூவித்தவம்விழைவோடுபுரிந்தான். (10)

செய்யுந்தவநெறிகண்டுயர்திருமாலயனறியா
ஐயன்றவநெறிபோகியசிறுவன்முனமணுகி
எய்துந்தவமொழிநல்குதும்விழைகின்றவையென்ன
வையம்புகழ்தொழில்யாவையும்வனைவானருள்கென்றான். (11)

மற்றோர்விதியெனயாவையும்வகுக்குந்தொழில்தந்தேதம்
கற்றோர்புகழ்தருவிச்சுவகன்மன்னெனுநாமம்
உற்றாயுயர்குரவன்மனைமகள்மைந்தனுவப்பாற்
சொற்றாரெவையவையன்பொடுசோராமலளித்தேதம். (12)

மலரோனிகர்மதலாயிவண்வழிபட்டவிலிங்கத்
தலர்தூவினர்வினையாவுமறுப்போமெனநல்கி
இலகாண்மலர்நிகர்வாய்மயிலொருபங்கிலிருக்குங்
கலைநாண்மதிபுனைவேணியன்வானாடுகரந்தான். (13)

சிற்பத்தொழில்விதிபோகியசிறுவன்கடிதேகி
அற்பிற்குருமுதலோர்தமையலர்தூவிவணங்கிப்
பொற்புற்றிடனனிபன்னியபொருள்யாவும்வழங்கிக்
கற்பத்தினுமழியாதுயர்காசிப்பதியுற்றான். (14)

ஈரோழெனமுன்னோதுமிலிங்கத்துறுகாதை
வாரேறிளமுலைமென்னகைமடவாயுரைசெய்தேம்
சீர்சால்கதைகற்றோர்தெளிவுற்றோருரைசெய்தோர்
பாரேழ்தொழவுயர்வாழ்வுபடைத்தோங்குவரென்றான். (15)

எண்பத்தைந்தாவது விச்சுவகன்மேசவிலிங்கம்
தோன்றிய அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—2042.

## எண்பத்தாறுவது
## தக்கன்வேள்விசெய்த அத்தியாயம்.

கலிவிருத்தம்.

அன்னவையனைத்தினுட்டக்கனுற்றிய
மின்னிவரிலிங்கத்தின்கதைவிளம்பெனத்
தொன்முனிகேட்டலுமுருகன்சொல்லுமால். (1)

அயிலெயிற் றழல்விழியணங்கராவணைத்
துயில்புரிபாசடைத்துளவமாலொடும்
உயர்விசும்புறை தருதக்கனாதியோர்
புயறவழ்கயிலையம்பொருப்பினெய்தினர். (2)

பாலொளிப்பருமணிமுகடுவேய்ந்துயர்
வாயிலினெய்தியெம்வரவுகூறெனா
நாயகற்பொருமுதனனந்திகூறலும்
நீயவர்த்தருகெனநிகழ்த்தினனரோ. (3)

மாவடுநோக்கியோர்பங்கன்மாமலர்ச்
சேவடிதேவர்காள்பணிகசெல்கெனப்
பூவைபோன்மேனியான்முதலபுங்கவர்
யாவருமடைந்தனரிறைவற்போற்றினார். (4)

கண்ணனைவருகெனக்கழறினான்மலர்
அண்ணலைநோக்குறாமுடியசைத்தனன்
நண்ணுவாசவற்கெதிர்முறுவல்நல்கினான்
விண்ணவர்யாரையும்விழியினோக்கினான். (5)

மேவலர்க்கடந்துவில்விழுங்குவீங்குதோட்
பூவைபோன்மேனியாயுந்திபூத்திடும்
மூவுலகனைத்தையுமுறைபிறழ்ந்திடாக்
காவல்செய்தளித்தியோகளைகணென்றான். (6)

ஐயநின்னருளினாலுலகம்யாவையும்
உய்யுமாறளித்தனனென்னவோதினான்
மையணிமிடற்றிறையருளமான்முதல்
எய்தினோரியாவரும்விடைகொண்டேகினார். (7)

போதருநெறிதனிற்றக்கன்புன்மையால்
தீதுறுநெஞ்சினன்செயிர்த்தநோக்கினன்

கோதறுமீசனையிகழ்ந்துகூறுவான். (8)

அருந்துவ தலைகடனஞ்சமூர்த்தியாய்ப்
பொருந்துவதொருகிழவேறுபோர்ப்பது
கருங்களிற்றுரிவையுண்கழிந்தவெண்டலை
திருந்திய தாமரைச்செங்கைகொண்டதே. (9)

தாயிலி தந்தையுந் தமருமற்றிவன்
பேயொடுசுடலையினடிக்கும்பித்தன்வெங்
காயெரிநெற்றியினுமிழுங்கண்ணினன்
பாய்புலிமுடைய தளசைக்கும்பான்மையோன். (10)

குணங்குடிகோத்திரங்குலமொன்றில்லவன்
அணங்குநோய்செய்திடுமரவப்பூணினன்
மணங்கமழ்பூச்சிலைநீத்துவன்முடைப்
பிணஞ்சுடுசாம்பர்மெய்பூசும்பெற்றியோன். (11)

மறையவனுமெனிலொழுக்கமாற்றினன்
இறையெனிலளித்திடாதீறுசெய்பவன்
நிறைபொருள்வணிகனேலிரக்குநீர்மையான்
அறைவதுமறையினற்சதுர்த்தனல்லனே. (12)

பிரமசாரியுமலன்றங்கட்பேதைதோள்
மருவலாற்பொருபடைசுமந்தவாற்றினல்
அரியமாதவனலனரில்வெங்கானிடைத்
திரிதலாலில்லறஞ்செய்துளானலன். (13)

கோனைநாண்மலரவன்றலைகுறைத்தலான்
யாணர்நற்றருமநூலியைந்துளானலன்
வாணுதலொருபுறமாயவாற்றினல்
ஆணலன்பெண்ணலனலியுமல்லனல். (14)

அலகிலெவ்வுலகமுமழியுநாளினின்
மலரயன்வெண்டலைமாலையென்பணிந்
திலகுமுத்தலையவேல்திரிவித்தெங்கணும்
உலவலாற்புனிதனென்றுரைக்கவொண்ணுமோ. (15)

எவவலிகொண்டிவனென்னைக்காண்டலுஞ்
செவ்வி தினெழுந்திலன்சிறப்புஞ்செய்திலன்
அவ்வலியறிந்தனன்யானளித்திடும்
மௌவலங்கோதையைமணந்துபெற்றதே. (16)

ஒழுகொளியுரோணியையுவந்துநாடொறும்
விழையுமற்றவர்தமைவெறுத்த திங்களைப்
பழியொடுந்தேய்ந்துடல்பதைப்பவெவ்விய
மொழியினுல்மாற்றருமுரணடக்கினேன். (17)

ஆங்கவன்போலிவனுற்றல்தீதுறத்
தீங்குரைத்துலகெலாமிகழ்வுசெய்வலென்
றேங்கியவுளத்தொடும்பாதியோர்
பாங்கினிற்சூழ்வரப்பதியினெய்தினன். (18)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

எஞ்சலின்றியருமகமொன்றியற்றுநின்றேனதுகாண்பான்
அஞ்சவருவெஞ்சமருழக்கும்வயிரப்படையோன்முதலமரர்
பஞ்சிசூழ்ந்துமணியிமைக்கும்பல்காழல்குல்மகளிரொடும்
விஞ்சுபெருமாதவரோடும்வருகென்றோலைவிடுத்தனனல். (19)

விடுத்தவோலைகண்ணுறலும்விளிம்புநிலவுச்சுடர்த்தரளம், அடுத்தமௌலிப்பொலங்கழற்காலமரரியக்கர்கந்திருவர், வடித்த மறைதேர்முனிக்கிழவர்பரிதிவேந்தன்மதிக்கடவுள்,கடுத்தாழ்மிடற் றெங்கண்ணுதலையொழிந்தோர்யாருங்கடிதடைந்தார். (20)

மின்கொப்பளித்துவெயில்கான்றவிலையிலாரவடஞ்சுமந்து, பொன் கொப்பளிக்கும்பொலிசுணங்கார்பொம்மன்முலைத்தன்புதல்வியரை, மன்கொப்பளிக்குகெட்டிலைவேன்மதியமுதலமருகர்தமை,அன்புற்ற வரோடளவளாய்முறையின்வரிசைவழாதாற்றி. (21)

தவளக்களிற்றுப்பெரும்பாகன்முதலேழ்திசையிற்றலைவரொடும்
உவணப்புள்ளேற்றொருபாகனுறையுஞ்சுவேதத்தீவடைந்து
குவளைத்தடங்கட்செங்கமலைகொழுநவெமதுமகங்காத்தற்
கவணுற்றிடுதியெனநெடுமால்தக்கனோடுமடைந்தனனால். (22)

அண்ணற்சேவலேற்றெகினத்தருமாமறையோனரனின்றி
வெண்ணெய்கமழுங்கனிப்பவளவாயான்காக்கும்வேள்வியையாங்
கண்ணுற்றிடுதுமெனவடைந்தான்ததீசிமுதலகலைவல்லோர்
எண்ணிற்றங்கட்குறுதிமொழிகூறல்வேண்டுமெனவடைந்தார்.

புலனைந்தவித்ததீசிமுனிபொற்பார்சாலைதனிலெய்தி
உலகமனைத்துமொருதிகிரியுருட்டுந்தக்கன்மனச்செருக்கும்
நிலவுக்கதிர்காலொழுகொளியநிழற்பூண்சுமந்தபொம்மன்முலைக்
கலவமஞ்ஞையனையவவன்மக்கடமையுங்கண்ணுற்றான். (24)

அளத்தற்கரியசிறப்பெய்திச்செம்மாந்துறையுமமரரைத்தம்
உளத்தின்மகிழ்ச்சிமீதோங்கவுறையுமருகர்தமைநோக்கிக்
களிப்புற்றிருக்குந்தக்கன்முகங்காணக்கடவுண்மறைக்கடலுள்
திளைக்குந்தெய்வத்ததீசிமுனியுறுதிமொழிகள்செப்புவனால். (25)

கடவுட்டழல்களொருமூன்றுமுருவோடமர்ந்தகாயாம்பூ
வடிவிற்றிகழுநெடுமாயோன்வேள்வியளிப்பான்வந்திருந்தான்
ஒடிவில்கேள்வியந்தணனுங்குரவனாகியினிதுறைந்தான்
படியேழ்புகழும்பிருகுமுனிபிரமத்துவமாய்ப்பாங்கமர்ந்தான். (26)

அருநான்மறைகளொருநான்கும்வாணியோடுமடைந்தமலர்த்
திருமாதீங்குவதிந்தோர்க்குச்சிறப்புச்செய்யுந்தடஞ்சினைய
தருவோரைந்தும்வேள்விக்குத்தருவயாவுந்தனிவழங்கும்
பொருவில்செருத்தற்குவிமுலையபுனிற்றாவிகள்மிகநல்கும். (27)

பொருவிலமரர்முதலெவையும்பூத்தபுகழ்க்காசிபன்முதல
மருகர்யாருந்தத்தமதுமனையினோடும்வந்திருந்தார்
கருதினவையுமினிதியற்றுந்தெய்வத்தச்சன்கதிரெறிக்கும்
உருவப்பைம்பூண்மாடமுதலனைத்துமொழியாதியற்றுவனால். (28)

இன்னவாற்றால்நன்கெனினுமீசனெழிந்தவிச்சாலை
கொன்னேயுயிர்போம்வெற்றுடலைக்கட்டிலேற்றிப்பலர்குழுமிப்
பொன்னின்மணியிற்கைவல்லோர்புனைந்தாற்போலுமஃதன்றேல்
மன்னுமோரிபேய்களமலிவழங்குஞ்சுடலையாமென்றான். (29)
தோளாமணியினிரைகவற்றுதூமென்முறுவற்றிருவினொடும்
தாளானுலகமுழுதளந்தோன்முதலோர்மேயசாலையினை
வாளாசுடலையெனவுரைத்தாய்மதியிலோயிங்குன்மாற்றம்
கேளாதொழிவேற்குறுதிமொழிகிளக்குமாறென்னெனமுனிந்தான்.
முனியுந்தக்கன்முகநோக்கிமுறுவல்பூத்தமுகத்தினனுய்ந்
கனைவண்டிமிரும்பசுந்துளவோனுறையுஞ்சாலைபுறங்காடாய்
நினையலென்னவுரைத்தனெதவனிகழ்த்துநெடியோன்றனையன்றோ
தனிநான்மறையுமெந்தைபுணர்நான்காஞ்சத்தியெனச்சாற்றும்(31)
புரவிமகநாறினிதாற்றும்புத்தேள்விசும்புபுரப்பதெல்லாம்
அரனைவழிபட்டடைந்தவிந்தவாற்றலன்றேகொடுமறலி
பாவுவேள்விகாப்பனெனப்பகர்ந்தாய்தொழுமார்க்கண்டனுயிர்
விரைவிற்கவர்போதவன்றாளால்விளிந்தாரெவர்கொல்விளம்புதி
யால். (32)
அளத்தற்கரியநிதிக்கிழவனமலன்றுணைவனலநிறங்
களத்திலமைத்தபதிஒருவர்கடவுளுருவம்பெற்றுள்ளோர்
விளக்குஞ்சுடர்களொருமூன்றுமன்னோன்விழிகள்மறைநான்கும்
துளக்கவில்லாப்பிரமமெனமடவோயாரைச்சொல்லுமால். (33)
எல்லாவுயிர்க்குமுயிராகியேகமாகிப்பலவாகிச்
சொல்லாநின்றநீயாகியானுய்நின்றசுடர்க்கொழுந்தை
அல்லாற்பொருளொன்றுளதாங்கொலவன்சீரறிஞரறிவதன்றிக்
கல்லாவெளிற்றுப்புல்லறிவோர்க்கறியலாமோகழறுதியால். (34)
பொருளிற்றீர்ந்தபுன்கவியும்புதல்வர்வழங்காப்பாழ்மனையும்,அரு
ளிற்றீர்ந்தவெற்றுடலுமன்பற்றணந்தவனிதையரும், வருமென்மு
லையார்தமையொழிந்தமனைவாழ்க்கையும்வெண்டிரைசுருட்டும், விரி
நீர்ப்பேரியாறலைத்தொழுகவிளங்காதோங்குவியன்பதியும். (35)

கொடையிலா தான்வாழ்வுமறை கூறுமறையோனல்லொழுக்கும்
அடைவிற்றருப்பைவனையாமலாற்றுங்கடனுமெள்ளின்றி
உடையகிழமைத்தென்புலத்தோர்க்கூட்டும்புனலும்போலுநரை
விடையோனன்றிநீயாற்றும்வேள்வியென்னவெகுண்டுரைத்தான்.

தழைபெய்குரம்பைத்தவப்பள்ளித்ததீசியுரைப்பத்தக்கன்வெகுண்
டழல்வாய்விதியினினிதாற்றுங்கருமமதன்பேறளிக்குமென
மொழிதலோடுஞ்செய்கருமஞ்சடமாமுதல்வன்சான்றாகி
ஒழிவிலதன்பேறளிக்குமெனக்கடவுள்முனிவனுரைத்தனனால்.(37)

கருமஞ்சடமவ்விறைசான்றாய்த்தன்பேறளிக்குமெனக்கரைந்தாய்
உரைசெய்தெய்வஞ்சான்றலதுபயன்றாவாதாலுறுவித்து
மருவுங்காலந்தனிற்றோன்றிவளர்ந்துபயனல்குதல்போல
விரியுங்கருமகாலத்திற்பலன்கடாமேவிளைத்திடுமால். (38)

என்னலோடுமுறைபிறழாதியற்றுங்கருமகாலத்தின்
மன்னுபலநீயளிக்குமென்றாயவனதருளின்றேல்மடவோய்
சொன்னகருமம்விதிமுறையினியற்றியிடினும்பயன்றாவா
தன்னோனருளால்விதியின்றியாற்றுகினுமப்பயனளிக்கும். (39)

மண்ணிற்றெளித்தவித்தனைத்துந்தத்தங்காலம்வரிற்றோன்றி

கண்ணுமதனைத்தோற்றுவித்துங்கருமபலன்களினிதளித்தும்
உண்ணின்றியற்றுமொருபொருளேயதனினுறைந்துமுறையாதால்.

என்றுகூறியுலகனைத்துமீன்றுகாத்துத்துடைத்தவற்றை
மன்றமறைப்பித்தருள்புரியும்வரதனின்றிமகம்புரிவோய்
பொன்றாயல்லையெனவோதித்ததீசிபொருவில்துருவாசன்
மின்றாழ்சடிலத்துத்துங்கன்சவனன்முதலோர்விரைந்தகன்றார் (41)

கோணைக்களிற்றினிடர்களைந்தோன்முதலவமரர்கூட்டுண்ண
மாணுற்றுள்ளமகிழ்தூங்கத்தக்கன்மகமாற்றிடுமேல்வை
யாணர்க்கமலமலர்ப்பொருட்டினுறையும்புத்தேளினிதீன்ற
வீணைக்கிழவனிவர்ந்தோங்குவெள்ளிப்பொருப்பிற்செலவயர்ந்தான்.

## எண்பத்தாறுவது தக்கன்வேள்விசெய்த அத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—2084.

## எண்பத்தேழாவது
## தேவிதக்கன்சாலையடைந்த அத்தியாயம்.

### கலிவிருத்தம்.

கத்திகைக்கொன்றையங்காடுசாடிமேல்
தத்துநீர்வேணியங்கடவுள்சார்தரு
மைத்தவழ்வெள்ளிமால்வரையின்யாழுடை
வித்தகமுனிவரன்மேவினனரோ. (1)

புவனகோடிகளெலாம்பூத்தபேதையோ
டவிர்மதிபுனைசடையண்ணல்காதலிற்
கவவுறநின்றாடுதல்நோக்கிக்கைதொழாத்
திவவியாழ்முனிவரன்செப்பன்மேயினன். (2)

மாலுடனுலகெலாம்வயிறுவாய்த்தருள்
பாலலோசனிநினைப்பயந்துளோனுயர்
நீலமால்வரையகனெற்றிச்சாரலிற்
கோலினனொருமகங்கொடிதுபோலுமால். (3)

உன்னுடனொருவயிற்றுதித்தமங்கையர்
அன்னவர்கொழுனர்மற்றமரர்யாவரும்
மன்னினருந்தைதநல்வரிசையாற்றிடப்
பன்னருஞ்சிறப்பொடும்பரிந்துவைகினார். (4)

உடல்சினக்கணிச்சிவானவனையுந்தைவெம்
படிறுரைத்திகழ்தலுந்தநீசிலைதலுற்
றடுசினத்தோடும்வைதகலயான்செவிப்
புடைபுதைத்திந்நெடும்புவியிற்போந்தனன். (5)

என்றுநாரதனுரைத்தேகுமேல்வையிற்
பொன்றவழிளமுலைப்புரிமென்கூந்தலாள்
குன்றவிற்குரிசிலைநோக்கிக்கோதறு
மன்றலஞ்சேவடிவணங்கிக்கூறுவாள். (6)

எந்தையாற்றுறுமகநோக்கியெய்துவன்
தந்தருள்விடையெனத்தையல்கூறலும்
பந்தணிமெல்விரற்பாவையீங்கிது
சிந்தைசெய்திடலெனவிறைவன்செப்பினான். (7)

இழித்துரைபுகன்றனனென்னைநின்னையும்
அழைத்திலன்கேட்டைநாள்நவமியன்றியும்
பழித்திடுசனிவிதிபாதஞ்சூலமும்
கிழக்கவணேகுறிற்கேடுண்டாமென்றான். (8)

முழுநெறிக்குவளைமென்முகைநெரிந்தன
மழைமதர்நெடுங்கணிற்சிவப்புவாய்ந்திட
இழைதவழிளமுலைக்கோதையெந்தைதாள்
தொழுதனளருள்பெறாள்துணிவொடேகினாள். (9)

குணில்பொருபல்லியங்குழுமியார்ப்பெழப்
பணிதருமுயர்கணம்பாங்குசூழ்வர
மணியொளிர்விமானம்விட்டிழிந்துவானுதல்
அணிகெழுசாலையினடைதன்மேயினாள். (10)

வெண்ணெய்மெய்பூசிமெல்விரல்மடக்கியோர்
அண்ணலங்கருங்கலையுரிவைகையமைத்
தெண்ணருஞ்சடங்கிகணடுவணெய்திய
நண்ணருந்தந்தையைத்தாயைநண்ணினாள். (11)

நண்ணியபுதல்வியையுளநயப்புறுக்
கண்ணொடுதொடுத்தெனநோக்கிக்காதலான்
மண்ணமைதிரள்புயத்தந்தைமாட்சியாற்
பண்ணியசிறப்பினைப்பகரவொண்ணுமோ. (12)

சிறந்துளீரித்துணைச்சிறப்பையென்றொடும்
பிறந்துளோர்ப்புகுந்துழியழைத்துப்பேணுவான்
அறிந்திலீர்மருகரையழைத்தபோதினில்
மறந்தனிர்போலுமெம்மழுவலானையே. (13)

என்னலுஞ்சுணங்குபோர்த்தெழில்குவித்துயர்
பொன்னவிரிளமுலைபூத்தகொம்பனாய்
உன்னுடைக்குற்றமன்றுன்னையீந்துளேன்
தன்னுழைத்தவறினைச்சாற்றக்கேட்டியால். (14)

உலகெலாம்படைத்தளித்தழிக்கும்பண்ணவன்
கலைமதிக்கீற்றணிகடவுளாமென
மலரயனெனதுளமருட்டிக்கூறலால்
அலர்முலைநின்னையானவனுக்கீந்தனன். (15)

அடலைமெய்பூசுவதரவம்பூண்பது
கடல்விடமுண்பதுகபாலமேந்துவ
துடல்சினநரைவிடையூர்வதன்னவன்
மடவரல்வேள்வியின்வருதற்பாலனோ. (16)

என்றலுந்தீயவனீன்றயாக்கைநீத்
தொன்றியநல்லுருவுறைவல்யானெனப்
பொன்றல்போலுடலமென்போர்வைநீக்கினள்
மன்றருழிமயமால்வரையிற்றோன்றினாள். (17)

நண்ணுறுகாலையினாலுலகந்தெனப்
பண்ணவர்யாவரும்பையுளெய்தினார்
மண்ணகநடுங்கினவரையசைந்தன
விண்ணுருமதிர்ந்தனமின்னும்வீழ்ந்தவே. (18)

சூறையம்பெருவளிசுழன்றெழுந்தன
பாறுவீழ்ந்தமரர்பொன்முடியிற்பாய்ந்தன
ஊறுசெங்குருதிவெண்ணுரைதுளித்தன
கூறுமுத்தழற்சிகைக்கொழுந்துற்றில்லையால். (19)

ஆடகக்குழிசிபெய்யவிகள்யாவையும்
பாடுறுஞமலிகள்பற்றிவவ்வின
சேடுயர்பருதியைநோக்கிச்செவ்வனே
கூடுறுநரிக்குழாநனிகுரைத்தவே. (20)

மன்னியதீமையைநோக்கிமாயனும்
என்னுறுமோவெனவுள்ளத்தெண்ணினான்
அந்நிலைநோக்கியதக்கனந்தணீர்
நன்மகமியற்றுதிரெனநவின்றனன். (21)

எண்பத்தேழாவது தேவி தக்கன்சாலையடைந்த
அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—2105.



## எண்பத்தெட்டாவது

# தக்கன் வேள்வியழித்த அத்தியாயம்.

---

கலிநிலைத்துறை

அன்னவேலையின்மெல்வளிதைவரினமிழ்தின்
இன்னரம்பிரங்கிசையெழுமகதியாழ்முனிவன்
பொன்னிணர்ப்பசுங்கொன்றைநறைபைந்தேன்றுளிபொழியும்
சென்னிவானவன்கயிலைமால்வரையினிற்சென்றான். (1)

ஒள்ளழற்சிகைதவழ்தரநெட்டுயிர்ப்பெறிந்து
வெள்ளநீரிடைக்கண்மணிநீந்திடவிழித்துத்
தள்ளருந்துயரோர்வடிவெடுத்தெனத்தாழா
வள்ளலோடிவையாழ்முனிமென்மெலவழங்கும். (2)

விரிகதிர்ப்பசுந்திங்களங்கண்ணியெம்விமல
திருவில்தக்கனிற்பழித்தவெந்நீமொழிகேளா
உருவிரண்டினிற்றோன்றுருவொழித்துணர்வரிதாம்
அருவமாயினனுலகெலாமீன்றருளன்னை. (3)

என்றுகூறிடவனையவளிறந்துபாடெண்ணி
நன்றுநன்றெனப்பண்ணவனகைபுரிந்திடலும்
குன்றமேழ்கடலண்டகோடிகள்நிலைகுலைந்து
பொன்றுகாலமேபோன்றதச்சீற்றமார்புகல்வார். (4)

அண்டகோளகைமுகட்டினில்மணிமுடியுறைய
எண்டிசாமுகமெறுழ்வலித்தடம்புயமளப்ப
மண்டுசெங்கதிர்வடவைகட்கடைதொறும்வழங்கக்
கொண்டசீற்றத்திற்றோன்றினன்கூற்றின்வெங்கூற்றம். (5)

கூற்றினுருயிர்குடித்தபொற்குரைகழல்வணங்கி
ஆற்றல்சால்பெரும்புவனங்கள்முழுவதுமள்ளி
வீற்றுவீற்றவாய்விழுங்குகோவிண்ணவர்பதங்கள்
மாற்றுகோபெரும்புறக்கடல்முகந்துவாய்மடுக்கோ. (6)

மண்ணருந்துகோமண்பொதிபுனலைவாய்மடுக்கோ
தண்ணறும்புனல்பொதிதழல்விழுங்குகோதழல்சூழ்
அண்ணலம்பெருங்காற்றினைநுங்குகோவவைசூழ்
விண்ணயின்றகட்டொருபுடைகிடத்தினன்விடுக்கோ. (7)

உலகம்யாவையுமுண்டவன்றனையெடுத்துண்கோ
கலைமுதற்பெயராளவில்பல்காலமுங்கலக்கோ
பொலன்முகட்டுயர்மேருவைத்துகள்படப்புடைக்கோ
கொலைசெயுங்கொடுங்கூற்றுடற்பிழிந்துயிர்குடிக்கோ. (8)

பணித்தல்யாதெனத்தொழுதலும்வீரபத்திரகேள்
தணிப்பருந்திறற்றக்கனீண்மவுலியஞ்சென்னி
துணித்துமற்றவனாற்றியவேள்வியுந்தொலைத்தி
கணித்தபேருலகனைத்தையுங்கனற்றிடலென்றான். (9)

என்னலோடுமவ்வீரபத்திரனெனுமிறைவன்
ின்னுநக்கவாளெயிற்றினர்வியனிலஞ்சுமந்த
ன்னகத்தினில்வீக்கியகச்சினர்படையா
தன்னையொப்பவராளப்பிலருயிர்ப்பினிற்றந்தான். (10)

ன்புறத்தசெங்கட்கரும்பன்றிவெண்கோடும்
ஊன்கழிந்தமோட்டாமையின்புறத்தவெள்ளோடும்
ான்பழுத்தபைந்துளவினோன்கழித்தவெண்டலையும்
ான்பொறுத்துயர்முடிதொறுமுடிதொறும்வயங்க. (11)

ருதிநீர்படிந்தாடுவெங்கணிச்சிவேல்குலிசம்
ருதிவாளெழுத்தோமரங்கப்பணம்பலகை
ரிகவிழ்க்குமுத்தலையவேலிவைமுதற்படைகள்
பொருவிறோள்களீராயிரந்தரித்தனன்பொலிய. (12)

றுபூத்தொளிர்நெற்றியங்கட்கடைபொழிதீப்
ாறுசூழ்வருபடைதொறும்படைதொறுமுமிழ்நீ
றுசெய்துலகொளித்திடவேந்தியதெறுதீ
ாறுகொண்டுசெந்தழற்சிகைமாலையிற்றவழ. (13)

படகமாகுளிமுருடுபேரிகைவயிரம்பை
குடவயிற்றுவெண்சங்கினங்குடமுழாமுதல
வெடிபடத்தனியதிர்ந்துவான்வெளிமுகடுடைந்து
கடையுகத்தெழுகடலுடைந்தாலெனக்கறங்க. (14)

மற்பழுத்ததிண்டோளுடைத்திறல்மணிமானுங்
கொற்பழுத்தவெம்முரட்படைநந்தியுங்குழைந்த
விற்பழுத்துமிழ்வெங்கணைச்சண்டனும்விரிந்த
அற்பழுத்தமெய்க்காளியுமதிர்ந்துமுன்னடப்ப. (15)

வெருவருந்திறல்வாளினர்வேலினர்வெகுளின்
ஒருவரண்டங்கள்யாவையுமொருங்குவாய்மடுக்கும்
பொருவிலாற்றலர்பொருப்புறழ்தோளினர்பொங்கி
இருமருங்கினுமெண்ணருங்கணந்துடர்ந்தேக. (16)

அலரிமண்டிலம்வீழ்தருமத்தமால்வரையும்
பொலன்முகட்டுயர்மேருவும்புணரிசூழ்வரைப்பும்
நிலைகுலைந்திடச்சேடனுநெடுமுதுகுளுக்க
மலைநடந்தெனநடந்தனன்வயங்கெழுவீரன். (17)

மிடைந்துசேனைமுன்னடத்தலும்விரிதுகட்படலம்
படர்ந்துதெண்டிரைபொருமெழுகடல்திடர்ப்படுத்தி
மடந்தைபாகனையிகழ்ந்துயர்மகவினைபுரிவான்
அடைந்தவானவர்கட்புலஞ்செம்மிய தன்றே. (18)

அறைதருங்கழற்கொடிப்படையார்ப்பொலிகேளாச்
சிறகர்வண்டுளர்பசுந்துழாய்ச்செங்கண்மான்முதலோர்
முறைதிறம்பியிவ்வுலகெலாமுதலொடுமுடியும்
இறுதியின்றெனநினைவுழிச்சேனைசென்றிறுத்த (19)

சேட்டிளங்கதிர்ச்செல்வனைதாளிகெடச்சிரிக்கும்
மோட்டுமாமணிச்சாலையின்மொய்சுடர்த்தெறுதீ
ஊட்டினார்சிலர்சிதர்மணியூபங்களொடித்தார்
வீட்டினார்சிலரமரரைச்சிலரவிமிசைத்தார். (20)

அண்டகோளகைமுகட்டினிற்சிலர் தமையடித்தார்
மண்டுதீம்புனற்கடலிடைச்சிலர் தமைமடுத்தார்
எண்டிசைக்கரிபற்றினர்சுற்றினரெறித்தார்
கொண்டலேழையுமழலெழமுறுக்கினர்குடித்தார். (21

ஓங்குமுத்தழலவித்தனர்சிலர்சிலரோடி
வீங்குதூணிடையார்த்தபல்பசுக்களைவிடுத்தார்
பாங்கினிற்சிலரியக்கர்கின்னரர்பதைபதைத்து
மூங்கைபோலுறநாவினைமுதலொடுமறுத்தார். (22)

குடங்கையிற்சிலரேழ்கடலள்ளினர்குடித்தார்
விடங்கவிழ்த்திடச்சேடனைவேரொடும்பிடுங்கிப்
படங்கிழித்தனர்சூட்டுடைப்பருமணிபறித்து
வடங்களாமெனக்கோத்தனர்மார்பினிலணிந்தார். (23)

பாழிமால்வரைமுழுவதுமடியொடும்பறித்துப்
பூழிபட்டிடச்சிலர்விரல்நுதியினிற்புடைத்தார்
ஆழிவெற்பினையாழ்ந்தெடுத்தொருகுறட்பூதம்
தாழ்தடக்கையிற்கங்கணமெனத்தரித்ததுவே. (24)

அனையகாலையினடுகளத்தாரமரோற்றுக்
கனைகடாக்களிசெருக்கலிற்கண்படைபெறாத
பனைநெடுங்கரத்துடலயிராவதப்பகட்டின்
புனையெருத்தமேற்றோன்றினன்வயிரவாட்புனிதன். (25)

வயிரவாட்படைவிண்ணவன்மண்டமர்க்கெழலும்
செயிருடைக்கொடுந்தழற்கிறைதெண்கடற்செல்வன்
உயிர்குடிக்கும்வெங்கூற்றுவனிருதிவேந்துலவை
வெயில்விரிக்கும்வேலியக்கர்கோனொடமர்விளைத்தார். (26)

ரகதப்பசும்புரவியூர்வயங்கொளித்தடந்தேர்ப்
பொருவிலாதபர்பொழிகதிர்த்திங்களங்கடவுள்
வருவருந்திறல்மருத்துவர்விறல்கெழுவசுக்கள்
ருவிசும்புறைதேவர்மற்றெவருமேற்றெழுந்தார். (27)

எற்றெழுந்துவாய்காய்ந்தொளிர்வெந்தழலிறைக்கும்
பாற்றினஞ்சுழல்பரிதிவேல்தோமரமுசண்டி
ஊற்றிருந்துசெங்குருதிகொப்புளிக்குமொண்பகழி
ஆற்றல்சால்கணநாதர்மேல்விடுத்துநின்றார்த்தார். (28)

கைம்முகந்தெறிநாணிடிக்குரலொலிகலிப்பத்
தெம்முகந்தலைபனிப்புறக்கொடுங்கணைசிந்தி
அம்மவோவெமதாற்றனன்றாயதென்றழன்று
கொம்மைகொட்டினனந்திவெள்விடையுயர்கொடியோன். (29)

செந்தசைப்புலவொழித்திடாதிடிக்குலஞ்சிதறும்
மைந்துடைக்கொடுங்குலிசம்வானவர்க்கிறைவழங்க
நந்தியேந்தியவெந்திறற்கணிச்சிமுன்னண்ணி
வெந்துசாம்பராய்வீழ்தலுமகபதிவெகுண்டான். (30)

கொற்றவெஞ்சிலைகுழையநீள்குடுமிநாண்கொளுவி
அற்றமில்கணையமரர்கோன்பொழிதலுமையன்
பற்றியாங்கவனடலயிராவதப்பகட்டைச்
சுற்றிவாய்வழிகுருதிநீர்சொரிதரப்புடைத்தான். (31)

புயலுகைத்தெழுமமரர்கோன்போரினுக்காற்றான்
குயிலுருக்கொடுபறத்தலுநஞ்சுகொப்புளிக்கும்
அயிலெயிற்றவெம்பஃறலையரவகங்கணத்தோன்
பயில்கொடுஞ்சிறையங்கையாற்பற்றினன்பறித்தான். (32)

எழ்தடங்கிரியேழ்கடலேழ்பெருந்தீவும்
பாழிவாயிடைப்புகுத்தியும்பசிகெடாதுழலும்
காழ்நிறத்தனகூளிவெங்கனலிநாவேழும்
போழ்படும்படிகுறைத்துயர்கொடிற்றிடைப்புடைத்த. (33)

செங்கட்கார்நிறமேதியின்றிரள்மருப்பொடித்து
வெங்கட்கூற்றினைப்பிடித்தழல்விழியிணைபிதுங்க
அங்கைப்பாசத்திற்கழுத்தினிலிறுகுறவார்த்துத்
துங்கமோலிநுண்டுகள்படத்துகைத்தனன்சண்டன். (34)

மங்குல்வாய்திறந்துண்டெழும்வார்கடற்கிறைவன்
பங்கிபற்றிநீணிலத்திடைப்பதைத்திடவீழ்த்தி
அங்கவன்றனிவயிற்றினையுகிரினாலகழ்ந்து
தங்குநீருகப்பெய்தனர் தழல்விழிப்பூதம். (35)

திருகுசீற்றமால்விடையிவர்செல்வனையின்றிப்
புரியும்வேள்வியிற்புகுந்தினிப்போதியோவென்று
நிருதியைப்பிடித்தொருகையாலழுந்துறநெருக்கிக்
குருதிவாய்வழிகொட்டிடப்புடைத்தனர்கூளி. (36)

ஆர்த்தநோக்கினிற்சிறுதழல்வடவையிற்றூங்கப்
பார்த்துவெந்திறற்காற்றிறையாருயிர்புதைத்துப்
போர்த்தநீண்மயிர்க்காடுறுங்குருதிநீர்பொடிப்ப
ஆர்த்துழக்குவாய்புதைத்துயிர்ப்பவித்தனரலகை. (37)

கற்றையஞ்சுடர்கான்றுவெங்கனையிருள்பருகும்
ஒற்றையாழியந்தேருடைப்பகன்றனையுடன்று
பற்றிமற்றவன்கண்ணினைவேரொடும்பறியா
ஈற்றிமன்றிடைவீழ்த்திநின்றிழுத்தனர்பூதம். (38)

உலகம்யாவையும்விழுங்கிருட்குறும்பெறிந்தோட்டும்
அலர்செழுங்கதிராரியமாவென்னும்வானவன்றன்
நலவரைத்தடந்தோளினைவாளினாற்குறையா
அலகையொன்றுதன்புலவுவாய்மடுத்துநின்றாடும். (39)

பல்லைமெல்லரும்பனையநல்லவிழுகந்தினிதின்
புல்லுநன்பகலுந்தனிபயின்றுடல்தடித்த
ல்விளக்குபூடாதவன்றனைப்பிடித்தெற்றிப்
ல்லுகுத்தனர்சுழல்விழிப்பாழிவாய்ப்பூதம். (40)

இயக்கர்வேந்தனைவசுக்களோரெண்மரையாரும்
இயக்குநல்லெழில்மருத்துவரிருவரைவெகுண்டு
மயக்கமுற்றுநெய்த்தோர்பருவாய்தொறுஞ்சொரிய
யக்கொடுங்கதையொன்றினாலடித்தனன்மணிமான். (41)

நீளிருங்கதிர்த்திங்களுஞ்செல்வனை நெருக்கி
வாளினலமர்மலைந்தவன்வாட்படைநூறித்
தோளினற்பிணித்தணிமுடிதுகள்படவீழ்த்தித்
தாளினலகனிலத்தொடுந்தேய்த்தனன்சண்டன். (42)

பிள்ளைவெண்பிறைபிணித்தவார்செஞ்சடைக்காளி
கள்ளயாவுயிர்க்குங்குழற்காமர்பூந்திருவை
வள்ளவாய்ப்பொலம்பொகுட்டுவெண்டாமரைமயிலை
அள்ளிலைச்சுடர்வாளினல்மூக்கினையரிந்தாள். (43)

இடுகுநுண்ணிடையிறுமிறுமென்பதையுணர்ந்தோ
கொடியகூற்றினுமென்பதையுளத்திடைக்குறித்தோ
உடல்சினத்தபோர்க்காளியொள்வாளினலிலங்கு
படைகொள்வேல்விழிப்புலோமிசைபடாமுலைகுறைத்தாள். (44)

தக்கனன்மனைக்கிழத்திதன்றாழ்குழைகொய்தாள்
தொக்கவிண்ணவர்மடந்தையர்துணைமுலைசெவிநா
மைக்கருங்குழல்குறைத்தனள்வாய்வழிக்குருதி
கக்கநல்லெழிலதிதியைக்கவிரிதழரிந்தாள். (45)

குடவயிற்றெருளிர்குருமணிக்குண்டலங்குழைய
கடவுட்காசிபன்முதலிய முனிவரர்கலங்க
முடியுடைத்தலைகீழுறமுனிவொடும்பற்றி
ஒடிவில்யூபத்திற்றூக்கிமார்புறச்சிலருதைத்தார். (46)

ஈருள்மூளைதோலென்புசெந்தசைசுடர்நரம்பு
சோரிசிந்திடக்காலினற்சிலர்தமைத்துகைத்தார்
பாரின்மீதிலிட்டரைத்தனர்சிலர்தமைப்பலரைக்
காரினூடுபுக்கொளித்திடக்கைவிசைத்தெறிந்தார். (47)

தொழுதுபற்றெருகைதோன்றநின்றிரந்தனர்சிலர்மற்
றழுதுநெஞ்சகங்குழைந்துநின்றரற்றினர்சிலர்வெங்
கழுகுகொத்திடக்களத்திடைக்கவிழ்ந்தனர்சிலர்தாம்
விழுதுவிட்டனகொத்துடைக்கரத்தவிண்ணவரே. (48)

தாளிழந் தனர்சிலர்சிலர் தடக்கைகளிழந்தார்
தோளிழந் தனர்சிலர்சிலர் துணைவிழியிழந்தார்
காளமுண்டிருள் கனிந் தமைக்கண்டனையிகழ்ந்தோர்
நாளுலந்திடாதுய்ந் தவர்நானிலத்தெவரே. (49)

## எண்பத்தெட்டாவது தக்கன் வேள்வியழித்த அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—2154.

## எண்பத்தொன்பதாவது தக்கன் வதையுரைத்த அத்தியாயம்.

முன்னரெய்தியகொடிப்படையின்னணமுடிப்பப்
பன்னகத்தொடும்புடவிபாதலத்திடையொளிப்பச்
சென்னியண்டகோளகைகிழித்தப்புறஞ்செல்லத்
தன்னடித்துணைபெயர்த்தவண்வீரனுஞ்சார்ந்தான். (1)

எம்மையாளுடையீசனையிகழ்ந்தனனுய
செம்மைதீர்தொழிற்றக்கனைச்சேர்ந்ததீமையினல்
மும்மையாகியவுலகமுங்கணத்திடைமுடிந்த
அம்மவோவெனவதிசயம்பூத்திடவறைவான். (2)

தக்கனெங்குளனன்னவன்றீமகச்சாலை
தொக்கவானவரெங்குளர்விரைவினிற்றுடர்ந்து
புக்கபுக்கவெவ்விடத்தொறும்நீவிரும்புக்குச்
சிக்கயாத்திவட்டருகெனச்சிலர்தமைவிடுத்தான். (3)

விரைவினிற்கணஞ்செல்வுழிவேள்வியம்புருடன்
இரலையேறெனநடத்தலுமெதிர்த்தொருபூதம்
திருகுகோட்டினைப்பற்றிநீள்சென்னியைத்திருகிக்
குருதிவாளுடைவீரன்முன்கொணர்ந்ததையன்றே. (4)

கடிமலர்ப்பொலங்கற்பகக்காடுகாவலனோ
டையமற்றுளவமரர்கள்யாவருமவிந்தார்
உடல்சினத்தவைம்படைசுமந்தோரடியதனாற்
படியளந்ததண்பசுந்துழாய்மாலுளனென்றார். (5)

எங்குளானவனெங்குளானெனவுருத்தெழுந்து
பொங்குவெங்கவுட்கடாக்களிற்றொருத்தன்மேற்போதும்
சிங்கவேறெனச்சேரலுந்தாமரைபூத்த
மங்குல்போன்மெனத்தோன்றியமாயனைக்கண்டான். (6)

கொன்றைவேணியோன்குரைகழற்போதினிற்றூவி
மன்றவேத்துவானாயிரந்தாமரைமலரில்
ஒன்றிலாமையினுனதுகண்ணிடந்துதூயன்றோ
வென்றிநேமியும்விளம்பருஞ்செல்வமுமடைந்தாய். (7)

கருமுகைச்செழும்பூவைபோன்மேனியங்கண்ண
புரியும்வேள்வியம்புருடனீதக்கனைக்காத்துச்
செருவிளைத்தியோதீயனையறிவொடும்பற்றித்
தருதியோவுயிரிழத்தியோசாற்றுதியென்றான். (8)

தவலருந்திறற்றக்கனைக்காக்குவனெரிகால்
அவிர்கொடும்படையெறிந்தமராற்றுதியென்னாக்
குவலயம்பொதிகுரைகழற்றாமரைக்குரிசில்
கவனவேகவெங்கலுழன்மேலிவர்ந்தனன்கடிதின். (9)

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அண்டகோளகையுடைந்துமோழைபடவப்புறத்திலுயரண்டறும், விண்டுபோழ்படவிலங்குபொற்குடுமிமேருமால்வரைவெடிப்பநீள், எண்டிசாமுகமுமொலியினிற்செவிடுபடமழைக்கருவிருந்ததோர், கொண்டல்வண்ணனுருமேறெனக்குளிறுகுடவயிற்றவளையூதினான் (10)

அஞ்சிறைக்கலுழன்மீதிவர்ந்துவருமைம்படைக்கடவுளழலாடு, நஞ்சுயிர்க்குமடல்வாளிகோடிகணநாதரோரொருவர்மேல்விட, வெஞ்சமத்திடையெதிர்ந்ததானவரைவெல்வதன்றுகணநாதர்முன், உஞ்சுபோவதரிதென்றுமாயனைநகைத்துவீரனுரையாடினான். (11)

உலகம்யாவையுமொடுங்குகாலையினிலுடைதிரைக்கடலினுள்ளுறும், அலகிலண்டமுமுடைக்குமோர்கதைகொடாடல்வீரனெதிர்மோதமால், விலகிவில்லுமிழும்வாளரக்கருயிருண்டுவெங்குருதிமுடையருப், புலவுவெங்கதைகொடெற்றமற்றதுசிதர்ந்துபூழியெனலாயதே. (12)

மட்டுவார்தருபசுந்துழாய்மவுலிபின்னும்வார்சிலைகுனித்துமேல், விட்டவெம்பகழிமாரிகண்டுகொடுவெஞ்சினத்தினடல்வீரனும், கட்டுவாங்கமதுகொண்டுதிண்சிலையெடுத்தகைமுரியமோதலும், தொட்டவெஞ்சிலைவிழுந்ததம்புவிசுமந்தவாளரவுளுக்கவே. (13)

பருதியாயிரமெழுந்ததென்னவொளிர்பாய்செழுங்கதிர்பரப்பிவான், உருமுமின்னுமொருகோடிகோடியுயர்தாரைதாரைதொறுமுமிழும்வெங், குருதிநேமிநெடுமால்விடுப்பவதுகொற்றவீரன்மணிமார்பினிற், பொருவில்விந்தையடுசயமரத்திடைபுனைந்தமாலையெனலாயதே. (14)

வெயில்விரிக்குமடல்நேமிமாலையின்விளங்கலோடுமுகில் மேனியான், செயிர்விளைத்துவடிவாள்விதிர்த்தமருடற்றல்கண்டுதிறல்வீரன்வாள், எயிறதுக்கியழலெழவிழித்துடலும்வெஞ்சினத்தெதிருறுக்கினான், புயனிறக்கடவுள்வெருவிமாழ்கியுயிர்பொன்றினாரினுடல்வாடினான். (15)

நீலமால்வரைவிழுந்ததாமெனவிழுந்தநீணிறமுருந்தனைச்
சூலவேல்கொடுதுழாய்முடித்தலைதுணிப்பவீரன்வருபோழ்தினில்
மாலிறந்துபடமைந்தவாருயிரைவவ்வல்வவ்வலெனவானின்வாய்
ஆலமுண்டமாருய்யவின்னருள்பொழிந்தவண்ணலுரையாடினன்.

ஐயன்வானிடையுரைத்தவின்மொழியினருணினைந்துதிறல்வீரன்மால், உய்யுமாறுவகையொடும்விடுத்தயலுறைந்ததக்கனெதிரோடிநீ, செய்யுமாமகமுடிந்ததேதாவெனநகைத்துரைத்துவளர்செந்நிறக், கையினுலுருமினெற்றவெற்புறழ்களத்தொடுந்தலைதெறித்ததே.

தெறித்தசென்னியையெடுத்துவீரனுயர்செங்கையங்கையின்மடுத்துமுன், ஒறுத்தவானவரையொழியநின்றவர்தம்முடல்பிழிந்துயிர்குடித்துவெம், பொறித்தழற்சிகையினுலகம்யாவுமுயிர்பொன்றுகாலையினடித்திடும், மறித்தடக்கையுடைமழுவலாளெனவயங்கொள்வெஞ்சமரினாடினன். (18)

## கலிவிருத்தம்.

மண்டமர்கடந்தவிம்மனச்செருக்கினால்
அண்டகோடிகளுமின்றள்ளியள்ளிநின்
றுண்டிடும்வீரனென்றுள்ளத்தெண்ணினன்
புண்டரிகத்தவிசுறையும்புங்கவன். (19)

எண்ணியெவ்வுலகமுமீன்றபுங்கவன்
கண்ணுதலுறைதருகயிலைமால்வரை
நண்ணிவார்கங்கைதாழ்நளிர்மதிச்சடை
அண்ணலையேத்தியீதறைதன்மேயினன். (20)

அல்லல்செய்தறம்புரிதக்கன்றீமையால்
எல்லையிலமரராண்டிறந்துபோயினர்
ஒல்லையினளித்தியென்றுரைப்பமால்வரை
வில்லிநான்முகனொடுவிரைவினெய்தினன். (21)

கொழுதிவண்டிமிர்தருகொன்றைவார்சடை
முழுமுதலெய்தலுமூரிவீரனோ
டெழுதருநந்தியைமுதலயாவரும்
தொழுதனர்மலர்மழைதூவிநின்றனர். (22)

அன்னகாலையின்மறைக்கிழவனண்ணறன்
பொன்னடிதொழுதுமால்முதலபுங்கவர்
இன்னுயிரளித்தியென்றிரப்பத்தன்னுழை
மன்னியவீரனை வழங்குவாயென்றான். (23)

வெந்திறல்வீரனும்விளிந்தவிண்ணவர்
செந்தசையென்புதோல்சென்னிதோள்கரங்
கந்தரமூக்குநாக்கண்ணளித்தவர்
உய்ந்திடவாவியுமுதவினானரோ. (24)

காத்துலகமைத்தவைகடியுமீசனை
ஏத்திடாவிறைவரேபசுக்களென்பவால்
நீத்தொழிற்றக்கன்வான்சென்னிகண்டிலன்
மோத்தையாடெறிந்தனமுகத்தையொட்டினான். (25)

கண்டுயிலேற்றவரென்னக்கார்நிற
வண்டுழாய்மாயவன்முதலவானவர்
தொண்டரேம்பிழைத்தவைபொறுத்திதூச்சடை
அண்டர்நாயகவெனவடிவணங்கினார். (26)

அண்ணலுமருள்புரிந்திமயமால்வரை
நண்ணினான்கணங்களைநாமவீரனைக்
கண்ணனைமுதலியகடவுளோரெலாம்
புண்ணியத்தாண்மலர்போற்றிப்போயினார். (27)

நந்தியைமுதல்கணநாதர்யாவரும்
வெந்திறல்வீரனும்விடைநெடுங்கொடி
எந்தைசேரிமயமால்வரையினேகினார்
தந்தையுந்தக்கனைநோக்கிச்சாற்றுவான். (28)

காசியினிலிங்கமொன் றமைத்துக்காதலால்
தேசுடனருச்சனைசெய்யினல்லதை
ஈசனையிகழ்ந்ததீங்கொழிந்திடாதென
வாசநாண்மலரவன்வழங்கிப்போயினன். (29)

திருவமர்காசியிற் றக்கன்சேர்ந்தவண்
பொருவருமிலிங்கமொன் றமைத்துப்பூசைசெய்
தொருபதினாயிரம்பருவமொள்ளழல்
எரிநடுவிருந்தருந்தவமியற்றினன். (30)

திரைதவழ்கங்கைதாழ்திங்கள்வேணியான்
வரைமகள்மணவினைமுற்றிநாண்மலர்
விரைவளர்தருமலர்ச்சோலைமேயவான்
கரைபொருதடம்புனற்காசியெய்தினன். (31)

அருந்தவம்பற்பகலாற்றியன்பினீங்
கிருந்தவித்தக்கனுக்கிறைவிநல்கெனச்
செருந்தில்தாழ்செஞ்சடைச்செல்வன்றக்கனை
விரும்பியகேளெனவிழைவிற்கூறுவான். (32)

துறக்கமீதுறையினுநரகிற்றோயினும்
இறக்கினும்பிறக்கினுமின்பந்துய்க்கினும்
பிறைக்கொழுந்தணிசடைப்பெருமநின்னடி
மறக்கொணாநல்வரம்வழங்குவாயென்றான். (33)

கொவ்வைவாய்மலைமகள்கொழுநன்கூறுவான்
அவ்வரமளித்தனமமைத்தலிங்கமும்
செவ்வியினின்பெயர்புனைந்துசீரொடும்
எவ்வெலாத்திசைகளுமேத்தவோங்குக. (34)

அளப்பினாலுலகெலாமளித்துப்பின்னரும்
துளக்கறுமுத்தியந்துறையிற்சேர்கெனக்
களிற்றுரிபோர்த்தவெங்கடவுள்தன்னுடை
உளத்துறுமுவகையோடுரைத்துப்போயினன். (35)

தக்கனுந் தன்னுடைப்பதியிற்சார்ந்தனன்
இக்கதைகேட்பவர்பயிலவெண்ணினோர்
முக்கணூற்பழிச்சுறுமுறைதிறம்பினும்
அக்குறைகொளாதானளிக்குமென்றனன். (36)

## எண்பத்தொன்பதாவது தக்கன்வதையுரைத்த அத்தியாயமுற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—2190.

## தொண்ணூறாவது
## பாறுவதீசன் கதையுரைத்த அத்தியாயம்.

---

சந்தக்கலிநிலைத்துறை.

மாறுபடுஞ்சூர்மாளவிடும்போர்வடிவேலோய்
பாறுவதீசன்காதைவிளங்கப்பகரென்னக்
கூறலுமன்பான்மாதவனெஞ்சங்குழைவெய்த
ஊறுபசுந்தேனின்னமுதென்னவுரைசெய்தான். (1)

இமயநெடுங்குலவரையினகன்றெம்மிறைவன்பால்
உமையவளோடுங்காசியடைந்தாங்குறைபோதில்
அமையவிளங்கானந்தநெடுங்கானனமென்றாய்
கமையிலுணர்ந்தானந்தசமூகங்கழறென்றாள். (2)

மஞ்சுபடிந்தொர்தண்டலைசூழும்வளர்காசி
அஞ்சுகுரோசத்தெல்லையுமெட்டுவுதலாகா
விஞ்சுமிலிங்கமேயவவற்றான்மேலோர்தாம்
எஞ்சலில்நல்லானந்தசமூகமென்பாரால். (3)

என்றெமையாளுமீசன்விளம்பவெறிவைவேல்
வென்றதடங்கண்மாதுமைநெஞ்சின்விழைவோடும்
அன்றொரிலிங்கமமைத்தனண்மற்றங்கதனுமம்
பொன்றலில்பாறுவதீசனெனப்பேர்புகல்வாரே. (4)

அன்னையமைத்தருளீசனைப்பொன்னடிதாழ்வோர்
தன்னைவழுத்துவர்விண்ணவர்யாருந்தமதன்பால்
என்னில்விருப்புடனிக்கதைகற்றோரியல்பாகச்
சொன்னவர்பேறினிமானுடரோகனிசொல்வாரே. (5)

## தொண்ணூறாவது பாறுவதீசன் கதையுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

த்தம்—2195.

## தொண்ணூற்றொன்றாவது
## கங்கேச்சுரன் வரலாறுரைத்த அத்தியாயம்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கொங்கூற்றிருக்குநறைக்கொன்றைக்குழகன்மாலைபுனைவேணிக்
கங்கேச்சுரன்றன்காதையினையுரைத்துமென்னக்காய்சினத்த
வெங்கூற்றனையதாருகனைவிழுங்கிப்புலவுதேக்கெறியும்
செங்கேழ்ப்பருதிநெட்டிலைவேற்செல்வனதனைச்செப்புமால். (1)

நெய்வாய்துடைப்பினுறைகழிப்பினோரார்மகளிர்நெடுந்தடங்கண்
மைவாய்துடைத்தாலன்றிமணித்தடறுபுகுதாவடிவேலோன்
பைவாயரவந்தனிசுமந்தபாரேழ்புரக்கும்பகீரதன்முன்
வெவ்வாரழலிற்றவமாற்றிவிரிநீர்க்கங்கைகொணர்போதின். (2)

கங்கைமணிகன்னிகைமடுவிற்கலத்தலோடுமதிர்கமஞ்சூல்
மங்குறவழுங்குடுமிமதிலுடுத்தகாசிவளநோக்கி
அங்கணிலிங்கமொன்றமைத்தாளதன்பேர்கங்கேச்சுரமதனைப்
பொங்குழுவகையொடுமலர்தூய்ப்புகழ்வோர்கருவிற்புகுதாரால். (3)

கன்னிக்கமுகின்பசுங்கழுத்தின்கமஞ்சூற்பாளைவயிறுடையச்
செந்நெற்பழனத்திளவாளையுகளுங்காசித்திருநகரிற்
பின்னற்றிரைவார்புனற்கங்கையமைத்தவிலிங்கம்பேருலகின்
இன்னற்கிடமாங்கலியுகத்தில்விளங்கித்தோன்றாதிருக்குமால். (4)

முத்தங்கோத்தநிலாத்தொடையின்மூழ்குதடந்தோள்வேல்வேந்தர்
தத்துந்திரைநீர்க்கங்கேசன்காதைகேட்பிற்பசிறலையிற்
பைத்தெவ்வுலகுந்தனிதாங்குஞ்சேடனென்னப்பார்தாங்கி
மைத்தாழ்கண்டன்பொலங்கமலமலர்ச்சேவடியினடைகுவரால். (5)

முத்தீயாற்றுமருமறையோர்முதலவெவரும்பூங்கொன்றைக்
கொத்தார்கண்ணிக்கங்கேசன்காதைகேட்பிற்றெறுடைகடலின்
மத்தாய்நெடுமால்வரைகிறுவிமதிப்பவெழுதீவிடமுண்ட
புத்தேள்கமலச்சேவடியிலடைவரென்னப்புகன்றனனால். (6)

தொண்ணூற்றொன்றாவது கங்கேச்சுரன் வரலாறுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—2201.

## தொண்ணூற்றிரண்டாவது
## நருமதேசன் வரலாறுரைத்த அத்தியாயம்.

---

கலிநிலைத்துறை

முருகுவாய்மடுத்தண்டளிதெவிட்டிமூச்செறியும்
உருள்பசுந்துணர்க்கடம்பணியொளிறுவேலூர்வோய்
நருமதேசச்சுரன்காதையைநவில்கெனநவின்றான்
திருகுசீற்றத்தவில்வலற்செகுத்தமாமுனிவன். (1)

மறைவடித்தநாமுனிவரவாரகற்பத்தின்
நிறைபெரும்புனலாற்றினுட்சிறந்தவைநிகழ்த்தெதன்
றறையவெந்திறற்கூற்றினதாருயிரகல்வான்
கறைமிடற்றனையேத்தியமார்க்கண்டன்கழறும். (2)

அரிகுரற்பகுவாய்வலம்புரிகிடந்தலறும்
விரிதிரைக்கடல்மேவுறுநதிகளில்விளங்கு
கரையலைத்தெதறிகங்கைநற்சரச்சுவதியமுனை
நருமதைப்பெயர்நதியிவைநான்குமேம்படுமால். (3)

இரங்குகங்கைநல்லிருக்குவேதத்துருயமுனைத்
தரங்கமாநதியுருவிரண்டாமறைசாமம்
பரந்ததீம்புனற்சரச்சுவதிநருமதைபகரின்
விரிந்ததீவினைவிலக்குநான்காமறைவிளம்பின். (4)

கங்கைமாநதியெவற்றினுஞ்சிறந்தமைகருதி
அங்கதற்குநேரமைந்திடநருமதையாறு
பங்கயாசனற்பழிச்சவப்பண்ணவன்றேன்றி
இங்குனக்குளம்விழைந்தனகேளெனவிசைத்தான். (5)

அரில்படுங்கொடிப்பவளவெண்டிரைமுகந்தலைக்கும்
விரிதடம்புனற்கங்கையைநிகர்த்திடல்வேண்டும்
வரமளித்தருளின்றெனநருமதைவழங்கப்
பொருவில்தாமரைப்பொகுட்டுறைபுண்ணியன்புகலும். (6)

திங்கள்சூடியசெல்வனைநிகர்த்திடுந்தேவும்
பங்கமற்றுயர்காசியைநிகர்த்திடும்பதியும்
மங்குல்போன்றொளிர்மாயனிற்புருடனுமுண்டேல்
கங்கைமாநதிநிகர்க்குமாறுளதெனக்கரைந்தான். (7)

என்னவோதலுமிறையவனளிக்குமோவென்று
முன்னுபோதினில்முத்திகூர்காசியினடைந்து
பின்னுதெண்டிரைப்பிப்பிலதீர்த்தத்தின்கரையில்
மன்னிலிங்கமொன்றமைத்துவான்றவமியற்றியதால். (8)

நிலவுகண்படுநித்திலங்கூன்முதுகிப்பி
அலைகொழித்தெறிநருமதையருந்தவநோக்கிக்
கலைகொழிக்கும்வெண்டிங்களங்கண்ணியோன்றோன்றி
உலைவினற்றவமொழிதிகேள்வரமெனவுரைத்தான். (9)

கங்கையோர்முறைபடிந்திடில்யமுனைகாமருநீர்
தங்கியேழுநாள்படிந்திடிற்சரச்சுவதிநாள்மூன்
றங்கதன்புனல்படிந்திடிலருவினையகற்றும்
இங்குநின்முகங்காண்டலுமிரிந்திடும்பாவம். (10)

நின்னிடத்தினிற்சிலையெலாமிலிங்கமாய்நிகழ்க
அன்னலிங்கமுநருமதேச்சுரப்பெயராகச்
சொன்னலிங்கமேத்தினர்தமைமறலியுந்தொழுக
என்னநல்வரமளித்தரன்மறைந்தனனென்று. (11)

கோளின்மாதவர்க்குலகெலாங்குரைகடல்கொளினும்
நாளுலந்திடாமார்க்கண்டனவிலவாங்கவன்றன்
தாள்பணிந்துயர்முனிவரர்தம்பதியகன்றோர்
நீளிருங்கதைகேட்டவர்நிரயமீதடையார். (12)

**தொண்ணூற்றிரண்டாவது நருமதேசன் வரலாறுரைத்த அத்தியாயம் முற்றிற்று.**

---

ஆகத்திருவிருத்தம்—2213.

# தொண்ணூற்றுமூன்றாவது
# சதீச்சுரன் வரலாறுரைத்த அத்தியாயம்.

---

## கலிநிலைத்துறை.

தளர்நடைப்பசுங்குழவிவெண்டிங்கள் தாழ்கண்ணி
நளிர்புனற்சடைச்சதீச்சுரன்கதையினைநவிறும்
உளமுவந்துயர்குறுமுனிகேட்டியென்றுரைத்தான்
துளிமதுக்கமழ்நறுமலர்க்கடம்பணிதோளான். (1)

மின்னரம்புடைவீங்குசூற்கொண்டல்கண்படுக்கும்
கன்னிமூதெயில்விளிம்புடுத்தோங்குகாசியினில்
முன்னநாண்மலர்ப்பொகுட்டுறையொருதனிமுதல்வன்
பன்னெடும்பகலாற்றினனருந்தவம்பரிவின். (2)

மறைகொணான்முகத்தொருவனாற்றியதவமகிழ்ந்து
சிறுகருந்துழாய்ப்படலைதாழ்சென்னியனறியாக்
கறைமிடற்றவேற்றந்தணன்கருணையிற்றோன்றி
அறைதிவேட்டதென்றுரைத்தலுநான்முகனறைவான். (3)

கடவுணீற்றொளிபழுத்தசெம்மேனிமுக்கண்ண
இடையறாதுலகியற்றுவான்வேண்டுமென்னெற்றி
நடுவட்டோன்றுகநீயினித்தக்கனன்மகளாய்த்
தடமுலைக்கொடிவருகவென்றுரைத்தனன்றாழ்ந்தான். (4)

எரிதவழ்ந்தெறிமுத்தலைச்சூலவேலேந்து
கருணையங்கடல்குறுநகைகோட்டிமென்கமலத்
தரசிருக்குநற்பண்ணவன்றியானமாற்றுழியிற்
புருவநாப்பணிற்றோன்றினன்பூவையோர்பங்காய். (5)

கொழுதிவண்டிமிர்கொன்றையான்றோன்றியபின்னர்
அழுதலாலவற்குருத்திரனெனும்பெயரமைந்த

தொழுதுமங்கையோர்பாகனைநோக்கினன்றுணிவான்.

பெண்ணுமாணுமாயமைப்பினல்லாலுயிர்பிணிப்பின்
அண்ணல்யாவையுந்தோற்றுவித்தறிவறநாட்டற்
கொண்ணுமோவெனக்காட்டியவுருவிதென்றுணர்ந்தான்
தண்ணந்தாமரைமீதுறைசதுமுகக்கிழவன். (7)

வாய்ந்தபெண்ணுருவாணுருவாய்மலர்க்கிழவன்
ஏய்ந்திடும்படிவகுத்திடவொன்றொடொன்றியையின்
தோய்ந்துதோய்ந்திடையறுதுதோன்றியதுபேருலகம்
சார்ந்தமென்முலைதக்கனன்மகளெனவுதித்தாள். (8)

எழினலங்கடந்தேந்திளவனமுலைப்பேதை
குழைமுகம்பொதிமழைமலர்ச்சோலைதேங்கொழிக்கும்
கழனிசூழ்புனற்காசியிற்காய்கனலுமிழும்
மழுவலாற்பெறவருளொடுமாதவம்புரிந்தாள். (9)

அருவியங்கடாக்களிற்றுரியந்தணனிலிங்க
உருவிற்றோன்றிநீவிழைந்ததுபெறுகவுள்ளுவப்பால்
மருவிலிங்கநின்பெயரொடும்பொலிகமற்றிதனைப்
பரவியேத்துனர்விழைந்தனர்பரிவொடும்பெறுக. (10)

இற்றைஞான்றினுக்கெட்டெனவுரைக்குஞான்றன்னைப்
பெற்றதந்தையெற்கருளுகவென்றுபெட்போடும்

வெற்றியைங்கணைக்கிழவனையழலெழவிழித்தான். (11)

தரைபிதிர்த்தெறிகவின்குளம்பூர்பரித்தக்கன்
அருமணிப்பொலங்காஞ்சிசூழ்படவரவல்குல்
உருவப்பூங்கொடிதன்னைமால்விடைக்கொடியுயர்த்த
பரமற்கற்றைநாட்கடிமணம்புணர்த்தினன்பரிவின். (12)

உலகெலாந்தொழுசதீச்சுரன்காதையீங்குரைத்தேம்
நிலவுமிக்கதையுரைத்தவர்கேட்டவர்நீங்கா
அலகில்தீவினைத்துயர்க்கடற்படிந்திடாராகி
உலைவில்ஞானவாரிதியினிற்படிந்தினிதுறைவார். (13)

**தொண்ணூற்றுமூன்றுவது சதீச்சுரன் வரலாறுரைத்த அத்தியாயம் முற்றிற்று.**

ஆகத்திருவிருத்தம்—2226.

ன

# சிறப்புரைத்த அத்தியாயம்.

---

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

கதிர்விட்டெறிக்குங்குழவிமதிக்கண்ணிவேய்ந்தவமுதேசன்
முதலவிலிங்கமெவற்றினையுமொழிதுமென்னமுனிகேட்ப
அதிர்தெண்டிரையிற்கவிழ்தலையசூர்மாதொலையவலங்குவரை
பிதிரவடிவேல்பணித்தவருட்பெருமானினிதுகூறுவனால். (1)

முன்னைப்பவத்திற்சனருவெனுமுனிவனொருவனுளனவன்றன் பன்னற்கேள்விமறைப்பொருளின்றுறைபோய்நெறியிற்படிகின்றேன், பொன்னிற்பிதிர்ந்தசுணங்கணிவெம்முலையாள்பங்கன்பூங்கழல்கள், சென்னித்தாகியில்லறத்திற்றிறம்பாதினிதுசென்னளில்.

ஓதுமறைதேர்முனிவரனுக்குவசம்பனியென்றுரைக்குமொரு, காதற்புதல்வனுளனவன்வெங்களிறுவழங்குபெருங்கானிற், போதலோடும்பஃறலையபொறிவாளரவொன்றெயிறான்றச், சாதல்நோக்கியவனையுடன்சென்றோர்மனையிற்கொடுசார்ந்தார். (3)

விடங்கொப்புளிக்குந்துணையெயிற்றவெவ்வாயரவின்வாய்ப்பட்டுக், கிடந்தபுதல்வன்றனைக்கொடுபோய்க்கிளைத்துக்கலித்தகொடிக்கரும்பு, படர்ந்துநிலவுக்கதிரெறிக்கும்பருமுத்துயிர்க்கும்வயற்காசி, அடைந்துசொர்க்கத்துவாரத்திலன்னோன்றந்தையிட்டனனால். (4)

வெவ்வாயரவின்கொடும்பிறைப்பற்சுவட்டிற்குதட்டிவீந்தோனை, எவ்வாறழலிற்பெய்வதெனத்தந்தையுளத்தினெண்ணுதலும், அவ்வாய்வில்லத்துருவொடுமோரிலிங்கந்தோன்றுதமர்ந்ததனல், செவ்வாய்ப்புதல்வன்றுயிலுணர்ந்தான்போன்றங்கெழுந்துதுயர்தீர்ந்தான். (5)

என்னேதீவாய்க்கொடுந்தறுகட்பார்தன் நீண்டவீங்கிறந்தோன், தவ்வாறென்றெண்ணியாங்குக்குறுகு த லும்,
தன்னுருயிரிற்பிரியாவோரெறும்புவிளியவதுதாங்கி, முன்னோர்சிறு கட்பெண்ணெறும்புவருதனோக்கிமுனிநின்றான் (6)

ஆவிநீத்தகிண்கிணிக்காற்புதல்வன்பிழைத்தவந்நிலையின், மே வலோடுமுயிர்வாளாவீந்தவெறும்புமுய்ந்ததனற், சாவப்பெற்றோருய் வதிதன்றன்மையெனவாங்கோர்பிடிமண், ஒவில் தவத்துமுனி யெடுப்பவிலிங்கந்தோன்றியோங்கியதே. (7)

உலகுவிளங்குங்கதிர்ப்பருதிகோடியெழுந்தாலெனவோங்கி,இல குமிலிங்கந்தனைவழிப்பட்டேத்தியிதன்பேரொன்றும், நிலவுமமு தேச்சுரமென்னநிகழ்த்திச்சருமுனியென்பான், அலகிலுவகை மீதூரப்புதல்வற்கொடுதன்பதியடைந்தான். (8)

அன்றுமுதலாவவ்விலிங்கமமுதேச்சுரப்பேராகியது, நூன்று கொடியகலியுகத்திற்றோன்றுதுறையுமஃதன்றி, மன்றவுலகமுழு தேத்தவங்குமுத்தித்துவாரத்தில், என்றுமோங்குமெழிற்கருணேச் சுரப்பேரிலிங்கமொன்றுளதால். (9)

கரியமிடற்றுச்செம்மேனிக்கருணேச்சுரனைமதிவாரத், தருளா ற்கடிநாண்மலரிலைகொண்டருச்சித்தொருபோதுணவாயோர், பருவ ம்விரதமாற்றுமவர்விழைந்தபெறுவார்பன்மலர்தூய்த், தெருளால் முத்தித்துவாரேசற்றொழுவோர்முத்திசேர்ந்திடுவார். (10)

பொருவில்சொற்கத்துவாரேசற் றொழுவோர்துறக்கம்பொருந் திடுவர், கருடப்பசும்புட்கரும்பாகனைமிவாவிக்கரையினிருந், தருளி ற்புரிந்தவநோக்கியடைந்தசோதிரூபேசற், பரவித்தொழுவோ ரென்றுஞ்சோதியுருவிற்பரிந்துறைவார். (11)

அறைந்தவிலிங்கம்பதினென்கிற்றக்கேசுரனைமுதலாக, உறைந் தவிலிங்கமோரெட்டுமோங்காரேசன்முதலாகச், சிறந்தவிலிங்கம்ப தினன்குஞ்செயிரில்சயிலேச்சுரன்முதலாய், நிறைந்தவிலிங்கம்ப தி னன்கும்நிகரிவிலிங்கமெனவுரைப்பார். (12)

அருள்கூரிலிங்கமாகியவிம்முப்பத்தாறுமத்துணையாய், மருவவருதத்துவவுருவாம்வாதனுறையுமிவையாவும், தெரியவரியமறைப்பொருளாயுறைந்துமுத்திசெலநல்கும், உரிமையதனால்முத்திநகரெனும்பேர்காசிக்குளதாகும். (13)

மிடறுதிறந்தபசுக்கமுகின்வெள்ளைப்பாளையுடல்கிழிய, இடறுகயவாய்நெடுவாளையெழுந்து தடவுச்சினைப்பலவின், குடமுட்கனிப்பொற்சுளைகிழிப்பக்கொழித்தபசுந்தேன்கும்பியெழுந், தடமுற்றிய காசிலையயலது முத்திநகர்த்தானுளதோ. (14)

முன்னவரியவமுதேசன்காதைமொழிந்தோர் கேட்டோர்கள், மன்னுஞானஞ்சிவபூசை தானந்தவமந்திரம்யோகம்,இன்னயாவுந்தருபலன்களெளிதினெய்திமறைநான்கும், பன்னவரிதாய்ச்சிறந்தோங்கும்பரமனடியிற்சேர்குவரால். (15)

தொண்ணூற்றுநான்காவது அமுதேசன்முதலிய
த்தின்சிறப்புரைத்த அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் —2241.

## தொண்ணூற்றைந்தாவது
## வியாதமுனிகையும்நாவுமெழாதுநின்ற அத்தியாயம்.

கலிவிருத்தம்.

அருமறைதேர்வியாதமுனிகாதையினிதறையுமெனப்
பொருவரியதவமாற்றும்பொதியவரைமுனிகேட்ப
எரிதவழுநெட்டிலையசுடர்வேலாலெழுந்தோங்கு
வரையகடுதுளைபடுத்திமாத்தடிந்தோன்கூறுமால். (1)

இவர்விடையேற்றானருள்கூறெண்பத்தெண்ணாயிராம்
சவுனகாதியநயிமிசாரணியத்துறைவோர்பாற்
குவலயமோரேழ்புகழக்கோதிலருமறைவடித்து
நவையறுநூற்கடல்கடந்தவியாதமுனிநண்ணினால். (2)

நண்ணுமறைமுனிவரனையினிதேத்திப்புனைநயந்து
பண்ணுமருக்கியமுதலயாவுமிகப்பரிந்தாற்றிக்
கண்ணுதல்வானவன்போலுங்கடவுளர்மற்றார்கொலெனப்
புண்ணியமாதவர்கேட்பப்பொருவரியமுனிபுகல்வான். (3)

எக்கலையுமெய்ப்பொருளுமுறையுணர்ந்துமிழுதைபோற்
சிக்குறுமாணவமலத்திற்சிமிழ்ப்புண்டுதெருளிலனாய்ப்
பொக்கமுறுமுளத்தோடும்பூவைபோற்றிருமேனி
அக்கடவுள்பிரமமெனக்கையெடுத்தாங்கறைந்தனனால். (4)

இற்றெனநான்மறைமுனிவனியம்புதலுநகைகோட்டிக்
கற்றதனாற்செருக்கெய்திக்கழறினனென்றுளத்தெண்ணி
ஒற்றைநெடுங்குழைக்கிழவன்காசியில்வந்துரைத்தியென
முற்றுமுணர்ந்தருள்முனிவர்முதுக்குறைவாற்புகன்றனரால். (5)

மருள்பூத்துமதிமருண்டமறைமுனிவன்முனிவரொடுந்
தெருள்பூத்துச்சிறப்பெய்துங்காசிநகர்சென்றெய்தி
அருள்பூத்தபஞ்சநதமாடிமாதவற்போற்றி
முருகூற்றுப்பசுந்துளவமுகில்வண்ணன்சீர்பாடி. (6)

தண்டுளவமணிபூண்டுபாகவதர்தற்சூழ
மண்டுதீம்புனல்ஞானவாவியின்கீழ்பானில்லா
எண்டிசையிலுள்ளோருங்கேண்மின்களிறையாவான்
புண்டரிகக்கண்ணனெனக்கையெடுத்துப்புகன்றனனால். (7)

அருவுருவாயேகமாயாதியாய்நிறைந்தருளும்
பொருவரியசிவனல்லாற்புண்டரிகக்கண்ணனே
பிரமமெனமயக்குற்றுப்பிதற்றுகின்றபிழையதனால்
உரையயில்நாக்கையசையாதாமெனமுனியிருந்தான். (8)

அத்தலையிற்பிழைகூறியருமெய்துமுனிவரன்பால்
மைத்தசெழும்புயலனையமணிவண்ணன்கூர்செய்திப்
பித்தரின்யானிறையென்னப்பிதற்றியதென்மதியில்லோய்
எத்திறத்தாலெலையாளுமீசனைநீமறந்தனையே. (9)

முக்கணன்சேவடியில்விழிமுளரிபெய்தன்றோ
சக்கரமுமலர்மகளுந்தணப்பருஞ்செல்வமுமடைந்தேன்
அக்கடவுளருள்சிறிதுமடையாரேற்றம்பதத்தில்
எக்கடவுள்தேவென்றுங்கேமாப்புற்றிருக்குமால். (10)

ஊனமுறுசடமொருவனுறுற்றினன்றியாடாதால்
யானுலகமளிப்பதுவுநான்முகத்தோனியற்றுவதும்
ஆனிவருஞ்செஞ்சடையோனுட்டுவித்தலாமதனால்
வானவர்தஞ்செயலெல்லாமரப்பாவைக்கூத்தாமால். (11)

தண்ணிலவுமதிக்கண்ணித்தாழ்சடையோன்றாள்போற்றும்
புண்ணியநற்சிவகணங்கள்பூங்கழலிற்கிடப்பதெல்லாம்
எண்ணிறந்தவரிபிரமர்தலையன்றோவெனிற்சிறிதும்
நுண்ணறிவிலாயெனையேன்பிரமமெனநுவல்கின்றாய். (12)

நின்வயிற்சேர்கொடியபிழைமொழிசெவியினேர்படலும்
என்வயிற்றினெரிதவழவுளம்வெருவிநீண்டடைந்தேன்
பொன்னசலச்சிலைகுனித்துப்புரமூன்றுமழலூட்டு
முன்னவனையானறியாமுழுமுதலைப்போற்றென்றான். (13)

அண்ணல்மால்விடையூர்ந்தவரும்பொருளைப்பழிச்சுதற்கு
மண்ணிடந்தோயெனதுநாவழங்கவருள்வழங்கென்று
கண்ணினுல்முனியுரைப்பக்கண்ணுதல்பேர்செவியினிசைத்
தொண்ணிறநேமியங்கடவுள்விசும்பிசெளித்தேகினனுல். (14)

நீறணிந்தசெம்மேனிநீலகண்டனன்னுமங்
கூறியதுசெவிப்புலத்திற்குறுதலுமருடீர்ந்து
தேறிமுதுக்குறைவெய்திச்செழுமறைதேர்வியாதமுனி
ஆறணிந்தசெஞ்சடையெம்மந்தணனையேத்துவனுல் (15)

மாலவன்றன்னுடலின்னுங்கரிதாகவருங்கொடிய
ஆலமுண்டதுயர்கூராதமரருயிரளித்தோனைப்
பாலனுக்காய்க்கூற்றுதைத்தபண்ணவனைப்பவளவரை
போல்பவனையலதாப்போற்றுதுபோற்றுதே. (16)

மண்ணகம்பொற்றிண்டோராமாமறைகள்பாய்பரியாத்
தண்மதிவெய்யோனிலங்குபாண்டிலாத்தண்டுளவோன்
ஒண்ணிறவம்பாய்ப்புரங்களொருமூன்றுமொருங்கவித்த
கண்ணுதல்பொற்றாளன்றிக்காணுக்கண்காணுவே. (17)

பாணிகரஞ்சிறைத்தும்பிபடிந்தாடுங்கொன்றையந்தார்
வாணிலவுமதிக்கண்ணிவனைந்தருளும்புரிசடையோன்
சேணமர்ந்ததேவர்மணிமுடியுழுதுசேந்தொளிர்பொற்
றாண்மலர்க்கல்லாதுசென்னிதாழாதுதாழாதே. (18)

கறையணற்பேழ்வாயுரககங்கணத்தோன்யாரெழுதா
மறைமுழுதுந்தனியேத்திவழிபடுவோனெவன்கோணற்
பிறையணிந்தோன்யாவனீங்கவனல்லாற்பெட்பினொடும்
இறைவனெனவெனதுளத்திலெண்ணேன்மற்றெண்ணேனே. (19)

ஆதியாய்முழுமுதலாயருவுருவாய்ப்பூரணமாய்
ஓதுநான்மறைதெளித்தவுபநிடதப்பொருளாகி
காதமாய்வெறுவெளியாய்காரணனுங்காண்பரிதாம்
சோதியாலயமலதுசூழாக்கால்சூழாவே. (20)

மையநெடுவரைபோலுமழைமதமால்கரியுரித்துச்
செய்யதிருமேனிதனிற்போர்த்தருளுஞ்சேவகன்றன்
ஐயசெழும்பொற்கமலமலர்போலுமடியினல்லாற்
கொய்மலர்கடுவிநின்றுகூம்பாக்கைகூம்பாவே. (21)

### கலிவிருத்தம் (வேறு.)

என்றுகூறிமுனிவரனேத்தலும்
கொன்றைவேணியனின்னருள்கூர்தரத்
துன்றுபாவந்தொலைந்தவனேங்குகை
மன்றமுன்னையதாகவழங்கிற்றால். (22)

*தண்டுழாய்மணிமாலைதணந்தெரளிர்*
*கண்டிகைத்தொடைசூடிக்களிப்பொடும்*
*புண்டரங்கள்புனைந்து சிவனடித்*
*தொண்டர்தாண்மலர்சூடினனாடினான்.* (23)

*அன்றுதொட்டுமமலனுக்கன்பனாய்*
*மன்றவோங்குகண்டாகனன்வாவியில்*
*துன்றுதண்கதிர்ச்சோதியிலிங்கமாங்*
*கொன்றமைத்துள்ளுவந்தருச்சித்தனன்.* (24)

*இன்னவீசனற்காதையியம்பினர்*
*துன்னுபாதகங்கோடிதொகுப்பினும்*
*அன்னயாவுந்தொலைத்தரன்சேவடி*
*மன்னிவாழ்குவரென்னவழங்கினான்.* (25)

## தொண்ணூற்றைந்தாவது வியாதமுனி கையுந௱வுமெழாதுநின்ற அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—2266.

## தொண்ணூற்றாறுவது
## *வியாதன்சாபமிட்ட அத்தியாயம்.*

---

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.*

*விடைக்கொடியுயர்த்தோன்றொண்டர்க்கன்பனும்வியாதன்மு ன்னம், கடக்கருஞ்சாபங்காசிக்கிடுமெனக்கரைந்தாயவ்வா, றடக்க ருமுவகையெற்கீதறைகெனமுனிவன்கேட்பப், படைக்கடலுடைக் கும்வைவேற்பண்ணவனுரைக்குமன்றே.* (1)

அடைபுடைபொதிந்துதீங்தேனரும்புபூங்கரும்புவேலி
படர்வயற்காசிதன்னிற்பாயொளியிலிங்கமொன்று
கடவுணான்மறைவியாதனமைத்தநாள்முதலாய்க்காமர்
சுடர்மணிகன்னிகைப்பூம்புனலில்லைகறையிற்றேய்ந்தும். (2)

எறிசுடர்ப்பணிலமுத்தமீர்ங்கதிர்மதியென்றெண்ணி
அறைபுனற்றுறைதோறும்பலரும்பறவெடித்துமன்றல்
நறவுகொப்புளிக்குங்காசிநகரில்வீற்றிருக்குமுக்கட்
கறைமிடற்றெந்தைசெம்பொற்கழலிணைகருதியேத்தி. (3)

பத்தியிற்குயின்றமுத்தம்பருச்சுடரெறிப்பவோங்கும்
முத்திமண்டபத்தின்வைகிவழிபடுமுனிவர்கேட்ப
மைத்திருடுங்குசோலைமதிமுகந்துடைக்குஞ்செவ்வி
வித்தகமருவுகாசிவியன்சிறப்புரைக்குமன்றே. (4)

கூன்பிடர்பவளச்செந்நெல்கொழுமடற்கமுகினோங்கி
வான்படர்வயல்சூழ்காசிமாநகரடைந்தபோதே
தேன்படுமொழியாள்பங்கன்சீறடிசேர்வனென்னாத்
தான்படர்நெறியினீங்கித்தவறிழைத்திடுதலாகா. (5)

பிறர்மனையினிதுவேட்டல்பிறர்பொருள்கவர்ந்துகோடல்
தெறுமொழிமுதலவாயதீவினைபுரிதலாகா
இறுவதுகாசிதன்னில்வேண்டுமென்றெண்ணியாவி
மறலிதன்றூதர்கொள்ளவலிதினில்வழங்கலாகா. (6)

மற்றையதலத்திலிங்கங்கோடிமேல்வழங்குபேறு
முற்றுநீர்க்கங்கையோங்குகாசியில்முடிவிலாத
கற்றையஞ்சுடரிலிங்கமொன்றினைக்காண்டலோடும்
பெற்றுவிண்ணவர்களேத்தப்பெறலரும்வீடுசேர்வார். (7)

முயலடைகிடக்குந்திங்கள்மோலியவிலிங்கமொன்றைப்
பயின்மலர்தூவியோர்காற்பழிச்சிலெண்ணருமாதானம்
இயைவுறக்கொடுத்தபேறிங்கெய்துமைந்தமிர்தத்தாலாட்
டயர்பவர்புரவிமேதமாற்றியபயனுண்டாவார். (8)

குலைபொருதலையுந்தீநீர்க்குடம்படுகுரும்பைத்தெங்கின்
இலைதலைவிரிக்குங்கானமிருசுடர்தடுக்குங்காசி
அலர்கதிரிலிங்கமொன்றிற்கோர்பொழுதடிசிலேற்றின்
மலர்தலையுலகில்வாசபேயமாற்றியதைமானும். (9)

கொலைத்தலைச்சூலவைவேற்குழகனுக்கருளினோடும்
கலைத்தலைத்திங்களன்னகவிகைவெண்கவரிசங்கம்
நலத்தருகொடிகளின்னநல்கினோர்குடையினீழல்
அலைத்தலைசுமந்தவாழியகனிலமுழுதுமாள்வார். (10)

பாவடிப்பணைக்கைவேழமுரித்தருள்பரமன்செம்பொற்
சேவடிப்போதிற்றூவியேத்துவான்சிறந்தவந்தண்
பூவலர்சோலைவாவியின்னணபுரிவித்தீந்தோர்
யாவரங்கவர்தம்வீட்டிற்கற்பகமிருக்குமன்றே. (11)

படுமணிமிடற்றசேதாமடிசுரந்தொழுகுபாலிற்
கடவுணல்லிலிங்கமாட்டிற்பாற்கடற்றுயில்வர்கங்கை
புடைகிடந்தலைக்குந்திங்கட்புரிசடையண்ணல்கோயில்
வடிவுறப்புனைந்தோரோங்குகயிலைமால்வரையின்வாழ்வார். (12)

எண்ணிருதானமற்றைத்தலங்களினீதறன்னில்
மண்ணமைமுழவந்துஞ்சாவளங்கெழுகாசிதன்னில்
நண்ணியோர்யோகிக்கீதனன்றெனவுரைத்தான்மீட்டும்
புண்ணியவிரதம்யாவும்புகலெனப்புகலுமன்றே. (13)

ஒருபகலுண்டல்கங்குலுண்ணல்யாசிதம்நல்லுண்டி
வரைகுதல்நான்கும்பாதகிரிச்சினம்வடந்தருப்பை
அரசுநல்லத்திவில்லமவற்றிலொன்றோர்நாள்தோய்த்துத்
தருபுனல்நுகர்தல்பன்னகிரிச்சினமென்பர்தக்கோர். (14)

ஓர்பகலோரொன்றாகவுவந்துபிண்ணாக்குத்தீம்பால்
மோர்புனல்பொரிமாக்கோடல்முறையினோர்வைகலுண்டி
நீர்தருநெறியில்யாவுந்திறம்பிலாற்றினாலும்
ஏர்பெறுசவுமியப்பேர்க்கிரிச்சினமென்பமன்னோ. (15)

மூன்றுநாட்பிடியோரொன்றுமுறைபடவருந்தில்முன்னாள்
ஆன்றவவ்வுணவுதீர்தலதிகிரிச்சினமதாகும்
என்றுயரிருபத்தோர்நாட்பால்குடித்தினிதிருத்தல்
சான்றவர்கிரிச்சினாதிகிரிச்சினமென்பதாமே. (16)

மும்மைநாட்காலையுண்டல்மும்மைநாளிரவருந்தல்
மும்மைநாட்கிடைப்பிற்றுய்த்தல்மும்மைநாளுணவுதீர்தல்
மெய்ம்மைசேர்பிரசாபத்தியகிரிச்சினமுணவுவிட்டிங்
கம்மபன்னிருநாள்வைகல்பார்க்கிரிச்சினமதாமால். (17)

கோசலமோர்நாளோர்நாட்கோமயமோர்நாட்டீம்பால்
மாசில்வெண்டயிரோர்நாள்நெய்யோர்பகல்மற்றையோர்நாள்
ஆசறுதருப்பைதோய்த்தபுனலுணவகற்றலோர்நாள்
ஏசறவாற்றிற்சாந்தபனகிரிச்சினமென்பாரால். (18)

கோசலமுதலவாகக்கூறியவிவற்றிலோரொன்
றாசறவேழ்நாளாற்றினதன்பெயர்தவத்தின்மேலோர்
பேசருமுயர்மாசாந்தபனகிரிச்சினமாம்பெட்புற்
றோசைபோமுனிவகேட்டிசாந்திராயணமென்றோதும். (19)

ஒழிவில்சுக்கிலபக்கத்தினாதியாய்த்துடங்கியோரோர்
பிடிகுறைத்தபரபக்கமுதலவாய்ப்பெட்பினோரொன்
றடைவினிலேற்றியவ்வாறருந்திமுப்போதுநீரிற்
படிவதுமேலோர்சாந்திராயணமெனப்பகர்ந்தார். (20)

சுக்கிலபக்கமாதிதுடங்கியொன்றேற்றிமற்றைப்
பக்கமேமுதலோரொன்றுகுறைப்பினும்பகர்வரப்பேர்
புக்ககாலையினுங்கங்குற்போதுநன்னான்குபிண்டம்
தக்கவாறருந்தல்வாலசாந்திராயணமதாமால். (21)

தினமுமுக்கவளமுண்டலல்லதையோமசேடம்
இனிதினிற்றுய்த்தலின்னசாந்திராயணமாமென்பர்
புனைநெடுவாய்மைகல்விஞானத்தாற்பொருவில்யாக்கை
வினையறுமனம்பூதான்மாப்புந்திதான்விமலமாகும். (22)

மேவருசித் தங்காசியடைதலால்விமலமாகா
தாவயினுறைதல்முத்தியாமெனவியாதன் றன்பொற்
சேவடிபணிவோர்யார்க்குஞ்செப்பினன்பலியேற்றுண்டு
காவுசூழ்கிடந்தவந்தண்காசியினுறையுநாளில். (23)

நீர்முகந்தணைந்தகொண்டல்நீனிறவண்ணன்காணு
வார்கழற்புனிதன்செம்பொன்மணிக்குடம்பதித்ததன்ன
எரிளவனமென்கொங்கையிலவிதழ்ப்பவளச்செவ்வாய்க்
கார்புரைகரியகூந்தற்கவுரியைநோக்கிக்கூறும். (24)

மறைவளம்பழுத்தசெந்நாப்புலமையவியாதன்மன்னும்
நெறியுடையன்புதேர்தல்வேண்டுநீயேகியன்னோர்க்
குறுபலிவழங்காதிங்ஙன்விலக்கெனவுலகமீன்ற
பிறைகிடந்தனையநெற்றிப்பெய்வளைவிலக்கினாளே. (25)

விரிகடலனையகேள்வியாதமாமுனியுமற்றை
அருமறைபயில்வோர்யாருமகனகர்மனைகடோறும்
ஒருபகலந்திகாறுமுறுபலிபெறாதவாற்றால்
பெருகுவெம்பசிநோய்பற்றப்பேதுறலோடுவைகி. (26)

மற்றையஞான்றுமையமேற்பவைமனக்கொண்டேகி
அற்றைஞான்றினுமுள்ளாவியலம்வரவையம்யாதும்
பெற்றிலனதனாலோதுஞ்சிறுவரைப்பெரிதுநோக்கி
உற்றதோர்குறையுண்டாங்கொலிந்நகர்க்குரைமினென்றான். (27)

அருமறைவியாதற்போற்றியடிகள்கேட்டருள்கவோங்கித்
திருவநீணகரம்யாவுஞ்செல்வமுஞ்சிறப்புமிக்க
ஒருகுறைகளுமின்றென்னமறைபயில்சிறுவரோத
வருபசிப்பிணிமீதூரவயிறெரிதவழ்ந்துபொங்கி. (28)

செறுசினந்தலைக்கொண்டோங்கவிருநிதிசிறந்தமுத்தி
அறிவருங்கல்விமூன்றுதலைமுறையகல்கவென்று
மறைபயில்வியாதன்காசிநகரினைவைதுகையின்
உறுபலியேற்பக்கொண்டவோடும்விட்டெறிந்துபோனான். (29)

ஈற்றிளந் தலறுஞ்சூற்சங்கின் றவெண்டாளக்குப்பை
பாற்றிரைக்கதிர்கள்கான்றுபாயொளிபரப்புமந்தண்
சேற்றகல்வயல்சூழ்காசிநகரினைமுனிந்துசெல்லும்
ஆற்றல்சால்முனிமுன்ஞாலமளித்தருளன்னைசென்றாள். (30)

கடைந்தசெப்பென்னவீங்குகதிர்முலைமுனிவன்பாற்சென்
றடைந்ததெனன்பனுண்ணுனதிதிபூசினைசெய்தல்லால்
துடர்ந்தபெருவகையுள்ளந்தூண்டவெம்மையமேற்றுப்
படர்ந்திடுகென்னலோடும்பழமறைவியாதன்கூறும். (31)

பற்பலகலையுமெம்பாற்பயிலுணாளவிலோர்யாம்
மற்றவர்தம்மோடன்றியருந்திலமாதேயென்ன
அற்புமீதூரயாருமடைதிரென்றுரைத்தலோடும்
தற்பதந்தொழுமாணக்கர்தம்மொடுவியாதன்சார்ந்தான். (32)

சேர்தலுமமுதமன்னதீஞ்சுவையடிசிலுள்ளத்
தார்வமோடுவந்துநல்கவருந்திநற்கலன்வெண்டுசு
தார்நறுந்தெய்வச்சாந்தந்தரவணிந்தியல்மாணக்கர்
யாரொடுமுவகைபூப்பமுனிவரனேகுமேல்வை. (33)

உலகெலாம்பூத்தவுந்தியொருதனிமுளரிப்பூவை
மலர்புரைவண்ணன்காணுவரதனோர்மறையோனுகிச்
சிலைநுதலேலழையோவாத்திருத்தகுமறனேதென்னப்
பலகலைமுனிபாற்கேட்டியெனவவள்பகர்தலோடும். (34)

அருந்ததிக்கற்பினல்லார்க்கறனுயிர்க்கேள்வருள்ளம்
பொருந்தியவேவல்செய்தலெனமுனிபுகலச்செவ்வி
திருந்திழையனையார்யார்க்கும்பொதுவறன்செப்புகென்னக்
கருந்தடங்கண்ணிகேட்டியெனமுனிகழறுமன்றே. (35)

வெருவரமொழிந்திடாமைவெகுளுதல்செயாமைதானம்
வருதவங்கருணைசிந்தைதுணிந்துகூறுதல்மற்றொன்றிற்
கருதரும்பொறுமையின்றித்தன்னுயிர்போலக்காத்தல்
தருமமென்றுரைப்பவாதியந்தணன்சாற்றுமன்றே. (36)

இன்னணந்தருமமென்னவிசைத்தனையிவற்றேதேனும்
உன்னிடையுளதேற்சாபமுரைத்தவாறென்னையென்ன
அன்னதுகருதான்சாபமிடுமெனிலவன்பாலந்தப்
பன்னருஞ்சாபஞ்செல்லுமெனமுனிபகர்ந்தான்மன்னோ. (37)

பகர்தலுமினையோர்முத்திப்பதிதனிலுறைதறீதாம்
அகல்கநீயெனவியாதற்கருள்புரியமலன்கூறப்
புகலருங்கொடியதீமைபுரிந்தனன்பொறுத்திதண்ணென்
வகிர்மதிபுனைந்தவேணிவாதவென்றடியின்வீழ்ந்தான். (38)

முளரிபோல்முகத்தநல்லார்முலைதிமிர்ந்துகுத்தசாந்த
அளறுகாலிழுக்கச்செல்லாதரசிளங்குமரர்வீழும்
வளமலிமறுகுசூழுங்காசிவானவனையுள்ளம்
தெளிவுறப்பதினான்கெட்டாம்பக்கமீங்கிவற்றிற்சேர்ந்து. (39)

தொழுதனைபோதியென்னத்தூச்சடையண்ணல்கூறி
மழவிடையிவர்ந்துவெற்பின்மயிலொடுஞ்செலவியாதன்
விழைதகுகடவுட்டெண்ணீர்க்கங்கையின்மேல்பாலோங்கும்
ஒழுகொளிபயிலும்லோலாதவனுறையிடத்தின்கீழ்பால். (40)

ஆழறகடவுள்வைகுந்திசையினன்னறளவுங்கான்
சீர்மலிகாசிநோக்கியுறைந்தனன்சிந்தைவேட்ப
யாரிதுபயின்றோர்கேட்டோரவரெலாமிமையோரேத்தச்
சார்வரிதாகியோங்குமுத்தியிற்சார்வரென்றான். (41)

தொண்ணூற்றொருவது வியாதன்சாபமிட்ட
அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—2307.

## தொண்ணூற்றேழாவது

# க்ஷேத்திரவளமும் தீர்த்தத்தின் கதையுமுரைத்த அத்தியாயம்.

---

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

எவ்வமில்காசியுறைதருமிலிங்கந்தீர்த்தமற்றெத்துணையென்ன,
அவ்வியமவித்தமுனிவரன்கேட்பவழலுமிழ்நுதல்விழிக்கடவுள்,
கொவ்வையங்கனிவாய்வரைமகட்குரைத்தவண்ணம்யாங்கூறுவலெ
ன்னத், தெவ்வடுகுருதிவேல்வலனேந்துசேவலங்கொடியவனுரைப்
பான். (1)

தீர்த்தமென்றேதுபெயரிலிங்கத்தின்சிறப்புடைப்பெயர் சிவன்
முதலோர், பூத்தசெங்கமலக்கையினிற்றொடலாற்புனலுமப்பெய
ரொடும்பொலிந்த, எத்தருங்காசிநகரின்மாதேவலிங்கமேமுதலவா
ந்தீர்த்தம், பார்த்தவருவக்குநான்கருள்கூபமதன்வடபாலிலொன்று
ளதால் (2)

ஆங்கதன்குடபாற்கங்கையாளுருவோடமருமாதேவறைகீழ்பா
ல், தீங்கறுகயிலையமைத்தநல்லிலிங்கஞ்சிறப்பின்மேவிடுமதன்றென்
பால், பூங்கதிரெறிக்குந்திங்களங்கண்ணிப்புரிசடைத்ததீச்சுரன்பொ
ருந்தும், ஓங்கொளியுருவினெடுமதன்றென்பாலத்திரீச்சுரனுவந்து
றையும். (3)

புனிற்றிளஞ்சேதாப்பொருந்துழியமைத்தபொங்கொளியிலிங்க
த்தின்கீழ்பால், கனற்றுவெப்பெறியுமிலிங்கமொன்றுறையுங்கருணை
கூர்ந்தாங்கதன்குணபால், வினைத்துயரகற்றிவீடருள்சதுர்வேதேச்
சுரன்மேவுமற்றதன்பாற், கனைத்துவண்டிமிருந்தண்டுழாய்மவுலிக்க
டவுணல்லிலிங்கமொன்றமரும். (4)

அவிர்சடெறிக்குமைம்படைசமர்தவாதிகேசவற்குநன்கீழ்பாற், பவவினைக்கடலுட்புகாதருள்சங்கமேச்சுரன்பரிவின்வீற்றிருக்கும், புவனகோடிகளுந்தொழவதன்குணபாற்புகழ்விராதேச் சுரன்பொருந்தும், பவளமுத்துயிர்க்கும்வரணைமாநதியின்பாங்கர்குந்தீச்சுரனுறையும். (5)

குவிமுகிழெருக்கங்கண்ணிசூழ்வேணியோங்குகுந்தீசனின்வடபால், தவழ்திரைமுத்தங்கொழித்திடுங்கபிலவாவிபூம்புனலொடுந்தழங்கும், சுவைகனிந்தமிழ்திறப்பழுத்தவந்தீம்பாற்சுரபிமுன்பழிச்சியவிலிங்கம், உவகையினுறையுமதன்வடக்கனகுயேச்சுரவிலிங்கமொன்றோங்கும். (6)

மற்றதன்கீழ்பாலருள்தருசித்திவிநாயகன்மகிழ்சிறந்திருக்கும், உற்றதன்மேல்பால்விளங்கொளியிரணியேச்சுரமுளததன்மேல்பால், வெற்பெனவோங்குமுயர்சினகரத்துவிளங்குமுண்டாசுரவீசன், அற்புடனுறையுங்கோப்பிரேகத்தினயல்விடபேச்சுரனமரும். (7)

மறைமுதலறியாதொளிர்மகதேவவிலிங்கத்தின்மேற்றிசையலங்கும், அறைகடல்வயிறுபுழுங்கமாட்டியவேலாதிசுந்தேச்சுரனுறையும், பெறலருமுத்தியருள்விசாகேசன்பெட்பொடுமவ்வழி யுறையும், உறையுமத்தலையிற்கறைமிடறணிந்தநவிகமேச்சுரனுவந் துறையும்.

நந்தியைமுதலகணமினிதமைத்தநளிகதிர்பூத்தொளிரிலிங்கம், புந்தியினுணர்ந்தாங்கித்துணையென்னப்புகலரிதவ்வழிச்சிலர்தம், சிந்தையிலன்புகனிந்துதன்பெயராற்செய்தவோரிலிங்கமுண்டதன்பால், வந்தனைபுரிவோர்க்கினிதருள்வழங்குமாணியாக்கேச்சுரன்மருவும். (9)

அரவகங்கணத்தவட்டகாதேசமனையதன்வடக்கதன்வடபால், பிரசனவதனேச்சுரமதன்பாலிற்பிறங்குநீர்வாவியொன்றுளதால், குரைகடல்குடித்துத்தேக்கெறிந்தெழுந்தகொண்டல்போன்மேனியனறியா, விரிசுடர்ப்பிழம்பாமித்திராவருணவிலிங்கமத்தலையின்வீற்றிருக்கும். (10)

அலங்கிலேச்சூலவேல்வலனுயர்த்தவட்டகாதேச்சுரற்கருளால், இலங்குதென்மேல்பால்விருத்தவாதிட்டேச்சுரமுளதி சைத்தமற்ற தன்பால், வலங்கொள்போராழிவலனுயர்கிருட்டினேச்சுரன்வதிந்திடுமதனுள், நலங்கிளருமாதவம்புரியாக்கியவர்க்கநல்லிலிங்கநண்ணுறுமால். (11)

பேசியவதன்பாற்பிரகலாதேசன்பிறங்குமாங்கதனுழைப்பெட்பின், மாசறு ஞானநெறியருள்வயிரோச்சுரமுறுமதன்வடபாலில், ஓசையோடியபேருவகைகூர்வாலீச்சுரமுளததன்பால்வா ணேசம், மாசறவிளங்குஞ்சந்திரேச்சுரன்பால்வயங்குவிச்சுவேச்சுரமருவும்.

அறைந்ததன்றென்பால்மதிமுகிழணிந்தவவிர்சடையண்ணல் வீரேசம், சிறந்திடுமதன்பால்விகடையென்றுரைக்குந்தேவியும்பஞ்சமுத்திரையென், றுறைந்தபீடமுமாங்குண்டதன்வடமேற்குயர்சகரேச்சுரமோங்கும், பிறங்கியவதனின்றென்குணபுலத்திற்பெட்பினளீச்சுரன்வதியும். (13)

மல்குநீர்க்கங்கைபுனைந்தநாளீசன்சேர்ந்தனவடபுலமதனில்
கொல்சினவடிவேற்சுக்கிரீவேசங்குறுகிய த்ராங்கனுமேசம்
நல்வினையளிக்குஞ்சாம்பவதீசம்நண்ணியகங்கைமேல்கரையின்
எல்லொளிக்கதிரோன்பல்லினைகவடர்த்தவச்சுவனேசமெய்தியதால்.

மற்றதன்வடபாற்பக்கிரகிருதமடுவுளததனின்மேற்றிசையில்
பற்பலகோடியமரர்கின்றேத்தும்பத்திரேச்சுரமினிதுறையும்
உற்றதன்வடமேற்கருளுபசாந்திசிவமுறைந்துளததன்வடபாற்
கற்பகோடியினுமொழிவருஞ்சீர்த்திச்சக்கரேச்சுரன்காந்துறையும்.

சக்கரேச்சுரற்குவடபுலமதனிற்சக்ரகாதமென்றுரைக்கப்
புக்கநல்வாவியமரந்திருவினையும்போக்குமற்றதன்வடமேல்பாற்
செக்கர்வான்பூத்தவிளநிலாமவுலிசிறந்தசூலேச்சுரஞ்செயிரில்
முக்கணெம்பெருமானுடியசூலவாவிமென்பூம்புனல்முழங்கும். (16

கண்ணருஞ்சூலவாவியின்கீழ்பால்காரதேச்சுரமுளதன்பாற், புண்ணியச்சாருகுண்டமொன்றுளதுபுகன்றவாவியின்வடமேல்பால், விண்ணவர்மகுடகோடிகளிறைஞ்சும்விக்கினேச்சுரமும்வானதியின், உண்ணிறைகெடுநீர்விக்கினகரமென்றுரைத்திடும்வாவியுமுளவால். (17)

அலங்கொளிவிரிக்கும்காரகேச்சுரமும்காரகுண்டமுமதன்வடபால், இலங்கிடுமெறிநீர்வரணையங்கரையிலியல்வரணேச்சுரனுறையும், நலங்கெழுமதன்மேற்குயர்சயிலேசனண்ணுறுமாங்கதன்றென்பாற், பொலங்கெழுகுடுமிகெடுமதிட்கோயிற்பொலிந்தகோடீச்சுரன்பொருந்தும். (18)

தீம்புனல்பெருகித்திரைபொருகோடிதீர்த்தமாங்குளதுதென்கீழ்பாற், பாம்புடனெளிப்பப்பஃறலைத்தாங்கும்சானதம்பமுமுளதன்பாற், காம்பிசைகனியச்செய்யவாயமைந்தகண்ணனேத்தருகபாலேசன், எம்பலினுறையுங்கபாலமோசனமென்றியம்புதீர்த்தமுமவணியையும். (19)

அரும்புசாய்த்தொழுகுநாண்மலர்ப்பசுந்தேனலம்புமங்காரகதீர்த்தம், விரும்பினர்க்கருளும்விசுவகன்மேசம்விளங்குமாங்கதன்வடபாலில், வரும்பவந்தொலைக்குஞ்சோதிஞானேசமருவிடுமன்னதன்றென்பாற்,சரும்பிமிரிதழிபுனைமகாகுண்டேச்சுரமொளிபெருகிடத்துளங்கும். (20)

இலங்குமங்கேசிபோதகமென்னமோட்டாரமுடியினின்றெழுந்த, அலங்குநீர்க்கூபமொன்றுளதன்பாலருண்மகாமுண்டையென்றேத்தும், வலம்படுகுருதிச்சூலியாங்குறையுமவ்வுழிக்கட்டுவாங்கேசன், விலங்கிவில்லுமிழுமுயர்பொலங்கோட்டுச்சினகரமேவிடுமன்றே.

தூங்கிருள்விழுங்குவிரிசுடர்ப்புவனேச்சுரம்புவனேச்சுரகுண்டம், ஆங்குளவிமலேச்சுரமுயர்விமலகுண்டமொன்றுண்டதன்றென்பால், ஓங்குபேருவகைபுரிதரும்பிருகுகோயிலுமுளதன்றென்பால், தாங்கருதவத்துக்கபிலநன்முனிவற்கருள்புரிசனீச்சுரன்மேவும்.(22

அவ்வுழிக்கபிலேச்சுரமறைமுனிவாருந் தவம்புரியுமோர்குகைமற், றெவ்வமிலச்சோதகமுளதச்சோதரியினிதிருந்த தன்வடபால், வெவ்விடம்பழுத்துக்கனிந்தகார்மிடற்றுவேத்துநாகேச்சுரன் மேவும், செவ்விசேர்கவித்துவேச்சுரன்பாங்கர்சங்குகன்னேச்சுரன்சிறக்கும்.

சங்குகன்னேசன்மணிநெடுங்கோயில்வாயிலிற்றயங்குகோரேசம், பொங்குதண்கடவுட்புனல்கெழுமகோரதீர்த்தம்வான்புகழ்த்தமனேசம், அங்கண்மாஞாலந்தொழுகருப்பேசமிவையுளவன்னதன்றென்பால், மங்குல் வாய்துடைக்குங்கொடிநெடுங்கோயிலுருத்திரேச்சுரமகிழ்ந்துறையும். (24)

உருத்திரவாசகுண்டமுமாங்கணுளதுதென்மேற்றிசைமுனிவர், அருத்தியிற்போற்றுங்காலகல்லிலிங்கமமர்ந்தவவ்விலிங்கத்தின்முன்னர்த், திருத்தகவிறந்தோர்க்குறுகடன்கழிக்குந்திகழ்பிதிர்கூபம்வைதரணி, மருக்கமழ்வாவிவியாழவீச்சுரங்காமேசமாங்குண்டமும்வயங்கும். (25)

ஒழுகொளிச்சூலமேந்தியகாமேச்சுரமினிதுறைவதன்கீழ்பால்
விழியருள்கொழிக்குமியல்களகூபவீச்சுரமேவியதாங்குப்
பழவினைப்பவத்தின்வேரறுத்தருள்கூர்பாவனகுண்டமொன்றுளது
தொழுதகுகளகூபரனுழைச்சந்திரசூரியலிங்கம்வைகியவால். (26)

அரிகுரற்பகுவாய்வலம்புரியலம்புமாழ்கடலகடுளேந்தீன்ற
விரிசுடரிலிங்கமதனுழையத்தகேசிசித்தேதச்சுரம்யாண்டும்
பரவுமண்டலேசமறைதொழுதவனேச்சுரஞ்சனகேச்சுரம்பத்தில்
தெரிவருசனதேச்சுரஞ்சனற்குமாரமிவையெலாஞ்சிறந்துவீற்றிருக்கும். (27)

அன்னதன்றென்பாலாகுதீச்சுரம்புண்ணியேச்சுரமழிவருஞ்சீர்த்தி, மன்னுமாண்டவியவாவிகுண்டேசம்வயங்குசண்டேச்சுரமருவும், பன்னருமறைகடுணிவருகபாலேச்சுரமதன்றென்றிசையிலும், சொன்னதன்றென்பாற்றிரைபொருநெடுநீர்க்குண்டமோர்மூன்றருள்சுரக்கும். (28)

பத்துநூறடுத்தபருமடன்முளரித்தமனியப்பொருட் டின்மேற்
பயிலும், மெய்த்திருவமைத்தவிலிங்கமுமாங்குமேவியவத்தலந்தனக்
குச், சித்திகூர்சொற்கத்துவாரமென்றுரைப்பரன்னதன்றென்புலம
தனில், முத்திகூர்காயத்திரியொடுஞ்சாவித்திரிப்பெயரிலிங்கமொய்
த்துளவால். (29)

கரைபொருநீத்தமடைதிறந்தொழுகுங்கடவுண்மச் சோதரிக்க
ரையில், ஒருதனிச்சுடராஞ்சத்தியதபேசனுக்கிரேச்சுரனுவந்து
றைவர், பரிபவந்துடைக்குமுக்கிரகுண்டமொன்றதன்றென்றிசை
பயிலும், பொருவருமதன்மேற்குயர்கரவீரேச்சுரமருள்பூத்தினிதிரு
க்கும். (30)

மரகதநிறத்தபாசடைத்துளவமாலைதாழ்சென்னியுமறியா
விரிசடைக்கரவீரேச்சுரன்கோயில்மேற்புறத்தருண்மரீசேசன்
எரிதவழ்குடுமிப்பருதிகெட்டிலைவேலிந்திரத்துய்ம்னன்முன்னிருப்பர்
பரவதன்மேல்பால்சந்திரேச்சுரனுஞ்சந்திரகுண்டமும்பயிலும். (31)

ஆரழற்புரவிவேள்விநூற்றமிந்திரேச்சுரனுறைவதன்பால்
வார்சிலைச்சங்கமீற்றுளைந்தாரம்வழங்குகாற்கோடகவாவி
சேர்தரும்விளங்குதருமசண்டேசஞ்சிறந்திடுமேற்றிசைத்தென்பால்
வேரியங்கமலக்காடுசூழ்பகுவாய்விரிபுனற்குண்டமொன்றுளதால்
(32)

அதனின்மேற்காக்கினீச்சுரங்கீழ்பாலவிரொளிவாலசந்திரேசம்
பிதிர்நெடுங்கூபமுளவதன்மேல்பால்பிறங்குசித்தேச்சுரங்கீழ்பால்
மதிதவழ்கோயிலுருத்திரேச்சுரஞ்சீர்விருத்தகாளேச்சுரமருவுமுது
திரைபுரட்டிமுழங்குநீர்காலோதகமதன்முன்னமொன்றுளதால்.
(33)

செந்தசைப்புலவுச்சூலவேற்காலேச்சுரமுறையிடத்ததன்றென்பால்
வெந்திறற்றக்கேச்சுரமிருத்தேசமேவிடுமாங்கதன்மேல்பால்
அந்தகேச்சுரமீங்குரைத்ததன்றென்பாலத்திபாலேசமற்றதன்பால்
கந்தலிலயிராவதேச்சுரமயிராவதநெடுவாவிகண்ணியதே. (34)

மாதரீச்சுரஞ்செந்தேச்சுரமாங்குவயங்கும்வன்மீச்சுரஞ்சிறந்த
மேதகுகுண்டமுயர்பிருங்கேசம்வயித்தியேச்சுரமடுவியப்புற்
றோதுதன்மந்திரேச்சுரம்வளர்தன்மந்திரமடுவுயராரிகேசந்
நீதில்மாகாளகுண்டத்தின்வடபாற்சிறந்துவீற்றிருந்திடுமன்றே. (35)

துங்கநாமத்தின்றென்புலஞ்சிவேசந்துளங்கிடுமாங்கதன்றென்பால், தங்கியவயிரவேச்சுரஞ்சிறக்குந்தயித்தீச்சுரமொடுவயிரவகூபம், அங்கதன்மேற்குப்புகழ்வியாதேசம்வியாசநல்வாவியுமார்ந்த, பொங்குநீர்க்கண்டாகன்னனல்வாவிபுகன்றதன்மேற்றிசைப்பொருந்தும். (36)

அனையதன்பாங்கர்ச்சந்திரகூடேசனமருமற்றதனுழைமருவும்
பணிவருகமலமலருறுநெடுநீர்ப்பஞ்சகூடாசலவாவி
வனைகுழற்கவுரிகூபமுமதன்மேற்குள்ளதுமற்றதன்வடபால்
வினையறுஞ்சோககூபமுமந்தாகினிநெடுவாவியும்விளங்கும். (37)

மற்றதன்வடபால்விச்சுவதேசவேச்சுரம்வயங்குமத்திமேசன்
கொற்றவைவாவிபத்திரகாளீசன்குருதிவேல்வீரபத்திரேசன்
உற்றினிதிருப்பாதன்வடபுலத்திற்புண்ணியகூபமுண்டதன்மேற்
கற்றமில்சீர்த்திச்சவுனகவாவிசவுனகேச்சுரமினிதமரும். (38)

சவுனகேச்சுரற்குத்தென்றிசைக்கஞ்சகேச்சுரஞ்சார்ந்திடும்வடபால், அவிரொளிபரப்புமுயர்மதங்கேசமமர்ந்திடுமதன்வடமேல்பால், பவவினைதுடைக்குமுனிவரனமைத்தவிலிங்கமற்றளப்பிலபயிலும், நவையறுமதங்கேச்சுரனுழைத்தென்பால்பிரமராத்திரேசநண்ணியதே. (39)

தென்புலத்தவர்களமைத்திடுமிலிங்கமளப்பிலவாங்குளதென்பால், மன்பெருந்தவத்தோரேத்துசித்தேசஞ்சித்தநற்கூபமும்வயங்கும், அன்புறுவியாக்கிரேச்சுரமதனின்குணக்குளதன்னதன்றென்பால், பொன்பழுத்தென்னபுரிசடைச்சேட்டேச்சுரமுறைந்துலகெலாம் புரக்கும். (40)

சேட்டிளங்கொன்றைபுனைந்தசேட்டேசனமர்ந்ததன்றென்புலமதனிற், சூட்டரவணிந்தபிரகசிதேவேச்சுரனுறுமன்னதன்வடபால், வீட்டுநல்லின்பந்தருசிவாகேசஞ்சேட்டமாதேவியும்விளங்கும், ஊட்டரக்குண்டசெய்யதாட்சண்டீச்சுரமதன்மேற்றிசையுறையும். (41)

விளம்பியவதற்குவடபுலந்தண்டகாதகூபந்திகழ்மேல்பால்
களங்கமில்தேவலேச்சுரஞ்சதகாலேச்சுரமுமாபதிகருணை
துளங்கொளிச்சரதாதவேச்சுரமருவுஞ்சொற்றதன்மேற்கெதுகேசம்
உளங்கவர்கணுதீச்சுரஞ்செபாதேசஞ்சக்கிரபாணீச்சுரமுறையும். (42)

சக்கிரபாணீச்சுரனுறைதென்பாற்றயங்குபூதேசமேற்றிசையின்
மிக்கொளிவிரிக்குங்கறைமிடற்றுவீரடீச்சுரம்விளம்பியவதன்கீழ்த்
திக்கினிற்றுருவாசேச்சுரமதனின்றென்றிசைமழகதிரெறிக்கும்
கக்குசெங்குருதிமூவிலைநெடுவேற்பாரபூதேச்சுரங்கவினும். (43)

மறையொருநான்குந்தெரிவியாதேசனுறைவதன்கீழ்புலம் வாய்ந்த, எறிதிரைக்கங்கைபுனைந்தசங்கேசம்விச்சுவேச்சுரம்விருதேசம், அறைவதன்வடகீழ்த்திசையவதூதேச்சுரமவதூதகற்றீர்த்தம், பெறலருமதன்கீழ்த்திசையிடைப்பசுபதீச்சுரம்பெட்பின்வீற்றிருக்கும். (44)

பசுபதீச்சுரற்குத்தென்புலமதனில்படரொளிகோப்பிரேச்சுரமேற், கசைவில்சீமூதவாகனம்பஞ்சநதத்தினில்மயூகவாதித்தன், இசைபடுகவத்தீச்சுரமுலகேத்துபக்கிரகாதமெய்தியவித், திசையதன்வடபாற்கங்கைநீர்வளர்க்குங்கற்பகவாவிசேர்ந்துளதால். (45)

கடற்சுறவுயர்க்குங்கருப்புவில்லனங்கற்செற்றருள்புரிகபத்தீசன், இடத்ததன்றென்பால்மங்கலகவுரியிலங்குகங்கேசனின் வடபால், விடத்தருஞ்சேறுபழுத்திருடுங்குமிடற்றசித்தேச்சுரமதனின், வடக்குயர்தொட்டேச்சுரம்விருத்திரேசம்வேண்டியவரமளித்துறையும்.

அதன்வடதிசையிற்சத்திகாதேவியமருமற்றதன்முனஞ்சிறந்த, கதிரெதிரெறிக்கும்விரிசுடர்வடிவேலிரேவதேச்சுரங்கவின்கொழிக்கும், இதன்முனம்பஞ்சநதேச்சுரம்வயங்குமெறிபுனல்மங்கலோர்தகமென், றுதிநஞ்சருந்துமங்கலதேவியுறைவதன்மேற்புறத்தொளிரும். (47)

வண்டொடுசுரும்புங்கலித்தசில்லோதிமங்கலகவுரியின்றென்பால், வெண்டலைமாலைபுனையுபமன்னியவிலிங்கமேவிடுங்கபத்தீசன், தண்டலில்கோயில்தென்றிசைத்தசாங்கேச்சுரஞ்சயித்தியாதஞ்சார்ந்த, ஒண்டிறலிரேவதேச்சுரன்றென்பால்சயிமினீச்சுரமுவந்துறையும். (48)

பற்பலகோடியிலிங்கமாங்குளதுபின்னரும்பகர்ந்ததன்வடபால்
உற்றதுவாரவனேச்சுரந்தென்பாலுயர்வாராகேச்சுரமுறையும்
மற்றதன்றென்பால்மருவிடுமாண்டவேச்சுரமாண்டவேச்சுரற்குத்
தெற்கினிதமர்ந்தவயோகனதேசஞ்சிறந்தொளிதயங்குவாதேசம்.

அதன்முனஞ்சோமேச்சுரமதனிருதிமூலையிற்கன்னிகேச்சுரமற், றதன்வடபாலிற்பஞ்சபாண்டவர்களமைத்தருள்சுரக்குநல்லிலிங்கம், அதன்முனஞ்சனவாதேச்சுரமதன்மேற்கருந்தவம்புரிசுவேதேசம், அதனின்மேற்குலகந்தொழுதகுகலேசமமர்ந்தினிதிருந்ததையன்றே. (50)

வாய்ந்ததன்வடபாற்சித்திரகுத்தேச்சுரங்கலாகேசனின்வடபால், சேந்தொளிர்கருணைவாமதேவேசந்தென்புலங்கம்பனேச்சுரங்கார்ப், பூந்துணர்புனையச்சுவேதரேச்சுரம்விண்புகழ்நளகூபரவிலிங்கம், சார்ந்தனவதனின்றென்றிசைமணிகன்னேசசுரந்தயங்கியதன்றே. (51)

வார்கதிர்பரப்பிப்புதையிருள்விழுங்குமணிகன்னேச்சுரற்குமேற்புறத்தின், சாரதரேசமதனின்மேற்பாலிற்றவலருஞ்சீர்பிதாமகேசம், நீரளவறியாப்பிதாமகவாவிநிகழ்ந்ததன்தென்றிசையதனின், பாருமேத்தெடுப்பவினிதருள்புரியுமியல்வரணேச்சுரமுளவால்.(52)

அருமறைவடித்தபிதாமகன்வாவியருகுகூர்மாண்டமாவிலிங்கம், பொருவறுமதனின்குணபுலத்திராக்கதேச்சுரம்புகன்றதன்றென் பால், விரிபுனல்வேணியிலங்குகங்கேசம்விளங்குவைவச்சுவேச்சுரந் தார், மருவிரிகடுக்கைபுனைதருசக்கரேச்சுரம்நாடொறும்வயங்கும்.

மின்னகுவடிவேற்சாரகேச்சுரம்யாழ்மென்மொழிச்சாணகேச் சுரமுன், சொன்னபாரேசனருள்மருத்தேசந்துளங்கொளிபயின்றச க்கிரேசம், பொன்னவிரிதழிபுனையாங்கேசந்தீச்சுரமுடற்றுவெம் போரில், ஒன்னலர்க்கடந்தலோகபாரேசரளப்பிலராங்கினிதுறை வார். (54)

உரகர்கந்திருவரியக்கர்கிம்புருடர்தானவரும்பரினுறைவோர், பெரிதுணர்சித்தர்வித்தியாதரரைமுதலினோர்பெட்பொடுமமைத்த, தெரிவருமிலிங்கமனேககோடிகளுண்டிலங்குசக்கிரேசனின்றென் பால், பரவினர்க்கருள்கூர்பாசுவதேசம்பற்குனேச்சுரமிவைபயி லும். (55)

வடபுலமீசானேச்சுரமேல்பால்வயங்கொளிதிகழ்சமுத்திரேசன்
இடையிலாங்கிலீசனவ்வுழிலகுலீச்சுரன்கயிலேலச்சுரன்யாரும்
அடிதொழும்பிரதிகேச்சுரனுறைவர்மேற்றிசையலங்குநீர்காக்காத்
தடமுளததன்மேற்றிசையினிற்றண்டபாணிமாநகர்தனையளிக்கும்.

அசைநடைத்தென்றற்கன்றுலாவீதியமுதேச்சுரனுறைவதன் பால், வசையறுமுத்தியீசன்மற்றதற்குவடபுலங்குணேசன்ஞானே சன், திசைமுகங்கமழுந்தேம்படுநறுந்தார்கிடந்ததோட்சிறந்தசொ ன்னேசன், இசைபடவுறைவர்கொடிமதிட்கோயிற்பாக்கியகவுரியா ங்கிருக்கும். (57)

கயமலர்துவைத்துக்கரைதவழ்பணிலங்கழனிதோறலங்குமுத் துயிர்ப்பப், புயல்வளஞ்சுரக்குங்காசிவிச்சுவேசனுறையுளின்றென்பு லம்புனைதார், அயிலுடைச்சூலமேந்துகும்பேசனதனின்மேற்கருள் செய்விக்கினேசன், செயிரில்கும்பேசன்கோயிலின்றென்கீழ்த்திசை விருப்பாகமேவிடுமால். (58)

தீவினைதொடருமருட்பிணியகற்றிப்பெறலருமுத்தியிற்சேர்க்கும், தாவருகுருக்கேத்திரத்தினிலுறைந்ததாணுவாமிலிங்கம்வெங்கதிர்கால், மேவருமுலோலாதபனினிதுறையுமீயுயர்கோயிலின்மேல்பால், ஓவருமுத்தியடியவர்க்கருளியுவந்துவீற்றிருந்தனையன்றே. (59)

நனந்தலைபுலகமுழுவதும்புகழுநயிமிசாரணியத்தினுறையும், சினங்கனிந்தொழுதுமழுவலனேந்துதேவதேவப்பெயரிலிங்கம், கனம்பொழிகாலைக்கரையழிந்தொழுகுங்காளுந்தியெனக்கடாங்கவிழ்க்கும், மனம்படுதுண்டிவிநாயகன்கோயில்வடபுலத்தினிதுவீற்றிருக்கும். (60)

மழைவளஞ்சுரக்குங்கோகனத்துறையுமகாபெலவிலிங்கமீண்டெய்தி, ஒழுகொளிச்சாம்பாதபனுழைவதிந்தவுயர்பிரகாசகேத்திரத்தில், தழைவுறுசசிபூரணமெனுமிலிங்கந்தயங்கொளியிரணமோசனத்தின், விழைவுறுகீழ்பாலமரேத்தெடுப்பமேவிவீற்றிருந்ததுமாதோ. (61)

இருள்படுசோலையுடுத்தவுச்சீனிநகரமாகாளநல்லிலிங்கம்
பிரணவவிலிங்கமுறைவதன்கீழ்பாலமர்ந்ததுபிறங்குநீர்க்கங்கைப்
புரிசடையோகந்தேச்சுரவிலிங்கம்புட்காதீர்த்தத்தினோடும்
அருள்கொழித்தெழுமச்சோதரவாவியதன்வடபுலத்தமர்ந்ததுவே. (62)

நெடுநிலாமாடமிருசுடர்தடுக்குநிகரில்சிரட்டகாசத்தில், கடவுளர்மகாநாகேச்சுரமுக்கட்கடவுடன்வடபுலத்துறைந்த, தடியவர்க்கருள்கூர்மகோற்கடேச்சுரம்வாளணிமருட்கோடம்விட்டகன்றுவிடுசுடர்பரப்பிவிளங்குறுகாமேச்சுரன்வடபாலின்மேவியதால். (63)

மழைதவ

ஒழுகொளிவிமலேச்சுரஞ்சுவலோகத்துயர்வடபுலத்துறைந்தது நாள், விழவருவீதிகுழ்மகேந்திரத்திலருள்மகாவிரதநல்லிலிங்கம், தொழுதகுகங்கைதரித்தருள்கங்கேச்சுரனிடத்தினிதமர்ந்ததுவே.

அரியயன்முதலதேவர்நின்றேத்தவருண்மகாதேவநல்லிலிங்கம், விரிதிரைபுரட்டுமிரணியகருப்பதீர்த்தத்தின்மேற்றிசைவதிந்த, தூரவுநீர்த்திரைதாவொழுகுசோதீர்த்தத்துறைந்திடும்பிதாமகேச்சுரமீண், டிருமையுமடியர்க்கருள்புரிதருமேச்சுரனுறைவிருந்ததையன்றே. (65)

தண்புனற்பிரயாகைசூலடங்கேசம்பிரயாகைதன்னொடு நிருவாண, மண்டபமதன்மேற்றிசையினிற்சுடரின்வயங்குபொற்கோயிலின்மருவும், கண்கவர்மாடமறுகுசூழ்சங்குகன்னத்தில்மகாவொளியிலிங்கம், வெண்பிறைக்கண்ணிபுனையருட்பிறுகேச்சுரத்ததன்குணக்கின்மேவியதால். (66)

திரைபொருதலைக்குமுருத்திரகோடிதீர்த்தத்தினருண்மகாயோகீச், சுரமெனுமிலிங்கம்விளங்குபாறுவதீச்சுரத்துறையுறைந்தது தேவர், பரவுறுமேகாம்பரதலத்தமர்ந்தகிருத்திவாகேச்சுரம்பரிவிற், கரியுரிபோர்த்துவிளங்குறுமுக்கட்கரும்புறைதலத்தின்வைகியதால். (67)

இருள்படப்பொதுளுமிளமரச்சோலையிடையருதுயர்மதங்கேசத், தருள்புரிசண்டேச்சுரனியற்பாசபாணியாங்கணத்துழையமரும், பொருவறுகாளாஞ்சரத்துறைநீலகண்டமாமிலிங்கமால்போற்றக், கருணைகூர்கூடதெந்தனென்றுரைக்குங்கணத்தருகுறைந்ததையன்றே. (68)

ங்கி, இசைபடு

ளும், வசையில்பேரிலிங்கந்திரிசந்தம்விட்டருள்கூர்முக்கணுறைவதிந்ததுவே. (69)

பொருப்புடுத்தன்னபுரிசைசூழ்மண்டலேச்சுரதலத்தினிற்பொலிந்த,அருட்சிறீகண்டவிலிங்கமாமுண்டவிநாயகர்க்குத்தரத்தமைந்த, திரைத்தெழுசாகதண்டமாதீர்த்தத்தினிதுறைந்தருள்கபர்த்தீசன், திருத்தகுபசாசுமோசனவாவியகன்கரைசிறந்திருந்ததுவே.(70

துளங்கொளிபரப்புமாம்பிராதக்கேத்திரத்துறைருக்கமேச்சுரன்றான், வளங்கெழுவிகடத்துசனருகுறையும்வயங்குலம்போதான்பாங்கின், உளங்கவர்மனுகேச்சுரத்துறைசயந்திலிங்கமுற்றதுதிருச்சயிலம், விளங்கொளித்திரிபுராந்தகம்விசுவேச்சுரற்குமேற்றிசையில் மேவியதால். (71)

குக்குடேச்சுரம்வான்றொடுமதிட்குடுமிச்சவுமியதானம்விட்டிலகு, வக்கிரதுண்டகணத்தருகுறையும்வயங்குகாலேச்சுரத்தகன்று, செக்கர்வான்பூத்தபச்சிளங்குழவித்திங்களஞ்சடைத்திரிசூலி, புக்குயர்கூடத்தந்தவைங்கரத்தோனிருந்துழிப்பொலிந்துவைகிடுமால். (72)

தாங்கருநீத்தந்தருபுனலருவிதழங்குவாமேச்சுரத்தமர்ந்த
ஓங்கொளிச்சேடிதேவனோர்தந்தகணபதிக்குத்தரத்துறையும்
பூங்கதிர்க்கழனிபயிலரிச்சந்திரகேத்திரம்பொலிந்தருளரேசன்
தீங்கறுமரிச்சந்திரன்றன்முன்னமரரேத்திடச்சிறந்துவைகியதால்.

வலஞ்சுழித்தொழுகுபுனலருக்கழனிமத்தியமகதலத்தமர்ந்த, நலங்கெழுசதுர்வேதேச்சுரமருள்கூர்தலேச்சுரநண்ணுமெச்சேசம், அலங்கிலைச்சூலமேந்துமாதேவனருகிருந்தன்னசொல்லாயிரங்கண், இலிங்கமுஞ்சயிலேச்சுரந்தனிற்சுவணக்கதமகிழ்ந்திருந்ததுமாதோ. (74)

அரிடபத்திரிடதேச்சுரமந்தரேச்சுரனருகினிலமரும்
உருவமூவிலைவேலுருத்திரேச்சுரன்வாழுருத்திரமகாபலநீத்துத்
திரிபுரேச்சுரன்பால்வைகியதிடபேசத்துறைபுகழிடபேசம்
வரியரவசைத்தபுரிசடைவரணேச்சுரனுழைவைகுறுமாதோ. (75)

அறைபுனற்றுறைதோறளிவிருந்தூட்டும்பொய்கைசூழ்ந்தணிகொள்கேதாரத், துறையுமீசானேச்சுரன்பிரகலாதகேசவனுற்றுழியுறையும், மறுகுதோறெழுதாமறைகிடந்தொலிக்கும்வயிரவகேத்திரத்தமர்ந்த, திறல்கொள்சங்காரவயிரவன்பறுவவிநாயகன்றன்னுழைச்சேரும். (76)

கனகலத்துக்கிரேச்சுரனருக்கவிநாயகனிருந்துழிக்கலக்கும்
பனிமலர்ச்சோலைவத்திராபதத்திற்பவேச்சுரன்வீமசண்டேசன்
தனதிடத்தமருநறுமலர்த்தேவதாருநல்வனத்ததண்டீசன்
சினவுழுவையேவேலேந்தினனிருக்குந்தேகளிவிநாயகன்மருங்கே (77)

பொருவில்பத்திரகன்னேச்சுரன்பத்திரகன்னனன் மடுவொடும் போத, அருள்செயுந்தண்டகணபதிகோயிலதன்கிழக்கமர்ந்திடு மோங்கு, கரைபொருதலைக்கும்புனலருவியமலிங்கத்திற்காலலிங்கே சன்,விரிகதிர்பரப்பிவிளங்குசந்திரேசன்கோயிலின்குணக்குவீற்றிருக்கும். (78)

தாற்றிளங்கதலிப்படப்பைசூழ்வேலித்தண்வயலுடுத்தநேபாளத், தூற்றிருந்தொழுகுகுருதிழுவிலைவேற்பசுபதீசனுமவனுறையும், சேற்றிதழ்க்கமலமலர்கரவீரதீர்த்தத்தினுறைகபாலீசன், பாற்றிரைபுரட்டுகபாலமோசனத்தின்கணகரைப்பரிவொடுமருவும். (79)

கன்னலங்காடுபடர்வயலாரோகணத்தலகுளீச்சுரனடையும்
அன்னமூர்ந்தவனுமேத்தருங்கங்காசாகரத்தருளமரீசன்
தன்னுளத்துவகைமீக்கொளவிளங்குசத்தகோதாவிரியுறையும்
மன்னுமந்நதியினுறைதருவீமேச்சுரனவண்மகிழ்ந்துவைகியதால் 80

மதிமுகந்துடைக்குமேமகூடத்தில்வாழ்விருப்பாக்கநல்லிலிங்கம், பொதியவிழ்மலர்த்தேன்படுபுனற்கங்காத்துவாரத்திற்புகழிமத்தேசம், கதிரொளிமழுங்கவொளிர்கயிலாயத்துறைதருகணேதிபன்கருங்கார், முதுகுதேய்த்துறங்குகந்தமாதனத்தில்மொழிவரும்பூற்பவிலிங்கம். (81)

பாதலத்தாடகேச்சுரம்விசும்பிற்படரொளித்தாரகவிலிங்கம்
ஏதமில்கிராதத்துறைகிராதேயலிங்கமாபுரிமருத்தேசம்
மாதவன்றெழுகோடீச்சுரத்தினிதுவைகியசேட்டமாவிலிங்கம்
காதலிற்சிறந்தவமரர்நின்றேறத்தக்கருணையினுவந்துவைகியதால்.82

**அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்**

வெள்ளிக்குருத்துவிரித்தநிலாமுடித்தவிருப்பாகேசனுயர்
வள்ளற்கோயில்தென்றிசையிற்சுக்கிலேசமதன்வடபால்
எள்ளற்கரியபேரின்பமுத்தியருள்தெய்வானீசம்
உள்ளத்துறைசுக்கிலேச்சுரர்க்குக்குணபாற்கூபேச்சுரனுறையும்.

ஆங்கோர்கூபமுள ததனிலாடிற்புரவிமகப்பலனுண்
டோங்குபவானீச்சுரநளகேச்சுரங்கோகன்னேச்சுரமோசை
தேங்குமதலேச்சுரமரிகேச்சுரங்கோனேசஞ்செழுந்திரைநீர்
வாங்குகடல்வாய்நஞ்சமுண்டகவேசம்யாவுமன்னுமால். (84)

அதன்வாயுளதோர்துருவகுண்டமதனின்வடபால்பிசாசேசம்
பிதிரேச்சுரமுன்பிதிர்குண்டந்துருபேச்சுரர்க்குமுன்பிறங்கும்
மதர்வாணெடுங்கட்பேதைபுணர்வயித்தியநாதன்வயின்றென்பால்
கதிர்கான்றொழுகுமனோலிங்கமுசுகுந்தேசங்களித்துறையும். (85)

பிறவித்துன்பக்கடல்கடத்தும்பிறியவிரதேச்சுரன்பாங்கர்
விறல்வேல்வீரபத்திரேசங்கெவுதமேசம்விளங்குதென்பால்
அறியவரியவீரியசிங்கேசமவைமுன்பிரமேசம்
கறைதாழ்மிடற்றுமுக்கணுடைப்பஞ்சசேனங்கலந்துறையும். (86)

பருச்சனேசனுறைந்ததன்கீழ்பாலின்குடக்கேச்சுரம்பாங்கர்
விருப்பினுறையும்விசாலாட்சிவிசாலாட்சேசனவர்தென்பாற்
பொருப்பின்வீங்குபணைநெடுந்தோட்சாராசந்தேசன்புகல்தென்பால்
கருப்பவினைதீர்த்தருளுமிரணியாகேச்சுரன்காதலினுறையும். (87)

அங்கட்கமலத்தயனறியாவாதீச்சுரமற்றதன்மேல்பால்
வெங்கட்களிற்றினுரிபோர்த்தபகீரதேசமேயதன்முன்
திங்கள்மவுலித்திலீபேசம்விசுவாவசுதேச்சுரஞ்செயிரில்
பொங்குபுகழ்முண்டேசமவர்தென்பால்விநீசம்புகுந்துறையும். (88)

விநீசன்பாங்கர்தெசாசுவதமேதமுயர்மாதருதீர்த்தம்
கதிர்கால்புட்பதெந்தேசந்தென்கீழ்த்திசையிற்காதலினால்
முதுமாதவத்தின்றுறைபடிந்தமுனிவரமரினிதமைத்த
சதுரானனத்தோனைத்தரியவிலிங்கங்கோடிசார்ந்துளவால். (89)

மைத்தவிடவாளரவணிந்தபுட்பதெந்தேச்சுரன்வடபால்
சித்தீச்சுரன்பார்புகழுமரிச்சந்திரேச்சுரற்குத்திகழ்மேல்பால்
முத்திவழங்குகிருதேசன்கிரீசனதனின்மொழிதென்பால்
தொத்தாரிதழிபுனைசயமேச்சுரன்சித்திராங்கேச்சுரனுறையும். (90)

உரவுக்கறைப்பாவடிக்களிற்றினுரிபோர்த்தருள்சித்திராங்கேசன்
மருவுமதனின்றென்புலத்துக்கேதாரேசன்வளர்தென்பால்
இரவுப்பகற்செய்வெண்டிங்கள்வெய்யோன்குலத்தினியல்வேந்தர்
பரவித்தொழுநீடொளியிலிங்கங்கோடிமேலும்பலவுளவால். (91)

அண்ணலேற்றுக்கொடியுயர்த்தவாசாபூரகன்னேசன்
நண்ணுமதன்மேற்றிசைக்காந்தமேசனடஞ்செய்மகாதுற்கை
எண்ணுமதன்பாற்சங்கேசன்மற்றுஞ்சங்குகன்னேசன்
எண்ணினதன்மேற்றிசையின்மகாசித்திவாயினினிதுறைவார்.

முட்கூனெயிற்றுவிடநாகமணிந்தமுடிதாழ்சங்குகன்னன்
பெட்பாலினிதுவைகியதன்மேல்பால்விளங்குவிதண்டேசன்
கொட்பாம்பிறவியகற்றுதுவாரேசன்விறல்வேற்குகனேசன்
புட்பாகனும்போற்றரியதுவாரேசியிவர்கள்பொருந்தினரால். (93)

குடப்பால்சுரந்துவழிந்தமடிக்குறுந்தாண்மேதிமலர்கறித்து
மடைக்கீழ்க்கிடந்துழூஉச்செறியும்வளங்கூர்காசிநகரளிக்கும்
சுடர்ப்பூங்கதிர்வேற்கணநாதரனேகருளர்தோமறுமாங்கட்
கடற்பார்புகழுமரீதீசன்சாங்காலேசன்காந்துறையும். (94)

கனகநாகமுகிரிடந்த கண்ணன் கமலமலர்பூத்தோன்
இனையவரியகாத்தியாயினேசன்பாங்கர்மகுடேசன்
இனிதினுறையுமத்தலையோர்கூபமுளதின்புறவாடி
வினைகடாக்குமகுடேசற்றொழுவோர்வேட்டபலன்பெறுவார் (95)

அதனின்வடபாலோர்தலமுண்டாங்குநூறாயிரமிலிங்கம்
விதியினுளபொற்சினகரமோரைந்துண்டாங்குவீற்றிருந்து, மதர்
வேலுண்கட்பூங்கொடியார்தொழில்மூன்றியல்வான்வழங்குவழிக்,
கதிர்காலிலிங்கமோரொருவரமைத்தவொன்றேகழறினமால். (96)

இன்னுமாங்குப்பலகோடியிலிங்கமுளவித்துணையிலிங்கம்
மன்னுகூபமணிகுண்டமின்னவென்னவகுத்தெம்மால்
பன்னியுரைப்பதரிதுபசும்பாளைக்கமுகின்மிடறொடியக்
கன்னிப்பருக்கண்வராலுகளுங்காசியிலிங்கவுருவாமால். (97)

நீரேற்றணைந்துசூற்கொண்டல்நெடுவாய்திறந்துதுளிகவிழ்ப்பப்
போரேற்றெருத்தின்வயிரநுகம்பூட்டிக்களமருழுசேற்றில்
வாரேற்றணைந்தமுலைக்கடைசிமடவார்நடுதண்வயற்காசி
யாரேத்துநர்மற்றவரேநம்புதல்வரினுமன்பினிதுள்ளார். (98)

வண்டேற்றறையமுகைமுளரிமடல்வாய்திறப்பமடைதிறந்து
தண்டேன்குதிக்கும்வளவயல்சூழ்காசிநகரந்தனிலுதிக்கும்
விண்டோய்மரனும்புல்லுமெலாமீட்டும்பிறவாநெறிசேர்தல்
கண்டாலகல்வானுறைவோரிற்சிறந்தவென்னக்கழறுமால். (99)

**தொண்ணூற்றேழாவது க்ஷேத்திரவளமும் தீர்த்தத்தின் கதையுமுரைத்த அத்தியாயம் முற்றிற்று.**

---

ஆகத்திருவிருத்தம்—2406.

## தொண்ணூற்றெட்டாவது
## முத்திமண்டபத்தின் கதையுரைத்த
## அத்தியாயம்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வண்டுஞ்சுரும்புமீற்றுளைந்துமலர்வாயிரங்கியயாவுயிர்க்கும்
கண்டல்வேலிவிளிம்புடுத்தகாசிநகரிலுமையோடும்
அண்டர்பெருமானடைந்ததற்பினிகழ்ந்தவெல்லாமயில்முருகன்
கொண்டறவழும்பொதியமலைமுனிவற்கினிதுகூறுமால். (1)

கமலக்காடுபூத்தனையகன்னித்துளவமால்முதல
அமரரோடுமெம்மிறைவன்றிரிவட்டபத்தினகன்றேகிக்
குமரிப்பாளைமடல்கிழியக்கயவாய்வாளைகுதித்துகளும்
தமரத்திரைநீர்க்கங்கைபுனைகாசிநகரஞ்சார்ந்தனனால். (2)

பொன்செய்கொல்லர்கைசெய்யாப்பொலம்பூண் துயிலுமூலசுமந்து
மின்செய்மருங்குலைவவாமகளிர்விழைவினூட்டயாக்
கொன்செய்நேமிகான்முகத்தோன்குலிசப்படையோன்முதலமரர்
அன்பினேத்தியடிபோற்றக்கடவுட்கோயிலகம்புக்கான். (3)

தென்றல்வழங்குஞ்சாளரத்திற்செங்காற்புறவுதூதருந்தி
நின்றுபேட்டின்சிறையுளருநெடுவெண்மாடமருங்குடுத்த
மன்றவோங்குதிருமதிளோரெட்டுங்கடந்துவான்குடுமிக்
குன்றமனையவருள்முத்திவழங்குமாடங்குறுகினனால். (4)

தாணிபொதிந்தநிலாத்திங்கள் தவழுஞ்சடையோன்பாலனுக்காய்
முரணியெதிர்ந்தகூற்றுடலமுரியவுதைத்தமலர்த்தாளில்
அருணமுளரியலங்கிதழ்ப்பூம்பொகுட்டிலிருக்குமருமறையோன்
கருணையொடுநன்மலர்தூவிப்பழிச்சிப்பழிச்சிக்கைதொழுதான். (5)

நெடுவெண்களிற்றுப்பெரும்பாகன்முதலவமரர்நிழலுமிழ்பொற்
சுடிகைப்பிறைவாளெயிற்றரவுநகரிலுறைவோர்நீந்தொடையாழ்
தடவந்தமிழ்தினிசையூற்றுந்தன்மையோர்மற்றுளரெவரும்
கடிமென்மலர்தூய்த்தாழ்ந்துள்ளங்கசிந்துகசிந்துகளிப்புற்றார். (6)

மின்னுக்கொழுந்துவிட்டெறிக்குமிளிர்பூண்சுமந்துவீங்குபசும்
பொன்னஞ்சுணங்குபூத்தமுலைமாதரெழுவர்புகழ்ந்தேத்தி
மன்னுநீராஞ்சனமேந்தமகிழ்கூர்ந்தருநான்மறைக்கிழவன்
தன்னையீன்றோன்பழிச்சுதலுமெந்தையினிதுசாற்றுமால். (7)

ஆலமொழுக்குமாயிரவாயமளிதுயிலுமழைவண்ணு
ஞாலமளிக்குந்தனிச்செங்கோற்றிவோதானனுக்குமுத்திநல்கிச்
சோலைக்கரும்பிற்றொடுத்தவிறல்பெருகிநறவத்துளிதூற்று
சாலித்தடஞ்சூழ்காசியின்யாமடைவான்வண்ணந்தந்தனையால். (8)

கருந்தாட்செங்கட்பொறிச்சுரும்புவண்டுந்தேனுங்களிதூங்கி
விருந்தாட்டயருந்துழாய்முடியோயெமதுவிழைவும்விசைத்துவரால்
பருந்தாட்குடக்காய்முடத்தெங்கின்பழங்கள்சிந்தமலர்குதட்டி
வருந்தாண்மேதிவெரீஇப்பெயருங்காசியலதுமற்றுண்டோ. (9)

கரும்புவிளைந்துகழுத்திறைஞ்சும்வயல்சூழ்காசிநகரினுளம்
விரும்புமதுபோல்மூவுலகும்வேண்டுகில்லேமெமதேவல்
புரிந்துளாரிற்சிறப்புடையைநீயேயன்றேபுகல்வேட்ட
வரங்கடருதுமெனவுரைத்தான்கண்மூன்றுடையமறையோனே.(10

கறங்குபகுவாய்மணிமிடற்றவெள்ளேறுகைக்குங்காபாலி
அறைந்தமாற்றந்தலைக்கொள்ளாவமலவாமின்றருளுதியேல்
நிறைந்தவுவகைமீதோங்கநின்பாலன்றியாமயலே
மறந்துமுறையாவரந்தருதல்வேண்டுங்கயிலைவானவனே. (11)

என்றுபறவாப்பசும்பூவைவண்ணனுரைப்பவிசைத்தவரம்
நன்றுதந்தேதம்மினைத்தொழூதேர்க்கியாமேமுத்திவழங்குவம்வான்
குன்றமெடுத்துநிரைகாத்தோய்குறுகாமுத்திமண்டபத்திற்
சென்றநமதன்போங்குநெடுங்கயிலையிடத்துஞ்செல்லாதால். (12)

அருள்கூர்முத்திமண்டபத்தினமைந்தவுவகைநமதன்பர்
மருளாவிதயமலரிடத்துமிலையாமகிழ்வுற்றுங்கிருந்து
தெருளால்நம்மையொருபோதுசிந்தைசெய்வோரொழிவரிய
கருவாழியிற்புக்கிறந்துபிறந்துழலார்முத்திநெறிகாண்பார். (13)

வண்டல்வாரித்திரைசுருட்டுமணிகன்னிகைத்தண்புனல்மூழ்கி
அண்டமுகடுகிழித்தோங்குமுத்திமாடத்தமர்ந்தொருகாற்
பண்டைமறைகடெரிந்துசெபந்தானமோமம்பண்ணுகின்றோர்
கொண்டல்விளையாட்டயர்குடுமிக்கயிலைவரையிற்குறுகுவரால். (14)

மணிகன்னிகையிற்சிறந்தோங்குமலர்வாவியும்பொன்வயங்குகதிர்
அணிசேர்முத்திமண்டபத்தைநிகர்மண்டபமுமலங்குதுத்திப்
பணவாளரவின்முடிக்கிடந்தபாரில்விசும்பிற்காசிநகர்க்
கிணையாநகருமெஞ்ஞான்றுமில்லையில்லையில்லையால். (15)

இம்பர்வருமூன்றுமுகத்திலெழில்சேர்முத்திமண்டபத்துக்
கும்பரேத்துகுக்குடமண்டபமென்றொருபேருளதாமென்
றம்பொற்சிலைமால்வரைகுனித்துப்புரந்தீயூட்டுமடலேற்று
நம்பனுரைப்பமாயனிதுநவில்கென்றிறைஞ்சநவில்கின்றான். (16)

மறைதேர்வாழ்க்கைமாக தந்தனென்பாரொருவன்வான்கலையின்
துறைபோயுலகிற்பலகலைக்குமொருவனென்னுந்துணிவெய்தி
உறையுநாளிலவன்முதைதயிறப்பக்காமமீதூர்ந்து
பிறன்மற்றொருவனுடுந்திராநண்புநாளும்பெரிதோங்க. (17)

நண்பிற்றீரான்போன்றவனிற்கிழத்திமுலைமென்னல நுகர்ந்தும், பண்பிற்றிரிந்துங்கொலைகளவுமுதலபாவம்பலவிளைத்தும். வண்சொற்பயிலுமறைநெறியின்வழுக்கிக்காமவயத்தனாய்த், திண்பொற்றடந்தோளெறுழ்வலியாற்பிறர்பாற்பொருள்கடினங்கவர்ந்தும்.(18)

பாகவதரோடியைந்துசைவநெறியைப்பழித்துஞ்சைவநெறி
போகுமவர்பாலியைந்துதினம்பாகவதரைப்புறமொழிந்தும்
யாகமுனிவர்க்கிடர்விளைத்தும்யாவர்பொருள்நல்கினராவர்கட்
காகநெறியில்கரிநாளும்பகர்ந்தும்பதிதனாயினனால். (19)

கதிர்முத்துரிஞ்சுமுலைக்கருங்கட்காமர்கோதைமுலைவேட்டுப்
பதிதனாகிப்படிற்றொழுக்கிற்பயிலுநாளோரிழிகுலத்து
மூதியோனொருவனளப்பரியநிதியங்கொணர்ந்துமுதுக்குறைவால்
மதிதாழ்குடிமிப்பருவதந்தேயத்தினகன்றுவந்தனனால். (20)

காமர்சிறைமென்பெடைக்குருகுகயலாய்ந்தெடுத்தாங்கிரைகுதட்டிப், பூமென்றவிசின்புறத்துமடப்பெடையோடுறங்கப்பொறிவாளை, தேமென்கதலிப்படுபழங்கள்சிந்தவுகளும்பொழிற்காசி, நாமநெடுநீர்த்திரைபுரட்டுமணிகன்னிகையினயந்தாடி. (21)

காண்டல்செல்லாவினைபுரிசண்டாளன்யானும்பொழிகருணை, வேண்டி வேண்டுபொருள்கொணர்ந்தீங்கடைந்தேன்கோடல்வேண்டுமெனப், பூண்டபோன்பொடுமுவகைபூப்பமணிகன்னிகைப்புறத்தின், ஈண்டுதவஞ்செய்மாதவரைநோக்கியினிதினியம்பினனால். (22)

முன்னைவினையின்வேரறிந்தமுதியதவத்தோராதுகேளா
அன்றேனன்வாங்குமெனநோக்கியறைதலோடுமிழிகுலத்தோன்
பன்னுமறையினெறிதிறம்புமறையோற்பணிந்துபகர்ந்திடலும்
மன்னுபொருளைத்துணையீங்குகொணர்ந்தாயென்னவழங்குமால். 23

உனதுவிழைவெத்துணையுளவத்துணையபொருள்யானுதவுவலெ
ன், றனை யோனுரைப்பக்கொணர்ந்தபொருளனைத்துமெனக்கின்ற
நளுதியேல், நின துதானமேற்பலெனநிதியமனைத்துமவன்கொடுப்
ப, இனிதுமகிழ்ந்தாங்கிழிகுலத்தோன்வழங்குதானமேற்றனனால்.

வெற்றுக்கொடியவிழிகுலத்தோன்வழங்குநிதியந்தனைவிழைவின்
ஏற்றவதனாற்சண்டாளனிவனேயாகுமென்றென்று
போற்றல்செய்யாரிழிகுலத்தோனென்னவெவரும்புறங்கூற
ஆற்றல்தீர்ந்துதன்மனைவிட்டகலாதாங்குவைகினனால். (25)

கண்டபெயர்யாவருமிவனைக்கண்ணிற்காணாதகற்றுகென
வண்டுண்கோதைபின்றுடாரமக்களோடுமணித்தோட்டுக்
துண்டுசினைப்பூத்தலர்கணைக்காற்குவளைப்பசுந்தேன்குமிழியெழக்
கெண்டைகுதிக்கும்வளவயற்கீகடதேயத்திற்செலவயர்ந்தான். (26

கங்கைபடிந்துகாவடிகொண்டேகுவார்பின்கரந்தேகி, வெங்க
ட்களிறுபுலிவழங்குகொடுங்கானிடையின்மேவுதலும், துங்கச்சிலையர்
தொடுதோலர்தூணிப்புறத்தர்நிரையுளைய, சிங்கப்போத்தினுருகெழு
வெந்திறலோர்விரைவிற்சென்றெதிர்ந்தார். (27)

ஈனாக்குறுங்கட்பசுங்கமுகினெழில்சேர்கண்டத்தேந்திழைக்கா,
ஆனாக்கொடுந்தீவினையிழைத்துக் கொணர்ந்தபொருள்களனைத்தினை
யும், ஊன்வாய்பிலிற்றிநிணங்கமழுமொள்வாயெயினர்கவர்வரெனப்,
போனான்போகுநெறியினிடைப்புகுந்தோரேற்றுப்புலிபோல்வார்.28

காழிற்சிறந்தகூன்புறவெங்கதையாற்புடைத்துக்கலைமறையோன்
ஊழிற்கொள்ளாக்கொடும்பாவநிதியமனைத்துமொருங்கள்ளி
மாழைக்கருங்கணோக்கியையும்வலிதிற்குறைத்துமாகநந்தன்
தாழ்வுற்றாவிசிதைந்தொழியமக்களோடுந்தடிந்தனரால். (29)

கரும்புகுதட்டிச்சாறொழுகுங்கடைவாய்மேதிகண்படுக்கும்
இருந்தண்புனல்சூழ்காசிதனையிதயத்தெண்ணியிறந்தனனால்
வரம்பிற்சாலிமுத்துயிர்க்கும்வயற்கீகடத்தில்முற்பவத்தில்
திருந்துமுணர்வோடவனரத்தச்சூட்டுச்சேவலாயினனால். (30)

மக்களிருவர்பார்ப்பாகமடமானேக்கிபேடாக
ஒக்கவுறையுநாளதனிற்காசிக்கேகுமவரோடும்
செக்கர்நிறத்தகூர்வாயசூட்டுச்சேவல்பெடைதொடரத்
தொக்கபார்ப்பினெடுங்காசித்தொல்லைநகரிற்சென்றதுவே. (31)

செங்கட்கயவாய்மோட்டெருமைசெழுநீர்க்குவளைப்போதருந்திப்
பங்கப்பழனத்துளைந்துழக்கப்பணிலமுழங்குகாசியினில்
திங்கடவழ்ந்துவிளிம்புரிஞ்சுமுத்திமாடத்திடைச்சேரா
அங்கணிறந்துபடுபேற்றாற்கயிலைவரையினடையுமால். (32)

அன்றுமுதலாய்க்குக்குடமண்டபமென்றேதுமகனுலகம்
மன்றவிதனைக்கேட்டோர்கள்மருளாமுத்திதனிலடைவார்
என்றுகூறத்திருநெடுமாலிதயநெகிழவிழிபனிப்பக்
குன்றவில்லிசேவடிக்கீழ்க்குழைந்துகுழைந்துதொழுதனனால். (33)

ஆயகாலையளப்பரியவிலிங்கபூசையாற்றுகின்றோர்
பாயபசும்பொற்படுமணியினேதைசெவியினிடைப்படா
மாயன்கமலப்பொகுட்டுறையுமறையோன்முதலோர்வாழ்த்தெடுப்பச்
சேயபசும்பொற்சிங்காரமணிமண்டபத்திற்சென்றடைந்தான். (34)

இனையகாதைகேட்கின்றோர்நவில்வோரிதயத்தெண்ணுமவர்
அனையோர்பாதம்பணிந்திடுவோர்பணிந்தோர்க்கடிமைபூண்டுள்ளோர், கனைவண்டிமிருங்கற்பகப்பூங்காட்டினமரர்பணிந்தேத்தப், பனைவெம்புழைக்கைவெள்ளானைப்பாகன்பரவவீற்றிருப்பார். (35)

**தொண்ணூற்றெட்டாவது முத்திமண்டபத்தின்**
**கதையுரைத்த அத்தியாயம் முற்றிற்று.**

---

**ஆகத்திருவிருத்தம்—2441.**

## தொண்ணூற்றொன்பதாவது
## விச்சுவநாதர்மகிமையுரைத்த அத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

வானிற்றடவுஞ்சிங்காரமணிமண்டபத்திற்புகுந்ததற்பின்
கூனற்பிறைதாழ்கோடீரக்குழகன்செய்தியுரைத்துமென
ஞானத்துறைவாய்ப்படிந்தகுறுமுனிவனுவப்பநலங்கெழுதண்
பானற்கருங்கட்செங்கனிவாய்க்குறத்திகொழுநன்பகர்ந்திடுமால். (1)

இருண்மேய்ந்திலகுகதிர்நாவாற்கடைவாய்நக்குமெரிமணிசேர்
அரியாசனத்தினினிதேறியழற்கட்பெருமானமர்ந்திடலும்
கரியோன்முதலபுத்தேளிர்வணங்கக்காந்தள்முகைகவற்றும்
வரிவால்வளைக்கைவாணிமுதலமரர்மாதர்வாழ்த்தெடுத்தார். (2)

கன்னிப்படலைத்துழாய்முடியோய்கேட்டிகமழ்தேனூற்றிருக்கும்
பொன்னிற்பழுத்தகொன்றையந்தார்புனையுஞ்சடைவிச்சுவநாதன்
என்னவுரைக்குமவ்விலிங்கம்பிரமமாகுமீங்கதனில்
மன்னியன்பர்க்கெஞ்ஞான்றுமழியாமுத்திவழங்குமால். (3)

நிலவுக்கதிர்கான்றிலகொளியவெண்ணீறணிந்தநிலாநெற்றி
மலமூன்றெறிந்தபாசுபதர்வடிவநமதுவடிவாகும்
மலர்தூய்வணங்கியாங்கவரையொருகாற்பழிச்சிலாயிரங்காற்
பலன்வேண்டாமலெனையேத்தும்பான்மையோரிற்பலன்பெறுவார்.

என்னையேத்திவணங்குதற்குக்காண்டலரியதெஞ்ஞான்றும், அன்னவாற்றாலிவ்விலிங்கந்தனையேவழிபாடியற்றிடுமின், சொன்னேன்சொன்னேன்முக்காலுமின்னவிலிங்கந்தொழுதிடுவோர், மன்னுமுத்திதனில்நாளும்வாழ்தலுண்மையுண்மையே. (5)

வினைப்பூட்டறுக்குமிவ்விலிங்கந் தன்னைவிழைவினெண்ணாது
நினைப்பினவர்தமிரும்பிறவிக்கொடியபாவவினைநீங்கும்
மனத்தின்விழைந்துவழிபடுவான்போதல்செய்யின்மற்றவர்கள்
கனைக்குங்கடலின்விரிந்தகன்றகொடுந்தீவினையின்கடல்கடப்பார் (6)

கருணையோடுமிவ்விலிங்கங்காண்டல்செய்யினவரெளிதில்
புரவிமகநூறாற்றுபலனடைவர்தீண்டிற்புகலரிதாய்ப்
பரவருமாயிரமிராசசூயமாற்றும்பலனடைவர்
விரிநீராட்டிற்புரவிமகங்கோடியாற்றும்பலன்மேவும். (7)

இன்னகடவுளிலிங்கத்தின்மேனிகுளிர்ப்பவெழுந்தோங்கு
தென்னம்பொதியினறுஞ்சாந்தத்தேய்வைகோட்டினுங்கவர்மேல்
அன்னம்பொருவுமரமகளிர்தெய்வச்சாந்தமகிழ்ந்தணியப்
பொன்னந்துணர்க்கற்பகநீழலரியாசனத்திற்பொலிந்திருப்பார். (8)

மணங்கொள்தூபமளிக்கின்றோர்மணங்கூர்தெய்வவுருவாவர்
கணங்கொள்தீபமெடுக்கின்றோர்கதிர்காலுடுவின்வடிவாவர்
இணங்குநறியகருப்பூரத்தீபமினிதினெடுத்தோர்கள்
பணங்கொளரவகங்கணத்தோன்படிவமாகிவீற்றிருப்பார். (9)

ஆர்வமோடுமின்னமுதமளிப்போர்நமதுகயிலைவரைச்
சேர்வர்கீதமாடல்பலவியமுன்செய்வித்திடுமவர்தாம்
ஊர்பொற்றிதலைபூத்தமுலையரம்பைமாதருவந்தாட
ஏர்முற்றியபூந்தருநீழற்குலிசப்படையோனெனவிருப்பார். (10)

நறைதூமலராலிவ்விலிங்கந்தன்னைநாளும்பணிவோரைத்
திறைதூயுலகமோர்மூன்றுஞ்சேவைசெய்யுமீங்கதன்பேர்
அறைவோர்தம்பாற்கூற்றணுகாதன்பாலேக்கியுவந்திடுவோர்
கறைதாழரவக்குழையணிந்துகணத்தின்முதலாயினிதிருப்பார். (11)

அலகில்புகழ்விச்சுவநாதவென்னவொருகாலறைவோரை
இலகுநமதுநல்லுருவென்றெண்ணிமுத்தியினிதளிப்போம்
உலகம்புகழெண்டிசைப்பாலர்பதமுமழியுமுவந்துவந்தும்
பலகாலிதனைத்தொழுமவர்தம்பதமற்றழியாதழியாதால். (12)

இலகுசுடர்விச்சுவநாதற்கிணையாங்கடவுளிலிங்கமுநீர்
சுலவுமணிகன்னிகைக்கிணையாந்துகடீர்தெய்வதீர்த்தமும்வான்
கலவமஞ்ஞைநடம்பயிலுங்காசிக்கிணையாநன்னகரும்
உலகமொருமூன்றினுமிலையீதுண்மையுண்மையுண்மையால். (13)

என்றுகூறியுமையோடுமெண்டோள்முக்கணெம்பெருமான்
துன்றுகதிர்கால்சுடரிலிங்கமதனிற்சேரத்துழாய்முடியோன்
மன்றற்கமலவீட்டுறையுமுரவோன்முதலவானவர்கள்
நின்றுபழிச்சிப்பழிச்சியென்றுநீங்காதாங்கணுறைந்தனரால். (14)

கன்னற்காடுவிளிம்புடுத்தகாசிநகரின்பெருமையெல்லாம், பன்னிவிரிப்பின்முடியாதாற்சுருக்கிநினக்குப்பகர்ந்தனம்யாம், என்னவுவந்துசூர்மாளவிலங்குவடிவேல்பணிகொண்டோன், தென்னன்பொருப்பினினிதுறையுஞ்சீர்சால்முனிவற்குரைத்தனனால். (15)

அலகில்புகழிப்பெருங்காதைநவின்றோர்கேட்டோரன்புற்றோர்
நிலவுமொழியுந்தனிக்கவிகைநிழற்றவரியாசனத்தேறி
உலகமூன்றுமொருதிகிரியுருட்டியரசர்திறையளப்ப
மலரினுறைபொற்றிருமடந்தைவாழவினிதுவாழ்ந்திருப்பார். (16)

தொண்ணூற்றொன்பதாவது விச்சுவநாதர்மகிமை
யுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—2457.

## நூறுவது
## சேவிக்கிறமுறைமையுரைத்த அத்தியாயம்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மூசிவரிவண்டிசைபயிலுமுட்டாட்கமலத்தடமுடுத்த
காசிநகரிலுறைபயிலிங்கம்போற்றுமுறைமைகழறுகென
ஆசில்மறைகள்முழுதுணர்ந்தமலயமுனிவனறைந்திடலும்
பூசல்புரியுங்கயனெடுங்கட்குறத்திகொழுநன்புகலுமால். (1)

அசைத்ததுகிலோடலைபுரட்டுமணிகன்னிகையிலமர்ந்தாடி
இசைத்ததேவர்முனிவர்தென்புலத்தோர்கடன்களினிதாற்றிப்
பசுத்தபுரவிநெடுந்தேரோன்றுரோபதீசன்மலர்ப்பாந்தள்
விசித்ததண்டபாணிமச்சேச்சுரன்றாள்முறையின்வியந்தேத்தி. (2)

பின்னர்த்துண்டிவிநாயகனைப்பெட்பினொடுமினிதேத்தி
நன்னித்திலஞ்சூற்சங்குயிர்க்கும்ஞானவாவிநீர்தெளித்துப்
பொன்னிற்பொலிந்தசடைநந்திதாரகேசன்மகாகாளர்
பன்னற்கரியபுகழ்த்தண்டபாணிபாதந்தினம்பணிக. (3)

மழலைத்தும்பிபாட்டயரமதுவூற்றிருக்குமலர்ப்பொதும்பிற்
குழவித்திரைநீர்க்குடக்குரும்பைசிதறவாளைகுதித்துகளும்
பழனத்தடஞ்சூழ்காசியகிலேசற்போற்றும்பரிசினியான்
மொழியக்கேட்டிபெறலரியவருமாதவத்துமுதலோனே. (4)

ஓங்காரேசன்றனையருச்சித்துவப்பினொடுமச்சோததியில்
நீங்காதாடிக்கடன்கழித்துநகரில்திரிவிட்டபத்தீசன்
தீங்கில்கிருத்திவாகேசனிரத்னேச்சுரன்சந்திரேச்சுரன்பார்
தாங்குபுகழ்க்கேதாரேசன் தருமேச்சுரன்சொல்வீரேசன். (5)

அணிசேர்கருணைக்காமேசனருள்கூர்விசுவகன்மேசன்
மணிகன்னேசனவிமுத்தேச்சுரனீங்கிவரைவரன்முறையில்
பணியக்காசியகிலேசற்பணிகநாளும்பணியாரேல்
தணவாமுத்திதருகாசியகன்றுபோகித்தளர்குவரால். (6)

இன்னவீசர் தமைமுறையினிறைஞ்சினபாபக்கத்து
வன்னத்திதியைமுதற்பதினுன்களவுந்தொழுகவஃதன்றேற்
பன்னுமீசர்பதினுல்வர் தமையுமருளாற்பதினுன்கு
தன்னிலேனுந்தொழவேண்டுமென்னமறைகள்சாற்றுமால். (7)

இருநான்கிலிங்கமின்னுமுளகேத்திரேச்சுரன்பாறுவதீசன்
அருள்கூர்பசுபதீச்சுரன்கங்கேசனருமதேசனன்பு
தருமோங்கொளியகபத்தீசன்சதீசன் தாரகேச்சுரன்ருள், தெருளா
லுணர்ந்தட்டமிதொறும்போய்ச்சேவைசெய்யவேண்டுமால். (8)

தடங்கொள்வாணைதனிலாடிச்சயிலேலசனையுஞ்சங்கமத்திற்
படிந்துசங்கமேசனையுஞ்சுவலவாவிதனிற்படிந்தாங்
கடைந்தசுவலேசனையுமுத்தியருள்கூர்மந்தாகினிப்புனலிற்
குடைந்துபுகழ்மத்தியமேசன்றனையுந்தொழுதுகைகூப்பி. (9)

பூசைபுரிந்தாங்கிரணியகற்பத்திற்படிந்தப்பேர்புனைந்த
ஈசன்றனையுமுயர்மணிகன்னிகைதோய்ந்தீசானேசனையும்
பேசுபுகழ்க்கோப்பிரேகத்திற்படிந்தப்பெயர்மெய்க்கடவுளையும்
மாசில்கபிலமடுமூழ்கியிடபக்கொடியோனையும்வாழ்த்தி. (10)

மறைகளோதுமுபசாந்திமடுவிலாடியுபசாந்தி
இறைவன்றனையுமெழிற்பஞ்சசூடவாவியினிதாடி
நறவுதுளிதூங்கிதழிபுனைசேட்டேசனையுநாற்கடப்பேர்
பெறுகூபத்திற்படிந்தாங்கணுறைந்தபெருமானையுமேத்தி. (11)

மகதேவுறைபொற்சினகாத்துவாவிதோய்ந்தவ்விறைவனையும்
தகைசால்தருசுக்கிரேசன்முன்னர்த்தடத்திற்படிந்தக்கடவுளையும்
துகடீர் தண்டகாபத்திற்றேய்ந்துவியாக்கிரேசனையும்
முகில்வாய்மடுக்குஞ்சவுனககுண்டத்திறேங்குபுனல்மூழ்கி. (12)

முற்றுக்குருத்துமுளைத்திங்கள்முடித்தசவுனகேசனையும்
கற்றுரிதயமலர்களிப்பக்களிகூர்சம்புகேசனையும்
உற்றுதாவினமரபக்கத்துயர்முற்றிதியைமுதற்றெடங்கி
மற்றோர்பதினுன்களவேத்திவணங்குமவர்வீடடைவாரே. (13)

அறைவலின்னுமீசர்பதினொருவருளாரக்கினித்திரப்பேர்
பெறுவாவியினிற்படிந்தாக்கினித்திரேச்சுரன்றண்பிறைவேணி
உறுவதீசன்விளங்குமகிலேசனோங்குசடாவீசன்
பொறிவாளரவகங்கணத்துப்புனைதார்ப்பாரபூதேசன் (14)

புனிற்றுமறிமானிடனேந்துமிலாங்கலேசன்புராந்தகனன்
மனப்பிரகாசேச்சுரன்பிறிதுகேசன்மாதலேசன்வண்டு
கனைக்குமிதழிபுனைவேணித்திலவனேசன்கழலிணைகள்
நினைத்துமுறையிற்சேவைசெய்யினவரேமுத்திநெறிகாண்பார். (15)

கரும்புசாய்த்துக்கழைமென்றோட்காமர்கவுரிசேவைமுறை
விரும்பிக்கேட்டிசுக்கிலபக்கத்தின்மேயதிரிதிகையில்
அரம்பைகுலைத்துமுகங்கவிழுமகன்கொப்பிரேக்கந்தனிலாடிச்
சுரும்புண்கூந்தற்கருநெடுங்கட்சுவனிக்காளிதாள்போற்றி. (16)

சேட்டவாவிதனிற்படிந்துசேட்டகவுரிதனையுமுத்தி
நாட்டுஞானமடுமூழ்கிச்சவுபாக்கியநன்கவுரியையும்
வீட்டி லின்பமினிதருள்சிங்காரகவுரிவியன்கோயில்
மோட்டுவாவிபடிந்தவள்பொன்முளரிமலர்த்தாளையுமேத்தி. (17)

வெண்ணந்துயிர்த்தமுத்தமிருள்விழுங்குகோட்டுவிசாலகங்கைத்
தண்ணம்புனலிற்றோய்ந்துவிசாலாட்சிதனையுமருவினையாம்
எண்ணந்துலைக்கும்லளிதமடுமூழ்கிலளிதாகவுரியையும்
வண்ணந்திகழும்பவானிபடிந்தப்பேர்மடமானையும்வாழ்த்தி. (18)

விந்துதீர்த்தப்புனலாடிவியன்மங்கலப்பேர்க்கவுரியையும்
தந்தமுறையிற்படிந்துமலர்த்தையல்பாதமலர்க்கமலம்
சிந்தைசெய்துசதுர்த்திதொறுமலர்தூய்வணங்கிச்சேவைசெயின்
அந்திலதனாற்கொடுங்கூற்றமடையுநகரிலடையாரால். (19)

மகிழ்கூர்ந்தினிதுமங்கலவாரத்தில்வயிரவனைத்தொழுக
புகழ்ஞாயிற்றின்கன்னியொடும்பொருந்துமஞ்ஞான்றினிற்புதல்வர்
இகழாதேத்துந்துலாமியைந்தவவ்வாரத்திலிருள்சீக்கும்
பகலோற்பணிகொற்றவையைப்பணிகநவமியட்டமியில். (20)

தடவுப்பசுந்தாள்நெடுமுடவுத்தாழைபுடைசூழ்வயற்காசிக்
கடவுட்கோயிலகத்தணிகழ்சேவைகேட்டிவைகறையில்
அடைவிற்புனலாட்டயர்ந்துபஞ்சவேழமுகவற்பணிந்ததற்பின்
விடமுற்றியகார்மணிமிடற்றெம்மகிலேசன்றாள்வியந்தேத்தி. (21)

மதியமுரிஞ்சுதிருவாணமணிமண்டபத்திலிருந்துமறை
விதியினகத்துதிகழ்சேவைபுரிவல்கொடுந்தீவினையகற்றிக்
கதியின்றருள்தல்வேண்டுமெனக்கருதிமவுனமொடுமலர்த்தேன்
பொதியுமணிகன்னிகைநறுந்தண்புனலினன்புபுரிந்தாடி. (22)

மணிகன்னிகையின்மலர்தூவிவணங்கிக்கம்பளாச்சுவத
இணையிலிலிங்கம்புயங்கேசன்பறுவதீசனுலகெல்லாம்
பணியவருங்கேசவனன்பாலளிதாகவுரிபணைநெடும்பொற்
றிணிதோட்சராசந்தேச்சுரன்சோமேசன்வராகஞ்சிறந்தேத்தி (23)

பிரமேச்சுரனைப்புகழ்சத்தீச்சுரனைக்காச்சியபேசனையோங்
கரிகேச்சுரனைவயித்தியநாதனைமெய்த்துருவேசனையிலங்கு
விரிதார்க்கோகன்னேச்சுரனையாடகேசன்றனைவிதிக்கும்
தெரியாவுருவார்தடாகேசன்றனையாங்குவகைசிறந்தேத்தி. (24)

பொன்னங்கொன்றைபுனைதிகடேசன்பாரபூதேசன்
மின்னுங்கதிர்வேல்சித்திராகுத்தேசன்விறற்சித்திரகண்டை
பன்னுமறையினுபதிடதப்பொருளாம்பசுபதேச்சுரனீள்
கன்னங்கரியமணிமிடற்றுப்பிதாமகேசன்கழல்போற்றி. (25)

கலசேச்சுரன்சந்திரேச்சுரன்வீரேசன்விசுவேச்சுரன்கருணை
இலகுந்தேசன்வளர்சிந்தாமணியைங்கரன்வானிமையோர்கள்
மலர்தூஞ்சேனவிநாயகன்சீர்வசிட்டன்வாமதேவன்வரைச்
சிலையாற்புரமூன்றழலூட்டுந்திரிசந்தேசனடிபோற்றி. (26)

தள்ளாவிழுச்சீரொடுமோங்குவிசாலாக்கேசன்தருமேசன்
வெள்வேலேந்துவிச்சுவபாகுவன்சீர்சார்விநாயகன்றாள்
ஒள்வாள்விருத்தாதபன்சதுர்வக்கிரேசன்பிராமீச்சுரனுடைந்து
கள்வாயுமிழ்தார்மனப்பிரகாசேசனனிபொற்கழல்வாழ்த்தி. (27)

ஏற்றுக்கொடியேந்தியவீசானேசன் சண்டிசண்டீசன்
போற்றுபவானிசங்கரனீள்புழைக்கைத்துண்டிவிநாயகன்வெங்
கூற்றையுதைத்தபொலங்கழற்றுட்சராசந்தேசன்கொன்றைநற
வூற்றுசடிலத்திலாங்கேசன்லகுலீச்சுரன்றுளுவந்தேத்தி. (28)

பருதிச்சுடர்வேலுயர்த்தருள்பாரேசனருட்பாத்திரவேசன்
பிரதிக்கிரேசனிட்களங்கன்மார்க்கண்டேசன்பெய்ம்மலர்ப்பூந்
தெரியற்பரிசாசேச்சுரன்கங்கேசனிவர்தாள்சேவைசெய்யா
அருவிப்பசுந்தேனலைபுரட்டும்ஞானவாவிதனிலாடி. (29)

நந்திகேசனருட்டாரகேசனுலகநான்குதொழ
வந்தமகாகாளேசன்விறற்றண்டபாணிமகேசன்வினைப்
பந்தமறுக்குமுத்தீசன்விடையூர்வீரபத்திரேசன்
ஐந்துவேழமுகனவிமுத்தேசனிவரையடிபோற்றி. (30)

வளங்கொள்காசியகிலேசன்றிருமுன்போந்துமவுனமொழிந்
துளங்கொள்மறையின்பொருளோதியின்னசேவையுஞற்றினன்யான்
விளங்கவென்பாலருள்புரியவேண்டும்விமலவெனவேத்தித்
துளங்குமுயர்தென்மண்டபத்தினிருந்துபோந்ததுயர்நீங்கி. (31)

பின்னர்த்தனதுமனைக்கேகிற்பாவநீங்கிப்பேரின்பம்
மன்னியிருப்பர்பதினொன்றாந்திதியிற்கடவுண்மால்தீர்த்தம்
தன்னிலாடிமணிவண்ணன்சேவைதாழாதியற்றுவரேல்
முன்னவரியபேரின்பமுத்திநெறிக்குவழியாமால். (32)

குலதம்பத்தைப்பூரணியிலுவாவிற்போற்றிக்கைகூப்பின்
அலகைவருத்தாசேவையன்றிவீழ்நாள்கழித்தலாகாவால்
நிலவுதினந்தோறிருபோதுநெடுநீர்க்கங்கைமாநதிதோய்ந்
துலகமேத்துமகிலேசன்பொற்றாள்வணங்கியுறைகவே. (33)

காவிமேய்ந்துகள்ளொழுகக்கயவாய்மேதிகிடந்துயிர்க்கும்
வாவிசூழ்ந்தகாசிநகர்வதிந்துசேவைசெய்யாமல்
யாவருறைந்தாரவர்மரபினிறந்தோர்சிறிதுமருளின்றிப்
போவரென்னவெஞ்ஞான்றுமருமாமறைகள்புகலுமால். (34)

உலகுபுகுதத்திறந்தகடையோங்குமதிட்காசியிலுறைந்தும்
அலைநீர்புரட்டுங்கங்கைதனிலாடியகிலேசனைப்பணியார்
கொலைசெய்பிறைவாளெயிற்றழல்கட்கூர்முத்தலைவேல்காலனெனும்
இலகுமணிச்சூட்டலங்குதுத்திப்பாந்தள்வாய்ப்பட்டிறந்துழல்வார்.

அணிபொற்கனத்ததகடுபொதிந்தலங்குசோதிக்கதிரெறிக்கும்
மணிகன்னிகையிற்றினமூழ்கியகிலேசன்றாள்வழுத்துகின்றோர்
இணையில்கடவுட்டீர்த்தங்கள்யாவும்படிந்துசேவைசெய்தார்
தணிவிலுயர்பேரின்பமுத்திசார்வருண்மையுண்மையே. (36)

---

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

யாழிசைமிடற்றமாங்குயிலகவுமிலைதலைவிரித்ததண் சோலை, சூழ்கிடந்தோங்குகாசிகண்டத்தின்றொடர்புயர்வதனுடைச்சிறப்பும், ஆழ்கடற்பரப்பின்கண்ணறிவரிதாமருந்தமிழ்முழுவதுந்தெரிந்த, தாழ்வில்சீர்முனிவகேளெனச்சூர்மாத்தடிந்தவனருளொடுஞ்சாற்றும்.

மின்னவிர்பசும்பொற்குடுமியநெடுவான்முகட்டுயர்விந்தமால் வரையை, இன்னிசைமகதியாழ்பயில்முனிவனெதிர்ந்தனனியம்பிய வாறும், பன்னருமறைநான்முகத்தவனுலகிற்பண்ணவர்போகியவாறும், அன்னவர்மலயத்தருந்தவமுனிவன்சாலையினடைந்திடுமாறும்.

கடவுண்மீன்கற்பிற்றிருந்திழைமகளிர்செய்திறன்கழறியவாறும்
குடுமிவான்பொதியத்தருந்தவன்விந்தவரையிடைக்குறுகியவாறும்
உடைதிரைநெடுநீர்ப்புண்ணியதீர்த்தத்துயர்சிறப்போதியவாறும்
கெடலருஞ்சீர்த்திசிறந்துயர்சத்தபுரிவளன்கிளத்தியவாறும். (39)

புண்ணியசீலன்சுசீலனென்றுரைக்குமாயவன்கணங்கள்முன்போந்து
திண்ணிதினுரைப்பவருசிவசன்மன்றென்புலநோக்கியவாறும்
பண்ணமைபுரவியேழுடைத்தேரோனுலகிடைப்படர்ந்துபோமாறும்
விண்ணவர்க்கிறைவனினிதுவீற்றிருக்குமுலகினில்மேவியவாறும்.

ஆழற்கடவுளுலகினிலடைந்தவாறுமற்றடல்கெழுநிருதி
ஏருடையுலகும்வருணனீடுலகுமெய்தியவாறுநீள்காற்றின்
பேர்பெறுமுலகுங்குபேரனீடுலகும்பேசியவாறுமீசானன்
சார்தருமுலகுந்திங்கள்மூதுலகின்றன்மையும்வழங்கியவாறும். (41)

அவிரொளிபரப்புதாரகையுலகுபுதனுலகடைந்துபோமாறும்
கவியுறையுலகமெய்தியவாறுங்கருணையங்காரகனுலகும்
புவிதொழுவியாழவுலகமுஞ்சனியினுலகமும்பொருந்தியவாறும்
தவமுயல்முனிவரெழுவர்தம்முலகின்றன்மையைவிளம்பியவாறும்.

அருந்தவமிழைப்பான்விறல்கெழுதுருவன்போகியவாறு மங்க
ன்ஞேன், புரிந் திடுசெய்திசாற்றியவாறும்புரிந்து தன்பெயருடைப்
பதம்பெற், றிருந்திடுமாறுமுயர்மகலோகமுதலநான்குலகெதிர்ந்த
னவும், திருந்துநான்முகத்தோன்காசியைத்துதித்தசெய்கையாங்கு
ரைத்திடுமாறும். (43)

தொல்லுலகளவைபுகன்றுமாயவற்குச்சுடர்முடிசூட்டியவாறும்
பல்கலைதெரிந்தபுகழ்ச்சிவசன்மன்பாகதிமேவியவாறும்
வில்வலற்செகுத்தோன்வரைபகவெறிந்தவிறைவனைக்கூடியவாறும்
கல்லொலிமணிகன்னிகையின்வான்சிறப்புக் காதலிற்கழறியவாறும்.

விரிதிரைப்பொருநீர்க்கங்கையின்றன்மைவிளம்பியவாறுமக்கங்கைத்
திரையிடைக்கழுகோரென்பிடமுன்னைத்தீவினையகற்றியவாறும்
பொருவிலாக்கடவுட்கங்கையினுமமாயிரம்புகன்றிடுமாறும்
கரைபொருவாரணசியுடைத்தன்மைகருணையிற்கூறியவாறும். (45)

வடிகெழுகுருதிமூவிலைச்சூலவயிரவன்றோன்றியவாறும்
அடல்கெழுதண்டபாணிபார்போற்றவன்பினிற்றோன்றியவாறும்
தடமலிஞானவாவிசாற்றுழியிற்றருபடனோக்கியவாறும்
படைநெடுந்தடங்கட்கலாவதிசெய்திபரிவொடுகிளத்தியவாறும். (46

வழுவிலொழுக்கநிகழ்த்தியவாறுமுன்னராச்சிரமத்தின்வருவாய்
மொழிதருமாறுமணிநுதன்மகளிரிலக்கணமொழிந்திடுமாறும்
பழுதிலாசாரம்விளம்பியவாறுமில்லறம்பகர்ந்திடுமாறும்
அழிவிலாமுத்திவீடருள்யோகநிலைமையையறைந்திடுமாறும். (47)

காலமுற்றுணர்வானுரைத்ததுமீருக்கணிக்கிலத்தியாயமோர் காற்பான், மேலுமொன்ருகும்பூருவகாண்டம்வியப்பினத்தொகை தனைக்கேட்போர், ஞாலமோரேழுமொருகுடைநிழற்றவரசவீற்றி ருந்துநாளுலப்பிற், பாலலோசனன்றன்செய்யபொற்கழற்காற்பங் கயப்போதினிலடைவார். (48)

அருள்புரியவிமுத்தேச்சுரன்காதையறைந்ததுமருட்டிவோதா னன், புரவுபூண்டிருந்ததுரைத்ததுங்காசிச்சிறப்பினைப்புகன்றதுங்கங் கைத், திரைதவழ்காசிநகரில்யோகினிகள்சென்றிடுமாறும்விண்புக ழும், விரிசுடருலோலாதவனுயர்காதைவிளங்குறப்பகர்ந்திடுமாறும்.

உருவவொண்கதிர்காலுத்தராதித்தன்காதையாங்கோதியவா றும், விரிகதிர்ச்சாம்பாதவனியற்காதைவிளம்பியவாறுமேழ்பரித் தேர்த், துருபதாதித்தன்மயூகவாதித்தன்காதைகள்சொல்லியவாறு ம், மருவருகடோற்காதவன்கெருடேசன்காதைகள்வழங்கியவாறும்.

ஆய்கதிராருணதபன்முதற்றபனர்காதைகளறைந்திடுமாறும், பாய்பரிமகமோர்பத்துநான்முகத்தோன்பரிவுடனாற்றியவாறும், சேயவான்குஞ்சிச்சிவகணம்வளங்கூர்காசியிற்சேர்ந்திடுமாறும், ஏய வோரலகைதன்னுருநீக்கிவிண்ணவனாகியவாறும். (51)

அருவியங்கடாத்தவைங்கரன்காசியடைந்திடுமாறுமைங்கரத் தோன், கருணையினுலகுபுகழ்திவோதானற்காண்டலுங்கடனிறவ ண்ணன், பொருவறுகாசிசேர்ந்ததுந்திவோதானனுக்கருள்புரிந்திடு மாறும், விரிதிரைப்பஞ்சநதவாலாறும்விந்துமாதவனுதித்ததுவும்.

அருள்புரிவிந்துமாதவன்றேன்றியக்கினிவிந்துவுக்கியல்பாற், பொருவறுதீர்த்தமான்மியமுரைத்ததன்மையும்புரிசடைக்கடவுள், எரிமணியிமைக்குமந்தரநீங்கிக்காசியினெய்தியவாறும், மருவருஞ் சேட்டதானத்தினடைந்துமறைமுனிக்கருள்புரிந்ததுவும். (53)

காசியின்பெருமைமுனிவனுக்குரைத்தவண்ணமுங்கலைமதிபு னைந்த, மாசறுகடவுட்பராசரலிங்கமுதலியலிங்கத்தின்வரவும், தேசுறுசயிலேச்சுரமுதலீசர்காதையுஞ்சிறந்தரத்னேசன், ஆசறுசிற ப்புங்கிருத்திவாகேசனன்புறவினிதுதோற்றியதும். (54)

உலகொருமூன்றும்புகழ்பெறுதூற்கனராசினதுரிமையு மன் ேஞ ன், புலவுகாறழல்வேற்சூலிமேற் றாண்டுபொருபடையெழுச்சியுமிவ னைக், கபிலைவாழணங்குசெற்றதும்வச்சிரபஞ்சாகவசமுங்கதிர்கான், றிலகுமோங்காரவிலிங்கமெய்தியதுமன்னதனேத்தருஞ்சிறப்பும்.

முக்கணெம்பெருமான்ேறற்றமுமன்னேன் பெருமையுமுடிவி ல்கேதாரம், தொக்கநன்கதையுந்தருமலிங்கத்தின்ேறற்றமுங்கி ள் ளையின்கதையும், மிக்கவான்செல்வநோற்றவர்க்களிக்குமனேரதத் திரிதிகைவிதியும், கக்குவெங்குருதிவேல்வலனுயர்த்ததூர்த்தம னி னியநற்கதையும். (56)

ஒண்ணிறவடிவேலேர்தூகங்காளகேதுவின்வதையுமோங்கெ கா ளிய, அண்ணல்வீரேசன்காதையுமமரரேத்திடவருந்தவக்கிழமை, நண்ணியார்மாட்டுமுனிதுருவாசனல்வரம்பெற்றதுமறையும், எண் ணருஞ்சீர்த்திவிசுவகன்மேசவிலிங்கமுற்ேறன்றியவியல்பும். (57)

தக்கனேர்வேள்விமுயன்றதுந்தேவி தந்தைதன்சாலைபுக்கதுவு ம்,மிக்கநல்வேள்விசிதைத்ததுந்தக்கன்வீந்ததும்பாறுவதீசன், புக்க துங்கங்கேச்சுரன்வரலாறுநருமதேச்சுரன்பொருந்தியதும், மைக்க ருமிடற்றுத்திங்களங்கண்ணிவனேசடைச்சதீச்சுரன்வரவும். (58)

புனிற்றிளந்திங்கள்புனையமுதேசன்முதலிய வி லி ங்க த் தி ன் பொலிவும், கனிச்சுவையன்னகவிபுனேவியாதன்கையொடுநாவெழா வாறும், நினைப்பருஞ்சாபமவன்விளம்பியதுநிகரில்கேத்திரவளேெ டு, கனைத்துவண்டிரைதாழ்தீர்த்தவான்சிறப்புமுத்திமண்டபத்தின ற்கதையும். (59)

அலங்கிதழ்க்கொன்றைத்தெரியல்சூழ்வேணியகிலநாயகனுயர் சிறப்பும், நலங்கெழுசேவைபுரிதருமுறையுமாகநன்கிசைத்தவத்தி யாயம், புலங்கொளநோக்கினம்பதோடொன்பான்புகலினீதுத்தர காண்டம், விலங்கலில்காண்டமிரண்டினத்தியாயநூறெனவுரைப்பர் மிக்குணர்ந்தோர். (60)

கலைமுழுதுணர்ந்துதவத்துறைபோயகடவுணன்முனிவர காந்தத், துலகெலாமேத்துகாசிகண்டத்தின்ஒருமையிலொருமுறை கேட்போர், அலைதிரைபுரட்டுபுண்ணியதீர்த்தமாடுநர்பெறுபலனடைந்து, கொலைமுதலாயதீவினைக்குறும்புகொன்றுயர்முத்திவீடடைவார். (61)

பொத்தகத்திதனைவரைந்துளமுவகைபூப்பகன்களிப்பவர்தம்மில், எத்துணைக்காதையெத்துணைக்கவிகளெத்துணைப்பதம்வரியெழுத்தாங், குய்த்தவேடணிந்தகாணிழைபொதிந்ததுகிலினைவைக ளோரொன்றிற், கத்தமால்வரைபோற்களிற்றுரிபுனைந்தோன்கயிலையினளப்பிறைுறைவார். (62)

இனிதினிவ்வேடொன்றளித்திடிற்புராணம்யாவுமீந்திடுபலனெய்தும், அனையதுவிழைந்துகேட்பின்வந்தியருமருமகப்பெறுவர் தீர்வரிதாம், முனிதருபிரமகத்திபன்னிருகாற்கேட்டிடிற்றீர்ந்திடுமுக்கண், தனிமுதற்கடவுளாணைமுக்காலுஞ்சத்தியஞ்சத்தியமாமால்.

பெறலரும்விரதமருந்தவந்தானம்வேள்வியாற்றுநர்பெறுபலனும், மறைமுழுதுணர்ந்துங்கையினிற்பண்டம்வழங்கியும்புராணமுற்றறிந்தும், அறநெறிவழுவாதொழுகியுமறையோர்க்கடிசிலூட்டியுமெதுபோதும், உறையுநரெய்துபேறுமிக்காதையோர்முறை கேட்டுளோர்பெறுவார். (64)

கொழுந்துவிட்டிலகுங்குருச்சுடர்மாடக்கொடிநெடுவீதிதோறரம்பைப், பழங்கனிந்தொழுகுமமுதமூற்றிருக்கும்வளவயற்காசியெம்பரமன், பொழிந்திடுகருணைவாரிதிபடிந்தபுலமையோர்க்கன்றியெஞ்ஞான்றும், விழைந்துளமுவகைபூப்பவிக்காதைகேட்குநல்வினையமெய்திடாதால். (65)

ஓதுமிக்காதைமுழுவதுங்கேளாதொழிந்திடினுரைத்தகாதையினிற், பாதியாயினுமத்தியாயமொன்றேனும்விருத்தமொன்றாயினும்பரிவில், தீதிலோரெழுத்தாயினுமுணர்ந்தொருவன்செவிப்புலத்துறவுரைப்போனை, மேதகுகுலத்துத்தமதுதெய்வதமென்றருச்சனைபுரிந்திடல்வேண்டும். (66)

அன்னவன் றனக்குவேண்டுவ நல்கிமகிழ்ச்சிசெய்திடி லகிலேலசன், தன்னுளமகிழ்ச்சிசெய்திடல்போலுஞ்சாற்றுமிக்காதைகேட்டறிந்தோர், பன்னெறியொழுக்கம்பயின்றிடார்தீமைபுரிகிலார்திருவொடும்பொலிந்து, பன்னெடுங்காலம்விரிகடலுடுத்தபாரினிலினிது வாழ்ந்திருப்பார். (67)

என்றினிதருளால்வரைபகவெறிந்தவிலங்கிலைவேல்வலனுயர்த்தோன், குன்றுறைதெய்வமுனிவனுக்குரைத்தயாவையுமுளமகிழ்கூர, மன்றநான்மறைதேர்வியாதனின்னருளால்வழிபடுசூதனைம்புலனும், வென்றுறைகடவுணயிமிசாரணியத்தருந்தவர்வியப்புறவுரைத்தான். (68)

வாழ்த்து.

அருமறைமுனிவர்வாழ்கவானினம்வாழ்கதெண்ணீர், விரிதிரையுலகங்காக்கும்விறல்கெழுவேந்தன்வாழ்க, மருவியதிங்கடோறுமழைவளஞ்சுரக்கவெங்கோன், பொருவறமொழிந்தவிந்நூல்பொற்பொடும்பொலிகமாதோ. (69)

## நூறுவது சேவிக்கிறமுறைமையுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்—2526.

## ஸ்ரீ அதிவீரராமபாண்டியர் இயற்றியருளிய காசிகாண்டம் முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம். திருச்சிற்றம்பலம். திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ ஆனந்தநடேசர் துணை.

---

குறிப்பு:- காசிகாண்டத்துக் காகிதப்பிரதியின் கடைசியில் எழுதப்பட்டுள்ளது இது:—

*ஸ்ரீ முத்திபஞ்சாக்கர குருசுவாமி துணை யுண்டாகவேண்டும்.*

*ஸ்ரீ காசிகாண்டம் அத்தியாயம்* — 100–*க்குத் திருவிருத்தம்* — 2526.

*கலியுகாதி வருடம்* 4961*க்கு*–*விக்கிரம சகம் வருடம்* 1917, *சாலிவாகனசகம் வருடம்*-1782, *பிரபவாதி வருடம்* 53; *சித்தார்த்தி வருடம் தை-ஸ்ரீ* 29*உ சுக்கிரவாரம் சதுர்த்தி உத்தர நட்சத்திரம் மீன லெக்கினம் இவைகூடிய சுபதினத்தில் காசிகாண்டம் எழுதி முற்றுப்பெற்றது.* (*கி–பி* 1860.)

*ஸ்ரீ ஆனந்தநடேசர் துணை. ஸ்ரீவிசுவேசர், அன்னபூரணி, விசாலாட்சி, காலவைரவர், துண்டிராசகணபதி துணை யுண்டாக வேண்டியது.*

*ஸ்ரீ குருசுவாமிகள் துணை யுண்டாக வேண்டியது. ஸ்ரீ அம்பலவாண சுவாமிகள் திருவடியே சரணம். ஸ்ரீ நமச்சிவாய மூர்த்தி முன்னிற்க.*

*திருச்சிற்றம்பலம். திருச்சிற்றம்பலம். திருச்சிற்றம்பலம்.*

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

## ஸ்ரீ மெய்கண்டதேவர் துதி.

பண்டைமறை வண்டாற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டவிரு தயகமல முகைக ளெல்லாம்
கண்டிறப்பக் காசினிமேல் வந்தவருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெ மேவும்
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே தாழும்
பொற்பாத மெப்போதும் போற்றல் செய்வாம்.

## குருமரபு வாழ்த்து.

கயிலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி
காட்டும் வெண்ணெ
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் றிருமரபு நீடூழி
தழைக மாதோ.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

# ஆதீன வெளியீடுகள்.

1 முத்திபஞ்சாக்கர மாலை—பதவுரையுடன். 2-ம் பதிப்பு.
பஞ்சாக்கர தேசிகர்மாலை- " "
2. ஞானபூசாவிதி—பழையவுரையுடன். "
3. நல்லூர் மாசிமகோற்சவ வைபவம். "
4. மண்ணிப்படிக்கரை ஸ்தலமகாத்மியம்.
5. காருண்யாமிர்த தீர்த்தமகிமை. "
6. இராமாயணதாற்பரியசங்கிரகம் உரையுடன்.
7. ஸ்ரீமாதவச்சிவஞானசுவாமிகள்மீது
தோத்திரப்பா உரையுடன் (முதற்பாகம்)
8. சிவஞானபோதம்—சூத்திரமூலமும்உரையும்.
9. சித்தாந்தமரபு, சித்தாந்தமரபுகண்டனம்,
சித்தாந்தமரபுகண்டனகண்டனம் குறிப்புடன்.
10. ஸ்ரீ நமச்சிவாயமூர்த்தி மும்மணிக்கோவை.
11. திருநெல்வேலித்தேவாரப்பதிகம் உரையுடன்.
12. ஸ்ரீமாதவச்சிவஞானசுவாமிகள்மீது
தோத்திரப்பா உரையுடன் (2-ம் பாகம்)
13. சைவசமயம்.
14. பஞ்சாக்கரதேசிகர் அந்தாதி—உரையுடன்.
15. சித்தாந்தப் பிரகாசிகை—குறிப்புடன்.

16. சுதந்திரத்திருநாள்.
17. கச்சி ஆனந்தருத்திரேசர் வண்டுவிடுதூது
—உரையுடன்.
டாக்டர், ஸ்ரீமத் உ. வே. சா.

18. திருச்செந்தூர்—கடற்கரை முருகர்கோயில் (ஆங்கிலம்)
19. ஞான சூடாமணி.
20. சிவஞானபோதம் (அச்சில்)
ஸ்ரீமாதவச் சிவஞானசுவாமிகள் சிற்றுரை.
21. சுவாமிநாத தேசிகர் பிரபந்தத்திரட்டு (அச்சில்)

---

22. பூப்பிள்ளையட்டவணை முதலியன.
23. சதமணிக்கோவை பொழிப்புரை.
24. திருவள்ளுவரும் பெரியபுராணமும்.
25. சமயம்.
26. திருச்சிற்றம்பலதேசிகர்கலம்பகம் உரையுடன்.
27. அத்துவிதவாக்கியத்தெளிவுரை.
28. சிவஞானபோதச்சூத்திரம் உரை.
29. திருஞானசம்பந்தர்பிள்ளைத்தமிழ் உரையுடன்.
30. சிவஞானசித்தியார் ஆராய்ச்சி (வேறுபதிப்பு)
31. திருப்பள்ளியெழுச்சி (வேறுபதிப்பு)
32. முத்திபஞ்சாக்கரமாலை முதலியன.
33. ஸ்ரீமாதவச்சிவஞானசுவாமிகள் பிரபந்தங்கள் 1
34, 35. துண்டுப்பிரசுரங்கள்.
36. திருவாவடுதுறையாதீனவரலாறு.

37. பாரததாற்பரியசங்கிரகம்உரையுடன்.
38. உலகுடையநாயனார்கழிநெடில்.
39. கலைசைப்பதிற்றுப்பத்தந்தாதி (மாதவ).
40. அம்பலவாணதேசிகர்நினைவுமலர்.
41. சந்தானசாரியபுராணசங்கிரகம்.
42. சந்தானகுரவர்நான்மணிமாலை.
43. விநாயகரகவல்உரை.
44. திருவுந்தியார்உரை (மெய்கண்—1)
45. திருக்களிற்றுப்படியார்உரை (மெய்கண்—2)
46. கயிலைபாதிகாளத்திபாதியந்தாதியுரை.
47. நமச்சிவாயமூர்த்தி ஆற்றுப்படை (வேறுபதிப்பு)
48. சைவப்பேராகு.
49. திருவஞ்சைக்களம்தேவாரம் உரை.
50. திருமந்திர சிந்தனை (நவாக்கரி).
51. வடதிருமுல்லைவாயிலந்தாதியுரை (மாதவ).
52. போலிவினைமறுப்பு.
53. சேரமேசர்முதுமொழிவெண்பா மூலம்.
54. சிவஞானபோதம் பழையவுரை (மெய்கண்ட— 3)
55. திருக்கோகரணம் தேவாரம்உரை.
56. திருஞானசாகரம்.
57. இருபாஇருபது உரை (மெய்கண்ட—5)
58. துகளறுபோதம் பொழிப்புரை.
59. கந்தபுராணதத்துவம்.
60. சகலகலாவல்லிமாலை உரை.

61. திருவெம்பாவை பதவுரை—பொழிப்புரைகள்
62. திருப்பருப்பதம் தேவாரம்உரை.
63. திருவெம்பாவைக்கருத்துமுதலியன.
64. சிவபூசைத்திரட்டு.
65. சிவப்பிரகாசம் உரை (மெய்கண்ட—7)
66. திருஞானசம்பந்தர்பிள்ளைத்தமிழ் ஆராய்ச்சி
67. இரட்டையர் பிரபந்தங்கள் :—
தில்லைக்கலம்பகம், திருவாமாத்தூர்க்கலம்பகம்,
ஏகாம்பரநாதருலா முதலியன.
68. அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ் (மாதவ)
69. செம்பியன்மாதேவியார்
70. தொட்டிக்கலை —மதுரகவி—ஸ்ரீ சுப்பிரமணிய
முனிவர் பிரபந்தங்கள் (முதற்றொகுதி)
71. கவிராக்ஷஸ—ஸ்ரீ கச்சியப்பமுனிவர்
பிரபந்தங்கள் (முதற்றொகுதி)
72. ஸ்ரீ காசிகாண்டம் முழுவதும் மூலம்.

